உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## அருள்திரு கச்சியப்ப முனிவர் அருளிய

# பூவாளூர்ப் புராணம்

( மூலமும் - உரையும் )



அருள்மிகு திருமூலநாதர்



அருள்தரு குங்கும சுந்தரி

## திருவாவடுதுறை ஆதீனம்

8.5.2011

வெளியீடு எண் : 625

விலை ரூ.250/-

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

அருள்திரு கச்சியப்ப முனிவர் அருளிய

# பூவாளூர்ப் புராணம்

## ( மூலமும் உரையும் )

திருவாவடுதுறை ஆதீனம்

**கவிராட்சச அருள்திரு கச்சியப்ப முனிவர்**

**சித்திரை புனர் பூசத் திருநாள் விழா மலர்**

திருவள்ளுவர் ஆண்டு 2042

மெய்கண்டார் ஆண்டு 788

கர ஆண்டு சித்திரை 25

(08.05.2011) ஞாயிற்றுக்கிழமை

# நூல் விவரக்குறிப்பு


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | | பூவாளூர்ப் புராணம் (மூலமும் உரையும்) |
| நூலாசிரியர் | : | அருள்திரு கச்சியப்பமுனிவர் |
| உரையாசிரியர் | : | பூவாளூர் க.கதிரேசன் (குன்றக்குடி ஆதீனப்புலவர்) |
| பொருள்: | : | தலபுராணம் உரையுடன் |
| பக்கம் | : | 348 |
| விலை | : | ரூ. 150/- |
| வெளியீடு | : | திருவாவடுதுறை ஆதீனம், திருவாவடுதுறை |
| வெளியீட்டு எண் | : | 625 |
| வெளியீட்டு நாள் | : | 08.05.2011 ஞாயிறு |
| பைண்டிங் | : | பகுதித் தையல் |
| அச்சகம் | : | கல்யாணி கம்ப்யூட்டர் பிரஸ், கும்பகோணம். |




உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

அருள்திரு கச்சியப்ப முனிவர் அருளிய

# பூவாளூர்ப் புராணம்

## ( மூலமும் உரையும் )

இது
திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம்
திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்து மூன்றாவது குரு மகாசன்னிதானம்
**சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்**
அவர்களின் அருளாணையின் வண்ணம்
வெளியிடப்பெற்றது

உரையாசிரியர்
குன்றக்குடி ஆதீனப்புலவர், சைவத்தமிழ்மணி,
சித்தாந்தச்செல்வர், வித்துவான் க. கதிரேசன் எம்.ஏ., பி.எட்.,
பூவாளூர் - 621 712.

திருவாவடுதுறை ஆதீனம்
2011

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையில் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணைப்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழில்திருவா வடுதுறைவாழ்
குரு நமச்சிவாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

- மாதவச் சிவஞான யோகிகள்
*( காஞ்சிப்புராணம் )*



ஆதீனக் குரு முதல்வர் அருள்திரு நமசிவாய மூர்த்திகள்

# ஆதீனக் குருமுதல்வர்

## அருள்திரு நமச்சிவாய மூர்த்திகள் அருள் வரலாறு

### (காலம் 14 ஆம் நூற்றாண்டு)

உலகம் ஓர் குலம்; உலகு அனைத்தும் இன்புற வேண்டும் என்ற பரந்தமனம் படைத்தது ஆசாரியப் பரம்பரை. திருக் கயிலையில் உண்டாகிய இப்பரம்பரை காலம் பல கடந்து இடையறாது இந்நாள் வரை வளர்ந்து வருகிறது. கயிலைப் பரம்பரையின் மெய்கண்ட சந்தான ஆசாரியர்களில் அருள்திரு உமாபதி சிவாசாரியரிடம் உபதேசம் பெற்ற அருள்திரு அருள்நமச்சிவாயரிடம் தீக்கை பெற்றவர் அருள்திரு சித்தர் சிவப்பிரகாசர். அவரிடம் சிவஞான அபிடேகமும், உபதேசமும், ஆசாரிய பரம்பரையைப் பாதுகாத்துவரத் திருஆணையும் பெற்று, திருவாவடுதுறையில் ஆதீனத்தைத் தோற்றுவித்த முதற்பெரும் குருமூர்த்திகள் அருள்திரு நமச்சிவாய மூர்த்திகள்.

இவர்கள் சோழ மண்டலத்தில் நாகை மாவட்டம் மயிலாடுதுறைக்கு மேற்கே 3 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள மூவலூர் என்னும் ஊரில் பரம்பரைச் சைவ வேளாளர் குலத்தில் 14 ஆம் நூற்றாண்டில் தோன்றியவர்கள். இவர்களது பிள்ளைத் திருநாமம் வைத்தியநாதன் என்பது. இளம் பிராயத்தில் இவர்கள் தம் பெற்றோருடன் புள்ளிருக்குவேளூரில் (வைத்தீசுவரன் கோயில்) அருள்மிகு வைத்தியநாதப் பெருமானை வழிபட்டுத் திருவருளில் ஒன்றிய சிந்தையினராக மனமுருகி நின்றபோது, பெருமானே ஒரு சிவாசாரியார் திருமேனி தாங்கி வந்து சிவலிங்கத் திருமேனி ஒன்றினைத் தந்தருளிய பேறுடையவர்கள்.

தல யாத்திரையாகத் தம் அடியார் திருக்கூட்டத்துடன் மூவலூர் சேர்ந்த அருள்திரு சித்தர் சிவப்பிரகாசர், சிறிய பெருந்தகையாக விளங்கிய வைத்தியநாதரைக் கண்டார்கள். சிவஞானப் பேற்றிற்கு உரிய குறிகளையும் திருவருட் குறிப்பையும் உணர்ந்து, பெற்றோர் இசைவுடன் பிள்ளையைத் தம்முடன் அழைத்துக் கொண்டு திருவாவடுதுறையை அடைந்தார்கள்.

அங்கு அருள்திரு சித்தர் சிவப்பிரகாசர் அப்பிள்ளைக்கு ஞானதீக்கை புரிந்து நமச்சிவாயம் எனத் தீக்கைப் பெயர் அருளி குரு பரம்பரையில் தாம் பெற்ற சிவஞானத்தை உபதேசித்தருளிச் சிவஞான ஆனந்த அனுபவம் கைவருமாறு அனுக்கிரகம் செய்தார்கள். குருமரபில் தாம் பெற்ற அருள்திரு உமாபதி சிவாசாரியர் பூசை செய்த அருள்மிகு ஞான

மாநடராசப்பெருமானையும், தம்முடைய ஆன்மார்த்த மூர்த்தியையும் பூசித்து வரும் அதிகாரத்தையும் வழங்கினார்கள். தாம் வீற்றிருந்த இடத்தில் வரைகீறி அமைக்கப்பெற்ற அறையுள் அமர்ந்து சைவ சித்தாந்த மரபு தழைக்கச் சிவஞான உபதேசம் செய்துவர ஆணையருளி, தாம் திருமறைக்காட்டிற்கு எழுந்தருளி னார்கள்.

அருள்திரு நமச்சிவாய தேசிக மூர்த்திகள் தம் ஞானாசிரியர் திருவாணையின்வண்ணம் அவர் வகுத்த அறையிலிருந்து கொண்டு, தம்பால் வரும் பக்குவ ஆன்மாக்களுக்குச் சிவஞான உபதேசம் அருளி, சுத்தாத்துவிதச் சைவ சித்தாந்த பரிபாலனம் செய்து வந்தார்கள்.

இவ்வண்ணம் ஆதீன முதற்பெரும் குருமூர்த்தி களாக வீற்றிருந்து சுத்தாத்துவிதச் சித்தாந்த நன்மரபு தழைக்கச் செய்த அருள்திரு நமச்சிவாயமூர்த்திகள், தங்கள் குரு சந்தானம் வளர்ந்தோங்கி வர, மறைஞான தேசிகருக்கு ஞானாபிடேகம் செய்து, துவிதீய ஆசாரியராக அமைத்தும், அம்பலவாண தேசிகருக்கு ஞானாபிடேகம் செய்து திரிவிதீய ஆசாரியராக (இளைய சன்னிதானம்) அமைத்தும், ஒரு தை மாதம் அசுவதி நன்னாளில் சித்தாந்த சுத்தாத்துவித முத்தி அடைந்தருளினார்கள்.

ஆதீனக் குருமுதல்வர் ஞான சமாதித் திருக்கோயிலில் நாள்தோறும் காலை அபிடேக ஆராதனைகளும் இரவு தீபாராதனையும் நடைபெற்று வருகின்றன. மாதந்தோறும் அசுவதி நட்சத்திரத்தில் குரு மூர்த்திகளுக்குச் சிறப்பு வழிபாடுகளும் தோத்திர நூல்கள் பாராயணமும் செய்யப்பட்டு வருகின்றன.

ஆண்டு தோறும் தை மாதம் அசுவதி நன்னாளில் (மகரத்தலைநாள் ) ஆதீன முதற்பெரும் குருமூர்த்திகளாக விளங்கும் அருள்திரு நமச்சிவாய மூர்த்திகளின் குருபூசை விழாக் கொடியேற்றத்துடன் துவங்கி தினமும் காலை, இரவு இருவேளைகளிலும் அபிடேக ஆராதனைகளோடு பத்து நாட்கள் சிறப்பாக நடைபெற்று வருகின்றது.

மேலும் அருள்திரு நமச்சிவாயமூர்த்திகளின் திருமேனி; அவதாரத் தலமாகிய மூவலூர், காசி கண்ணப்பசாமி மடம், திருநெல்வேலி நெல்லையப்பர் கோயில், விக்கிரமசிங்கபுரம் சிவந்தியப்பர் கோயில், திருநெல்வேலி சந்தி விநாயகர் கோயில், சுசீந்திரம், மதுரை கிளை மடங்கள், பொதிகையடி குருபூசை மடம், காசிதர்மம் ஆகிய தலங்களில் பிரதிட்டை செய்யப் பெற்று, பூசைகளும் நடைபெற்று வருகின்றன. தை அசுவதி நன்னாளில் மேற்கூறிய தலங்களில் சிறப்பு ஆராதனைகளும் மாகேசுவர

உ

சிவ சிவ

"தன் கடன் அடியேனையும் தாங்குதல்
என் கடன் பணிசெய்து கிடப்பதே"

தவத்திரு
**குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்**

குன்றக்குடி - *630 206*
சிவகங்கை மாவட்டம்
☎: **04577 - 264227**

நாள் : *05.05.2010*

அன்பிற் சிறந்த நமது ஆதீனப்புலவர் திரு. க.கதிரேசன் அவர்களுக்கு எல்லா நன்மைகளும் பெருகத் திருவருளைச் சிந்தித்து எழுதுவது. நல்வாழ்த்துக்கள்.

தங்கள் கடிதம் கிடைத்தது. மிக்க மகிழ்ச்சி, கவிராட்சசர் கச்சியப்ப முனிவர் அருளிய பூவாளூர்ப் புராணத்திற்குத் தாங்கள் பொழிப்புரை எழுதியிருப்பதும் இந்த உரைநூலை போற்றுதற்குறிய திருவாவடுதுறை ஆதீனம் திருவருள் திரு மகா சன்னிதானம் அவர்கள் வெளியிட்டருளத் திருவுள்ளம் பற்றியிருப்பதும் அறிந்து பெருமையும், மகிழ்ச்சியும் அடைந்தோம். திருவாவடுதுறை ஆதீனம் திருவருள்திரு மகாசந்நிதானம் அவர்களுக்கு நமது மகிழ்வினையும் போற்றுதலையும் தெரிவித்துக்கொள்ளுங்கள். இந்த அரிய பெரிய உரைப்பணியை செய்த தங்களுக்கு உளமார்ந்த பாராட்டு, வாழ்த்துக்கள்.

இதுபோன்ற அருள்நூல் பணிகளில் தாங்கள் மேலும், மேலும் ஈடுபட்டு நலம்பெறவும், புகழ்சிறக்கவும் திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

இத்துடன் திருவருள் திருநீறு அனுப்பியுள்ளோம்.
மற்றவை தங்கள் கடிதம் கண்டு,
என்றும் வேண்டும் இன்ப அன்பு
பொன்னம்பல அடிகளார்

பெறுநர்

ஆதீனப்புலவர் திரு.க.கதிரேசன் அவர்கள்
*21* பழநிமுருகன் இல்லம்
பூவாளூர் - *621 712*
லால்குடி வட்டம்,
திருச்சி மாவட்டம்.

# பொருளடக்கம்


| | | பக்க எண் |
|---|---|---|
| தோரணவாயில் | - | 11 |
| கச்சியப்பமுனிவரின் சைவத்தமிழ்ப்பணிகள் | - | 15 |
| எழுத்தினுள் அகரம் | - | 30 |
| ஸ்ரீ கச்சியப்பமுனிவர்பிரான் வரலாறு | - | 32 |
| பூவாளூர்ப் புராணம் ஓர் ஆராய்ச்சி | - | 55 |
| சிறப்புப் பாயிரம் | - | 81 |
| பூவாளூர்ப் புராணம் | - | 85 |
| நைமிசச் சருக்கம் | - | 93 |
| தலவிசேடச் சருக்கம் | - | 102 |
| தீர்த்த விசேடச் சருக்கம் | - | 109 |
| மூர்த்தி விசேடச் சருக்கம் | - | 114 |
| வேள்விச் சருக்கம் | - | 127 |
| பிரமன் வரவுச் சருக்கம் | - | 132 |
| ஞான உபதேசச் சருக்கம் | - | 140 |
| இந்திரன் அருச்சனைச் சருக்கம் | - | 148 |
| இரதி அருச்சனைச் சருக்கம் | - | 186 |
| மன்மதன் வழிபடு சருக்கம் | - | 214 |
| அக்கினி சாபம் தீர்த்த சருக்கம் | - | 234 |
| கயா பற்குனிச் சருக்கம் | - | 264 |
| மஞ்சுளன் மகப்பெறு சருக்கம் | - | 272 |
| சந்திரசூடன் வழிபடு சருக்கம் | - | 281 |
| மகட்பேசு சருக்கம் | - | 292 |
| சிவபூசைச் சருக்கம் | - | 309 |
| கல்யாணச் சருக்கம் | - | 315 |
| செய்யுள் முதற்குறிப்பகராதி | - | 331 |

உ

சிவமயம்



திருவாவடுதுறை ஆதீனம்

இருபத்து மூன்றாவது குரு மகாசன்னிதானம்

**சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய**

**சுவாமிகள் அவர்கள்**

# தோரண வாயில்

(முகவுரை)

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆகிய அருளாளர்கள் மூவரும் களித்துக் கலந்ததோர் காதற் கசிவொடு வழிபட்டுப் பதிகம் பாடியருளிய திருத்தலம்; அருள்தரு ஒப்பிலா முலையம்மை உடனாய மாசிலாமணி ஈசர் எழுந்தருளியுள்ள திருவாவடுதுறைத் திருத்தலம். தமது திருவருளை வரையாது வழங்கும் இப்பெருமான் திருஞானசம்பந்தருக்கு 1000 பொற்காசுகள் கொண்ட பொற்கிழி அருளியவர். இத்திருக்கோயில் திருப்பெயராகிய திருவாவடுதுறை என்பதே ஊருக்கும் வழங்குவது ஒருதனிச் சிறப்பு.

திருமூலர், தாம் பெருந்தவம் செய்யவும், ஞானம் பெறவும், திருமந்திரம் இயற்றியருளவும் இடமாய் அமைந்தது இத்தலம் என்பதைத் தமது திருமந்திரம் நூலில் பதிவு செய்துள்ளார். இவரது அருள் ஞான சமாதித் திருக்கோயில் இங்குதான் உள்ளது.

திருமாளிகைத் தேவரால் போற்றப் பெற்றதும், அவர் தவம் செய்ததும், முத்தி பெற்றதும், அவரது ஞான சமாதித் திருக்கோயில் அமைந்துள்ளதும் இத்தலமே.

உமாபதி சிவனாரின் உபதேச பரம்பரையில் வந்து, இத்துறைசை ஆதீனத்தை நிறுவிய அருளாளர் ஆகிய இந்த ஆதீன முதற்குரவர் ஸ்ரீ நமச்சிவாய குருமூர்த்திகள். இந்த ஆதீனத்துள் அருள்ஞான சமாதி கொண்டு எழுந்தருளியுள்ளார்.

இத்தகு சிறப்புகளுடன் உவமையிலாக் கலைஞானத்தையும், உணர்வரிய மெய்ஞ் ஞானத்தையும் ஒரு சேர வளர்த்துவருவதுடன் வாரி வழங்கியும் வரும் இந்தத் துறைசை ஆதீனத்தைத் தமிழ்த்தாத்தா உ.வே.சா அவர்கள் "சிவராசதானி" என்று உளம் குளிரப் போற்றுகிறார்.

திருக்கயிலாய பரம்பரையாக விளங்கும் இந்த ஆதீனத்தின் 23ஆவது குருமூர்த்திகளாக ஞானபீடத்தில் எழுந்தருளி, அருட் செங்கோலோச்சி, புலவர்களையும் கலைத்துறை வல்லாரையும் ஊக்குவித்தும், ஆதரித்தும், புரந்தும் வருகின்றவர்கள் வணக்கத்திற்குரிய சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் ஆவார்கள்.

இந்தச் சிவஞானப் பண்ணையில் மிகச் சிறந்து விளங்கியவர் சிவஞான யோகிகள் ஆகிய ஸ்ரீ சிவஞான முனிவர் பிரான் ஆவார். அளப்பரும் பல்வகைச் சிறப்புகட்கும் சொந்தக்காரராகிய இவர்களை "ஆதீனக் குல தெய்வம்"என்று இவ்வாதீனத்தவர் போற்றி வருகின்றனர். இம்முனிவர் பிரானின் மாணாக்கர் பன்னீரரருள் தலைசிறந்து விளங்கி, ஆசிரியர் நன்மதிப்புப் பெற்றவர் கவிராட்சசர் என்று கற்றவர் போற்றும் ஸ்ரீ கச்சியப்ப முனிவர் பிரான் ஆவார். ஸ்ரீ கச்சியப்பமுனிவர் பெருமானைத் தமது வழிபடு தெய்வமாகக் கொண்டு ஒழுகியவர் திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் என்றால் இவரது ஒப்புயர்வில்லாச் சிறப்பினை ஒருவாறு உணரலாம். இவர் இயற்றியருளிய பெருங்காப்பிய வகையில் அமைந்த புராணங்கள் ஏழு. இவற்றுள் ஒன்று "பூவாளூர்ப் புராணம்".

பூவாளூர்ப் புராணம் இன்று கிடைத்தற்கரியதாய் உள்ளது. பெருமுயற்சியுடன் கூடிய நமது தேடுதலில் அச்சிலான இருபிரதிகள் கிடைத்தன. இது பூவாளூர்த் தியாகராச செட்டியார் அவர்களால் பூவாளூர்ச் செட்டி பக்த சனங்கள் வேண்ட ''கரவிகித வழுக்களைந்து'' சாதாரண ஆண்டு மாசித்திங்களில் (கி.பி. 1885 பிப்ரவரி) வெளியிடப் பெற்றதென்பது இதன் முகப்புப் பக்கத்தினால் சிறப்புப்பாயிரத்தால் அறிய வருகின்றது.

ஏறத்தாழ 125 ஆண்டுகட்கு முற்பட்ட பதிப்பு என்பதால் இரண்டும் தமது உரிய அளவில் சிறுபகுதியை இழந்திருக்கின்றன. ஒன்று முன் பதினெட்டுப் பக்கங்கள் இல்லாதது. இதனை உதவியவர் இலால்குடி சின்ன செட்டித்தெருவில் வாழும் கொண்டையம்பேட்டையார் எனப் பெறும் திருமிகு சம்பந்த மூர்த்தி செட்டியார் அவர்கள். மற்றது பின் இருபத்து நான்கு பக்கங்கள் மட்டும் இல்லாதது. இதனை உதவியவர் பூவாளூரில் சிதம்பரம் சாலையில் வாழும் திருமிகு.எஸ்.கிருஷ்ணன் செட்டியார் அவர்கள். இவர், பூவாளூரில் உள்ள சித்தர் கோயிலைக் கட்டி பராமரித்து வருகின்றனர். திருவருள் இருவர் மூலமும் முழு நூல் கிடைக்க அருள்பாலித்தது இவ்விரு பெருமக்களுக்கும் எனது நன்றியறிதலுடன் கூடிய வணக்கங்கள் உரியன.

இவ்விரு பிரதிகளின் துணை கொண்டு, செய்யுட்களை இன்றைய நிலைமைக்கேற்பச் சந்தி பிரித்தும், குறிப்புரை, ஆகியவற்றுடன் தக்கவாறு கையெழுத்துப்படியாக்கிக் கொண்டு "மீட்டுருவாக்கம்" செய்தருளுமாறு, திருக்கயிலாய பரம்பரைத்

திருவாவடுதுறை ஆதீனம் 23ஆம் குருமகா சன்னிதானம் வணக்கத்திற்குரிய சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களைத் திருமடத்தின் ஒடுக்கத்தில் கண்டு வணங்கி வேண்டிக்கொண்டேன். அவர்கள் உடனடியாகத் தமது அருளார் இசைவைப் புன்முறுவலுடன் கூறியதுடன், "ஸ்ரீ கச்சியப்ப முனிவர் பிரானின் முழுமையான வரலாறும் வேண்டும்" என்று அருளியதுடன் அமையாது அம்முனிவர் பெருமான் தங்கியிருந்து புராணங்கள் இயற்றியருளிய காஞ்சிபுரம், சென்னை, திருவானைக்கா, பேரூர் ஆகிய இடங்களில் உள்ள தக்கவர்கட்கு என்னை அறிமுகப்படுத்தி இவ்வகையில் எனக்கு உதவுமாறு, திருமடம் துணைப்பொது மேலாளர்க்கு அருளாணை வழங்கியதால் எனக்கும் ஒரு நகல் கிடைத்தது.

குருமகா சன்னிதானம் அவர்களின் அருளாணையுடன் சென்ற எனக்குக் காஞ்சிபுரத்தில் பிள்ளையார் பாளையம் கிளைமடத்தின் தம்பிரான் சுவாமிகள் வணக்கத்திற்குரிய சீர்மன்னு சுந்தரமூர்த்தி சுவாமிகள் அவர்கள், திருமிகு புலவர் தெய்வசிகாமணி அவர்கள், திருக்கழுக்குன்றம் வகையறா உதவி மணியம் திருமிகு சிவசுப்பிரமணியன் அவர்கள், சென்னையில் திருமிகு பூசை. ஆட்சிலிங்கம் அவர்கள், திருவானைக்காவில் பாப்பம்மாள் சத்திரம் கண்காணிப்பாளர் திருமிகு. இராமநாதன் அவர்கள் மற்றும் ஆய்வர் திருமிகு அ.சீனிவாசன் அவர்கள், கோவை. பேரூர்க் கிளைமடத்தில் பெரியவர் திருமிகு. பா.திருஞானசம்பந்தம் அவர்கள் ஆகியோர் அன்புடன் பேருதவி புரிந்தனர். இவர்கள் அனைவர்க்கும் என் நெஞ்சு கலந்த வணக்கமும் நன்றியும் உரியன. இச்சுற்றுப் பயணத்தின்போது நம் முனிவர் பெருமானின் வரலாற்றுக்கு உதவியாக அமைந்த புகைப்படங்களும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

இதுவரை கிடைத்துவந்த நம் முனிவர் பிரானின் வரலாறு, மதுரை திருமிகு ஞானசம்பந்தம் பிள்ளை அவர்கள் எழுதியுதவியது என்றும் அதுவே தொடர்ந்து வருகிறது என்றும் நம் துறைசை ஆதீன வித்துவான் சித்தாந்தச் சைவமணி திருமிகு.த.ச.மீனாட்சி சுந்தரம் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

இந்நிலையில் மதுரை திருமிகு. ஞானசம்பந்தம் பிள்ளையவர்கள் எழுதியுள்ள இம்முனிவர் பிரானின் வரலாற்றுடன் கூட, ஆங்காங்குச் சென்று அன்பர்களையும் அறிஞர்களையும், இடங்களையும், நேரில் கண்டும் கலந்துரையாடியும், உசாவியும்

பெற்ற செய்திகளையும், நம் முனிவர் பிரானைப் பற்றித் தமிழ்த்தாத்தா உ.வே.சா அவர்கள் எழுதியுள்ள "மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரம்" நூலில் ஆங்காங்குக் கிடைத்த குறிப்புகளையும், வித்துவான் தியாகராச செட்டியார் நூலில் கிடைத்த குறிப்புகளையும், இம்முனிவர் பிரானின் நூல்களில் உள்ள சிறப்புப் பாயிரச் செய்திகளையும் ஒருங்கு திரட்டித் தக்கவாறு இணைத்துக் கொண்டு எழுதி "ஸ்ரீ கச்சியப்ப முனிவர் வரலாறு" என்ற தலைப்பில் இணைத்துள்ளேன், ஆராய்ச்சியும் உள்ளது.

என்னை இப்பணியில் ஊக்குவித்தும், ஆற்றுப்படுத்தியும், தற்போது தமது மேலான அருளாசியை வழங்கி வாழ்த்தியும் நூல் வெளியிட அருள் புரிந்த திருக்கயிலாய பரம்பரை துறைசை ஆதீன23ஆவது குருமகா சன்னிதானம் சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களின் பொன்னார் திருவடிகளை என் மனம் மொழி மெய்களால் வணங்கி மகிழ்கிறேன்.

மேலும், என்னை ஈன்றாளுமாய் எனக்குத் தந்தையுமாய் இருந்து அருள்புரிந்து வருவதுடன் இதற்கு அருளாசியும் வழங்கியுள்ள திருக்கயிலாய பரம்பரை குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் 46ஆவது குருமகா சன்னிதானம் வணக்கத்திற்குரிய திருப்பெருந்திரு தெய்வசிகாமணி பொன்னம்பல தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களின் பொன்னார் திருவடிகளை என் மனம் மொழி மெய்களால் வணங்கி மகிழ்கிறேன்.

"ஆட்டுவித்தால் ஆர்ஒருவர் ஆடாதாரே"

அன்புடன்
குன்றக்குடி ஆதீனப்புலவர்
சைவத்தமிழ்மணி, சித்தாந்தச் செல்வர்
வித்துவான், க.கதிரேசன், எம்.ஏ., பி.எட்.,
பூவாளூர்.



# கச்சியப்ப முனிவரின் சைவத் தமிழ்ப் பணிகள்

சைவத் தமிழ்ச் செல்வர், சிரவையாதீனக் கவிஞர் ப.வெ. நாகராஜன்,
கௌமார மடாலயம், சின்னவேடன்பட்டி,கோவை -49.
( கச்சியப்ப முனிவர் குருபூசை ( 08.05.2011 ) திருநாள்
சொற்பொழிவு, ஆதீனத் தலைமை மடம்)

---

தமிழ் இலக்கிய வளர்ச்சியில் திருமடங்களின் பங்களிப்பு மிகப்பெரியது. அதை விரிக்கில் பெருகும். அவற்றுள்ளும் துறைசை யாதீனத்தின் தமிழ்ப்பணி தமிழ் இலக்கிய வரலாற்றில் சிறப்பிடம் பெறத்தக்கது. நேரடியாகச் சமயம் சாரா சங்க இலக்கியங்களையும் ஏராளமான சைவ வைணவ நூல்களையும், சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவக சிந்தாமணி, பெருங்கதை போன்ற பிற சமய நூல்களையும் தமிழ் கூறும் நல்லுலகத்திற்கு அறிமுகம் செய்து தமிழைச் செம்மொழி யாக்கிய தமிழ்த்தாத்தா உ.வே.சா. அவர்கள் தமிழகத்திற்குத் துறைசையாதீனம் வழங்கிய கொடைதானே! பண்டார சாத்திரங்களுள் பத்துப்பனுவல்களை அருளியுள்ள மூன்றாம் பட்டம் அம்பலவாண தேசிகர் முதல் வாழையடி வாழை என வந்த தவச்சீலர்களுள், பைந்தமிழ்ப் பாவலர்களும் எத்தனை பேர்? அவர்களால் இயற்றப்பெற்றுள்ள சாத்திர, தோத்திர, புராண, காப்பிய, பிரபந்த, இலக்கண, உரை நூல்கள் எத்தனை? தமிழ் நூல்களின் பரப்பைப் பற்றி வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள்,

"ஆயிரம் காலம் அகம் குவிந்து கற்றாலும்
பாயிரமும்தீர்வரிய பன்னுதமிழ்ப் பன்னூல்கள்"

என்பார். இந்த வாக்குத் திருவாவடுதுறை ஆதீனத்தால் தோற்றுவிக்கப்பட்டுள்ள பகந் தமிழ்ப்பனுவல்களுக்கும் அப்படியே பொருந்தும்.

அருள்திரு பஞ்சாக்கர தேசிகரின் கடைக்கண்ணருளால் உருப்பெற்ற கவிஞர்கள் ஆகிய மாணிக்கமாலையில் ஒரு மணியாகத் திகழ்பவர்தாம் கவிராக்ஷஸ கச்சியப்ப முனிவர். அவருடைய சைவத் தமிழ்த் திருப்பணிகளுள் சிலவற்றைப்பார்ப்பதற்குமுன் அவர் வாழ்க்கை வரலாற்றைத் தெரிந்த அளவு பார்க்கலாம்.

17,18ஆம் நூற்றாண்டுகளில் தமிழ் நாட்டில் அமைதி நிலவவில்லை. ஐரோப்பிய வணிகர்கள் தம் மேலாண்மையை இங்கு நிலைநிறுத்தப் பலவகையிலும் போராடிக் கொண்டிருந்தனர். அப்போது அதிகாரத்தில் இருந்த குறு, சிறு இந்திய மன்னர்களும் தமக்குள் ஒற்றுமை இன்றிச் சிறு சிறு காரணங் களுக்காகச்

சச்சரவிட்டுக் கொண்டிருந்தனர். இந்தக் குழப்பத்தை முழுமையாகப் பயன் படுத்திக் கொண்டு வெளிநாட்டுக் கிருத்துவப் பாதிரிகள் பாமர மக்களைப் பலவகைகளிலும் மருட்டித் தம் மதத்தைப் பரப்பிக் கொண்டிருந் தனர். இந்த அமைதியற்ற சமுதாயச் சூழலில் தம் தாய்மொழியாம் தமிழை முறையாகப் போற்றுவோர் இல்லாமல் போய் விட்டனர். இந்தச் சிக்கலான கால கட்டத்தில் தான் சைவ ஆதீனங்கள் சமயத்தோடு தமிழையும் போற்றி வளர்க்கும் அரும்பணியை மேற்கொண்டன. அப்பொழுது திருவாவடுதுறை ஆதீனத்தி லிருந்து எழுந்த ஞானச் சுடர்கள் தான் மாதவச் சிவஞான யோகிகளும் அவருடைய தலைமை மாணவராகிய கவிராக்ஷஸ கச்சியப்ப முனிவரும்.

கச்சியப்ப முனிவர் பதினெட்டாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் திருத்தணியில் சைவ வேளாளர் குலத்தில் அபிஷிக்தர் மரபில் தோன்றினார். பெற்றோர் பெயர் தெரியவில்லை. இளமைப்பருவம் இனிதே கழிந்தது.

பிறகு கச்சியப்பர் தலயாத்திரை புறப்பட்டுத் தொண்டை, சோழ நாட்டுத் தலங்களைத் தரிசித்துக் கொண்டு திருவாவடு துறையை அடைந்தார். அது பன்னிரண்டாவது பட்டம் அருள்திரு திருச்சிற்றம்பல தேசிகர் பெரிய பட்டத்திலும், தவத்திரு அம்பலவாண தேசிகர் சின்னப் பட்டத்திலும் எழுந்தருளி யிருந்த காலம். ஆதீனத்தை அடைந்த கச்சியப்பர் ஸ்ரீலஸ்ரீ பஞ்சாக்கர தேசிகரின் குரு மூர்த்தத்தை வழிபட்டுச் சின்னப்பட்டம் தேசிகரைத் தரிசித்து வணங்கினார். அப்போதே கச்சியப்பர் சின்னப்பட்டத்தின் திருவருள் நோக்கத்திற்கு இலக்கு ஆனார். அந்தத் தேசிகரிடத்தே சமய தீட்சை, விசேஷ தீட்சை, துறவறம், நிர்வாண தீட்சை ஆகியவற்றைப் பெற்றுக் கொண்டார்.

இந்தச் சமயத்தில் கச்சியப்பர் சிவஞான போத மாபாடியக் கருத்தரும், பல்கலைப் பெருங்கடலும் ஆகிய மாதவச் சிவஞான யோகிகளின்பால் பல தமிழ் இலக்கிய இலக்கண நூல்களையும், மெய்கண்ட சாத்திரங்கள், பண் டார சாத்திரங்கள் ஆகிய இருபத் தெட்டையும், மேலும் பற்பலவற்றையும் கற்று, யோகிகளின் மாணவர் பன்னிருவருள் தலை மாணவராகத் திகழ்ந்தார்.

சைவ இலக்கிய உலகில் கச்சியப்ப முனிவரைச் சிவஞான யோகிகளின் மாணவ ராகச் சொல்லப்பட்டு வந்தாலும் வேறொரு கருத்தும் நிலவி வந்தது. அஃதாவது ஒரு சாரார் முனிவரை யோகிகளின் மாணவராக அன்றி ஒரு சாலை மாணவராகக் கருதி

வந்தனர். மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்களும் அவர்களுள் ஒருவர். இது தமிழ்த் தாத்தா தம் மகாவித்துவான் பிள்ளையவர்கள் சரித்திரத்தில் பின்வருமாறு கூறுவதால் விளங்கும்.

''கச்சியப்ப முனிவருடைய நூல்களில் இவர் ( மகாவித்துவான்) மிக்க மதிப்பு வைத்துப் படித்தும் பாடஞ் சொல்லிக் கொண்டும் வந்தவராதலால் அவரிடம் இவருக்குப் பக்தி அதிகம். அவர் சிவஞான யோகிகளைப் போலவே புலமைவாய்ந்தவ ரென்பதும் உடன் படித்தவரென்பதும் இவருடைய கருத்து. இதனை அடிக்கடி எங்களிடத்தும் பிறரிடத்தும் இவர் சொல்லிவருவதுண்டு. சிவஞான யோகிகள் இயற்றிய செய்யுள் நூல்களிலும் வசன நூல்களிலும் மிக்க பயிற்சியுடையவ ராகையால் அவருடைய பயிற்சி உயர்ந்த தென்பதும், கச்சியப்ப முனிவர் அவருடைய மாணக்கரென்பதும் (மேலகரம்) சுப்பிரமணிய தேசிகருடைய கருத்து'. (பாகம் 2,பக்கம் 228 )

துறைசை ஆதீனகர்த்தர் மேலகரம் சுப்பிரமணிய தேசிகர், கச்சியப்ப முனிவர் பரிபூரணம் அடைந்ததைக் கூறும் ''ஏர்தரு சாலிவாகன சகாத்தம்'' என்னும் செய்யுளில், "சீர்தரு துறைசைவாழ் சிவஞான தேவன் மாணாக்கரின் முதன்மை திகழ்ந்துள கச்சியப்பமாமுனிவன்'' எனத் தெளிவாக இருப்பதை எடுத்துக் காட்டி, மகாவித்துவான் அவர்களை ஏற்கச் செய்தார் என உ.வே.சா. எழுதுகிறார்.

கச்சியப்ப முனிவரின் செய்யுள் இயற்றும் ஆற்றலும் சொற்பொழிவாற்றும் திறமையும் அனைவரையும் வியக்க வைத்தன. பழைய செய்யுள்களை உருப்போட்டு ஒப்பிப் பதைப் போல அவ்வளவு விரைவில் இவர் புதிய கவிகளை இயற்றுவாராம். இவர் திருவானைக் காவில் தங்கியிருந்து திருவானைக்கா தலபுராண இயற்றினார். பிறகு கோவையை அடுத்த பேரூர் என்னும் பிறவாநெறித் தலத்தில் இருந்தபோது திருப்பேரூர்ப் புராணமாகிய அரிய செந்தமிழ்ப் பனுவலை இயற்றி வழங்கினார்.

கச்சியப்பமுனிவர் பேரூரில் இருந்த போது மழை இல்லாமையால் வறட்சி ஏற்பட்டு மக்கள் பெரிதும் அல்லல் உற்றனர். அப்போது முனிவர் அத்தலத்து அரசம்பலவாணர் மீது பிரபந்தம் ஒன்றை இயற்றி மழைபொழியச் செய்தார். மேலும் பட்டீசர் மீது பல தோத்திரப் பதிகங்களைப் பாடிப் பலருக்குக்

குட்டநோய் முதலியவற்றைப் போக்கினார். ஆனால் இப்போது பேரூர்ப் புராணத்தைத் தவிர ஏனைய தோத்திரப்பாக்கள் கிடைப்பதில்லை. இவர் பேரூரில் இருந்தபொழுது பல அருளாடல் களை நிகழ்த்தியதாகக் கூறுவர்.

பேரூரில் சில காலம் இருந்தபின்பு முனிவர் திருத்தணிக்குச் சென்று அங்கு சில காலம் தங்கியிருந்தார். கந்தப்ப தேசிகர் என வழங்கப்படும் திருத்தணிகை கந்தப்பையர் என்னும் வீரசைவர் அப்போது இவருடைய மாணவர் ஆனார். இந்தக் கந்தப்ப தேசிகர்தான் திருத்தணிகைச் சந்நிதிமுறை என்னும் இனிய பிரபந்தத் திரட்டை இயற்றியவர். தமிழ் மொழிக்குச் சிறப்பாகத் தொண்டாற்றிய திருத்தணிகை விசாகப்பெருமாள் ஐயர், சரவணப்பெருமாள் ஐயர் ஆகிய இருவரும் இந்தக் கந்தப்பையரின் மைந்தர்கள் ஆவர்.

கந்தப்ப தேசிகர் ஒரு சமயத்தில் கடுமையான வயிற்று நோயால் துன்பப் பட்டார். அப்போது கச்சியப்ப முனிவர் திருத் தணிகையாற்றுப்படை என்னும் 418 அடி களாலான செறிவான அகவல் ஒன்றை இயற்றித் தம் மாணவரின் நோய்நீங்கச் செய்தார். இந்தச் சமயத்தில் தான் திருத்தணிகைப் புராணம் என்னும் இணையற்ற அற்புதக் காப்பியமும், திருத்தணிகைப் பதிற்றுப் பத்தந்தாதியும் இயற்றப்பட்டன.

திருத்தணியிலிருந்து சென்னை சென்ற முனிவர் அங்கு சில நாள் இருந்தார். அந்த சமயத்தில் அந்நகர மக்களுள் சிலரின் வேண்டு கோளுக்கு இணங்க, வடமொழியில் உள்ள பதினெட்டு உபபுராணங்களில் ஒன்றும், பிருகு முனிவரால் உபதேசிக்கப்பட்டதால் பார்க்கவ புராணம் என வழங்கப்படுவதும் ஆகிய விநாயக புராணத்தை இரு காண்டங்களாக 6225 திருவிருத்தங்களில் மொழிபெயர்த்தார்.

இந்த விநாயக புராண அரங்கேற்றத்தின் போது சென்னை நகரப் பொதுமக்கள் கச்சியப்ப முனிவருக்கு இரண்டாயிரம் வராகன் காணிக்கையாகச் சமர்ப்பித்தனர். முனிவர் அந்தத் தொகையைக் கொண்டு திருவாவடு துறை ஆதீனத்தில் ஸ்ரீலஸ்ரீ பஞ்சாக்கர தேசிகர் சந்நதி மண்டபத்தைத் திருப்பணி செய்து குரு காணிக்கையாக்கினார்.

விநாயக புராண அரங்கேற்றத்தில் ஒருவர் இப்புராணத்தை இது என்ன கம்ப ராமாயணமா என இழித்துக் கூறியதை அறிந்த கச்சியப்பர் அக்காப்பியத்தின் முதல் ஆறு செய்யுள்களில் நூறு

குற்றம் ஏற்றியதாகவும், பிறகு அவற்றைத் தாமே மறுத்துரைத்து அந்நூலின் மேன்மையை நிலைநாட்டிய தாகவும் கூறுவர். சிலர் இந்நிகழ்ச்சியைச் சிவஞான யோகிகளின் செயலாக உரைப்பர். "கம்பராமாயண முதற்செய்யுட் சங்கோத்தர விருத்தி" என்னும் பெயரில் வெளியிடப் பட்டுள்ள நூலை நோக்கும்போது அது யோகிகளின் வாக்காகத்தான் இருக்கும் எனத் தோன்றுகிறது.

கச்சியப்ப முனிவர் சென்னையில் இருந்த போது காஞ்சிபுரத்தில் மாதலச் சிவஞான யோகிகளின் காஞ்சிப்புராண முதற்காண்ட அரங்கேற்றம் நிகழ்ந்தது. அரங்கேற்றத்தின் போது புராணக் கடவுள் வாழ்த்துப் பகுதியில் திருவேகம்பமுடையார் துதிக்கு முன்னால் தில்லைச் சபாநாயகர் தோத்திரத்தை வைத்துள்ளது ஏற்புடையது அன்று எனச் சிலர் தடை எழுப்பினர். அப்போது யோகிகள் இதற்குத் தம் மாணவரைக் கொண்டு விடையளிப்பதே தக்கது எனத் தீர்மானித்து, முனிவரைக் காஞ்சிக்கு வரவழைத்தார். அவர் வந்த பிறகு அரங்கேற்றம் மீண்டும் தொடங்கப்பட்டது. தொடங்குவதற்கு முன் கச்சியப்ப முனிவர் தல ஓதுவாரை அழைத்து காஞ்சித் தேவாரப் பதிகங்களுள் ஒன்றைப் பாடும்படிக் கேட்டுக் கொண்டார். உடனே மேடை ஏறிய ஓதுவார் மரபுப்படித் திருச்சிற்றம்பலம் என ஓதிப் பாடத் தொடங்கினார்.

உடனே கச்சியப்பர் சபாநாயகர் துதியை முதலில் வைத்தது சரி அல்ல எனத் தடை எழுப்பியவர்களைப் பார்த்து, "கச்சித் தேவாரம் ஓதும் போது 'திருவேகம்பம்' எனத் தொடங்காமல் திருச்சிற்றம்பலம் எனத் தொடங்குவது உங்களுக்கு ஏற்புடையது தானா" என வினவினார். தடை கூறியவர் களால் இதற்கு விடை கூற முடியவில்லை. திருமுறைகளுக்கான நியாயமே சைவத் தலபுராணங்களுக்கும் பொருந்தும் என விளக்கி, முதலில் சபாநாயகர் துதியைக் கூறுவதுதான் முறை என நிலை நிறுத்தினார். அவையோர் அனைவரும் முனிவரின் கருத்தை முழு மனதோடு ஏற்றுக் கொண்டனர். பிறகு காஞ்சிப்புராண முதற் காண்டம் நன்கு அரங்கேறியது.

இதற்காகக் காஞ்சிபுரம் வந்த கச்சியப்பர் சிலநாள் அங்கேயே தங்கியிருந்தார். அப்போது தம் ஆசிரியரின் விருப்பப்படிக் காஞ்சிப்புராணத்தின் இரண்டாம் காண்டத்தை இயற்றி முடித்தார். அத்துடன் அந்தத் தல தொடர்பாக கச்சி ஆனந்த ருத்ரேசர் வண்டுவிடு தூது, பதிற்றுப் பத்தந்தாதி, கழிநெடில், பிரமீசர் பதிற்றுப் பத்தந்தாதி, பஞ்சாக்கர தேசிகர் அந்தாதி ஆகிய சிற்றிலக்கியங்களை யாத்தளித்தார்.

இவ்வாறாக முனிவர் காஞ்சிபுரத்தில் இருக்கும்போது கி.பி. 1790 ஆம் ஆண்டுக்கு இணையான சாதாரண ஆண்டு சித்திரை மாதம் 11ஆம் நாள் வளர்பிறைச் சத்தமியும் புனர்பூச நட்சத்திரமும் கூடிய புனிதநாளில் சுத்த சைவ சித்தாந்த முக்தி பெற்றார். கவிராக்ஷஸ கச்சியப்ப முனிவருடைய உலகியல் வாழ்க்கை வரலாற்றைப் பற்றி இவ்வளவு தான் அறிய முடிகிறது. இனி இக் கவிஞர் பெருமானின் கல்விச் சிறப்பையும் சைவப் பணிகளையும் ஒரு சிறிது சிந்திப்போம்.

தமிழ்க் கவிஞர்களின் வரலாற்றை முதன் முதலில் ஒரு காவியமாகப் புலவர் புராணம் எனப் படைத்த வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் யோகிகளையும் முனிவரையும் இணைத்தே பார்க்கிறார். அவருடைய கூற்றின்படி ஆசிரியரும் மாணவரும் ஆகிய இவர்கள் இருவரும் தம் வாழ்நாளைமுற்றிலுமாகத் தமிழ்ப் பணிக்கே உரித்தாக்கியவர்கள்; இருவராலும் இயற்றப் பட்டுள்ள உயர்ந்த நூல்கள் ஏராளமானவை; அவற்றைமுழுவதுமாகப் பொருள் உணர்ந்து கற்றல் ஓர் அரிய செயல்; எளியது அன்று.

கற்றல் கடினமானது என்றது யோகிகளின் நூல்களின் சாத்திர நுட்பங் களாலும், முனிவரின் நூல்களின் செறிவு, திரி சொல்லாட்சி, சங்க நூற்கருத்து, ஆகிய வற்றாலும் நேர்ந்துள்ளது எனக் கொள்ளலாம்.

கச்சியப்ப முனிவர் தமிழ்ப்புலவர் களிடையே கவிராக்ஷஸர் என வழங்கப் படுகிறார். கருத்துச் செறிவாலும் திரிசொற் களாலும் கௌட நெறியில் அமைந்து, ஒருமுறை படித்தமாத்திரத்தில் எளிதில் பொருள்கொள்ள முடியாமல் மீண்டும் மீண்டும் வாசித்துச் சிந்தித்துப் பொருள் கொள்ள வேண்டிய நிலையில் அவருடைய செய்யுள்கள் இருப்பதே இதற்குக் காரணம். தமிழ் இலக்கிய வரலாற்றில் நமக்குத் தெரிந்த வரையில் முதன்முதலில் கவிராக்ஷஸர் என வழங்கப்பட்டவர் 12ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஒட்டக்கூத்தர் ஆவார். அவரும் கௌட நெறிப் புலவரே. அவருடைய கருத்துச் செறிவை உணரத் தக்கயாகப்பரணி ஒன்றே போதும். அவரை அடுத்து நம் கச்சியப்ப முனிவர்தாம் கவிராக்ஷஸ என்னும் அடைமொழியோடு வழங்கப்படு கிறார். எனினும் கச்சியப்ப முனிவர் கவிராக்ஷஸனாக மட்டும் அல்லாமல் கவிரக்ஷகனாகவும் விளங்குகிறார் என்பது வேறு எந்தப் புலவருக்கும் இல்லாத தனிப் பெரும் சிறப்பு. இது எவ்வாறு எனப் பார்க்கலாம்.

தமிழ் இலக்கிய உலகில் அறிஞர் பெருமக்கள் பலர் மகாவித்துவான் என வழங்கப்படு கின்றனர். என்றாலும் வேறு குறிப்புகள் இல்லாமல் தனியாக மகாவித்துவான் என்றால் அச்சிறப்புப் பெயர்,

*நளிகடற் றிசைதொறும் நனிதன் இசைநிறூஉ*
*மேனாட் பெருந்தமிழ் விரகரும் விழைதரு*
*மீனாட்சி சுந்தர விற்பன சிகாமணி*
*ஓதும் ஆவடுதுறை ஆதீன வித்துவான்*
( காசிரகசியம், சாத்துகவி )

எனப் புரசை அஷ்டாவதானம் சபாபதி முதலியார் அவர்களால் போற்றப்படும் திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களை மட்டுமே குறிக்கும். இது எத்தனையோ பாரதிகள் இருந்தாலும் பாரதியார் எனத் தனியாகக் கூறுமிடத்து நம் தேசிய மகாகவி சுப்பிரமணிய பாரதியை மட்டுமே குறிப்பதைப் போன்ற வழக்கு. சிலப்பதிகாரத்திற்கு அடியார்க்கு நல்லார் கண்ட உரை பற்றி,

*கூற்றைத் தவிர்த்தருள் பொப்பண*
*காங்கெயர் கோன் அளித்த*
*சோற்றுச் செருக்கல்லவோ தமிழ்*
*மூன்றுஉரை சொல்வித்ததே*

எனப்படுவதைப் போல மகாவித்துவான் அவர்களின் பெரும்புலமை வளரவும், உலகிற்குப் பயன்படவும் முழு முதற் காரணம் துறைசையாதீனத்தின் அருட் கொடைப் பெருக்கே என்பது நிதர்சனமான உண்மை. புலவர் புராணம் உடையார் மகாவித்துவான் அவர்களை நேரில் சந்தித்து உரையாடியவர். ஓர் இலக்கம் செய்யுள்களை இயற்றியுள்ள அவர் இவரைப் பற்றிக் குறிப்பிடும்போது,

*தும்பியே நிகர் மீனாட்சி*
*சுந்தரப் பெயர்ப் பாவாணன்*
*பம்பிய தலபுராணம்*
*பற்பல பாடித் தீர்த்தோன்*
( புலவர் புராணம், கண்கண்ட.9 )

என்கிறார்.

இத்தனைச் சிறப்பு வாய்ந்த மகாவித்துவான் அவர்கள் தமக்கென்று படைப்புப் பாணி ஒன்றை வகுத்துக் கொண்டதற்கும், ஆதீனத் தொடர்பை விரும்பி முயன்று ஏற்படுத்திக் கொண்ட தற்கும் அவருக்குக் கச்சியப்ப முனிவரின் நூல்களின் பால் ஏற்பட்ட ஈர்ப்பே காரணம் ஆகும். இதனை மகா வித்வானின் வாழ்க்கை வரலாற்றில் உ.வே.சா. அவர்கள்,

"இவர் ( மகாவித்துவான் ) புத்தகங்களைத் தேடுகையில் திருவானைக்காக் கோயில் தர்மகர்த்தாவின் வீட்டில் திருவாவடுதுறை யாதீனத்து வித்துவானாகிய ஸ்ரீ கச்சியப்ப முனிவரால் செய்யப்பெற்ற நூல்களுள் ஒன்றாகிய திருவானைக்காப் புராணம் கிடைத்தது. அதை முறையே படித்து வருகையில் கடவுள் - வாழ்த்தின் அழகும், நாட்டுச் சிறப்பு முதலிய காப்பிய உறுப்புக்களின் அமைதியும், அவற்றிற் பழைய நூற்பிரயோகங்களும், இலக்கண அமைதிகளும், தம்மால் அதுவரையில் அறியப்படாத சைவ சாஸ்திரக் கருத்துக் களும், சைவ பரிபாஷைகளும், புதிய புதிய கற்பனைகளும் நிறைந்து சுவை ததும்பிக் கொண்டிருத்தலையறிந்து இன்புற்றுப் பன்முறை படித்து ஆராய்ச்சி செய்வாரா யினார். ... பின்னர் கச்சியப்ப முனிவர் செய்த வேறு நூல்கள் எவையென்று ஆராய்ந்து தேடியபொழுது விநாயக புராணத்திற் சில பகுதிகளும், பூவாளூர்ப் புராணமும் கிடைத்தன. அந்நூல்களையும் வாசித்து இன்புறுவாராயினர். இடை யிடையே ஐயங்கள் சில நிகழ்ந்தன. ... தமக்கு உள்ள ஐயங்களைத் திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சென்று தீர்த்துக் கொள்ள வேண்டுமென்ற எண்ணமும் அவ்வாதீனத்தின் தொடர்பை எந்தவழியாகவேனும் பெற வேண்டும் என்னும் விருப்பமும் இவருக்கு உண்டாயின".

( மகாவித்துவான் வாழ்க்கைச் சரித்திரம் I பக்.27 - 28 ) எனத் தெளிவாகக் கூறுகிறார்.

மகாவித்துவான் அவர்கள் கச்சியப்ப முனிவரைக் கிட்டத்தட்ட தம் வழிபடு கடவுளாகவேக் கருதி வந்தார் என்னும் உண்மையையும் அந்த நூலில்,

"தமிழ்ப் புலவர்களுள் கச்சியப்ப முனிவரை இவர் பக்தியோடு வழிபட்டுப் பாராட்டுவார். "செய்யுள் செய்துவரும் பொழுது தடைப்பட்டால் கச்சியப்ப முனிவரைத் தியானிப்பேன். உடனே விரைவாகக் கருத்துக்களும் சொற்களும் தடையின்றி எழும்" என்று இவர் சொல் வதைக் கேட்டிருக்கிறேன்" எனக் காட்டு கிறார். இதற்கு அகச்சான்றாக மகாவித்துவான் அவர்களே தம் திருவாவடுதுறை அம்பலவாண தேசிகர் பிள்ளைத் தமிழில்,

*"... துதிநிகழ்த்தல் இவ்வாறதென்றே*
*அன்னை ஒப்பாம் கச்சியப்ப முனியால் நன்கு*
*அறிந்தனம்; இனித் துதித்தற்கு அஞ்சுறோம்"*

( சப்பாணி. 3 )

எனக் கூறுமிடத்து முனிவர்பெருமானைத் தமக்குத் தாய் அனையவர் என்றும், கவிமரபைக் கற்பித்த ஆசான் என்றும் வெளிப்படுத்துகிறார். இவ்வாறு மகாவித்துவான் ஆகிய கவிக்குக் கச்சியப்ப முனிவர் இரட்சகர் ஆகிறார். இந்தக் கவிமரபு இத்துடன் தடைப்பட்டுவிடாமல் கொங்கு நாட்டிலும் துளிர்விட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

கோயமுத்தூரை அடுத்த சிரவண புரம் கௌமார மடாலயம் எனப்படும் சிரவையாதீனத்தின் இரண்டாம் பட்டம் தவத்திரு கந்தசாமி சுவாமிகள் திருப்பேரூர்ப் பட்டிப்பெருமான் மீது பெரும் பக்தி கொண்டவர். அவ்வாறே திருப்பேரூர்ப் புராணத்தாலும் பெரிதும் ஈர்க்கப்பட்டவர். இவர் ஐம்பதற்கும் மேற்பட்ட தலங்கள் தொடர்பாக ஏழாயிரத்திற்கு மேற்பட்ட செய்யுள்களை இயற்றியவர். அவற்றுள் திருப்பேரூர் தொடர்பானவை மட்டும் 1203 செய்யுள்கள் ஆகும். இந்தக் கந்தசாமி சாமிகள் கச்சியப்ப முனிவரின் நூல்களைப் பலமுறை ஆழ்ந்து படித்துப் படித்து, அறிந்தோ அறியாமலோ அந்த இலக்கியப் பாணியைப் பின்பற்றத் தொடங்கிவிட்டார். செறிவு, திரிசொல்லாட்சி, சைவக் கருத்துக் கள், யாப்புத் தெரிவு முதலிய பல நிலை களிலும் இருவரிடமும் பல ஒற்றுமைகளைக் காணலாம். கச்சியப்பரிடம் பரவலாகக் காணப்படும் சங்க நூற் கருத்துக்களும் சொல்லாட்சியும் மட்டும் சுவாமிகளிடம் பார்க்க முடியாது.

கச்சியப்ப முனிவரின் பேரூர்ப் புராண சாரமாகப் பேரூர்ப்பட்டிநாயக மாலை என்னும் 112 எழுசீர் விருத்தங்களாலான சிற்றிலக்கியம் ஒன்றையும், விநாயகபுராணத்தின் சாரமாகச் சித்தி விநாயக மாலை என்னும் 106 விருத்தங் களாலான பிரபந்தம் ஒன்றையும் படைத் துள்ளார். சுவாமிகளுடைய நூல்களைப் படிக்கும் போது பல இடங்களில் நம்மையறியாமல் கச்சியப்ப முனிவரின் நினைவு வரும். இதனால்தான் சிரவை யாதீனம் தவத்திரு கந்தசாமி சுவாமிகள் இலக்கிய அறிஞர்களால் கொங்கு நாட்டுக் கச்சியப்ப முனிவர் என வழங்கப்படுகிறார். இவ்வாறு கச்சியப்ப முனிவர் கருத்துச் செறிவு மிக்க ஓர் இலக்கிய பாரம்பரியத்தை யே உருவாக்கி அவ்வகையிலும் கவிஇரட்சக ராக விளங்குகிறார் என்றால் மிகை ஆகாது.

இனி இம்முனிவர் பெருமானின் சைவத் தமிழ்ப் பணிகளைப் பற்றி ஒரு சிறிது காண்பாம். முனிவர் தாம் செய்யும் நூல்கள் அனைத்திலும் குறிப்பாகத் தலபுராணங் களில் சைவ

சித்தாந்த உண்மைகளை ஆங்காங்கு உணர்த்துவதை ஒரு மரபாகக் கொண்டவர். அவற்றுள்ளும் தம் தல புராணங்கள் மூன்றில் சைவ சித்தாந்தத்தை விரிவாக விளக்குவதற்காக ஒவ்வொரு படலத்தையே ஒதுக்கிக் கொண்டுள்ளார். திருவானைக்காப் புராணத்தின் ஞான உபதேசப் படலம், தணிகைப் புராணத்தின் நந்தி உபதேசப் படலம், பேரூர்ப் புராணத்தின் காலவன் வழிபடுபடலம் என்பன அத்தகைய தலபுராணப் பகுதிகள் ஆகும்.

எளிதில் கற்று உணர்வதற்கு அரியன ஆகிய அந்த மூன்று படலங்களை அடிப் படையாகக் கொண்டு பெருமதிப்பிற்குரிய பேராசிரியப் பெருந்தகை சித்தாந்த வித்தியாநிதி முனைவர் ர. வையாபுரி அவர்கள் கச்சியப்ப முனிவரின் சைவ சித்தாந்தம் - சுருக்கம், விரிவு, முத்தி நிலை ஆய்வு என அருமையான மூன்று தொகுதி களை வெளியிட்டிருக்கிறார் என்பதற்கு மேல் முனிவர் பெருமானின் சைவ சித்தாந்த விளக்கத்தைப் பற்றிச் சொல்வதற்கு வேறு என்ன வேண்டும்? தம் ஆசிரியரைப் போல இவர் தனியாகச் சாத்திர நூல்களையோ உரைகளையோ இயற்றாவிட்டாலும், இவர் தம்மால் செய்யப்பட்ட எல்லாப் பனுவல் களிலும் வாய்ப்புக் கிடைத்த இடங்களில் எல்லாம் சாத்திரக் கருத்துக்களைத் தவறாமல் விளக்கியுள்ளார்.

பொதுவாகப் புலவர்கள் சாத்திரக் கருத்துக்களை உவமையாகக் கையாளுவதில் விருப்பம் உடையவர்கள். இதனால் அக்கவிஞர்கள் உணர்த்த விரும்புவது பருப் பொருளான உவமேயத்தை அன்று ; அவர்களின் விழைவு எல்லாம் படிப்பவர்கள் உவமானமாகக் காட்டப்படும் சாத்திர நுண்பொருளை உணர்ந்துகொள்ள வேண்டும் என்பது தான். கச்சியப்ப முனிவர் தம் பேரூர்ப் புராணத்தில் கையாளும் அத்தகைய உவமை ஒன்று ஆழமாகச் சிந்திக்கத்தக்கது.

வளமான நகரத்தில் பெரிய பெரிய நகைக்கடைகள் இருக்கும். அவற்றில் பல அணிகலன்கள் விற்பனைக்காகத் தொகுத்து வைக்கப்பட்டிருக்கும். அந்த ஆபரணங்கள் விலை உயர்ந்த நவமணிகள் இழைக்கப் பட்டவை, படாதவை ; நிறை மிக்கவை , குறைவானவை ; கலைநுணுக்கம் மிக்க வேலைப்பாடு அமைந்தவை, அமையா தவை ; மாற்று உயர்ந்தவை , தாழ்ந்தவை எனப் பலவாறாக இருக்கும். எல்லா அணிகலன்களையும்

வணிகர்கள் அவ்வவற்றிற்கேற்ற விலையைப் பெற்றுக் கொண்டு விற்பனை செய்வர். இத்தகைய நகைக் கடைகள் பேரூரில் இருந்தன எனச் சொல்லவருகிறார் முனிவர். இந்த வியாபாரம் அனைவரும் அறிய நாளும் நடக்கும் ஒரு சாதாரணமான செய்தி.

இந்த எளிய உலகியல் நிகழ்ச்சியைக் கூறும்போது முனிவர் ஒரு சைவ சித்தாந்தக் கோட்பாட்டை உவமையாக்குகிறார். பதி ஆகிய பரம்பொருள், கேவல நிலையில் ஆணவத்தோடு கட்டுண்டு கிடக்கும் எல்லா உயிர்களுக்கும் தனுகரண புவன போகங் களைத் தந்து, வினைகளைச் செய்யவைத்து, பக்குவப்பட்டபின் வீடுப்பேற்றையும் தன் கருணையினாலேயே வழங்குகிறார் என்பதே அக்கோட்பாடு. விலைக்கு ஏற்ற நகையைத் தரும் வணிகரின் செயல் வினைக் கேற்ற உடல் முதலியவற்றை அளிக்கும் இறைவனின் அருளுக்கு நிகரானது என்கிறார். இந்த உவமையைச் சற்று விரிவாக்கிச் சிந்திக்க வேண்டும். முதற்கண் பாடலைப் பார்ப்போம்.

*தழைத்த கருமக்கு இயைய‌த் தனுகரணாதி அளிக்கும்*
*குழைத்த கடுக்கைச் சடிலக் குழகன்திருவருள் மான*
*இழைத்த குருமணி மாடத்து ஈண்டிய எவ்வெப்பொருளும்*
*மழைத்தடந் தோளின் வணிகர் வருவிலைக் கேற்ப அளிப்பார்.*

( பேரூர்ப் புராணம், நகரம்., 56 )

பொன் ஒன்றுதான் எனினும் நகைகள் பலவாக உருவெடுத்திருப்பது கேவல நிலையில் ஒரே தன்மையனவாக இருந்த உயிர்கள் பலமனிதர்களாக உலகில் படைக்கப்பட்டுள்ளனர். நகைகள் பல்வேறு காரணங்களால் விலை மதிப்பில் உயர்ந்தும் தாழ்ந்தும் இருப்பதைப் போல மக்களின் இரு வினைகளின் காரணமாக அவர்கள் பெறும் உடலும் வாழ்க்கை வசதிகளும் வேறுபடுகின்றன. அணிகலன்கள் எப்படி இருந்தாலும் ஒருநாள் திண்ணமாக விற்கப் பட்டுவிடும். அதுபோல எல்லா உயிர்களும் உரிய காலத்தில் கட்டாயமாக வீட்டுப் பேற்றை அடைந்துவிடும் என்னும் கோட் பாட்டை தான் கச்சியப்ப முனிவர் இச் செய்யுளில் உவமையாக உணர்த்துகிறார்.

மேலெழுந்த வாரியாகப் பார்த் தாலே முனிவர் வலியுறுத்த விரும்புவது வியாபாரத்தை அன்று. உயிர்களின் கேவல, சகல, சுத்த அவத்தைகளையும் சிவபெரு மானின் திருவருளையும்தான் என்பது தெளிவாகப் புலப்பட்டுவிடுகிறது. அனைவருக்கும் தெரிந்த ஒன்றைக் கொண்டு தெரியாத ஒன்றை விளக்குவதற்காக எழுந்த உவமை அணி இங்கு தலைகீழாக மாற்றப்பட்டுள்ளது.

இவ்வாறே நேரான காட்சியளவை யால் அறியப்படாமல் புராணவாயிலாகக் கேட்கப்படும் செய்திகளை உவமையாக அமைப்பதும் கவிஞர்களின் இயல்பு. அத்தகைய முறையில் அமைந்தது கச்சியப்ப முனிவரின் திருத்தணிகை ஆற்றுப்படைக் காப்பு வெண்பா.

சீரார் தொடை புனைந்த செம்பாவை முன்புபோல்
ஏரார் தணிகை இளவற்கு - நேராகக்
கூட்டுமால் வேற்றுருவம் கொள்ளாமை எப்பொருளும்
காட்டுமால் ஐங்கைக் களிறு.

விநாயகர் முற்காலத்தில் ஒரு கொம்பும் ஐந்து கரங்களும் கொண்ட தன் இயல்பான வடிவத்தை மறைத்து, இரண்டு கொம்புகளும் ஒரு துதிக்கையும் பெற்ற ஒரு காட்டு யானையாகத் தோன்றி வள்ளி நாயகியைத் தம் தம்பிக்குக் கிடைக்கச் செய்தார். அதுபோல இப்போது தம் உண்மையான வடிவத்தில் இருந்து கொண்டே அந்த இளவனுக்கு இலக்கிய நயமிக்க ஆற்றுப்படை ஆகிய இச் செந் தமிழ்ப் பிரபந்தத்தை வழங்குவார் என்பது இதன் பொருள்.

இவ்வெண்பாவில் சீர் ஆர் தொடை புனைந்த செம்பாவை என்னும் தொடர் இரட்டுறமொழிதலாக இருபொருள் பெற்று நிற்கிறது. சிறந்த மாலைகளை அணிந்த சிற்பம் போன்றவளாகிய பெண் - அதாவது வள்ளி நாயகி என்பது ஒரு பொருள். இப்பொருள்கோள் கந்தபுராணத்தின் வள்ளி திருமண வரலாற்றுக்கு உபகாரப் பட்டு நிற்கிறது. எழுத்து அசைகளால் ஆன சீர்களையும், நிறைவான எதுகை முதலிய தொடை நயங்களையும் பெற்ற செம்மை யான, பாடலை என்பது மற்றொரு பொருள். இது காப்புப் பொருண்மைக்குத் துணை புரிகிறது.

இந்தப் பனுவலை ஐங்கைக் களிறு வழங்கும் என்றதால் எதுவும் தன் செயல் அன்று ; இறையருளே எனத் தற்போதம் அற்ற நிலையில் முனிவர் பெருமான் அவையடக்கத்தையும் அமைத்துக் கொண்டு விடுகிறார்.

புராண நிகழ்ச்சியை உவமை யாக்குதல், இரட்டுற மொழிதல், அவை யடக்கத்தைக் குறிப்பால் உணர்த்தல் என்பனவற்றைத் தவிர மற்றும் ஒரு நயமும் இந்தக் காப்பு வெண்பாவில் இடம் பெற்றுள்ளது. வள்ளியை விரும்பிய முருகப் பெருமான் அவள் இருந்த தினைப் புனத்திற்கு தன் உண்மைத்

திருவுருவத்தை மறைத்துக் கொண்டு வேடன், விருத்தன் எனச் சென்றார். அதனால் அவருக்கு உதவச் சென்ற மூத்த பிள்ளையாரும் தன் சொந்த வடிவத்தை மறைத்துக் கொண்டு ஒரு காட்டு யானையைப் போலச் சென்றார். இப்போது அப்படி உருமாறத் தேவை இல்லை. ஏனெனில் திருத்தணிகையில் முருகக் கடவுள் தனக்குரிய ஞான சக்தி தரனாகிய சுயரூபத்தில் எழுந்தருளியுள்ளார். அதனால் கணபதியும் தம் சொந்த வடிவத்தில் இருந்து கொண்டே அருள் புரிகிறார். இதனை வெளிப்படையாகக் கூறாமல் குறிப்பாக வேற்றுருவம் கொள்ளாமை எனக் கூறியிருப்பது ஒரு நல்ல இலக்கிய உத்தி.

இனி எப்பொருளும் காட்டும் என்பதற்கு ஏற்ப ஐங்கைக் களிறு எனக் கருத்துடை அடைமொழி புணர்த்துள்ள பாங்கு என இந்த வெண்பாவின் இலக்கிய நயத்தை விரித்துக் கொண்டே போகலாம். கச்சியப்ப முனிவரின் செய்யுள்களை எடுத்துக்கொண்டு கவிநயம் உரைத்தல் எனப் பக்கம் பக்கமாக எழுதிக் கொண்டே போகலாம்.

அடுத்துக் கவிரட்சகரின் யாப்புத் தேர்வு பற்றி அங்கு வெளிப்படுத்த வேண்டிய உணர்ச்சிக்கும் சிறப்பாகப் பொருந்துமாறு தகுந்த பாவகையைத் தேர்ந்தெடுத்துப் பயன்படுத்துவது பெரும் புலவர்களின் இயல்பு ஆகும். இது எந்த யாப்பிலும் எந்தப் பொருளையும் எளிதில் அமைக்கவல்ல சிறந்த கவிஞர்களுக்கு மட்டுமே கைகூடும் ஒரு சிறப்புத் திறமை ஆகும். அவ்வகையில் நம் கச்சியப்ப முனிவர் பேராற்றல் படைத்தவர் என்பதை அறியப் பின்வரும் ஓரிரு செய்யுள்களே போதுமானவையாம்.

கதையை வேகமாக நடத்திச் செல்வதற்குச் சிறுவாக்கியத்தை ஓர் அடியாகப் பெற்ற வஞ்சிவிருத்தம் ஏற்புடையதாகக் கொள்ளப்பட்டுள்ளது.

**பொற்கலை பூமி படுத்தனன் ;**
**வற்கலை மாண உடுத்தனன் ;**
**விற்கலின் மோலி விடுத்தனன் ;**
**அற்கலில் வேணி அடுத்தனன்.**

*(பேரூர்ப் புராணம், தென்கயிலாயப் படலம் 53)*

இப்படலத்தில் இது முதல் தொடர்ந்து ஐந்து விருத்தங்கள் இவ்வாறே விரைவு நடையும் இயைபுத் தொடையும் பெற்று கதை யோட்டத்தை வேகமாக்குகின்றன.

இனிக் கழிவிரக்கமாகிய தன்னு ணர்ச்சியை வெளிப்படுத்த வழக்கமான அறுசீர் விருத்தத்தில் ஓலம் என்னும் சொல்லை அடிதோறும் அடுக்காகவும் தனித்தும் சொல்பொருள் பின்வரு நிலையாக அமைத்திருப்பது மிகப் பொருத் தமாகப் பொலிவதைக் காணலாம்.

ஐம்புல வேடர் தாக்க
அலைப்புண்டேன் ஓலம் ஓலம்!
வெம்புடற் சிறையிற் பட்டு
மெலிகின்றேன் ஓலம் ஓலம் !
பம்பிரு வினையின் வல்லி
பரிந்திட அறியேன் ஓலம் !
இம்பரித் தொடரி னின்றும்
எடுத்தருள் இறைவா ! ஓலம் !
*( பேரூர்ப்புராணம், காலவன்வழிபடு. 45 )*

சிவபெருமானின் திருக்கூத்தை வருணிக்கும் போது கச்சியப்ப முனிவர் மா, விளம், மா, விளம், மா, விளம், காய் என்னும் எழுசீர்களால் நடக்கும் மத்தகோகிலம் எனப் பெயர்கொண்ட எழுசீர்ச்சந்த விருத்த யாப்பைக் கையாண்டுள்ளார். இது அய்யனின் ஆனந்தக் கூத்தை அற்புதமாகப் படம்பிடித்துக் காட்டுகிறது.

தழவொத் தவிர்புரி சடையெண் டிசைதட
வரவெண் மதியொடு புனறுள்ள
அழகொன் றியகுழை அசையக் குறுநகை
அலரப் புருவமும் முரிவெய்தச்
சுழல்கட் செவியர விழிவெண் டலைதிணி
தோளிற் றுயல்வர அதன்பொங்க
உழல்கில் அரிபயின் மணிநூ புரவொலி
உறழத் திருநடம் நவில்கின்றான்.
*( திருப்பேரூர்புராணம், திருத்தப். 61 )*

இதே யாப்பில் முனிவர் பெருமான் அம்பலக் கூத்தைப் பற்றிய சித்தாந்த விளக்கங்களை எல்லாம் கூறுவது மிகவும் வியப்பிற்குரியது.

வீரச் சுவையோடு போர் நிகழ்ச்சிகளைப் பாடப் பொதுவாகத் திருச்சந்த விருத்தம் என வழங்கப்படும் எழுசீர்ச் சந்த விருத்தம் ஏற்புடையது என்பர். முனிவர் போர் நிகழ்ச்சிகளை வீரச் சுவையோடு விவரிக்க மூன்று புளிமாங்கனிச் சீர்களோடு ஒரு

புளிமாச்சீர் இணைந்து வரும் அதிகரிணி என்னும் சந்தக் கலிவிருத்தத்தைப் பரிசோ தனையாகப் பயன்படுத்துகிறார். அந்த யாப்பு பெரும் போரின் கடுமையையும் வேகத்தையும் காட்ட ஏற்புடையதாகவே தெரிகிறது.

**இலையோடெதிர் இலையுஞ் செறி வானொடுவை வாளும்**
**இலைவாரயில் வேலோடிலை வேலும்சுள குறழ்கா**
**தலைதோலொடு தோலும்பரி யோடன்னதும் இந்த**
**மலையோடுருள் மலையும் பொருமற வெங்கனல் இதரி**

*(தணிகைப்புராணம், சீபரிபூரணநாமப்: 70)*

**தக்கன்முடி எச்சன்முடி ஈர்ந்துதழல் இட்டான்;**
**தொக்கஅழல் அங்கையொடு நாத்திரள் துணித்தான்;**
**புக்கபகல் வாள்விழிபுயந்து பகலோன்பல்**
**க்கஉக எற்றிஒரு வீரன்மதி தேய்த்தான்.**

*(பேரூர்ப்புராணம், கௌரிதவம்புரி 25)*

என வேறு ஓர் இடத்தில் மூன்று விளங்காய்ச் சீர்களும் ஒரு தேமாச்சீரும் இணைந்து நடக்கும் வனமயூரம் என்னும் சந்தக் கலிவிருத்தத்தை வீரச் சுவையோடு வேகத் தையும் காட்டக் கையாளுகிறார். இந்த இடத்திற்கு இந்தயாப்பும் நன்கு பொருந்து கிறது. இவற்றைப் போல இடத்திற்கேற்ற பற்பல யாப்புவகைகளைக் கச்சியப்பர் கையாளுவதைக் காண முடிகிறது.

இவ்வாறாகக் கவிரட்சகர் கச்சியப்ப முனிவரை ஒரு சைவப் புலவராக மட்டுமல்லாமல் தேர்ந்த ஒரு செந்தமிழ்க் காப்பியக் கவிஞராகவும் காண முடிகிறது. கச்சியப்ப முனிவருக்குப் பிறகு தோன்றி இலக்கிய மரபினின்று வழுவாமல் கனமான இலக்கியங்களைப் படைத்த சைவத் தமிழ்ப் புலவர்கள் அனைவரும் அவரால் மிகத் தாக்கம் பெற்றுள்ளனர். அவர்களுள் மகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களும், தவத்திரு. சிரவைக் கந்தசாமி சுவாமிகளும் குறிப்பிட்டுக் கூறத்தக்கவர்கள்.

*திருச்சிற்றம்பலம்*



# எழுத்தினுள் அகரம்
# ஒன்றாய் உடனாய் வேறாய் நிற்றல்

வித்துவான் க.கதிரேசன் எம்.ஏ., பி.எட்.,
குன்றக்குடி ஆதீனப்புலவர்,
பூவாளூர் - 621 712.

சிவபரம்பொருள் உலகிற்கு முதற்பொருளாக இருந்து அருள்புரியும் மாட்சியைத் திருவள்ளுவர்

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு" என்று எடுத்தியம்புகிறார்.

இவர் கூறும் இந்த அரிய உவமையை இவருக்குப் பின் வந்த பலரும் தத்தம் நூல்களில் பொன்னேபோல் போற்றி வைத்துள்ளனர்.இவர்களுள் மெய்கண்ட நூல்கள் அருளிய மெய்கண்ட சிவனார், அருள்நந்தி சிவனார், உமாபதி சிவனார் மனவாசகம் கடந்தார் ஆகியோரும் தலைசிறந்த கவிஞர்களுள் ஒருவராகிய பூவாளூர்ப் புராணம் இயற்றிய கவிராட்சசர் ஸ்ரீ கச்சியப்ப முனிவரும் குறிப்பிடத்தக்கவர்கள்.

பூவாளூர்ப் பூராணம் 15 மகட்பேசு சருக்கம் 25ஆம் செய்யுளில் இவ்வுண்மையை எடுத்தாள்கிறார். அது,

"எழுத்தினுள் அகரமே என்ன எங்கணும்
முழுத்துணர் சிவபுரான்...." என்பதாம்.

சிவஞானபோதம் 2ஆம் சூத்திரம் இறைவன், உயிர்களின் ஈடேற்றத்தின் பொருட்டு "அவையே தானேயாய்" விளங்குவதைக் குறிக்கிறது. இத்தொடர் "அவையேயாய், தானேயாய், அவையே தானேயாய்" என்று விரியும். இதனை ஒன்றாய் வேறாய் உடனாய் விளங்குதல் என்பர். அகரம் பிற எழுத்துகளுடன் சிவபெருமானைப் போல அவையே தானேயாய் விளங்கும் தன்மையைச் சிறிது நோக்குவோம்.

**ஒன்றாய் நின்று உதவுதல் :-**

அகரம், சடப்பொருள். இது ஒலிவடிவம் பெறுவது இயல்பான வாய்திறந்தல் ஆகிய அங்காப்பால் ஆகும். அகர ஒலி வடிவிற்குரிய இவ்வங்காப்பு நடைபெறாமல் எந்த ஒரு எழுத்தும் ஒலிவடிவம் பெறுதல் இல்லை.

பிற எழுத்துக்களை ஒலிக்கும் போது, அகரத்துக்குரிய அங்காப்பு ஒலி அப்பிற எழுத்துஒலியுடன் ஒன்றியே நிற்கும். இதனால் இவ்வங்காப்பு ஒலியைத் தனித்துப் பிரித்தறிதல் இயலாது, எனவே அங்காப்பொலி தன்னைத்தனியே புலப்படுத்திக் கொள்ளாது.

சிவம் எங்கும் என்றும் நிலைத்த பரம்பொருள் ஆயினும் உயிர்களுடன் ஒன்றாய் நிற்கும் நிலையினன். அப்போது அவன் தன் இயல்பை புலப்படுத்திக் கொள்ளாது தான் ஒன்றியிருக்கும் உயிரின் இயல்பையே புலப்படுத்துகிறான். தான் அவ்வுயிரில் மறைந்து நின்று அவ்வுயிரை நிலைக்கச் செய்கிறான்.

**உடனாய் நின்று உதவுதல் :**

அகரம் தமிழில் வரிவடிவம் கொள்ளும்போது சுழி வளைகோடு, கிடைக்கோடு, குத்துக்கோடு ஆகியவற்றால் அமைகிறது. அகரத்தின் வரிவடிவத்திற்குரிய இவ்வகைப் பட்டன இன்றி பிற எழுத்து ஏதுமில்லை. இங்ஙனம் பிற எழுத்துகளுடன் அகரம் உடனாய் நில்லாத போது பிற எழுத்து ஏதும் இல்லை.

சிவம், உயிர்க்கு அருளும் நிலையில் திருவருட்பயன் கூறுவது போல் அரு, அருஉரு, உரு, அறிஞர்க்கு அறிவாம் (ஞானம்) உரு ஆகிய நான்கு நிலைகளில் அருள்கின்றான். இங்ஙனம் அவன் அருளானேல் உயிர்க்கு இயக்கம் இல்லை.

**வேறாய் நின்று உதவுதல் :**

அகரம் தனக்குரிய ஒலிவடிவாலும், வரிவடிவாலும் எந்த ஒரு பிற எழுத்தையும் ஒத்திருப்பதில்லை. தனக்கென்று கொண்ட ஒலி, வரி வடிவங்களுடன் தனித்து (வேறாய்) விளங்குவது.

சிவம், உயிர்களைப் போல் முக்குண வசப்பட்டு நிலை மாறுவதில்லை. தனக்கே உரிய எண்குணவடிவனாய் என்றும் ஒருபடித்தாய் நிலை பெறுபவன் - வேறாய் நிற்பவன்.

இங்ஙனம் அகரம், பரம்பொருளைப் போல ஒன்றாய், வேறாய், உடனாய் நிற்பதால்தான் அதனைப் பெருமானுக்கு உவமையாகக் காட்டுகின்றோம்.

**திருச்சிற்றம்பலம்.**

# ஸ்ரீ கச்சியப்ப முனிவர்பிரான் வரலாறு



ஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணறிவாற்றல், தென்தமிழ் வடமொழி இலக்கிய இலக்கணங்களில் ஆழங்கால்பட்ட புலமை, நயஞ் சான்ற கவிதைகளைக் கோடை மழைபோல் பொழியும் ஆற்றல், எதிரில் உள்ளவரை எளிதாக மடக்கும் விவாதச் செந்நா, உற்றநோய் நோன்று உயிர்க்கு உறுகண் செய்யாத் தவ ஒழுக்கம் இவற்றின் மொத்த உருவமாகத் திகழ்ந்தவர், முனிவர்பிரான், கவிஞர் பிரான், கவிச்சக்ரவர்த்தி, கவிராட்சசர், திருவாவடுதுறை ஆதீன மகாவித்துவான் என்று போற்றப் பெறுகின்ற உச்சி மேற்புலவர் கொள் ஸ்ரீ கச்சியப்ப முனிவர்பிரான்.

இவர் கி.பி. *1740*இல் தொண்டை மண்டலத்துத் திருத்தணியில், காஞ்சிபுரம் பரம்பரைச் சைவ வேளாளர் குலத்து அபிஷிக்தர் மரபில் (தக்கவர் மூலம் ஆசாரிய அபிடேகம் செய்து கொண்டு பிறர்க்கும் செய்து வைக்கும் மரபு) அவதரித்தார். இளமை முதலே நற்பண்புகளிலும் அறிவுக் கூர்மையிலும் சிறந்து விளங்கிய இவருக்குத் தக்க வயதில் கல்வி கற்பிக்கப் பெற்றோர் இவரைப் பள்ளியில் சேர்த்தனர். ஆயினும் சிவதலங்களைத் தரிசிப்பதில் கொண்ட பேரீடுபாடு காரணமாகச் சிறிதளவு கற்ற நிலையிலேயே மெய்யுணர்வு தலைப்பட்டதால் சிவதலங்களைத் தரிசிக்கும் பேராவல் காரணமாகத் திருத்தணியிலிருந்து புறப்பட்டு விட்டார். வழியிடைத் தலங்களைத் தரிசித்துக் கொண்டு, தில்லையம்பதியை அடைந்து அருள்மிகு ஆனந்தக் கூத்தனைத் தொழுது மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்தார்; திருவாவடுதுறை அடைந்தார்.

**முனிவராதல் :**

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத் திருமடத்தை நிறுவியவரும், மெய்கண்ட சந்தானத்தில் வந்த உமாபதி சிவனாரின் உபதேச பரம்பரையில் வந்தவரும், திருமடத்தின் ஆதி குருமூர்த்தியும் ஆக விளங்குகின்றவர்கள், அருள்தரு நமச்சிவாய குருமூர்த்திகள். சித்தாந்த ஞானபானுவாகிய இவர்களை இவர்களது திருக்கோயில் கண்டு பணிந்து, திருவருள்

நோக்கம் பெற்றார். அப்போது ஞானபீடத்தில் எழுந்தருளி அருட்செங்கோலோச்சிய 12ஆவது குருமகா சன்னிதானம் ஸ்ரீ திருச்சிற்றம்பல தேசிகர் அவர்கள் சிவாகம ஆராய்ச்சியைத் தமது பொழுது போக்காகக் கொண்டு சிவானந்த நிட்டையில் எழுந்தருளியிருந்தமையால், அதுகாலை இளைய பட்டமாக இருந்த ஸ்ரீ அம்பலவாண தேசிகர் அவர்களை ஒடுக்கத்தில் சந்தித்துத் தரிசித்தார். இவரது பரிபக்குவ நிலையுணர்ந்த தேசிகர் அவர்கள், முறைப்படி சமயதீக்கை, விசேட தீக்கைகளும், சிவாசிரமத்துக்குரிய துறவுக்குப் பின் நிர்வாண தீக்கையும் வழங்கியருளினார்கள்.

**மாணாக்கராதல் :**

இதன் பின்னர், பேரூர் ஸ்ரீ வேலப்ப தேசிகரை ஞானாசிரியராகப் பெற்ற பெரும் பேறுடையவரும், தமிழ், வடமொழி, இலக்கண இலக்கியப் புலமை நலம் சான்றவரும், மெய்யுணர்வில் முழுமை எய்தியவரும், சிவஞான போதத்திற்குச் சிற்றுரை, பேருரை இயற்றியருளியவரும் ஆகிய மாதவச் சிவஞான யோகியாராகிய ஸ்ரீ மாதவச் சிவஞான முனிவர் பெருமானைத் தமது கல்விக்குருவாக ஏற்றார். அவர்பால் தீந்தமிழ் வடமொழி இலக்கியங்கள், இலக்கணங்கள், தருக்கம், மெய்கண்ட சாத்திரங்கள் பதினான்கு, பண்டார சாத்திரங்கள் பதினான்கு, ஆகமங்கள் முதலிய பல்வேறு அரிய நூல்களைத் தெளிவுறக் கற்றார்; செய்யுள் இயற்றுவதிலும் தன்னிகரற்று விளங்கினார். மாதவச் சிவஞான யோகிகளின் மாணாக்கர் பன்னிருவர். அவர்களுள் தலை சிறந்து விளங்கியவர் ஸ்ரீ கச்சியப்ப முனிவர். எஞ்சியோர் தொட்டிக்கலை - சுப்பிரமணிய முனிவர், மதுரை ஆதீனம் - வேலாயுத தேசிகர், காஞ்சிபுரம் - சரவணப் பத்தர், இராமநாதபுரம் - சோமசுந்தரம் பிள்ளை, முத்துக்குமார தேசிகர், இலக்கணம் சிதம்பர நாத முனிவர், கல்யாண சுந்தர உபாத்தியாயர், அடைக்கலம் காத்தார் முதலியார். காஞ்சிபுரம் - சிதம்பர முனிவர், திருக்கூடல் சந்திரசேகர முதலியார், திருச்சிற்றம்பல தேசிகர் ஆகியோராவர்.

**படைப்பாளியாதல் :**

இருமொழிப்புலமை, இலக்கண இலக்கியக் கூரறிவு, தருக்கவல்லமை முதலியன பெற்ற இவருக்குக் கவிதை இயற்றுதல் கைவந்த கலையாயிற்று. ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, வித்தாரகவி ஆகிய நால்வகைக் கவிதைகளையும் எளிதில் படைப்பதில்

வல்லவரானார். தாம் புத்தம் புதிதாக இயற்றும் கவிதைகளையும் கூட, பழம் பாடல் ஒன்றினை முன்னரே நன்கு மனப்பாடம் செய்து தெளிவுற ஒப்பிக்கும் ஒருவரைப்போல, யாதொரு வருத்தமோ, தடையோ இன்றி விரைந்து மிக எளிதில் இயற்றும் ஆற்றலுடையவர். இவரது செய்யுட்களில் சந்த நலம், சொற்சுவை, பொருட் சுவை, கருத்துவளம், கற்பனைவளம், சிவமணம் முதலியன கமழும். இவரது இத்தகு ஆற்றலைப் பற்றி டாக்டர். உ.வே.சா அவர்கள்

**"அன்னசிவ ஞானயோகி களும்மகிழ்ந்(து) அதிசயிப்ப**
**அணிமுன் யாவும்**
**மன்னஅமை பலகவிகள் ஒருநொடியில் எளிதுரைக்கும்**
**வாகை மேயோன்"**

*- ( உ.வே.சா பூவாளூர்ப்புராணம் சிறப்புப்பாயிரம் )*

என்று போற்றுகிறார்.

இவ்வகையில் இவர் இயற்றியருளியுள்ள பெருங்காப்பிய நூல்கள் 1. திருவானைக்காப் புராணம், 2. பூவாளூர்ப் புராணம், 3. பேரூர்ப் புராணம், 4. தணிகைப் புராணம், 5. விநாயக புராணம், 6. காஞ்சிப்புராணத்து இரண்டாம் பகுதி என்பன. சிற்றிலக்கிய வகையில் தந்தவை, 1. தணிகை ஆற்றுப்படை, 2. தணிகைப் பதிற்றுப் பத்து அந்தாதி, 3. பிரமீசர் பதிற்றுப் பத்து அந்தாதி, 4. கச்சி ஆனந்த ருத்ரேசர் கழிநெடில், 5. கச்சி ஆனந்த ருத்ரேசர் வண்டுவிடு தூது, 7. பஞ்சாக்கர தேசிகர் அந்தாதி, 8.விநாயகர் அட்டகம் என்பன. மேலும், "மெய்கண்டார்" ஏப் - 2010 இதழ் பக் 58 இல் குறிப்பிட்டுள்ள அரசம் பலவாணர் பிரபந்தம், பட்டீசர் பிரபந்தம், விநாயகர் பிள்ளைத் தமிழ் ஆகியன தேடிக் கண்டு பிடித்து நுகர்தற்குரியனவாய் உள.

இம் முனிவர் பிரானின் புராண இலக்கியங்கள் பற்றி தமிழ்த்தாத்தா அவர்கள் தமது மீனாட்சி சுந்தரம்பிள்ளை சரித்திரத்தில் "பெருங்காப்பிய நிலையே பேசுங்காலை" என்னும் தண்டியலங்காரச் சூத்திரப்படி, சில கவிஞர்கள் தலபுராணங்களை காவிய இலக்கணங்கள் அமைத்துப் பாடினார்கள். பெரியபுராணம், கந்த புராணம் முதலியவற்றைப் பின்பற்றி, நாடு நகரச் சிறப்புகளுடன் விரிவாகப் பழைய கருத்துக்களையும், சாத்திரக் கருத்துக்களையும் அமைத்துப் பலர் செய்ய ஆரம்பித்தனர். அவ்வாறு செய்தவர் வரிசையில் ........... ஸ்ரீ கச்சியப்ப சுவாமிகள்" என்று குறிப்பிடுகிறார்.

- பாகம் - I. பக் 102.

**தொண்டராதல் :**

தலயாத்திரையில் பெருவிருப்புடைய இவர்கள், தலங்கள்தோறும் சென்று பெருமானை வணங்கி இன்புறுவதுடன் அமையாது, அவ்வூர் மக்களின் வேண்டுகோளுக்கிணங்க அங்குத் தங்கும் போது, அம்மக்களுக்குத் தமிழ் அறிவூட்டுதல், சமய நூற்பயிற்சி வழங்குதல் முதலியவற்றுடன் தமது மந்திர ஆற்றல், பச்சிலை மருத்துவ முறைகளின் மூலம் அவர்களது மனநோய் உடல் நோய் தீர்ப்பதும் வழக்கம், தமது நாநலம், கவிதை இயற்றும் ஆற்றல், விவாத நுட்ப அறிவு ஆகியவற்றால் பேரும் புகழும் பெற்ற போதிலும் தமக்குக் கல்வியறிவு ஊட்டிய மாதவச்சிவஞான யோகிகள்பால் பெருமதிப்பும், பக்தியும், நன்னம்பிக்கையும் உடைய தொண்டராகவும் விளங்கினார்.

**நிறைமொழியராதல் :**

*நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து*
*மறைமொழி காட்டி விடும் - திருக்குறள் 28*

என்பது பொய்யாமொழி. இதற்குச் சான்றாக டாக்டர் உ.வே.சா அவர்கள் இம்முனிவரது வாழ்வில் குறிப்பிடும் நிகழ்ச்சியைப் பார்ப்போம்.

துறைசை ஆதீனத்துப் 14ஆம் பட்டத்தில் எழுந்தருளி அருள்ஞானச் செங்கோல் ஓச்சியவர்கள், வேளூர் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் அவர்கள். "அவர் வடமொழி, தென்மொழி நூல்களிலும் மெய்கண்ட சாத்திரம், பண்டார சாத்திரம், சித்தநூல்கள்" முதலியவற்றிலும் பயிற்சி மிக்கவர்; பரம்பரையே பாடம் கேட்டவர்; பாடம் சொல்லுதலில் மிக்க ஆற்றலுடையவர்; பிரசங்க சக்தி வாய்ந்தவர்; வடமொழி வித்துவான்கள், தென் மொழி வாணர்கள் பலரிடையே இருந்து தினந்தோறும் அவர்களுடன் சல்லாபம் செய்து கொண்டு மகிழ்ச்சியோடு காலம் கழிப்பவர். அவர் அப்பொழுதப்பொழுது சமயோசிதமாகப் பேசிவந்த வார்த்தைகளும், சிலேடையான மொழிகளும் வாக்கியங்களும் இன்றும் அங்கே பலரால் மிகவும் பாராட்டி வழங்கப்படுகின்றன. அம்மடத்தில் இப்பொழுது பலவகையாக எழுதப்படும் திருமுக சம்பிரதாயங்களும் கடித வடிவங்களும், உள்ள சட்ட திட்டங்களும் அவர் புதுப்பித்தனவே என்பர். இவர் தமக்குப் பட்டமாவதற்கு முந்திய வருஷத்தில் ஸ்ரீ கச்சியப்ப முனிவரால் நன்கு படித்து வரும்படி செவியறிவுறுத்தப் பெற்றவர் என்று கேள்வி.

- மீ.சு.பி. சரித்திரம் -I பக் 34 - 35.

என்று குறிப்பிடுகிறார். எனவே இத்தேசிகரின் பற்பலவகைச் சிறப்புக்கும் இம்முனிவர் பெருமானின் நிறைமொழியே காரணம் என்பதை ஊகித்துணரலாம்.

**குருவாதல் :**

"தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே"

- திருமந்திரம் 139 : 4

என்பது, தோன்றாத்துணையாய் இருந்தாலும் கூட, தம்மை நினைப்பவர்களுக்கு அருள்புரிகின்றவர் குருமூர்த்தி என்பதை உணர்த்தும். இந்த அருள்வாக்கே "நீ யாரை அல்லது எதனைச் சதா நினைத்துக் கொண்டிருக்கிறாயோ அவராக அல்லது அதுவாக நீ ஆகிறாய்" என்ற உளவியல் முடிவாக மலர்ந்துள்ளது எனலாம்.

நம் சைவ சித்தாந்தம் உயர்ந்த தன் மேல் வைத்து இக்கருத்தைச் "சிவோகம் பாவனை" செய்தல் என்று குறிக்கிறது.

இவ்வகையில் அமைந்ததும், நம் முனிவர் பெருமானுடன் தொடர்புடையதுமாகிய ஒரு செய்தியைக் காண்போம்.

திருவாவடுதுறை ஆதீன மகாவித்துவான் தி.மீ.சு. பிள்ளையவர்கள், ஸ்ரீ கச்சியப்ப முனிவர்பால் மிக்க ஈடுபாடு கொண்டவர். ஸ்ரீ சிவஞான யோகிகளின் நூல்களிலும், ஸ்ரீ கச்சியப்ப முனிவர் நூல்களிலும் பேரீடுபாடு உடையவர். ஸ்ரீ கச்சியப்ப முனிவரைத் தமது வழிபடு குருவாக தெய்வமாகக் கருதி வாழ்ந்தவர். தம் செய்யுள் இயற்றும்போதும், பாடம் சொல்லும் போதும் எங்கேனும் தடைப்படுமானால் உடனே ஸ்ரீ கச்சியப்ப முனிவராகத் தியானிப்பாராம். அந்த நொடியிலேயே அத்தடை நீங்கிச் சொற்களும் கருத்துகளும் எழுமாம். இவ்வனுபவத்தைப் பிள்ளையவர்களே கூறத்தாம் கேட்டதாக டாக்டர் ஐயர் அவர்கள் குறிக்கிறார். (மீ.சு.பி. சரித்தரம் - II பக். 277). நம் சமய நெறிக்கும், உளவியலுக்கும் ஒத்த இதனை இன்றும் கூட யாரும் எளிதில் பின்பற்றி உயர்வு பெறலாம்.

**தாயாதல் :**

ஸ்ரீ சிவஞான யோகிகளிடத்தும், ஸ்ரீ கச்சியப்ப முனிவரிடத்தும் தி.மீ.சு. பிள்ளையவர்களுக்கு அளவற்ற ஈடுபாடு உண்டு என்பது முன்னரே கூறப் பெற்றது. இது பிள்ளையவர்கள் இயற்றியுள்ள ஸ்ரீ அம்பலவாண தேசிகர் பிள்ளைத் தமிழிலும் பதிவாகியுள்ளது.

"நின்னைஒப் பில்லாத சின்மயன் எனக்கலை
நிரம்பு பாடிய முனிவனாம்
நெடியசிவ ஞானமுனி யால் உணர்ந் தேம்;துதி
நிகழ்த்தல்இவ் வாற தென்றே
அன்னைஒப் பாம்கச்சி யப்பமுனி யான் நன்(று)
அறிந்தனம்" - சப்பாணி .... 3

என்பது அது. மாதவச் சிவஞான யோகிகளை "தன்னை ஒப்பில்லாத சின்மயன்" என்று கூறும் பிள்ளையவர்கள், நம் முனிவர்பிரானை "அன்னை ஒப்பாம் கச்சியப்ப முனி" என்று பாசம் பொழியும் உள்ளத்துடன் போற்றுவது குறிப்பிடத்தக்கது.

**சுவையோ சுவை :**

சான்றோர் கவிதையைக் கோதாவரி ஆற்றின் தெளிவுக்கு உவமை காட்டுவார் கம்பர்.

புவியினுக்(கு) அணியாய் ஆன்ற பொருள்தந்து
புலத்திற் றாகி
அவியகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறிஅ ளாவிச்
சவியுறத் தெளிந்து தண்என்று ஒழுக்கமும் தழுவிச்
சான்றோர்
கவிஎனக் கிடந்த கோதா விரியினை வீரர்க் கண்டார்
- கம்பராமாயணம்.

பொருளினும் உவமை சிறப்புடையது. "உயர்ந்ததன் மேற்றே உள்ளுங்காலை" என்பது தொல்காப்பியம் (சூ.1224.) ஆதலின் சான்றோர் கவிதையின் சிறப்புப் புலனாகும். ஸ்ரீ கச்சியப்ப முனிவராகிய சான்றோர் கவிதையும் இத்திறத்ததே.

தி.மீ.சு. பிள்ளையவர்கள் வாழ்வில் ஒரு நிகழ்ச்சி : அப்போது பிள்ளையவர்கள் திரிசிரபுரம் ஸ்ரீ சிதம்பரம்பிள்ளை வீட்டு மாடியில் தங்கியிருந்தார். அந்நிலையில் அரியலூர்ப் பிரபு ஒருவரும் அங்கு வந்து தங்கினார். நள்ளிரவில் விழித்து எழுந்து தாம் விரும்பும் செய்யுட்களைப் படித்துச் சுவைத்து அனுபவிக்கும் வழக்கமுடைய பிள்ளையவர்கள், அன்று நள்ளிரவில் ஸ்ரீ கச்சியப்பர் இயற்றியருளிய காஞ்சிப் புராணம் இரண்டாம் பகுதியின் செய்யுட்களைப் படித்து அசைபோட்டுச் சுவைத்துக் கொண்டிருந்தபோது, மகிழ்ச்சிக்

கண்ணீர் வடிப்பதும் துடைத்து கொண்டு படிப்பதுமாக இருந்தார். இந்நிலையில் கண்விழித்த அரியலூர்ப் பிரபு, பிள்ளையவர்கள் அழுவதாக நினைத்து ஓடோடி வந்து, அவர் கையிலிருந்த புத்தகத்தைப் பறித்துக் கொண்டதுடன் பலவாறு சமாதானம் கூறித் தேற்ற முயன்றார். பிள்ளையவர்கள் உண்மை நிலையைக் கூறியும் அவர் நம்பவில்லையாம் என்று தி.மீ.சு.பி. சரித்திரம் - I, பக். 73 - 74 இல் ஐயர் அவர்கள் குறிக்கிறார். இதன் மூலம் நம் முனிவர் பெருமானின் நூல்கள் "நவில்தொறும் நூல் நயம்" என்ற பொய்யா மொழிக்கு எடுத்துக் காட்டாக விளங்குவன என்பதை அறியலாம்.

**மலர்கள், தேனீ, தேனடை:**

தேனீக்கள் மலர்களிலன்றி வேறு எதிலும் அமர்வதில்லை; தேனையன்றிப் பிறஏதும் உட்கொள்வதில்லை; தாம் உண்டு செரித்ததைத்தமது தேனடையில் சேமித்து வைக்கத் தவறுவதும் இல்லை.

கருவில் அமைந்த திருவாகிய உண்மையறிவுடன், நுண்ணிய நூல் பலகற்ற நூலறிவும் ஒருசேரப்பெற்ற பேரறிஞர் பெருமக்கள்; தாம் பல்வேறு நூல்களில் படித்துச் சுவைத்து அசைபோட்ட கருத்துக்களைத் தமது நூல்களில் பதிவு செய்து வைக்கத் தவறுவதும் இல்லை.

நம் பிள்ளையவர்கள் ஒரு தேனீ. நம் முனிவர் இயற்றியருளிய காப்பியங்கள் நறுமணச் செழுமலர்கள். அவற்றில் பொலியும் சுவை நறுந்தேன்.

"பிள்ளையவர்களால் இயற்றப்பட்டுள்ள நாகைக் காரோணப் புராண அமைப்பும் பொருள்களும்; மாதவச் சிவஞான யோகிகள் அருளிச் செய்த காஞ்சிப்புராண முதற் காண்டத்தையும், ஸ்ரீ கச்சியப்ப முனிவர் அருளிச் செய்த காஞ்சிப்புராணம் இரண்டாம் காண்டம், பேரூர்ப் புராணம், திருவானைக்காப் புராணம் ஆகிய புராணங்களையும் பெரிதும் அடியொற்றியனவேயாகும்" என்றும்,

"மங்களாம்பிகை பிள்ளைத்தமிழிலே பேரூர்ப் புராணத்திலுள்ள பல கருத்துகளும், சொற்களும், சொற்றொடர்களும் அமைந்து விளங்கக் காணலாம். திருக்குடந்தைப் புராணமும் பேரூர்ப் புராணத்தைக் குழைத்து

அமைத்ததேயாகும்" - பேரூர்ப்புராண முகவுரை, சித்தாந்தச் சைவமணி துறைசை ஆதீனப்புலவர். த.ச.மீ. என்ற குறிப்புகள் இம்முனிவர்பிரானின் வாக்குச்சிறப்பை அங்கை நெல்லியாக விளக்குவன.

இனி இம்முனிவர்பிரான் தங்கியிருந்து புராணங்கள் படைத்த இடங்களுடன் தொடர்புடைய இவர்கள் வரலாற்றைக் காண்போம்.

**திருவானைக்கா :**

புராணம் என்ற சொல், பழைமையானது என்ற பொருள் தருவது. வடமொழிப் புராணங்கள், அவற்றைத் தமிழில் மொழிபெயர்த்த புராணங்கள் ஆகிய இவற்றிடையே நடை வேறுபாடு உண்டு என்பர். வடமொழியில் உள்ளவை புராணச் செய்தியை மட்டுமே கூறும்; ஆனால் வடமொழியிலிருந்து தமிழில் மொழி பெயர்க்கப்பெற்ற புராணங்கள் காவிய இலக்கணங்கள் பொருந்த கைதேர்ந்த கலைஞன் வடித்த சிற்பம் போல்வன என்பர். மொழி பெயர்ப்பில் அமைந்த இம்முனிவர்பிரானின் புராணங்கள் அனைத்தும் கலைநயம் வாய்ந்தவை.

நம் முனிவர் பிரான் முதன் முதலாக இயற்றி அருளிய புராணம் திருவானைக்காப் புராணம் என்பர். தி.மீ.சு. பிள்ளையவர்களின் இலக்கிய தாகம் தீர்த்து இலக்கியங்கள்பால் ஆற்றுப்படுத்தியதும், இம் முனிவர் இயற்றியருளிய நூல்களிடத்தும், இவரிடத்தும் அளவற்ற ஈடுபாடு கொள்ளக் காரணமாய் அமைந்ததும் திருவானைக்காப்புராணம் எனலாம்.

"இவர் (பிள்ளையவர்கள்) புத்தகங்களைத் தேடுகையில், திருவானைக்கோவில் தர்மகர்த்தாவின் வீட்டில் திருவாவடுதுறை ஆதீனத்து வித்வானாகிய ஸ்ரீ கச்சியப்ப முனிவரால் செய்யப்பெற்ற நூல்களுள் ஒன்றாகிய திருவானைக்காப் புராணம் கிடைத்தது. அதை முறையே படித்து வருகையில்; கடவுள் வாழ்த்தின் அழகும், நாட்டுச்சிறப்பு முதலிய காப்பியக் கூறுகளின் அமைதியும், அவற்றில் பழைய நூல் பிரயோகங்களும். இலக்கண அமைதிகளும், தம்மால் இதுவரை அறியப்படாத சைவ சாத்திரக் கருத்துகளும், சைவபரிபாஷைகளும், புதிய கற்பனைகளும் நிறைந்து சுவை ததும்பிக் கொண்டிருந்தலையறிந்து இன்புற்றுப் பன்முறை படித்து

ஆராய்ச்சி செய்வாராயினார். அதைப்படிக்க படிக்க அது வரையில் படித்த பல நூல்களிலும் வேறு தல புராணங்களினும் அது மிக்க சுவையுடையது என்று அறிந்து கொண்டார். பின்னர் ஸ்ரீ கச்சியப்ப முனிவர் செய்த வேறு நூல்கள் எவை என்று ஆராய்ந்து தேடியபொழுது விநாயகபுராணத்தின் சில பகுதிகளும், பூவாளூர்ப் புராணமும், காஞ்சிப் புராணமும் கிடைத்தன. அந்நூல்களையும் வாசித்து இன்புறுவாராயினர்".

- தி. மீ.சு.பி. சரித்திரம் - I, பக். 27 - 28.

"நாம் படித்த ஒருநூல் அதுபோன்று அமைந்த மற்றொரு நூலைத் தேடிப் பிடித்தாவது படிக்க நம்மைத் தூண்ட வேண்டும். அதுவே சிறந்த நூலுக்குரிய இலக்கணம்" என்பர். இவ்வகையில் அமைந்து சிறப்பன நம் முனிவர்பிரானின் நூல்கள் என்பதை மேற்கண்ட செய்தி உறுதிப்படுத்தும்.

திருவானைக்காவில் துறைசை ஆதீனக் கிளைமடமாக உள்ள பாப்பம்மாள் சத்திரமே நம் முனிவர்பிரான் தங்கியிருந்த இடமும்; திருவானைக்காப் புராணம் இயற்றியருளிய இடமும் ஆகும். நாட்காலையில் காவிரியில் நீராடி அருள்தரு அகிலாண்டேசுவரி உடனாய வெண்ணாவலீசரை வழிபட்ட மகிழ்ச்சி ததும்பும் நிலையில் நாளும் வளர்ந்தது இப்புராணம்.

இச்சத்திரத்திற் புகும்போது இடதுபுறம் விசாலமாக அமைந்து எடுத்துக்கட்டியுள்ள இடம் ஒன்று உள்ளது. இது இன்று மொசைக் தரையமைத்துப் புதுப்பிக்கப்பெற்றுள்ளது. இம்மண்டபமே அந்நாளிலும் இங்குத் தங்கிய ஆதீனத்தவர்கள் பூசனை செய்யும் இடமாக இருந்தது. இன்றும் அவ்வண்ணமே விளங்குகின்றது. இம்மண்டப வாயிலுக்கு எதிரே இவ்ஆதீனக் குருமுதல்வர் திருவுருவப் படம் அமைந்திருக்க, அதன் இருபுறமும் முன்னைய 22ஆம் குருமகா சந்நிதானம் அவர்களின் திருவுருவப் படமும், இன்றைய 23ஆம் குருமகா சந்நிதானம் அவர்களின் திருவுருவப் படமும் மின்சார விளக்கொளியில் மிளிர்கின்றன. இந்த இடமே நம்முனிவர் பெருமான் பூசனை புரிந்த இடமும் ஆகும்.

"ஸ்ரீ கச்சியப்ப முனிவர், சிவபெருமான் அப்புலிங்க மூர்த்தியாக எழுந்தருளியிருக்கப் பெற்ற திருவானைக்காவில் அமர்ந்திருந்த பொழுது, திருவானைக்காப் புராணமும், பூவாளூர்ப் புராணமும் மொழி பெயர்த்தருளினார்" என்று ஆதீன வித்துவான்

த.ச.மீ. அவர்கள் குறிக்கிறார்கள். பூவாளூர்ப் புராணம் எங்குத்தங்கியிருந்து இயற்றப் பெற்றது என்பது பற்றிய செய்தியை அடுத்துவரும் "பூவாளூர்" தலைப்பில் சிறிது சிந்திப்போம்.

அக்காலத்தில் புராணங்கள் அவற்றுக்குரிய திருக்கோயில்களிலேயே அரங்கேற்றப்பெற்றன. இம்மரபினைப் பின்பற்றித் திருவானைக்காப் புராணமும், ஆனைக்கா அண்ணலார் திருக்கோயிலிலேயே அரங்கேற்றப் பெற்றதாதல் வேண்டும்.

இப்புராணநூல், மகாவித்துவான் பிள்ளையவர்களால் பரிசோதிக்கப்பெற்று, சுக்கில வருடம், தை மாதம் அச்சிடப்பெற்று வெளியிடப் பெற்றதாக இதன் முகப்புக் கூறுகிறது. இதன் சிறப்புப்பாயிரம் வித்துவான் தியாகராச செட்டியார் தந்ததாகும். இதில் இவர், நம் முனிவர் பெருமானை,

> "தவாஅருள்உரு நமச்சி வாய குருமூர்த்தி
> பொன்னடிக் கமலம் மன்னும் உளத்தினன்;
> தழைதரு கல்வி சாலச் சிறியேன்
> புல்லிய நாவிற் சொல்லுதற் (கு) அடங்கா
> நல்லியல் ஆர்மெய்ஞ் ஞானசிந் தாமணி
> பொய்ப்பொருள் கடிந்து மெய்ப்பொருள் உணர்ந்த
> ஒப்பிலாக் கச்சி யப்பமா முனிபிரான்"

என்று போற்றுகிறார்.

இச்சத்திரமாகிய கிளையில் வணக்கத்திற்குரிய 23ஆவது குருமகா சந்நிதானம் அவர்களது அருளாணையின் வண்ணம் காலை, மதியம், இரவு ஆகிய மூன்று நேரங்களிலுமாக மிகப்பலர் உணவு உண்டு வருகின்றனர்.

**பூவாளூர்:**

ஸ்ரீ கச்சியப்ப முனிவர்பிரான் இயற்றியருளியுள்ள புராணம் பெற்ற பிற ஊர்களை நோக்கும்போது, பூவாளூர் சிற்றூர். ஆயினும் இது அருள்தரு குங்கும சுந்தரியம்மை உடனாய திருமூலநாதப் பெருமான் திருவருள் கொழிக்கும் திருவூர்.

இங்கு வாழும் பரம்பரைச் சைவ வெள்ளாஞ் செட்டிமார்கள் நம் முனிவர் பெருமானைக் கண்டு வணங்கித்தம் ஊருக்கு அழைக்க முனிவர்பிரான் இங்கு வந்தவராதல் வேண்டும். ஊர் நடுவில் பற்குனி - பங்குனி - ஆறு ஓடுகிறது. இதன் தென்பால்

அருள்தரு திருமூலநாதர் திருக்கோயிலும், வடபால் இவ்வூர் வரும் சான்றோர் தங்கி மகிழ வாய்ப்பான ஒருமடமும், ஆற்றின், இருகரைகளிலும் மிகமிக அருகில் உள்ளன. எனவே விரும்பும் போதெல்லாம் மூழ்கி நீராட ஆறும், வணங்கி, வந்தபேரின்ப வெள்ளத்துள் திளைத்து மாறிலா மகிழ்ச்சியின் மலரத் திருக்கோயிலும், தங்கியிருக்க வாய்ப்பான மடமும் அன்புடன் உபசரித்து மகிழ மிகப் பலரும் உள்ளமையால் நம் முனிவர் பெருமான் இசைந்து வந்து இங்குத் தங்கியிருந்த போதுதான் பூவாளூர்ப் புராணம் இயற்றியிருத்தல் வேண்டும். ஏனெனில் "திருவானைக்காவில் தங்கியிருந்த போது பூவாளூர்ப் புராணம் இயற்றினார் முனிவர்பிரான்" என்ற துறைசை ஆதீன வித்துவான் த.ச.மீ. அவர்களின் கருத்துக்கு மாறாக டாக்டர். உ.வே.சா அவர்கள் எழுதுவது பின்வருமாறு :

"திருவாரூரில் உள்ள அபிஷிக்த வகுப்பினருள் ஒருபரம்பரையினர் இக்குலத்தினருக்குக் (பூவாளூர்ச் சைவ வெள்ளாஞ் செட்டிமார்க்கு) குருவாக இருந்தனர். பூவாளூர்ச் செட்டிமார் திருவாரூர் சென்று அவரிடத்தில் தீக்ஷை செய்து கொள்வதும், உபதேசம் பெறுவதும் பார்த்திப பூஜை, உடையவர் பூசை, திருமுறை அருச்சனை முதலியவற்றைப் பெறுவதும் வழக்கம். சில சமயங்களில் அவ்வாசிரியரைப் பூவாளூருக்கு வருவித்துச் சிலகாலம் இருக்கச் செய்து உபசரித்து வழிபட்டு வருவார்கள். அவர் வரும் காலத்தில் தங்கியிருப்பதற்காக இவ்வகையினர் தனியே ஒரு மடம் கட்டி வைத்திருக்கின்றனர். அது, கோயிலின் அருகே பங்குனியாற்றின் வடகரையில் இருக்கிறது".

"ஊருக்கு யாரேனும் பெரியவர்கள் வந்தாலும் அந்த மடத்தில் தங்குவது வழக்கம். திருவாவடுதுறை ஆதீன வித்துவானாக விளங்கிய கச்சியப்ப முனிவர் இவ்வூருக்கு வந்து பூவாளூர்ப் புராணத்தை இயற்றத் தொடங்கிப் பூர்த்தி செய்து இங்கேயே அரங்கேற்றியுள்ளார். அக்காலத்தில் அம்முனிவர் இம்மடத்தில் சில மாதங்கள் தங்கியிருந்தராம்".

- வித்துவான் தியாகராச செட்டியார், பக். 8-9.

விரிவான இச்செய்தியின் மூலம், பூவாளூரில் இம்மடத்தில் நம்முனிவர்பிரான் சில மாதங்கள் தங்கியிருந்தார் என்பதும், அப்போது பூவாளூர்ப் புராணம் இயற்றினார் என்பதும், மரபுப்படி இவ்வூர்த்திருக்கோயில் அதனை அரங்கேற்றினார் என்பதும் தெளிவாக அறிய முடிகிறது.

சி. தியாகராச செட்டியாரால் பதிப்பிக்கப் பெற்ற பூவாளூர்ப் புராணத்திற்குச் சிறப்புப் பாயிரம் வழங்கியுள்ளவர் டாக்டர் உ.வே.சா அவர்கள். பதினான்கு செய்யுள்கள் கொண்ட அதில் ஒன்றில் மாதவச் சிவஞான யோகிகளையும் பிறிதொன்றில் ஸ்ரீ கச்சியப்ப முனிவர் பிரானையும் சிறப்பித்துள்ளார். அவை,

"வதிந்தருள்பஞ் சாக்கரதே சிகன்கருணைக் கடல்மூழ்கி
வடசொல் லோடு
முதிர்ந்த சுவைத் தென்சொல்லும் ஆயகடல் கடைந்தறிவின்
முதிர்ந்த சாரம்
பொதிந்தமைதி ராவிடபா டியஅமிழ்த ளித்(து)அன்பு
பொருந்தே னுள்ளும்
பதிந்திலகு சிவஞான யோகிஎனும் பாற்கடலில்
பருகு கொண்மூ" - 9

அன்ன சிவஞானயோ கிகளும்மகிழ்ந்(து) அதிசயப்ப
அணிமுன் யாவும்
மன்னஅமை பலகவிகள் ஒரு நொடியில் எளிதுரைக்கும்
வாகை மேயோன்
முன்னஅமை முப்பொருளின் இயல்பைஅடுத் தவர்க்(கு) அழகா
மொழிதல் வல்லோன்
பன்னஅமை கச்சியப்ப முனிவர்பெரு மான்என்னும்
படிமை யோனே. - 10

என்பனவாகும்.

இதில் சிவஞானயோகிகளைப் பாற்கடலாகவும், ஸ்ரீகச்சியப்ப முனிவர்பெருமானை அப்பாற்கடலின் பாலைப் பருகிய மேகமாகவும் உருவகித்துள்ளமையும், சிவஞான யோகிகளும் அதிசயிக்கும் வகையில் இவர், ஒரு நொடியில் அணி நலன் பொருந்த பல கவிதைகளை எளிதில் இயற்றவல்லவர் என்றும், முப்பொருள் உண்மையைப் பிறர்க்கு அழகுற எடுத்துக் கூறவல்லவர் என்றும் உருவக அணி, உயர்வு நவிற்சி அணி, தன்மை நவிற்சி அணி ஆகியன பொருந்தக் கூறியுள்ளது நினைந்து மகிழத்தக்கது.

**பேரூர் :**

நடனசபையாம் மேலைச் சிதம்பரம் என்று போற்றப் பெறுவது பேரூர். இது கொங்கு நாட்டு வைப்புத்தலம். அருள்தரு பட்டிப் பெருமான் திருக்கோயிலின் வடக்குத்தேர் வீதியில் நம ஆதீனக் கிளைமடம் உள்ளது. இக்கிளையில் ஏறத்தாழ 300 ஆண்டுகட்கு முன்பு 12 ஆம் பட்டமாக எழுந்தருளியிருந்த பேரூர் சிவத்திரு வேலப்ப தேசிகரின் ஞானசமாதி அமைந்துள்ளது. ஸ்ரீ சிவஞான யோகிகளும் ஸ்ரீ கச்சியப்ப முனிவர் பெருமானும் ஆகிய இரு சான்றோர்களும் இங்கு வந்து இக்கிளையில் சில திங்கள் தங்கியிருந்தனர். இருவராலும் நாடோறும் போற்றி வழிபடப் பெற்றவர் இக்கிளையில் எழுந்தருளியுள்ள "அருள்தரு சிவஞானப் பிள்ளையார்". நாடோறும் நொய்யலாற்றில் நீராடி அருள்தரு சிவஞானப் பிள்ளையாரைப் பூசித்துத் திருக்கோயில் சென்று பெருமானை வலம்வந்து தொழுது நினைத்த மகிழ்ச்சியில் வளர்ந்து நிறைவு பெற்றது பேரூர்ப் புராணம். இந்நூலும் இத்திருக்கோயில் அருள்தரு ஆடவல்லபெருமான் திருமுன்பு அரங்கேற்றப் பெற்றது.

பேரூர் மேற்குத் தொடர்ச்சி மலையை அடுத்தது. இத்தொடர் கொங்கு நாட்டின் மேற்கு எல்லை. இன்றும் இத்தொடரில் அரிய பல பச்சிலை வகைகளைக் காணலாம். வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் நம்முனிவர் பெருமான் இம்மலைத் தொடரில் பயணம் மேற்கொள்வார் போலும். அதனால்தான் பேரூர்ப் புராணத்தில் அரிய பல பச்சிலை வகைகளைக் குறிப்பிட்டுள்ளார் என்கிறார், பேரூர் சாந்தலிங்க அடிகளார் கலை அறிவியல் தமிழ்க்கல்லூரி உதவிப் பேராசிரியர் முனைவர் திருமிகு கா திருநாவுக்கரசு எம்.ஏ., எம்.ஃபில்., அவர்கள். பச்சிலைகள், அவை செழித்துள்ள மலைப்பாங்கர், அப்பச்சிலைகள் நீக்கும் நோய்கள், அப்பச்சிலைகளை பயன்கொள்ளும் முறைமை ஆகியவற்றைத் தெளிவுற அறிந்த தெளிவால் தாம் செல்லும் ஊர்களில் வாழும் மக்களுக்கு ஏற்பட்ட நோய்களைப் போக்கும் வாய்ப்பு இவர்க்குக் கிடைத்தது.

நம் முனிவர்பிரான் இங்குத் தங்கியிருந்து பேரூர்ப் புராணம் இயற்றியபோது மழையின்மையால் இங்குள்ளோர் பெரும் பாதிப்புக்கு உள்ளாயினர். நீராட மட்டுமின்றிக் குடிக்கவும் கூட நீர் கிடையாத நிலை. இதனால் ஏற்பட்டன வெப்பு நோய்கள்

இவற்றால் மனம் வருந்திய நம் முனிவர்பிரான் அருள்தரு அரசம்பலவாணர் மீது அவர் அருமைப்பாடுகளை விளக்கும் ஒருபதிகம் பாடி, மழைபொழியச் செய்தும், பச்சிலைகள் வழங்கி நோய் தீர்த்தும் மக்கள் நலம் பேணினார்.

மேலும், அப்போது இங்கு வாழ்ந்த மக்கள் குட்டநோயாலும் அவதிப்பட்டனர். பச்சிலை மருந்து வழங்கியதுடன் அமையாது, பட்டீப் பெருமான் மீது பல பதிகங்கள் பாடியும் நோய் தீர்த்தார்.

தம் காலத்தில் தி.மீ.சு. பிள்ளையவர்கள் பேரூர்ப் புராணத்தையும் கவைக்க ஆராக் காதல் கொண்டார். அந்நிலையில் அருட்டிரு தாண்டவராயத் தம்பிரான் அவர்கள் கல்லிடைக் குறிச்சிக்குச் செல்லும் வழியில் திரிசிரபுரம் வந்து தங்கினார். அவரிடம் பேரூர்ப் புராணச் சுவடி இருப்பதை அறிந்த பிள்ளையவர்கள் அதனைக் காட்டவும் மறுத்த தம்பிரானிடம் நயமாகப் பேசியும், மன்றாடியும் அதனைப் பெற்றுத் தானும் தன் மாணாக்கருமாக இரவு பகல் பாராது படி எடுத்து கொண்டு ஒப்புநோக்கியபின் திருப்பித் தந்துவிட்டு அதைப் படித்துச் சுவைத்ததாகத் தமிழ்த்தாத்தா குறிப்பிடுகிறார்.

- தி.மீ.சு.பி.சரித்திரம் - I, பக். 165 - 166

இரு முனிவர்களும் இங்குத் தங்கியிருந்ததன் நினைவாக பேரூர்க் கிளைமடத்தில் வணக்கத்திற்குரிய 23ஆவது குருமகா சன்னிதானம் அவர்கள் அருளாணையின்வண்ணம் நாடோறும் காலைச்சிற்றுண்டியும், மதியம் உணவும், மிகப்பலருக்கு வழங்கப்பெறுகின்றன.

**திருத்தணி :**

நம் முனிவர் பெருமான் தங்கியிருந்து புராணம் இயற்றியருளிய பிறிதோரிடம் திருத்தணி. இது இவர் பிறந்த ஊர். பிற்காலத்தில் புகழ்வாய்ந்தவர்களாக விளங்கிய விசாகப் பெருமாள் ஐயர், வித்துவான் சரவணப் பெருமாள் ஆகியோர்க்குத் தந்தையாகிய கந்தப்பையர் என்பவருக்கு ஆசிரியரானார் நம் முனிவர். அவர்க்கு இவர்; இலக்கண இலக்கியங்கள், சாத்திரம் முதலியவற்றை கற்பித்த திறனால் ஈர்க்கப் பெற்ற பலர் இவரிடம் கற்க விரும்பி வந்து கற்றனர்.

இவர்க்கு மாணாக்கராக விளங்கிய கந்தப்பையருக்குக் குன்மநோய் ஏற்பட, அதனால் பெரிதும் துன்புற்ற அவர்க்கு இவர் அருகில் இருந்து ஆறுதல் கூறியதுடன் அவரது நோய்தீர "தணிகைஆற்றுப்படை" பாடியும் பச்சிலை மருத்துவம் செய்தும் நோய் தீர்த்தார்.

இம்முனிவர்பெருமான் திருத்தணியில் தங்கியிருந்த இடம்பற்றித் தற்போது யாதும் அறியக்கூடவில்லையாயினும் பல திங்கள் தங்கியிருந்து "தணிகைப்புராணம்" இயற்றி யருளினாராதல் வேண்டும். மேலும், அங்கிருந்த காலத்தில் திருத்தணிகைப் பதிற்றுப்பத்தந்தாதியும் இயற்றினார்.

திருவாவடுதுறை ஆதீனத்தில் புராணப் பாடம் சொல்வதில் ஒரு மரபு உண்டு என்பர். "சிறப்புடைப் பொருளைப் பிற்படக்கிளத்தல்" என்ற முறைப்படி அது பூவாளூர்ப்புராணம், திருவானைக்காப் புராணம், பேரூர்ப் புராணம், விநாயக புராணம், தணிகைப் புராணம் என்ற வரிசை முறையில் புராணப் பாடம் அமையும். தன்னேரில்லாத் தணிகைப் புராணத்தை இறுதியில் வைத்ததன் நோக்கம் அதன் தனிச் சிறப்பே என்பதில் ஐயமில்லை.

திருக்கயிலாய பரம்பரைக் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்திலும் தணிகைப் புராணம் பாடம் சொல்லும் வழக்கமுண்டு.

**சென்னை :**

சென்னை அகஸ்தீசுவரர் திருக்கோயில் அறங்காவலர் நாராயணசாமி முதலியாரின் அழைப்பின்பேரில் நம் முனிவர்பிரான் திருத்தணியிலிருந்து புறப்பட்டு வழி இடைப்பட்ட தலங்களை வழிபட்டுக் கொண்டு சென்னை வந்து சேர்ந்தார். அப்போது சென்னையில் இருந்த "பிரைட்டன்" என்ற துரையிடம் "துபாஷியாகப்" பணிபுரிந்தவர் கந்தசாமி முதலியார். (இருமொழியறிந்தவராய், ஆங்கிலேயர் கூறுவதைத் தமிழரிடத்தும், தமிழர் கூறுதை ஆங்கிலேயரிடத்தும், மொழிபெயர்த்துக் கூறுகிறவர்களைத் "துவிபாஷி" என்பர். துவிபாஷி, துபாஷியாக மருவியது. எனவே 'துபாஷி' என்பது மரூஉ மொழி).

எனவே இவரைப் "பிரைட்டன்" கந்தசாமி முதலியார் என்றே அழைத்து வந்தனர். 1. இவர் வேண்ட ஸ்ரீ கச்சியப்ப முனிவர் விநாயக புராணம் இயற்றினார். 2. அதனை சென்னை பிரசன்ன

விநாயகர் திருக்கோயிலில் அரங்கேற்றினார். 3. அடியுறையாக 2000 சவரன் வழங்கினார் என்றும் சென்னை சிவகாம சுந்தரி கலைக்கூடத்து பூசை ஆட்சிலிங்கம் விவரம் கூறினார்.

தமிழ்த்தாத்தா உ.வே.சா. அவர்கள் "தி.மீ.சு. பிள்ளையவர்கள், விநாயக புராணம் அரங்கேற்றப்பட்ட இடமாகிய சென்னை ஐயாப் பிள்ளைத் தெருவில் கோயில் கொண்டுள்ள ஸ்ரீ பிரசன்ன விநாயகரைத் தரிசித்தார். விநாயக புராணம் செய்வித்த சிதம்பர முதலியார் என்பவரின் பரம்பரையினராகிய ஒருவரால் அழைக்கப்பெற்றுக் குளத்தூர் சென்றார்; அங்கே கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள ஸ்ரீ சோமேசரையும், ஸ்ரீ அமுதாம்பிகையையும் தரிசனம் செய்தார். அவர்கள் இருந்துவந்த மடத்தில் தங்கினார். ஸ்ரீ கச்சியப்ப முனிவர் விநாயக புராணம் செய்வதற்கும், அவர் பெரும்பாலும் வாசம் செய்வதற்கும் இடமாக இருந்த இவ்வூர் என்ன புண்ணியம் செய்ததோ என்று மனமுருகினார்".

- தி.மீ.சு.பி. சரித்திரம் - I, பக். 162 - 163

என்றும், இந்நூலின் இறுதியில் இணைக்கப் பெற்றுள்ள சிறப்புப் பெயர் முதலியவற்றின் அகராதியில், "சிதம்பர முதலியார் :- சென்னை ஐயாப் பிள்ளைத் தெருவில் இருந்தவர்; ஸ்ரீ கச்சியப்ப முனிவரைக் கொண்டு விநாயக புராணத்தை இயற்றுவித்து இரண்டாயிரம் ரூபாய் சம்மானம் செய்து, குளத்தூரில் அம்முனிவருக்கு ஒருமடமும் கட்டிக் கொடுத்தார்" என்றும் குறிக்கிறார் உ.வே.சா.

இருவேறு செய்திகளையும் உளம்பதித்து நாம் ஒரு முடிவுக்கு வரலாம். அது :

ஸ்ரீ கச்சியப்ப முனிவர் பெருமானைச் சென்னைக்கு அழைத்தவர் அகஸ்தீசுவரர் திருக்கோயில் அறங்காவலர் நாராயணசாமி முதலியார்; விநாயக புராணம் இயற்றியருள வேண்டிக் கொண்டவர்கள் பிரைட்டன் கந்தசாமி முதலியாரும், சிதம்பரம் முதலியாரும். அடியுறை தந்தவர்கள் இருவருமே. இம்முனிவர் தங்கியிருந்ததும் விநாயக புராணம் இயற்றியருளியதும் குளத்தூர் மடத்தில். புராணம் அரங்கேற்றியஇடமே சென்னை ஐயாப்பிள்ளைத் தெருவில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ பிரசன்ன விநாயகர் திருக்கோயில். அடியுறை ரூ.2000 எனினும் சவரன் 2000 என்றாலும் அது அந்நாளில் ஒருபெருந்தொகை என்பதில் ஐயமில்லை.

விநாயக புராண அரங்கேற்ற அவைக்கு வருமாறு அன்று அழைக்கப்பெற்ற ஐயாப்பிள்ளை என்ற ஒரு பெரிய பிரபு "நாம் அங்கு வர இஃது என்ன இராமாயணமா?" என்று இகழ்ந்து கூறினாராம். மற்றவர்கள் இதனை நம் முனிவர்க்குக் கூற மறைத்தும், இதனை அறிந்த நம் முனிவர்பிரான் தமது விநாயக புராணத்தைத் தொடங்காது இராமாயணத்தை எடுத்துக் கொண்டு அதன் முதல் ஆறு செய்யுட்களில் நூறு குற்றம் ஏற்றிக் கூறினராம். நிலைமையறிந்த அந்தப் பிரபு தம் தவறுணர்ந்து நூறு வராகனும் பீதாம்பரம் முதலியவற்றோடும் என்று அடியுறையாக வைத்துத் தீர்க்கதண்டம் சமர்ப்பித்து "சுவாமிகளது மகத்துவம் அறியாத ஏழையைத் தேவரீர் காத்தருள்க" என்று விண்ணப்பிக்க, அதன் பின்னரே தமது புராணத்தைத் தொடங்கினார் முனிவர் பிரான் என்ற அரிய செய்தியை மதுரை ஞானசம்பந்தப் பிள்ளையவர்கள் செய்திகள் பிறவற்றுடன் தருகிறார்.

விநாயக புராண அரங்கேற்றத்தின்போது அடியுறையாகக் கிடைத்த பெருந்தொகையைக் கொண்டு துறைசை ஆதீனத் திருமடத்தில் திருக்கோயில் கொண்டுள்ள ஆதீன ஆதிகுருமுதல்வர் ஆகிய ஸ்ரீ நமச்சிவாய குருமூர்த்திகளின் கருவறையையொட்டி இன்றுள்ள அர்த்த மண்டபத்தைக் கற்றளியாகக் கட்டினார். திருக்கோயில் மண்டபப்பணி செய்வோர் உருவத்தை அம்மண்டபத்தூண்களில் ஒன்றில் அமைப்பது மரபு. ஆனால் தன் உருவம் அமைக்கப்படக்கூடாது என்ற கருத்துடன் நம் முனிவர் இருந்திருப்பார் போலும். ஆயினும் சிற்பி, தன் விருப்பப்படியாவது நம் முனிவர் பெருமானின் துறவுத் திருவுருவை அமைக்க வேண்டும் என்ற அவாவினால் இவரது திருவுருவை அம்மண்டபத்து வலபக்க வெளிச்சுற்றுக் கோஷ்டத்தில் சிறிய அளவில் அமைத்துள்ளார்.

இம்முனிவர் பெருமான் சென்னையில் இருந்த காலத்தில் "விநாயகர் பிள்ளைத்தமிழ்" என்ற அரியதொரு நூலை இயற்றினார் என்று துறைசை ஆதீனப்புலவர் த.ச.மீ. அவர்கள் குறிப்பிடுகிறார். நம்மவர் கவனக்குறைவால் அந்நூல் கிடைத்திலது.

விநாயக புராணச் செய்யுட்களின் நுட்பச் சுவையையும், 14 ஆம் பட்டம் தேசிகரின் அறிவு நுட்பத்தையும் ஒரு சேர விளக்கும் ஒரு நிகழ்ச்சி பார்ப்போம்.

மகாவித்துவான் பிள்ளையவர்களுக்கு விநாயக புராணத்து ஒரு செய்யுளிலுள்ள ஒரு சீருக்கு நெடுநாளாகப் பொருள் விளங்காமல் இருந்ததாம். அச்சீர் "கரம் துளக்கும்" என்பது. பலரிடத்தும் இதுபற்றி அவர் வினவியது உண்டு. ஆயினும் தெளிவு கிடைத்திலது.

**அச்சீர் அமைந்த பாடற்பகுதி வருமாறு :**

"மரம் துளைத்த கணையானும் சோஎறிந்த திறலானும்
மதிக்கும் தோறும்
சிரம்துளக்க அலைகடலும் சேண்இகந்த பெருவரையும்
திறத்தில் குன்றக்
கரம் துளக்கும் குறுமுனிக்கும் கருத்தின்மயல் பூட்டிவகை
தவம்சால் வெற்பின்
உரம்துளைத்த சேயிலைவேல் வலன்உயர்த்த இளையவனை
உளத்துள் வைப்பாம்!"

- விநாயக புராணம், முருகப்பெருமான் துதி.

"அலைகடலும் பெருவரையும் திறத்தில் குன்றக்கரம் துளக்கியவர்" அகத்தியர். இதில் கரம் துளக்குதல் என்பது பற்றி 14 ஆம் பட்டம் தேசிகர்பால் விண்ணப்பம் செய்தார் பிள்ளையவர்கள்.

தேசிகர், தம் உள்ளங்கையை ஏந்திக் காட்டியும் மறித்துக்காட்டியும் இதுதான் கரம் துளக்குதல், ஏந்திக்காட்டியது கடலை உண்டது குறிக்கும்; கவிழ்த்துக்காட்டியது, விந்துச்செருக்கு அடக்கியது குறிக்கும் என்றாராம். இத்தகைய அரிய கருத்துச் செறிந்த சொல்லாட்சிகளை விநாயக புராணத்தில் காணலாம் என்பர்.

- தி.மீ.சு. சரித்திரம் - I.

விநாயக புராணம் பற்றி வித்துவான் சி.தியாகராச செட்டியார்.

**"விழைந்து பிரான்முனம் விநாயகர்க்கு அளித்த**
**பூங்கனிஉளழ்தரு தீங்கனி நறவும்"**

என்பதும் ஈண்டுக் குறிப்பிடத்தக்கது.

**காஞ்சிபுரம் :**

"கல்வியிற் கரையிலாக் காஞ்சி மாநகர்" என்பது அப்பரடிகளின் அருள்வாக்கு. காஞ்சிபுரத்தின் தென்மேற்கே 2 கி.மீ தொலைவில் காஞ்சி எல்லைக்குள் உள்ளது பிள்ளையார் பாளையம். திருஞான சம்பந்தப் பிள்ளையாரைப் போற்றும் வகையில் அவரது திருப்பெயரால் அமைந்த ஊரிது. இங்கு நம் திருமடத்தின் கிளை ஒன்று உள்ளது. இக்கிளைமடம் பற்றி ஸ்ரீ சிவஞான முனிவரின் தவசிப்பிள்ளை கூறியதாக தி.மீ.சு.பிள்ளையவர்கள் பற்றிய சரித்திரத்தில் உ.வே.சா அவர்கள்,

"சிவஞான முனிவர் காஞ்சிபுரத்தின் ஒருபால் உள்ள திருவாவடுதுறை மடத்தில் இருந்து வந்தார். அந்த மடத்தில் மெய்கண்ட சிவாசாரியாருடைய கோயில் இருந்தது"

- தி.மீ.சு - I பக். *121*

என்பதால் ஸ்ரீ சிவஞான முனிவர் வழிபட்ட இத்திருமேனி, ஸ்ரீ கச்சியப்ப முனிவராலும் வழிபடப் பெற்றமையை அறிய இயல்கிறது.

அகன்று விரிந்த பூந்தோட்டத்துடன் விளங்கும் இக்கிளையின் நுழைவாயிலுக்கு நேர்எதிரே அருள்மிகு ஏகாம்பரநாதர் திருக்கோயில் கொண்டுள்ளார். நம் ஸ்ரீ கச்சியப்ப முனிவர் பெருமான் நாடோறும் காஞ்சி அருள்மிகு ஏகாம்பரநாதர் திருக்கோயிலுக்கு நடந்து சென்று வழிபட்டு வந்தார். வழிபட இயலாத தனது பிற்காலத்தில், தாம் நாளும் வழிபட மணல் கொண்டு எழுந்தருள்வித்த திருமேனி இது. சாம்பிராணித் தைலம் மட்டுமே சாத்தப்பெறுகிறது.

நுழைவாயிலின் வலப்புறம் உள்ள திருக்கோயிலில் ஸ்ரீ மெய்கண்ட சிவனாரும், அவர்க்கு வலப்புறம் ஸ்ரீ சிவஞான முனிவர் பெருமானும் எழுந்தருளியுள்ளனர். இத்திரு மேனிகள் இரண்டும் ஸ்ரீ கச்சியப்ப முனிவர் பெருமானால் வழிபடப் பெற்றவை. ஸ்ரீ கச்சியப்பர் காலத்திற்குப் பிறகு, ஸ்ரீ மெய்கண்ட சிவனாரின் இடப்புறம் நம் முனிவர்பிரானின் திருமேனி எழுந்தருள்விக்கப்பெற்றது ஆகும்.

இங்கு, ஸ்ரீ ஏகாம்பரநாதர் திருக்கோயிலுக்கு வலப்புறம் அருள்திரு கச்சியப்ப முனிவர்பிரானின் அருள்ஞான சமாதி அமைந்துள்ளது. இச்சமாதித் திருக்கோயிலுக்கு நாடோறும் வந்து வழிபட்டு அறிவாற்றலில் செல்வத்தில் உயர்ந்து விளங்கும் பல்லோரைக் காண முடிகின்றது. இம்மூன்று திருக்கோயில் களையும் நந்தவனத்தையும் நாளும் வழிபட்டும், பேணியும் வருகின்றார் இங்குப் பொறுப்பில் உள்ள சீர்மன்னு சுந்தரமூர்த்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்.

தமது சுட்டிளமைக் காலத்தும்; இடைப்பட்ட காலங்களிலும், முதுமையிலுமாகப் பல்லாண்டுகள் நம் ஸ்ரீ கச்சியப்ப முனிவர்பிரான் இங்குத் தங்கியிருந்துள்ளார். இங்கு அருகில் நம் திருமடத்துக்குச் சொந்தமாக இருந்து, இன்று பள்ளிக்கூடம் அமைந்திருக்கும் இடத்தில் அன்று திருக்குளம் இருந்தது. அன்று புறத்தூய்மை வழங்கிய அவ்விடம் இன்று அகத் தூய்மைக்கு உரிய கல்விக்கூடமாக விளங்குகிறது. இந்த இடம் தனது பண்டைய நிலையை இங்குள்ள சுற்றுச் சுவர்களில் உள்ள அருள்மிகு விநாயகர், அருள்மிகு முருகன், திருநந்திகள் மூலம் விளக்கிக் கொண்டுள்ளது. நம் முனிவர் பெருமான் நாடோறும் இத்திருக்குளத்தில் நீராடி, அருள்மிகு ஏகாம்பரநாதர் திருக்கோயில் சென்று பெருமானை வழிபட்டு, வரும்வழியில் அருள்மிகு கச்சபேசர் திருக்கோயிலுக்கு எதிரே, வடக்கு நோக்கித் தனித்திருக்கோயில் கொண்டுள்ள அருள்மிகு விநாயகப் பெருமானை வணங்கி மகிழ்ந்து கவிதை எழுத அமர்வது வழக்கம் என்கின்றனர் உள்ளூர்ப் பெருமக்கள். இதற்குச் சான்றாக, இவ்விநாயகர் திருக்கோயில் நுழைவு வாயில் வளைவின் உச்சியில் விநாயகப் பெருமான் சுதை வடிவில் இருக்க, இவரது வலது புறம் அமர்ந்த நிலையில் இடக்கையில் ஏடுகளும், வலது கையில் எழுத்தாணியும் தாங்கிய நம் ஸ்ரீ கச்சியப்ப முனிவர்பிரானின் சுதைச்சிற்பம் உள்ளது. எனவே இவ்விநாயகப் பெருமானை விவரம் அறிந்தோர் 'கவிதை விநாயகர்' என்று போற்றி வழிபடுகின்றனர்.

ஸ்ரீ சிவஞான யோகிகள் தமது அன்றாடப் பூசையினை ஈடுபாட்டுடன் நெடுநேரம் செய்வது வழக்கமாம். இந்நிலையில் ஒருநாள் தமது பூசை முடித்து கச்சியப்ப முனிவர்பெருமான் அங்குக் கொட்டிக்கிடந்த மணலில் இரட்டை நாகபந்தச் சித்திரம் வரைந்து அதில் உரிய எழுத்துக்களை அடைத்துக் கொண்டிருந்தார். அப்போது நாகங்களின் இருவால்களும் சேருமிடத்தில் அடைக்க

வேண்டிய எழுத்துப்பற்றிச் சற்று ஆழமாகச் சிந்தித்துக் கொண்டிருந்தார். அந்நிலையில் அங்கு வந்த ஸ்ரீ சிவஞான யோகிகள், உரிய எழுத்தைக் கூறி அதனை அவ்விடத்தில் நிரப்பச் சொன்னாராம். இச்செய்தியைக் காஞ்சிபுரம் சி. அருணை வடிவேல் முதலியார் அவர்கள் மூலம் தாம் அறிந்ததாக "காஞ்சிப்புராணம் - 1" என்ற தமது ஆய்வு நூலில் அதனாசிரியர் முனைவர். சாமி ஐயா.அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

ஸ்ரீ சிவஞான முனிவர் பெருமான் தமது "காஞ்சிப்புராணம்" முதற்பகுதியை அருள்மிகு ஏகாம்பரநாதர் திருக்கோயிலில் அரங்கேற்றினார். அதன் தொடக்கப்பாடல் "சங்கேந்து மலர்க் குடக்கை" என்று தொடங்கும் ஸ்ரீ சபாநாயகர் துதியாகும். இப்பாடலைத் தொடங்கியதுமே, அழுக்காறு கொண்ட சிலர், இந்நூல் காஞ்சிப் புராணம் ஆதலாலும், அரங்கேற்றுமிடம் அருள்மிகு ஏகாம்பரநாதர் திருக்கோயில் ஆதலாலும், அந்நூலில் உள்ள 'தணந்தபெரும்' என்ற பாடலல்லவா தொடக்கப் பாடலாக வரவேண்டும் என்று வினவி வாதாடத் தொடங்கினர். இவர்களுக்கு நம் மாணாக்கர் மூலம் தான் விடையளிக்க வேண்டும் என்று கருதிய யோகிகள், அப்போது சென்னையில் இருந்த நம் முனிவர் பெருமானுக்குச் செய்தி கூறி வரச்செய்தார். உடன் வந்த நம் முனிவர் பெருமான் அரங்கேற்ற அரங்கைக் கூட்டினார். அங்கு வந்திருந்த ஓதுவாமூர்த்திகளிடம், காஞ்சிப்பதி பற்றிய தேவாரம் ஒன்று ஓதுமாறு கூறினார். அவர், தேவாரம் ஓதுமுன் 'திருச்சிற்றம்பலம்' என்று கூறித் தேவாரம் ஓதத் தொடங்கினார். அவரிடம் "தாங்கள் பிருதிவியம்பலம்" என்ற பின்னல்லவா தேவாரம் ஓதவேண்டும். மாறாக திருச்சிற்றம்பலம் என்றல்லவா முதலில் ஓதுகிறீர்கள். பிருதியம்பலம் என்று சொல்லி தேவாரம் ஓதத் தொடங்குங்கள் என்றார். அவரோ தான் கூறியதுதான் மரபும், சரியானதுமாகும் என்று கூற, அழுக்காறு கொண்டு மறுத்தவர் தமது தவறு உணர்ந்து வாயடங்கினார். பின்னர் அரங்கேற்றம் முறைப்படி தொடர்ந்து சிறப்பாக நிறைவுபெற்றது.

ஸ்ரீ சிவஞான முனிவர் பெருமான் இக்கிளையில் தங்கியிருந்தபோதுதான் காஞ்சிப் புராணம் முதற்பகுதியும், சிவஞான போதப் பேருரையும் இயற்றினார் என்று உ.வே.சா குறிக்கிறார்.

- தி. மீ.க. சரித்திரம் - *1, பக். 121.*

தமது ஆசிரியராகிய சிவஞான யோகிகளின் அருளாணையின் வண்ணம், நம் முனிவர் பெருமான், காஞ்சிப்புராணத்து இரண்டாம் பகுதியை இயற்றியருளி அதனை அருள்மிகு ஏகாம்பரநாதர் திருக்கோயிலில் அரங்கேற்றினார். இவர் இங்கிருந்தபோதுதான் கச்சி ஆனந்த ருத்ரேசர் பதிற்றுப்பத்தந்தாதி, கச்சி ஆனந்த ருத்ரேசர் கழிநெடில், கச்சி ஆனந்த ருத்ரேசர் வண்டு விடு தூது, ஸ்ரீ பஞ்சாக்கர தேசிகர் அந்தாதி ஆகிய அரிய இலக்கியங்களை இயற்றியருளினார்.

இங்ஙனம் ஞானத் திருநூல்கள் பல இயற்றியருளியும், நன்மாணாக்கர் பலர்க்குக் கல்வியறிவூட்டியும், தாம் செல்லுமிடங்களில் நோயால் வருந்துவோர் நோய் தீர்த்தும் கற்றுவல்ல அறிஞர்களும் பிறரும் போற்ற வாழ்ந்த நம் முனிவர் பெருமான், காஞ்சிபுரம் பிள்ளையார் பாளையம் நம் கிளைத்திருமடத்தில் தங்கியிருந்து சிவத்தியானம் முதலியவற்றில் உறைப்புடன் நின்று, சாலிவாகன சகாத்தம் 1712இல் (கி.பி. 1790) சாதாரண வருடம் சித்திரை மாதம் 11ந்தேதி செவ்வாய்க்கிழமை புனர்பூசம் வளர்பிறை சத்தமி கூடிய கும்ப லக்னத்தில் சிவப்பரிபூரணம் எய்தியருளினார்கள்.

இதனைக் குறிப்பிடும் பழஞ் செய்யுள் ஒன்று வருமாறு :

ஏர்தரு சாலி வாகன சகாத்தம்
ஆயிரத்(து) எழுசதத்(து) ஒருபத்து
இரண்டின் மேல்சாதா ரணவருடத்தில்
இயைதரு சித்திரைத் திங்கள்
சார்தரு தேதி பத்தினோ(டு) ஒன்று
தகுசெவ்வாய் வாரம்பூ ருவத்தில்
சத்தமி புனர்பூ சத்திரு நாளில்
தவலறு கும்பலக் கனத்தில்
சீர்தரு துறைசை வாழ்சிவ ஞான
தேவன்மா ணாக்கருள் முதன்மை
திகழ்ந்துள கச்சி யப்பமா முனிவர்
திருப்பெருங் காஞ்சியில் எய்திச்
சேர்தரும் அடியார் தம(து)அக இருளைத்
தினகரன் முன்இருள் என்னத்
திருந்துதன் அருளால் அகற்றி வீடுறுத்திச்
சிறந்தபூ ரணமடைந் தனனே என்பது அது.

தமது அருளாற்றலால் தன்னைச் சார்ந்தவர்களுக்கு அறிவு ஒளியூட்டி அருட்பெரும் செல்வம் வழங்கிய இம்முனிவர் பெருமானின் நினைவைப் போற்றும் வகையில் ஆதீன 23ஆம் குருமகா சன்னிதானம் வணக்கத்திற்குரிய சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களின் அருளாணையின் வண்ணம் நாடோறும் காலையில் பள்ளிக்கல்வி பயிலும் மாணாக்கட்குச் சிற்றுண்டி வழங்கப் பெறுகிறது.

மேலும் இம்முனிவர் பெருமானின் நினைவைப் போற்றும் வகையில் இவர்களது நினைவு வழிபாட்டு நாளில் காஞ்சிக்கிளை ஞான சமாதியில் சிறப்பு வழிபாடும், மாகேசுவர பூசையும் நிகழவும், திருவாவடுதுறையில் அன்றுமாலை சிறப்புச் சொற்பொழிவு அமைத்துச் சிறப்புச் சொற்பொழிவாளர்க்குத் தமது திருக்கரங்களால் பொன்னாடை போர்த்தியும், உருத்திராக்க மாலை அணிவித்தும் பொற்கிழி ரூ. 3000 வழங்கியும் சிறப்பு விருது அளித்தும் வாழ்த்தியருள்கிறார்கள். இத்திருத்தொண்டுகள் இம்முனிவர் பெருமான் மீது இவர்கள் கொண்டுள்ள அளவற்ற ஈடுபாட்டினைப் புலப்படுத்துவனவாகும்.

**ஸ்ரீ மெய்கண்ட சிவனார் திருவடிகள் வாழ்க**
**ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் திருவடிகள் வாழ்க**
**ஸ்ரீ கச்சியப்ப முனிவர்பிரான் திருவடிகள் வாழ்க**



# பூவாளூர்ப் புராணம் ஓர் ஆராய்ச்சி

புராணம் என்பது பழைமையான கதை - வரலாறு என்ற பொருள் தருவது. புராணச் செய்தியில்லாத உலகமொழிகள் இல்லை. எனினும் வடமொழியில் புராணங்கள் மிகுதி என்பர். வடமொழிப் புராணங்களை இருமொழிவல்ல புலவர்கள் தமிழில்மொழி பெயர்த்துள்ளனர். "வடமொழிப் புராணங்கள் செய்தியை மட்டுமே கூறுவன; மொழி பெயர்ப்பாயினும் தமிழ்ப்புராணங்கள் தாம் சொல்ல வந்ததைக் கவிநயம் பொருந்த, காப்பிய இலக்கணம் அமையக்கூறுவன" என்பார் உ.வே.சா. அவர்கள்.

இவ்வகையில் வடமொழி உருத்திர சங்கிதையில் வரும் கேத்திர காண்டத்தில் உள்ள கூவிள வனப்பகுதியில் உள்ளதையே பூவாளூர்ப் புராணமாக மொழிபெயர்த்துள்ளேன் என்கிறார் இதன் ஆசிரியராகிய ஸ்ரீ கவிராட்சச கச்சியப்ப முனிவர் பெருமான். இதனை,

> திருத்தன் நல்கிய புராணம்மூ வாறினுள்
> சிறந்(து) அருள் தரும் சைவத்(து)
> உருத்தி ரப்பெயர் பூண்டசங் கிதைதனில்
> ஓங்குகேத் திரகாண்டத்(து)
> அருத்தம் மல்கநன்கு உரைத்தகூ விளவனத்து
> ஆன்றமான் மியம்சாலப்
> பெருத்த வையகத்(து) அனைவரும் தெரிதரப்
> பெயர்த்(து) உரைக் குவன்மாதோ. - 16

என்று பதிவு செய்கிறார் முனிவர்பிரான்.

**பூவாளூர் :**

திருச்சிராப்பள்ளி மாவட்டம், இலால்குடி என்கிற திருத்தவத்துறைக்குத் தெற்கே 3 கல் தொலைவில் பூவாளூர் உள்ளது.

பூவாளூர்ப் புராணம் பாயிரம் நீங்கலாகச் சருக்கம் 17. பாயிரம் உள்ளிட்ட செய்யுட்கள் 885 கொண்டது. இச்சருக்கங்களின் சுருக்கச் செய்தியைச் செய்யுள் 42 முதல் 52

வரையிலான 11 செய்யுட்களில் செறிந்துக் கூறுகிறார். ஒவ்வொரு சருக்கத்து இறுதிச் செய்யுளும் அச்சருக்கச் சுருக்கச் செய்தியையும் அடுத்த சருக்கச் சுருக்கச் செய்தியையும் கொண்டிலங்குவது பெரிய புராண அமைப்பை நமக்கு நினைவூட்டுகிறது.

**பஞ்ச புண்ணியத்தலம் :**

எவ்வூராயினும் அது மூர்த்தி, தலம், தீர்த்தம், வனம், சிகரம் (கோபுரம்) ஆகிய ஐவகைச் சிறப்புகளும் பெற்றிருப்பது சிறப்பு என்பது நம் முன்னோர்கள் முறைமை. இவ்வைந்தும் கொண்ட ஊர் வளமான நல்வாழ்வுக்குரியதை அனுபவத்தால் கண்டதனால் அதனைப் "பஞ்சபுண்ணியத்தலம்" என்று போற்றினர்.

இவ்வைவகைச் சிறப்பும் ஒரு சேரப் பெற்ற திருத்தலங்களுள் பூவாளூரும் ஒன்று என்பதை,

"எத்தகைய புரங்களிலும் பூவாளூர் எனும் புரமும், இலங்கு கானின்
உத்தமம்ஆ கியவில்வ வனமும், நதி களின்மலர்கள் உந்தி ஓடி
முத்(து) எறியும் பற்குனியும், தலங்களில்சீர் முதிர்ஞானத் தலமும், தெய்வச்
சித்திரம்ஆர் சிகரத்தில் கல்யாண சிகரமுமே சிறந்த ஆகும்" பா.146.

என்று பூவாளூர், வில்வவனம், பற்குனி ஆறு, ஞானத்தலமாகிய திருக்கோயில், கல்யாண சிகரம் ஆகியவற்றின் சிறப்புகளை எடுத்து இயம்புகிறார். எனவே இது ஒரு பஞ்ச புண்ணியத்தலமாக மிளிர்கின்றது.

**வெள்ளை வாரண விநாயகர் :**

தலவிநாயகர் வெண்ணிறத்தவர், எனவே வெள்ளைவாரண விநாயகர் என்பது இவரது திருப்பெயராயிற்று. இவர் சிவபெருமானது அம்சம் என்பதால் தனக்குவமை இல்லாத சிவபெருமானையே இவர்க்கு உவமை காட்டுகிறார் ஆசிரியர். "மழு முதலிய அரிய படைகள் தம்மிடம் இருந்தும் அவற்றைப் பயன்படுத்தாமல் தனது கைநகத்தால் பிரமனது ஐந்தலையில் ஒருதலையைக் கிள்ளி எறிந்த சிவபெருமானைப் போல, இவ்விநாயகரும், படைக்கலம் பல இருந்தும், அவற்றைப்

பயன்படுத்தாமல், தனது மருப்பினால் பகை முடித்தவர்" என்று போற்றுவது மரபு வழிபட்ட புராணச் சிறப்பினை உள்ளடக்கியுள்ளது.

**மூலவர் திருப்பெயர்கள் :**

அருள்தரு குங்கும சுந்தரியம்மை உடனாய திருமூல நாதப்பெருமான் மூலவர். திருமகள், உயிர்கட்கு விழுப்பொருளை வழங்கும் உரிமையை இவரால் பெற்றதால் இவர் "திருமூல நாதர்" என்றும் (பா. 98) தெய்வத்தன்மை வாய்ந்த வில்வமரவன நிழலில் எழுந்தருளியவர் ஆதலால் "வில்வவனநாதர்" என்றும் (பா.98) எழுபது முனிவர்கட்கு ஞானதானம் அருளியதால் "ஞானதானேசர்" என்றும் (பா.99) இரதிமன்மதன் திருமணம் நடக்க அருளியதால் கல்யாண நாதர் என்றும் (பா.100) குமுதை சந்திர சூடன் திருமணம் நடைபெறச் சித்தராய் இருந்து முடித்து வைத்தமையால் சித்தநாதர் என்றும் (பா.101) என்று போற்றப் பெறுகிறார்.

**ஊர்ப் பெயர்கள் :**

இவ்வூர் பண்டு வில்வவனமாய் இருந்தமையால் "வில்வகானம்" வடநாட்டுக் கயையிலும் புனிதமானதால் தட்சிண காயாபுரி; சிவபெருமான் சித்தராய் எழுந்தருளியதால் "சித்தநகர்" மன்மதன் இரதி திருமணம் நடக்கக் காரணமாய் இருந்ததால் "மன்மதபுரி" காமர் நகர், பூவாளியூர், பூவாளூர் என்றெலாம் போற்றப் பெறுகிறது. பெரிய புராணம் இவ்வூரைக் "காமர்பதி" என்று குறிக்கிறது.

**திருமுறையில் திருப்புகழில் பூவாளூர் :**

திருஞானசம்பந்தப் பெருமான் திருவானைக்கா வழிபட்டதன் பின், புறப்பட்டு இவ்வூரடைந்தார். இங்கு அவர் சிலநாள் தங்கியிருந்து பெருமானை வணங்கியபின் திருத்தவத்துறை சென்றார். அவர் பூவாளூரில் தங்கியிருந்த சிலநாட்களில் சில பதிகங்களாவது பாடிப் பெருமானைப் போற்றியிருப்பார். ஆயினும் நம் தவக்குறையால் அவை கிடைத்தில. திருஞானசம்பந்தர் இங்குத் தங்கியிருந்து பெருமானை வணங்கியதை,

"ஆரணத்(து) உட்பொருள் ஆயினாரை
ஆனைக் காவின்கண் புகழ்ந்து பாடி"
- பெரிய - 2249.

கை தொழுது ஏத்திப் புறத்(து) அணைந்(து)
காமர் பதிஅதன்கண் சில நாள்
வைகி வணங்கி மகிழ்ந்தணை வார்
மன்னும் தவத்துறை வானவர்தாள்
எய்தி இறைஞ்சி - பெரிய - 2250 : 1-3

என்று பதிவு செய்கிறார் சேக்கிழார் பெருமான்.

இங்கு எழுந்தருளும் அருள்மிகு ஆறுமுகப் பெருமானை அருணகிரியார், காலன் வேல்கணை என்ற திருப்புகழில்,

"காவிரி ஆறு தேக்கிய கால்வாய் மாவள
நாடு போற்றிய பூவாளூர்"

என்று ஊர்வளமை கூறிப் போற்றுகிறார்.

**கல்யாண சிகரம் :**

திருக்கோயில் கோபுரம் தூலலிங்கம் என்பது மரபு. தொலைவில் வரும் போதே இதனைக்கண்டு வணங்குவது வழக்கம் என்பதைப் பெரிய புராணம் எடுத்துரைக்கிறது. இத்தகு சிறப்பினையுடையது கல்யாண சிகரம் பூவாளூர்த்திருக்கோயில் கோபுரம். இங்கு எழுந்தருளியிருப்பவர் மூவுலகுக்கும் ஒருவரேயான அருள்மிகு திருமூலநாதர் என்பதை உணர்த்தும் வகையில் மூன்றடுக்கு உடையது இது. இதன் சிறப்பை,

"கண்டுளார் வினையறுக்கும் கல்யாண வான்சிகரத்(து)
அண்டர் நாதனைத் திருமூலநாதனை ஆலம்
உண்ட நீலமா மணிமி டற்றனை" - பா. 715 : 1-3

என்று எடுத்துரைக்கிறார்.

**தீர்த்தம் :**

இங்குத் தீர்த்தமாக விளங்குவது பற்குனி என்ற பெயரின் மரூஉ மொழியான பங்குனி ஆறு. இது தன்னில் படிவார் பாவத்தை அணுப்படுத்திக் கரைந்து போகச் செய்து நீக்குவது என்ற பொருளில் அமைந்த பெயர் - பற்குனி. இது ஊரின் நடுவில் ஓடுகிறது என்பது முன்னரே கூறப்பெற்ற செய்தி. திருக்கோயில் இந்த ஆற்றினையொட்டித் தென்கரையில் விளங்குகிறது. இப்புனித ஆற்றின் பெருமையை,

"சுரந்து வளரும் பாவத்தைச் சொல்லும் பற்கு எனும் கிளவி
நிரந்து நீஎன் பதுபோக்க நிகழ்த்தும் அதனால் பாவத்தைக்
கரைந்து போக ஒழித்தருளிக் கமழ்ந்த நறும்பூந் திரைகொழித்துப்
பரந்து வந்த நதிக்(கு)ரைப்பர் பற்கு நீ என்(று) ஒருநாமம்"
- பா.80

என்றும்,

".... பற்குனியாம் தடஉந் தியைத் தக்கிண கங்கை
என்பார் அறிந்தோர்" - பா. 82 : 2-3

என்றும் கூறுவதுடன் அமையாது பா. 664, பா 780 ஆகியவற்றிலும் இதன் சிறப்பினை உரைக்கிறார்.

**பூவாளூர் :**

இவ்வூர் செல்வவளமும், வீரவளமும், கல்வி வளமும் ஆகிய வாழ்க்கைக்குத் தேவையான மூவகை வளங்களையும் ஒருசேர மிகுதியாகப் பெற்றது.

"திரும கட்குத் திருமிக்(கு) அளிப்பது
பொரும கட்குப் புயவலி நல்குவது
உருவ வாணிக்கும் ஒண்கலை ஈவது
மருவி வாழும்பூ வாளூர் வளம்பதி" - பா. 53.

என்பது முனிவர்பிரான் வாக்கு.

**பூவாளூரில் முனிவர் எழுபதின்மர் :**

பிருகு, ஆங்கிரசு, வசிட்டர், காசியபர், அத்திரி, குச்சர், கவுதமர் ஆகிய எழுவரும் திருத்தவத்துறையில் எழுந்தருளியுள்ள எழுமுனிவர்க்கு இறையை - சப்த ரிஷீஸ்வரரை அழைத்து வாழ்வித்த பெருமானை - வணங்கி வரம்பல பெற்றனர். இவர்கள் எழுவரும் தம்மக்கள் எழுபதின் மறையும் பூவாளூருக்குச் சென்று அங்கு எழுந்தருளியுள்ள அருள்மிகு திருமூல நாதப் பெருமானை வழிபட்டு "ஞானஉபதேசம்" பெறுமாறு ஆற்றுப்படுத்தினர். அதன்படி இவர்கள் பூவாளூர் வந்து வழிபட்டு "ஞானஉபதேசம்" பெற்றனர்.

"மாதவர்அன் னவர்மைந்தர் பாற்கவரே ஆங்கிரசர்
வளர்வா சிட்டர்
காதல்செய்கா சிபர் ஆத்தி ரேயர் கவுச் சர்கள் கவுத
மீயர் என்றா
ஓதும் இவர் எழுதின்மன்" பா. 144

என்று இவர்களைக் குறிப்பிட்டு,

"மாதவர் எழுபதின் மருங்கும் வள்ளலார்
மேதகு ஞானம் அங்(கு) அருள ...." பா. 187

என்று இவர்கள் ஞான உபதேசம் பெற்றதைக் குறிக்கிறார்.

**சிவபெருமான் திருப்பெயர்கள் :**

"சிவன்உ ருத்திரன் சச்சிதா னந்தன்தே வேசன்
பவன்ப ராபரன் நிற்குணன் நின்மலன் பழையோன்
நவை அறுப்பவன்....." பா.192

என்று எவ்வகை அடைமொழியும் தராமல், ஓசையும் சற்றும் குறையாமல் அமைத்திருப்பது வியக்கத்தக்கது. இவை அனைத்தும் காரணப்பெயர்கள். இவை முறையே மங்கலன், அந்தம் செய்பவன், சத்து சித்து ஆனந்தமயன், தேவர்க்கெல்லாம் ஈசன், தானே தோன்றியவன், மேலானவற்றுக்கெல்லாம் மேலானவன், குணமிலி, மலமிலி, அநாதியன், நம்குற்றம் அறுப்பவன் என்று பொருள் தருவன.

**சிவபெருமான் திருவுரு :**

திருவைந்தெழுத்தின் உருவாகவும், ஆணவம் அறுக்கும் ஓங்காரமாகவும் சிவபெருமான் விளங்குகிறான் என்பதை;

"கொஞ்சு பைங்கிளிக் குங்குமதனசுந் தரியோடு
அஞ்செழுத்(து) உருவாகிய அண்ணலார்" பா.858
"அகம்அ றுத்திடும் பிரணவப்பொருளும் அன்னவரே" - பா. 497

என்கிறார்.

**சிவன் உறையும் சிறப்பிடங்கள் :**

அங்கு இங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாய் விளங்கும் பெருமான், எழுந்தருளியுள்ள சிறப்பிடங்களாக முனிவர் ஐந்தினைக் குறிக்கிறார்.

"கொன்றை, நறுங்கூ விளம், இலிங்கம்,
குருவே, சிவயோ கியர்இவர்பால்
மன்றவிளங்கிச் சிவபெருமான்
வதியும்"

என்று தெளிவுபடுத்துகிறார்.

**சிவபெருமான் கேசாதி பாத வருணனை :**

சிவபெருமானின் கேசாதி பாதவருணனையில் தன்மை நவிற்சி, உயர்வு நவிற்சி, உவமை, உருவகம், தற்குறிப்பேற்றம் முதலிய பல்வகை அணிநலன்களும் பாங்குறப் பொலிகின்றன. நான்கு செய்யுட்களில் அமைந்துள்ள அதனைச் சுவைப்போம்.

"பவளச் சடையும் செஞ்சடிலப் பவளக் கொடிக்குப்
பாய்த்தியதோர்
தவழ்தண் புனலும் அப்புனலைத் தாவிக்குடித்து நுதல்செந்தீத்
துவள வளர்க்கும் பெருந்தாகம் துரக்க விழைந்த உழைக்கன்றும்
திவளும் நுதல்தீக் கொழுந்(து) ஒழுக்கில் திகழ்மை
அனைய திலகமுமாய்"
"கந்தம் கமழும் கத்தூரி கதிர்ப்ப அணிந்தால் எனஆழி
வந்(து) அங்கு உடற்றும் பெரு நஞ்சம் மீயங்குமிடரும்
விடம் தரித்தார்
நந்தம் இளையே ஆவர்என நாடி அடுத்து வாழ்வனபோல்
உத்தும் கவைநாப் பொறிமணிப்பை உரகம் செறித்த மணிமார்பும்"
"விண்ணோர்க்(கு) அழகும் பெருஞ்சிறப்பும் வெறுக்கை
திரளும் திருமேனி
கண்ணால் காணின் பெரி(து) அருளும் கருணை உடைய
ராய்ஒருபால்
பெண்ணோ(டு) இருந்தால் ஆயிடினும் பெரிதே வேடம்
எனத் தெரிப்பர்
நண்ணா நின்ற சடைநீற்றின் நலத்தோ டியைந்த தோலுடையும்"
"பல்வேறான தேவரையும் பல்வேறான நல்வினையும்
சொல்வோம் எனினும் அவைஎல்லாம் சூழும் திறந்த
அல உய்ப்போர்
கொல்வே லையின்நஞ்(சு) அயின்றார்தம் குரை
பூங்கழற்பொற் சேவடியே
நல்வீடு எமைப்போல் சூழ்க என நண்ணி அரற்றும்
மறைச்சிலம்பும்"
- பா. 443 - 446

என்று பல்வகைநயமும் அமையக்கூறுகிறார்.

**அனைத்தும் சிவமயம் :**

அனைத்துமாய் அனைத்தின் உட்பொருளுமாய் விளங்கி அவற்றை ஆட்டுவிப்பவனாகவும் சிவபெருமான் விளங்குகிறான் என்பதைச் செய்யுள் 496 - 499 ஆகிய நான்கில் கூறுகிறார்.

வேள்வி, மந்திரம், வேள்வி செய்பவர் ஆகவனீயம், செய்விப்பவர் காருக பத்தியம், தக்கிணாக்கினீயம் ஆகிய முத்தீ, உயிர்கள், வேள்வியிலிடும் அவி, அதில் வார்க்கும் நெய், அதிலிடும் அரிசிமாப் பொருட்கள், எஞ்சியவை, இவற்றால் வரும் பயன், அளவற்ற கன்மப் பயன், கன்மப் பயனை ஆளும் கருத்தா - சிவபெருமானே.

குற்றமில்லாத பயன்களை ஏற்பவர், சகல வித்தைகளுக்கும், சகல பூதங்களுக்கும், பிரமர்களுக்கும் நல்லபெருந்தலைவர் அவரே, ஆணவத்தை அறுக்கும் ஓங்காரமும் அவரே.

நல்லவர்களைக் காத்தும், துட்டர்களைச் சினந்து அழித்தும், குறைவின்றித் தருமத்தை நிலைநாட்டி முறை செய்யும் அட்டமூர்த்தியும், தத்துவங்களைக் கடந்தவரும், மேலான ஒளிவடிவாய், மேலானவற்றுக்கெல்லாம் மேலானவர் அவரே. அண்டங்களின் இயக்கத்திற்குக் காரணமும், மறைகளின் முடிவில் விளங்கும் உண்மையுருவினரும், முப்புரம் எரித்த பகவனும் ஆகிய அவரே வேள்வி, அவி அனைத்துக்கும் உரியவர் என்பார். *(பா. 496 - 499)*

**திருவைந்தெழுத்தின் பெருமை :**

பாவம் போக்கும், நோய்தீர்க்கும், பேயோட்டும், இராக்கதத்தையும் போக்கும், தெய்வக் குற்றம் அனைத்தையும் மிகக் கெடுக்கும், செல்வங்களை எல்லாம் இடைவிடாது வழங்கும், தேவராக்கும், திருவருளில் படியச் செய்யும், வீடுபேறுதரும், மிக நிறைந்த சித்திகளைத் தரும் என்பன திருவைந்தெழுத்தின் பெருமைகள் ஆகும். எனவே இது தேவர்களுக்கு எல்லாம் மேலான தேவேந்திரனைப் போல, மந்திரங்கள் அனைத்துக்கும் மேலானது. *(பா. 428 - 430)*

**திருவைந்தெழுத்தை ஓதும் முறை :**

ஓதுதற் குரியவர் ஓங்காரத்தைத் திருவைந்தெழுத்தின் முன் கூட்டி, முறைப்படி மந்தணமாக ஓதவேண்டும் என்பதை,

> **"ஐந்தெழுத்(து) அவற்றின் முன்னே பிரணவம் கூட்டி ஆறு மந்தண மாகக் கொள்வர் மறைபவ ராதிமூவர்"** *(பா. 430 - 3 - 4)*

"சூத்திரர் மழலைத் தீஞ்சொல் தோகையர் இருவர் மாட்டும்
ஏத்தும் அஞ்செ ழுத்தேயாகும்" (பா. 431 : 1-2)

என்பதால் மகளிர் உள்ளிட்ட அனைவரும் ஓதுதற்குரியது ஓங்காரம் என்பது வெளிப்படை.

**விநாயகர் ஓங்கார வழிவர் :**

மருஆளும் மலர்க்கொன்றை மன்னவன் அப் பிரணவமால்
களிறாய்த் தந்த
பெருவாழ்வு தரும் களிறு. - என்கிறார். பா.1:3

**வீடுபேறு :**

வீடுபேற்றினைத் திருவள்ளுவர் "மற்று ஈண்டு வாராநெறி பேரா இயற்கை" என்பார்.

"இரவுபகல் இல்லா இன்பவெளி" என்பது திருவுந்தியார். இதனை நம் முனிவர்பிரான்,

"அழியா இன்ப முத்தி" - பா. 153

"சோராத கதி" - பா. 793

என்றும் தக்க அடை தந்து கூறுகிறார்.

**திருநந்திதேவர் பணி :**

தமது ஊழ்வினை நீங்கவும், இறப்பு நீங்கவும் வேண்டிப் பெருமானை வணங்க வருவோரைத் தமது கைத்தலப் பிரம்பினை ஓச்சிப் பத்தியின் அருள்கின்றவர் திருநந்தி தேவர் என்கிறார்.

**கைத்தலப் பிரம்பின் ஓச்சிக் கண்ணுதல் சேவை யார்க்கும்**
**பத்தியின் அருளும் நந்தி பணிமலர்ப் பாதம் போற்றி**
- (7 : 3-4)

பத்தி என்ற சொல்லாட்சி அவரவர் வந்த வரிசை முறை என்ற பொருளையும், பக்தி என்ற பொருளையும் இங்குத் தந்து நிற்கிறது.

**செத்துப்பிறக்கின்ற தெய்வங்களும் சிவனும் :**

**"நூறு கோடி பிரமர்கள் நொந்தினார்**
**ஆறுகோடி நாராயணர் அங்ஙனே**
**ஏறு கங்கை மணல்எண்ணில் இந்திரர்**
**ஈறு இலாதவன் ஈசன் ஒருவனே"** - அப்பரடிகள்.

என்பதை வழிமொழியும் ஸ்ரீ குமரகுருபர அடிகள், அருள்தரு முத்துக்குமார சுவாமிப் பெருமானை,

"செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள" என்று அழைக்கிறார். திருமால் முதலியோரைச் செத்துக் பிழைக்கின்ற தெய்வங்கள் என்று குறிப்பிட்டு, முருகனை "மணவாள" என்று விளிக்கிறார். மணவாளன் என்பது இங்குக் கணவன் என்ற பொருளைக் குறிப்பதுடன், மணம் + ஆளன்= நன்னிலை, ஆள்பவன் - செத்துப் பிறக்கும் தெய்வங்களின் படைத்தல், காத்தல் முதலிய நன்னிலைகளை ஆள்பவன் என்ற பொருளையும் தருகிறது. இவ்விருவகைப் பொருளும் மெய்ப்பொருளியலுக்கு ஒத்தனவே.

இச்செய்திகளை மனம் கொண்ட நம் முனிவர்பிரான்

***"காலஎல் லைகளின் நீங்கும் கடவுளர் போகம் எல்லாம்***
***சாலவன் பிறப்பின் மீட்டும் சார்ந்(து) உயிர் தளர்வது"-***
*(பா. 152)*

என்றும்,

***"மாயன் ஆதியர் மாயையின் உருஎடுத்(து) எடுத்து***
***மாயும் நீர்மையர் அவர்பதி எனவர மாட்டார்"*** *(பா. 197)*

என்றும் மாயனாகிய திருமால் முதலியோரை விளக்கமுறக் குறிக்கிறார்.

**திருவருள் பதிவு உண்டாகும் காலம் எது?**

இருவினை ஒப்பு உடையவர்கட்கே திருவருள் பதிவு வாய்க்கும். "சத்திநிபாதம் தருதற்கு இருவினையும் ஒத்துவரும் காலம் உளவாகி" என்பார் ஸ்ரீ குமரகுருபர அடிகள் இருவினை ஒத்தலாவது "நல்வினை தீவினை இரண்டையும் சமபுத்தி பண்ணுதல்" ஆகும். இதனை,

***"இந்திய வழியின் இயங்குறா(து) அடங்கும்***
***இருவினை ஒப்பினர்க்(கு) அருளைத்தந்திட"***
*(பா. 13 :2-3)*

***ஒ(து) இரு வினைச்சமம் உற்று நின்றிடு***
***மாதவர் எழுபதின் மருக்கு நாதனார்***
***தீ(து) அற அருள்விழி சேர்த்திக் கைத்தலம்***
***பாதபங் கையம்இவை பதித்திட் டார்சிரம்*** *(பா.189)*

என்று கூறுவது நோக்கத்தக்கது.

**ஞானஉபதேசம்:**

பரம்பொருள், மாதவர் எழுபதின்மருக்கும் மெய்ஞ்ஞானச் செய்திகளை உபதேசித்த பகுதி "ஞானஉபதேசச் சருக்கம்". பரம்பொருள், மாதவர் எழுபதின்மருக்கும் தீதுஅற அருள்விழி சேர்த்தி, தனது கைத்தலமும் பாதபங்கயமும் அவரவர் தலையில் பதித்து, அதனால் ஏற்பட்ட திகைப்பு நீங்கிய பிறகு உபதேசம் அருளினார். அது வருமாறு :

அண்டம் எண்ணற்றன. அவை தோன்றக் காரணமான மாயை சடம் - அறிவற்றது. மும்மல வயத்தால் பல்வேறு பிறவிகளில் அல்லலுறும் ஆன்மாவுக்கு அருள்கிறவன் சிவபெருமானே. இவனுக்குச் சிவன், உருத்திரன் முதலிய பல்வேறு திருப்பெயர்கள் உண்டு. அண்டம் ஓர் அணுவாகவும், அணு ஓர் அண்டமாகவும் தோன்றுமாறு அவன் பெரிதினும் பெரியன்; நுண்ணிதின்நுண்ணியன். தவப்பயன் முற்றுப் பெற்றோரே அவனை அறிவர். யோகநிலை, போகம், வீடுபேறு, மெய்ந்நூல் மற்றும் தேவர் முதலியோர் பால் அவன் ஆற்றும் ஐந்தொழில் ஆகியன அவனது பாவனைத் திருவுருவால் நிகழ்வன. ஆணவம் என்பது அணுவளவும் என்றும் இல்லாத தூயஞானமே அவன் திருவுரு. மாயை கடந்த அவன் ஒரு காலத்தும் மாயையின் மயங்கும் உயிராக ஆவதில்லை. மாயையால் அமையும் உருவங்கள் நிலைப்பதில்லை திருமால் முதலியோர் இறந்தும் பிறந்தும் உழலும் உயிரினத்தவரே யல்லால் பதியாகார். மால் அயன் ஆகியோர்க்குக் காத்தல், படைத்தல், தொழில் அமைத்து, இவற்றைத் துடைக்கும் செயலாற்றும் முழுமுதல் சிவபெருமானே.

உயிர்கள் அளவற்றன. அவை ஆணவம் மட்டுமே உடைய விஞ்ஞான கலர், ஆணவம் கன்மம் இரண்டும் உடைய பிரயளாகலர், ஆணவம் கன்மம் மாயை மூன்றும் உடைய சகலர் என்று முத்திறத்தன. அநாதி முத்தன் சிவபெருமானே. அநாதி பந்தன் உயிர். அநாதி முத்தன் அருளால் ஆணவம் பக்குவப்படும்போது பிற மாயை கன்மங்களும் நீங்கும். சார்ந்ததன் வண்ணமாகும் உயிர்களின் ஆணவம் பக்குவப்பட, உயிர்களுடன் மாயை கன்மங்கள் சேர்ந்ததால் வரும் பிறப்பு இறப்புகளில் உழன்று, பெறும் ஞானத்தால் உயிர் பற்றிய மலம் நீங்கும். தத்தம் கன்மங்களுக்கு ஏற்ப உயிர், வெவ்வேறு உடல் எடுத்துப் பிறப்பு இறப்புகளில் சொர்க்கம், இப்பூமி, நரகம் இவற்றிடையே சுழலும். ஆணவத்துடன் உயிர் இயங்கும் வரை மாயை கன்மம் இரண்டும் மலமாக மயக்கும்.

மாயை; சுத்தமாயை அசுத்தமாயை என்று இருவகைப்பட்டு உயிர்க்கு உரிய உடல், கருவி, உலகு, நுகர்பொருள்கள் என்று நான்காய் உயிர்களைச் சாரும். கருமம் : இப்பிறப்பில் செய்யப்பெறும் ஆகாமியம். (இயற்றுவினை). இனி அனுபவிக்கச் சேர்த்து வைத்துள்ள சஞ்சிதம் (ஏறுவினை), இப்பிறப்பில் நாம் அனுபவிக்கும் பிராரத்தம் (ஏற்ற வினை) என்ற மூவகையில் நின்று புண்ணிய பாவமாக, இன்ப துன்பமாக விரியும். பேரின்பம் துய்க்கும் வழியறியாமல் உயிர், பிறப்பால் வினையும் வினையால் பிறப்புமாகச் உழலும். பரம்பொருள் உயிரிரக்கம் பூண்டு மூர்த்தி தலம் தீர்த்த உருவில் நின்று உயிரிடை, அது அறிந்தோ அறியாமலோ செய்யும் செயல்களால் சிவதருமம் மலியச் செய்து, சரியையிற் சரியை முதலிய பதினாறினால் மும்மலத்தை அழிக்கும். கேவலம் சகலம் என்ற நிலைகளைக் கீழ்ப்படுத்திக் கிளர்ந்து எழுந்த உண்மைஞானத்தால் ஞாயிற்று ஒளியும் விழியும் போலச் சிவத்துடன் உயிர் ஒன்றும், குற்றமற்ற அருள்வளர் தூய ஐந்து அவத்தையினும் முறையே சிலர் சிவத்தைச் சார்வர்.

இங்ஙனம் மெய்ப்பொருளியலை உபதேச முறையில் 19 செய்யுட்களில் (189 - 207) நுட்பமாகக் கூறி விளங்க வைக்கிறார்.

**முனிவர்கள் :**

பிருகு, ஆங்கிரசு வசிட்டர், காசியபர், அத்திரி, குச்சர், கவுதமர் ஆகிய எழுவரும் (பா.143) இவர்களின் மைந்தராகிய பாற்கவர், ஆங்கிரசர், வாசிட்டர், காசிபர், ஆத்திரேயர், கவுச்சர்கள், கவுதமீயர் முதலிய எழுபதின்மரும் (பா.144) மற்றும் சூதமுனி (பா.38), சயமினி (பா.41) உபகு (பா.41) சவுனகர் (பா.32), வால கில்லியர் (பா.17), இரயிக்குவன் (பா.79), சிவனன் (பா.214), உதங்கன் (பா.331) ஆகியோர் இதில் அமைந்துள்ளார்.

**சிவபெருமான் திருமுன் ஓதி வழிபடத்தக்க பாடல்கள் :**

"தண்ணார்மதி" (பா.182), "சங்கக் குழையாய்" (பா.183), "மணம் ஆர்தரு" (பா.184), "கங்கையைச் சடையில்வைத்த" (பா.339) "பண்டு எலாம் அடியேனாலும்" (பா.340), "வளம் கெழு" (பா.341), "மடவர்களேனும்" (பா.464), "சகலதத்துவத்தின்" (பா.465), "மறைமுடி தனக்கும்" (பா. 466), "திருமரு மார்பனோடு" (பா.467) என்பன நெஞ்சக் கனகல்லினை நெகிழச் செய்து ஒன்றுவிப்பன.

**புராணச் செய்திகள் :**

முப்புரஎரி பா.3;674. உதங்க முனிவர் சாபத்தால் இந்திரன் வருந்தியது பா.311. அரிஅயன் இருவரும் சிவத்தின் அடி முடிதேடியது பா.316. 670, 862. ஊர்வசி சாபம் பெற்றது பா.344. ஐராவதயானை பாற்கடலில் பிறந்தது பா.343. ஐராவதம் வெண்ணிறத்தது பா.344. அவ்வியானை ஏழு முழம் உயரம் உடையது பா.348. இந்திரன் ஆயிரங்கண்ணன் பா.389. வீரபத்திரர் தோன்றியது பா.510. தக்கன் வேள்வியில் கலந்து கொண்டோர் பட்டபாடு பா.517 - 523. பருதி, திங்களைப் படஅரவு தொடர்தல் - கிரகணம் பா.654. மன்மதன் நீறானது பா.302, காளியுடன் வாதாடியது பா.557, பிரமன் தலையை நகத்தால் சிவன் கிள்ளியது பா.5. திருஞானசம்பந்தர் திருவாவடுதுறையில் உலவாக்கிழி பெற்றது - பா.13. அகத்தியர் நகுடனுக்குச் சாபமிட்டது பா.227. கடலை அகத்தியர் பருகியதும் விந்தம் அடக்கியதும் - பா.277. சிவபெருமான் ஆலம் உண்டு அருளியது - பா. 302, 604, 690. தாராகாசூரனிடம் தேவர்கள் குற்றேவல் செய்தது பா.360 - 363.

**முருகப் பெருமான் உதித்தது கூறுவதில் சிறு மாற்றம் :**

கந்தபுராணம் முருகப்பெருமான் அவதாரம் குறித்துக் கூறும் செய்தி அனைவரும் அறிந்ததேயாதலின் நம் முனிவர் பெருமான் குறிப்பதை மட்டும் காண்போம்.

அசுரர் பகையால் பெருந்துன்பமுற்ற தேவர்கள் தீக்கடவுளை நோக்கிப்புகழ்ந்து கூறி, "சிவபெருமான் இடையறாக்கலவி விடுத்தால் நமக்கு அவர் மூலம் ஓர் ஆண்மகன் கிடைப்பான்; இவ்வகையில் உதவ வேண்டும்" என்று வேண்டினார். இசைந்த தீக்கடவுள் புறாவுருவுடன் பெருமான் பெருமாட்டி இருக்கும் இடம் சென்று இறங்க, இவன் வரவு உணர்ந்த பெருமான் கலவி நீங்கினான். பெருமாட்டி புறவாக வந்த தீக்கடவுளைச் சபித்தாள். உடனே தீக்கடவுள் சிவபெருமானைச் சரணடைந்து காப்பற்ற வேண்டிக் கொண்டதுடன் "தேவர் துயர்தீர ஒரு மகனை அருள்க" என்றும் வேண்டினான். உடனே சிவபெருமான் தனது வீரியத்தை வெளிப்படுத்த அதைத் தீக்கடவுள் பருகிக் கருவுற்றான். கருவைச் சுமக்கலாற்றாது அதனைக் கங்கைபால் பெயர்த்துக் கொடுக்க அவள் அதனைத் திங்கள் சில சுமந்து, பின் சரவணப்பொய்கையில் சேர்த்தாள். அலையால் எற்றுண்ட கரு,

கருப்பையின் அசைவால் ஆறு கூறுகளாகி ஆறு குழந்தைகளாய் விளங்க, கார்த்திகை மாதர் வளர்க்க, சிவபெருமான் அருளாணையின் வண்ணம் உமாதேவியார் அந்த ஆறு குழவிகளையும் ஒருசேர எடுத்துத் தழுவினாள். அனைத்தும் ஆறுதிருமுகங்களும், பன்னிருதிருக்கரங்களும், இருதாள்களும் கொண்டு அமைய, அதற்குப் பாலூட்ட, பின் தேவசேனாபதி னாக்கினார் என்பது அது. - பா.595 - 628.

**அன்னமிடும் சிரார்த்தம் செய்ய உகந்த நாள் :**

உத்தராயண தட்சிணாய புண்ணிய காலங்கள், இருவகைக் கிரகணம், இரண்டு உவா, நான்கு பாதக் கூறுகள், மாதப் பிறப்பு, மகாளய பக்கம் ஆகியன உணவிடும் பிதிர்க்கடன் செய்ய உகந்த காலங்கள் - பா.91.

**முன்னோர் மொழி போற்றுதல் :**

திருக்குறள் :

1. "அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு" (குறள் - 1)

"அக்கரங்கட்(டு) எல்லாம் அகரஉயிர் நின்றாற்போல்
மிக்க உயிர்க்(கு) உயிராய் மேவினோம்"

"அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில் இறை நிற்கும் நிறைந்து" - திருவருட்பயன் - 1.

இவற்றை உள்வாங்கிய முனிவர்பெருமான்,

"எழுத்தினுள் அகரமே என்ன எங்கணும்
முழுத்துணர் சிவபிரான்" - (பா.766)

என்று எடுத்து மொழிகிறார்.

சிறந்த கவிஞர்கள் தேனீப் போன்றவர்கள். தேனீ தேன் நிறைந்த மலர்களையே நாடும்; தேனை மட்டுமே பருகும்; பருகியதைச் செரித்துத் தேனடையில் சேர்த்துப் பிறர்க்கு உதவும். அதுபோல, சான்றாண்மை வாய்ந்த கவிஞர்கள், சிறந்த நூல்களையே நாடுவர்; உயர்கருத்துகளை நுகர்வர், அதனைச் செரித்துத் தனதாக்கித் தத்தம் நூல்கள் மூலம் உலகுக்கு உதவுவர். இவ்வகையில் வழிமொழிந்ததே இசைவம்.

2. "நிறைமொழி" என்பது திருவள்ளுவர் சொல்லாட்சி. (குறள் - 28) இதற்கு "அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப் பயன்களைப் பயந்தே விடும் மொழி" என்று விளக்கம் தருவார் பரிமேலழகர். இச்சொல்லை இப்புராணத்து பா.296 "வீடாச் சாபம்; பா. 283 - சரதவாக்கு; பா.612 - வீட்டரும் சாபம்" என்று குறிக்கும்.

3. "தொட்டனைத்தூறும் மணற்கேணி" (குறள் - 396) என்ற திருக்குறள் உவமையை இவர்,

"கொடுக்கும் தோறும் குருஉமணல் கேணியின்
எடுக்கும் தோறும் இரும்புனல் போல் சுரந்து
அடுக்கும் தொல்நிதியாளர்" - (பா.60)

என்று ஆள்கிறார்.

4. கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும் - (குறள் - 166)

என்பது,

அந்தோ கொடுப்பது அழுக்கறுப்பான் அனைத்தும்
ஒழிய இலம்பாட்டில்
சிந்தா குலம்உற்று இழிகின்ற செய்தி (பா : 295)

என்று அமைகிறது.

5. வாழ்தல் உயிர்க்(கு) அன்னள் ஆயிழை சாதல்
அதற்(கு) அன்னள் நீங்கும் இடத்து - (குறள் 1124) என்பது

தேங்கும் ஆனந்தக் கடலிடைத் தினம்தினம் திளைத்து
நீங்கினால் உயிர் நீங்குவதாகிய நிலைமை - (பா. 872)

என்று வருகின்றது.

**திருமந்திரம் :**

1. "குருவேசிவம் எனக் கூறினன் நந்தி" - (திருமந். 1566) என்பதனால், துறைசை ஆதினக்குரு முதல்வராகிய ஸ்ரீ நமச்சிவாய குருமூர்த்திகளை பா.13இல் சிவபரம் பொருளாகவே போற்றி வணங்குகிறார்.

2. உள்ளம் பெருங்கோயில் (திருமந்திரம் 1804) என்பார் திருமூலர். பெருங்கோயிலாவது எக்காலத்தும் எதனாலும் அழியாத உயிரைப் பிரியாத உள்ளம் குறிப்பது. கோயில் என்பது முதலாகுபெயராய்க் கருவறை குறித்தது.

மண்ணும் கல்லும் பிறவும் கொண்டு அமைந்த உலகத்திருக்கோயிலும் அவற்றின் கருவறையும் அழியும் இயல்பினவாதலின் பெருமை என்ற இனம் விலக்கிய அடை தந்தார். இது நம் முனிவர் வாயிலாக, "அடியவர் உள்ளமே ஆலயங்களும்" என்று வெளிப்படுகிறது. ஆலயமாவது உயிர்கள் இலயிக்கும் இடமாகிய கருவறை. இது முதலாகு பெயராய்க் கருவறை குறிக்கும்.

**பழமொழி :**

"அகத்தின் அழகு முகத்தில் தெரியும்" - என்பது "அகத்திடையே எழும் மகிழ்ச்சி முகத்துவழி யாய் அலர" (பா. 149) என்றும், "அங்கையின் நெல்லி" என்பது "கைத்தலக் கனிபோல்" என்றும் வந்துள்ளது.

**திருமுறை :**

"கங்கை ஆடிலென் காவிரி ஆடிலென்
ஓங்கு தண்கும ரித்துறை ஆடிலென்
நங்கு மாகடல் ஓதநீர் ஆடிலென்
எங்கும் ஈசன் எனாதவர்க்(கு) இல்லையே"

- அப்பரடிகள்

என்பது,

"கங்கை ஆடினும் காசி வதியினும்
பொங்கு காவிரிப் பூம்புனல் ஆடினும்
எங்கும் ஆடினும் எங்கும் இருப்பினும்
மங்கு மோஅரன் மாட்(டு) இழை வஞ்சமே"

பா. 786

என்று மறுமலர்ச்சி பெறுகிறது.

**சித்தியார் :**

மாதவச் சிவஞான யோகிகள் அருளிய சித்தியார் உரைப்பாயிரம் குரு வணக்கப் பாடல்.

பண்ணிசைவெம் பரிதிமதி நிலதயிலம் தீஇரும்பு பாணிஉப்பு
விண்அநிலம் உடல்உயிர்நீர் நிழல் உச்சிப் பளிங்குபகல்
விளக்குப்பால்நீர்
கண்இரவி உணர்வு ஒளிபோல் பிரிவு அரிய அத்துவிதக்
கலவி காட்டித்

தண்அளிவைத்து எனையாண்ட துறைசைநமச்
சிவாயகுரு சரணம்

(போற்றி - 1)

என்பது. இதில் அத்துவிதக் கலப்பை விளக்கப் பதின்மூன்று உவமைகளை யோகிகள் அடுக்குகிறார்.

இவற்றில் நான்கு உவமைகளை மட்டும் எடுத்துக்கொண்டு பரசிவம் பரையின் உடன்பிரியா இயல்பை விளக்குகிறார்கள் நம் முனிவர்.

"மணிஒளியும் மலர்மணமும் வயங்(கு) இரவிக் கதிரும்மதிக்
கலையும் போலத்
துணிவு அருளும் சிவபெருமான் உடன்பிரியத்தனது இயல்பை"
என்கிறார் (பா.2)

மேலும்,

"சந்நிதி குணம(து) ஆகும் தான் என்போல் என்னிவ் காந்தம்
முன்இரும்பு என்றாய் ஈர்க்கும் முறைமை"
- (இலக்கணவியல் 4:8)

என்ற உவமை

"தோய்ந்தமெய் அன்பி னோரும் திருமூலநாதர் முன்பு
நேர்ந்தபைங் காந்தம் ஈர்க்கும் நெட்டிருப்பு
ஊசிபோலச் சார்ந்தனர்" - (பா. 150)

என்று அப்படியே அமைந்துள்ளது.

**நாவலந்தீவு :**

நம் இலக்கியங்கள் நமது இந்தியத் திருநாட்டை நாவலந்தீவு என்று குறிப்பிடும். முனிவர்பிரானும் நாவலந் தீவு என்றே நம் நாட்டைக் குறிக்கிறார்.

"நாவல் தழுவும் இப்புவி" பா. 96

நாவல் மரங்கள் மிக்கிருக்கின்றமையால் இப்பெயர் பெற்றது என்பதைவிட, நாவல் - நெற்பயிர் என்று பொருள்தருவதாதலின் நெற்பயிர் மிக்குள்ள நாடு இது என்பது பொருந்தும் எனலாம்.

**அகநானூறு :**

*தலைவன் தலைவியின் ஒன்றிய நல்வாழ்வை*

"இருதலைப் புள்ளின் ஓர் உயிர்" - அகம்

என்று விளக்கும். இதனை அப்படியே,

இருதலைசேர் ஒருபுள்ளின் ஏக உயிராய்" - (பா. 405)

என்று காதல் நலம் கனிந்த வாழ்வை விவரிக்கிறார்.

**குற்றம் விசாரித்தல் :**

குற்றம் பற்றியோ, அதனைச் செய்தவர் பற்றியோ தெளிவாகத் தெரிந்து கொள்ள உரியவர்களை ஒருசேரக் கூட்டிவைத்து விசாரிப்பது சரியாகாது. ஒவ்வொருவரையும் தனித்தனியே வைத்து விசாரித்தால்தான் உண்மை புலனாகும். இவ்வகையில், தவநிலையால் புற்று மூடிய சிவனமுனிவரின் கண்களைப் பொன்வண்டு என்று சையாதி மன்னன் மகள் சுகன்னி கிண்டித் துன்புறுத்தினாள். இது பற்றி அறிய அரசன், அனைவரையும் அழைத்துத் தனித்தனியே விசாரித்தார். இதனை,

"கோல்தொடிக்கைப் பாங்கியரும் தன்மகளும் ஒருங்(கு) இருந்த
குழுவை நோக்கி
ஆற்(று) அரிய இடர்இவற்(கு) இங்(கு) ஆற்றியவர்
இவரே என்(று)
அகத்துக் கொண்டு
காற்றினும்வல் விரைந்தடுத்துத் தனித்தனிகூய் முனிக்கு இடுக்கண்
கண்டார் யாரே
சாற்றிடுக என்றான்" - பா. 230

"காற்றினும் வல்விரைந்து அடுத்த" காரணம் அவர்கள் தம்முள் கூடிப்பேசி உண்மையை மறைக்க வாய்ப்புத் தரலாகாது என்பதாம்.

**மரவகை :**

ஒருசெய்யுளின் மூன்று அடிகளில் பதினைந்தே சீர்களில் பதினெட்டு வகையான மரங்களை ஓசை குன்றாமல் சுருக்கிக் கூறும் பாங்கு போற்றத்தக்கது. அது:

"போதிம ரவாழை சண்பகம் மாதுளை புன்னாகம்
பாதிரி கூவிளம் மாபிர ஞாழல்ப லாசோமை

கூதளம் நாகம் அடம்புகு ருந்துகு ராநொச்சி
ஆதிநெ ருங்கிய கானம்நு ழைந்தனன் அங்கு ஒருசார்" - பா.646

என்பது.

**பாலை வருணனை :**

பாலை வருணனை சிறந்து விளங்குவது சயங்கொண்டாரின் கலிங்கத்துப்பரணியில். அதுபோன்ற ஒரு பாலை வருணனையை,

பார்த்தவி ழித்துணை வேம்இடு கின்றப தம்வேம் இக்கு
ஓர்ந்திடு நெஞ்சமும் வேம்உரை நாவும்உ லப்பாம்

என்று

ஆர்ந்(து)எவ ரும்புகு தாதஅ ருஞ்சுரம் - (பா. 647)

என்று இதில் காண்கிறோம்.

**மகளிரின் முச்சார்பு :**

இக்கால மகளிர்பெரும்போலோர் நிலை வேறாயினும், அக்கால மகளிர் அனைவரும் பெற்றோர், கணவன், மகன் ஆகியோரையே சார்ந்திருந்ததை,

"மாதரார் வதுவை காறும் வளர்த்திடும் குரவர் பாலர்
தீதறு வதுவை முற்றின் திருத்தகு கணவர் பாலர்
காதலர் தமக்குப் பின்னர் கான்முளைப் பாலர் என்றால்
நாதனே எக்காலத்தும் முதன்மைநன் மடவார்க்(கு)
இன்றே" (பா. 541)

என்ற செய்யுள் படம் பிடித்துக் காட்டுகிறது.

**நரகங்கள் :**

"அல்லவை செய்வார் அருநரகு அடைவர்"

என்பது வழக்கு. இந்நரகம் 28 வகையினது என்பதை,

"நரகம் நாலெழு கோடியும் நண்ணி" (பா. 648)

என்று உணர்த்துகிறார்.

**மெய்ப்பாடுகள் :**

மெய் + பாடு = உடம்பின் கண் தோன்றுதல். "உலகத்தார் உள்ள நிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப்படுவதோர் ஆற்றான் வெளிப்படுதல்" - என்பது உச்சிமேல் புலவர் கொள் நச்சினார்க்கினியர் விளக்கம். சிலமெய்ப்பாடுகள்.

வானவெளியில் தன்ஊர்தி இவர்ந்து சென்று கொண்டிருந்த நான்முகன், பூவாளூரில் நடைபெற்ற வேள்வியைக் கண்டும், மறையொலி கேட்டும் கொண்ட மெய்ப்பாடுகளை,

"அச்சமும் அன்பும் தோன்ற அதிசய மனத்தன் ஆகி
வெச்சென வோடு தண்என்று எழுந்தவோர் விளங்கு மெய்யன்
உச்சியிற் குவித்த கையன் ஒலிமறை துதிக்கும் நாவன்
நச்சிய ஊர்தி விட்டு நண்ணினன் பூவா ளூரை" -
பா. 166.

என்று அச்சம், அன்பு கலந்தமெய்ப்பாடு கூறுகிறார்.

(2) மன்மதன் நீறானதால் இரதிதேவியின் கையறு நிலைத்துயரம் புலம்பல் மெய்ப்பாடுகளை;

"எறிந்தனள் கடகச் செங்கை இருநிலம் குழியப் பல்கால்
மறிந்தனள் புரண்டு வாய்விட்(டு) அலறினள் திரிவீழ் நெய்யில்
செறிந்(து) உகு கண்ணீர் மார்பில் செறிதுகள் கழுவா நிற்பப்
பிறிந்தநெட் டுயிர்ப்பு வீங்கப் பதைத்(து) உளம்
ஒடுங்கிச் சோர்ந்தாள்" (பா.386)

"எற்றினள் முலைக்கண் சேப்ப எறிந்தனள் வயிறு வீங்கப்
பற்றினள் பிசைந்து செங்கை பன்முறை நெறித்து வைகிக்
கற்றைமென் குழலும் கையும் கண்இழி புனலும் மண்ணின்
முழற்றுறத் துழாவி நிற்ப முகம்புலர்ந்து அவலித் தாளாள்"
(பா.387)

"என்ஆ ருயிரே என்கண் மணியே எனக்கோர்
அருந்துணையே
நின்ஆ தரவால் உயிர்வாழ் வன்றி நிலைஒன்(று)
அறியேனே
ஒன்னார் எனவே கைவிட் டாயோ உருவம்
காட்டாதே
அன்னா அன்னா யாங்குப் போந்தாய் அவலத்து
எனைவிட்டே" (பா.388)

3. என்பதுடன், கலவிக்காலத்து ஊடல், கூடல், விளையாடல் நிகழ்ச்சி மெய்ப்பாடுகளையும் பா. 389 - 393 முடிய படிப்பவர் மனமுருகக் கூறுகிறார்.

4 சிவபெருமான் அருளால் உயிர்பெற்று எழுந்துவரும் மன்மதனைக் கண்டாள் இரவிதேவி. இருவரின் மெய்ப்பாடுகளை,

"கணவனைத் தணந்த காரணம்தானும் கடுந்தவம்
புரிந்தமையானும்
வணர்நெடுங் கூந்தல் குணங்கிய உடலம் மலிந்தது
வீங்கின முலைகள்
இணர்தரும் அரைஞாண் இற்றது மாரன் நிறமெலாம்
நெடுங்கணீர் கழுவிற்று
அணவுநெட் டுயிர்ப்பு நீடியது இன்பத்து அவசமாய்
நின்றதுஆ ருயிரே" (பா.461)

"விழுமிய உருவம் விமலனார் அருளால் மேவிய
ஐங்கணை மதனும்
தழுவிய மனையாள் முலைமுகம் நெமுங்கத் தடநெடு
மார்பினால் முயங்கிக்
கெழுவிய கேண்மை அன்புமீக் கூரக் கிளர்ந்தபே
ரின்பவெள் ளத்துள்
முழுகிஒன் றானான் இருவரும் தம்முள் ஒத்தனர்
முடிவிலாக் குளத்தால் " (பா.462)

என்று விவரிக்கிறார்.

5. சுகன்னி, சிவனமுனிவனின் கண்களைக் குச்சியால் குெண்ட, தவம் கலைந்த அவன், அவளது முன்கைபற்ற, அப்போது சுகன்னியின் அச்ச மெய்ப்பாடு இது.

"நடுங்கியஉடம்பும் காய்ந்த நாவும் வார் இமைகள் கூம்பி
ஒடுங்கிய விழியும் ஓவாது ஓங்கிநிள் உயிர்ப்பும் விங்கிப்
படும்கவின் நெஞ்சும் நோக்கிப் பயந்தனள் இவளாம் ..."
(பா.226)

6. தக்கன் வேள்வியில் கலந்து கொண்டவர்கட்கு அன்னை உமையவள் அறிவுரை கூற, அதுகேட்ட அவர்கள் அவளை அவமதித்த மெய்ப்பாடு

"சிரம்து ளக்கினர்சிலர் சிலர் பிதிர்க்கினர் ஒட்டம்
கரம்து ளக்கினர் சிலர் சிலர் இதத்தொடு பார்த்தார்
உரம்து ளக்கினர் சிலர் சிலர் உருவநா அசைத்தார்
வரம்து ளக்குவார் அனைவரும் அவமதித் தனரால்" (பா. 504)

7. தன்னைச் சிவபிரானுக்கு மணம் செய்து தரத் தன் தந்தை ஒப்புக் கொண்டதைக் கேட்ட பார்வதியின் நாண மகிழ்ச்சியை

"நாண் எய்தித் தூயதன்முகம் கவிழ்ந்து தொடிகளை எண்ணும்" என்று காட்டுகிறார்.

8. புன்னாக மரநிழலில் சித்தராக இருந்த இறைவன் திருவடிகளைப் பற்ற மஞ்சுளன் குனிந்தபோது அவர் மறைய, அவன் செய்கைகளை,

"அலமரும்எண் திசைஓடும் ஐயரே வருகஎன
நிலமிசைப்பண் முறைவணங்கும் நெட்டுயிர்க்கும்
பொழில் முழுதும்
சுலவுறும் வான் அமுதுஅடுப்பத் தூநீர்என் றேமதித்த
புலனுடையேன் ஆயினேன் எனக்கரத்தால் முகம்
புடைக்கும்" (பா. 798)

அடியற்ற மரம்போல அவனிவிழும் மிகப்புரளும்
கடியுற்ற மலர்ப்புன்னைக் காமர்மரத் தினைச் சூழும்
வடிவுற்ற அருள்சித்தர் வாய்மலர்ச்சே வடிச்சுவட்டின்
பொடிஒற்றித்(து) உடல்முழுதும் பொழிவிழிமா ரியின்
நனைப்பான் (பா.799) என்கிறார்.

9. அகப்பொருள்துறைகளாகிய காட்சி, ஐயம், துணிவு ஆகிய மூன்றினையும் முறையே,

"பயிவிய நாகச் சூழல் படர்ந்தனள் படர்தலோடும்
வெயில் உமிழ் மணிப்பூண் மார்பன் மின்இடை
மாதைக் கண்டாள்
அயில்உறழ் தடங்கண் மாதும் ஆடவன் தன்னைக்
கண்டாள்" (பா. 721)

"பூண்தரு மார்பின் தோன்றல் புலவர்தம் மகளோ அன்றி
மாண்தகு தரையின் நோற்கும் மாதவர் மகளோ என்றாகின்"
(பா. 722)

"வாடின குழலின் மாலை வண்டும்கூட்டு உண்ணாநின்ற
ஓடின செவியின் முட்டி உழிதரு வனவாள் கண்கள்
கூடின ஆடை மாசு கோலமெய் நிழற்றிற்(று) ஒள்வேர்
ஆடின அணங்கோ அல்ல அணங்குசெய் நங்கை என்றான்."
(பா. 722)

10. தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலில் கூறும் "புகுமுகப் புரிதல் பொறிநுதலவியர்த்தல்" முதலிய மெய்ப்பாடுகளை

"புகுமுகம் புரிதல் கண்டான் பொறிநுதல் வியர்த்தல் கண்டான்
நகுநயம் மறைத்தல் கண்டான் நன்மனச் சிதைவு கண்டான்
தொகு குழல் விரியக் கண்டான் தோடுஒன்று கழலக் கண்டான்
தருவன பிறவும் கண்டான் சரம்ஐந்து மலைப்பக் கண்டான்"
பா.724

என்று எடுத்தாள்கிறார்.

**இறைச்சிப்பொருள் :**

வெளிப்படக் கூறப்பட்ட கருப்பொருளின் புறத்ததாக அமையும் குறிப்புப் பொருள் இறைச்சி எனப்பெறும். பண்டைச் சங்க இலக்கியங்களில் பரக்கக் காணப்பெறும் இதனை இந்நூலுள் நாம் காண்கிறோம்.

பெண்கேட்டுச் சிவபிரானால் அனுப்பப் பெற்ற தூதுவரிடம் இமவான், தன்மகளைச் சிவபெருமானுக்குத் தர இசைந்த செய்தியைக் கூறும்போது இறைச்சி அமைக்கிறார். மாதவரை நோக்கித்

"தேத்துஅடை சுமந்த கோட்டுச் சிலம்பினுக்கு
அரையன் சொல்வான்"

என்று முனிவர் குறிக்கிறார்.

"தேனடையைச் சுமந்த உச்சியினையுடைய மலை" என்பது இதன் பொருள். இதில் வரும் தேன், தேனடை, மலை என்பன முறையே இமவான் மடந்தை, இமவான், அவன் நாடு ஆகியவற்றைக்

குறிப்பால் புலப்படுத்தி, தேன், தன்னையுடைய அடைக்கோ, கோட்டுக்கோ பயன்படாது பிறர்க்கே பயன்படுவது போல இமவான் மடந்தை, இமவானுக்கோ, இமயத்துக்கோ பயன்படாது, சிவத்துக்கே பயன் தருகின்றவள் என்ற குறிப்பினை உணர்த்தும்.

**அணிநலன்கள் :**

வேலைப்பாடமைந்த பொன்னணியில் ஆங்காங்கே தக்கவாறு நவமணிகளைப் பதித்தாற் போல, நூலெங்கும் பல்வகை அணிகளும் சுடர்விடுகின்றன. சில காண்போம்.

**உவமையணிகள் :**

செல்வர், செம்பொன்னை வார்தழலில் செறிந்து அதில் கலந்துள்ள செம்பு முதலிய நவை தீர்ப்பதுபோல, அரி, அயன், இந்திரன், இப்புவியினர் அனைவர்க்கும் பிறப்பு அருளி மலம்தீய்ப்பவன் சிவபெருமான். *(1).* உயர்ந்தவராயினும் அல்லராயினும் திருவருள் நோக்கில் ஒத்தவரே என்பதை உணர்த்துவதுபோல, முருகனின் இருபாலும் தெய்வயானையும் வள்ளி நாச்சியாரும் உள்ளனர். *(பா.6)* மாணிக்கத்தால் ஆன மாட மாளிகைகள், அவற்றில் தொங்கும் வெண்முத்து ஒளியால் நீறுபூசிய சிவபெருமான் போல உள்ளன. *(பா.65)* காந்தம் ஈர்க்கும் நெட்டிருப்பு ஊசிபோல, அருள்மிகு திருமூலநாதர் அனைவரையும் தன்பால் ஈர்ந்தார். *(பா.150)* உறங்கினார் கைப்பொருள் நழுவுதல்போல, எழுபது முனிவர்களும் தம் செயல் நீங்கிச் சிவபோகத்துள் ஒன்றினர். *(பா.212)* கற்பினார் விழிக்கு அஞ்சும் காமுகர் நெஞ்சுபோல், சிவனமுனிவரின் சினப்பார்வைக்கு அஞ்சிய இந்திரன்படை அண்டவெளியில் நின்றது. *(பா.291)* அகரமே என்ன எங்கும் அமர்ந்தருள் வள்ளல் *(பா.379)* பூவாளூர்ப் பெருமானை வணங்கியவர் பாவம், பழி மூட்டைகள், பெரு மழைவாய்ப்பட்ட உப்புபோல் கரையும். *(பா.76)* மாரன்நீறானது அறிந்த இரதிதேவியின் கண்ணீர் எரியும் திரிவீழ் நெய்போல் வெப்பம் மிக்கதாய் இருந்தது. *(பா.386)* உயிர் பெற்றெழுந்த மாரனும் இரதியும் இருதலைசேர் ஒரு புள்ளின் ஏகஉயிராயினர் - *(பா.404)* அந்தரர் எவர்க்கும் மேலாம் அமரர் நாயகனேபோல மந்திரம் எதற்கும் மேலானது திருவைந்தெழுத்து *(பா.430)*. சிவபெருமான்

அந்தணப் பிரமசாரியாக வந்து, இமவான் மகளாகிய பராசத்தியை அசதியாடினார். அதுகேட்ட அன்னை, "தீயில்வைத்த நெட்டூசிகள் செருகியது என்ன நாயகன் கரந்து அசதியாடிய மொழிகள் பாயச் செவிபுதைத்தனள்" (பா.534). தழைத்த இன்னறுவில் இலை மூவிலைச்சூலத்தையும், மாலும் அயனும் இருபாலும் கிளைத்த உருத்திரன் போலும் விளங்குவது. உயிர் வீடுபேறு பெறும்வரை பிறப்பினால் உடம்பு அமைந்தே தீரும் என்பது நாகம் சட்டம் - தோல் உரிக்க உரிக்க அத்தோல் வளர்வது போன்றது (பா. 814) என்று விளக்குவதுடன்.

இந்திரனை இழந்த தேவர் உலகத்தைக் குறித்து.

**நாயகன் இழந்தஇள நங்கையரை ஒத்தும்**
**ஆயும்அறி வாளரைஅ டாக்கழகம் ஒத்தும்**
**மேயபனி மாமலர்வி ளிந்தகயம் ஒத்தும்**
**மாயிரு விசும்புலகம் மாய்ந்தது வனப்பு -** (பா. 267)

என்றும்; மன்மதன் நீறாக, இரதி சிவபெருமானிடம் வேண்டும்போது தன்நிலையை,

**"தந்தியில் லாதவீணை, சக்கரம் இல்லாப் பொற்றேர்**
**வெந்தழல் கதிரோன் இல்லா வேரிஅம் கமலம் போல"**

என்று உவமைகளை அடுக்கிக் கூறுமிடங்களும் உள.

முற்குறித்தவை தவிரப் பின்னும் பல்கிப் பெருகியுள்ள உவமையணி தவிர, சொற்பொருள் பின்வருநிலையணி (பா.10, 504, 520, 521, 522) சொல்பின்வரு நிலையணி (பா.11) தற்குறிப்பேற்ற அணி (பா.55, 56, 57, 63) வேற்றுப்பொருள் வைப்பு அணி (பா.222, 223, 254, 294, 370) வஞ்சப்புகழ்ச்சி அணி (பா. 281) உருவகம் (பாயிரம்) பா. 184. எடுத்துக்காட்டுவமையணி (பா. 283, 318, 501) என்று நூல்முழுதும் வண்ணம், வடிவம், மென்மை, மணம் முதலியவற்றால் வேறு வேறு வகையில் சிறந்து விளங்கும் மலர்களைப் போலப் பல்வகை அணிகளும் பொலிகின்றன.

**தொகைக் குறிப்புகள் :**

உருத்திரர் பதினொருவர் (பா.564), தேவர் முப்பத்துமூவரே, திகழ்கணம் மூவாறு, ஓவில் நாற்பத்து எண்ணாயிரம் முனிவர் (பா.565) என்றும் இவர்களைத் தொகைக் குறிப்பில் கூறுகிறார்.

**பூசனை புரியும் முறைமை :**

மஞ்சுளன் அருள்மிகு திருமூல நாதப் பெருமானைப் பூசனை புரிந்த வகையை விரிவாகக் கூறுகிறார்.

நாடோறும் இறைவன்பால் நிகழ்த்துதற் குரியனவாகிய திருமுழுக்காட்டுதல்; திருப்பரிவட்டம் சாத்துதல்; திருவாபரணம், நறுமலர் சேர்த்தல்; நறும்புகைஒளிகாட்டல் ஆகிய நித்திய நான்கினையும் முறைப்படி நிகழ்த்த; மலர்கள் கொய்தான், இடத்தைத் தூய்மை செய்து திருவுரு தாபித்தான், எல்லாப்பொருள்களையும் ஒரு சேரத் தொகுத்துவைத்துக் கொண்டான், பூதசுத்தி செய்தான், ஆதனமூர்த்தி மூர்த்திமானை எழுந்தருள எண்ணினான், மலர் சாத்தி, புகை ஒளி காட்டி, திருவுருக்குளிர ஆட்டி, ஈரம் ஆற்றி, பட்டு சாத்தி, பொற்சுண்ணம் குழைத்த நறுமணம் கூட்டிய செஞ்சந்தனக்கலவைச் சாந்தினைக் கொட்டி, தேன் துளிக்கும் மலர்மாலை சாத்தி, அணி பல சாத்தி, அறுசுவையுடைய நால்வகைத் திருவமுதைப் பொன்னாலான பரிகலத்தில் ஏந்திப் படைத்து ஊட்டினான், நறும்புகை ஒளி காட்டி, கண்ணாடி காட்டி, மதிக்குடை கவித்து உரிய முறையில் வழிபட்டான் என்று பூசனையாற்றும் முறைமை கூறுவதன் மூலம் அந்நெறியில் நம்மையும் ஆற்றுப்படுத்துகிறார்.

நவில்தொறும் நூல்நயமாய் அமைந்து, கன்னலிலே சுவையறியும் குழந்தைகள் போல், படிப்பவரை மீண்டும் மீண்டும் கற்கத் தூண்டும் வகையில் சிறந்து விளங்குகிறது கவிராட்சச கச்சியப்ப முனிவர் பெருமானின் பூவாளூர்ப் புராணம்.

திருச்சிற்றம்பலம்.



சிவமயம்

# சிறப்புப் பாயிரம்

*அந்நாள் (கி.பி.1885) கும்பகோணம் கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர் உ.வே.சா அவர்கள் தந்தது.*

1. குலம்பூத்த குழக்கன்றை இழந்(து) அலமந்(து) அலறும் இந்தக்
கோவின் யானும்
அலம்பூத்த துயருறுவ(து) அலதியற்றல் என்னே என்(று)
அமைச்சர்க்(கு) ஓதி
நலம்பூத்த தனதுகுலக் கொழுந்தின்மிசைச் சயந்தனத்தை
நடத்தி நல்லோர்
புலம்பூத்த முறை நிறுவு மனுவேந்தன் புரந்தருளும்
பொன்னி நாட்டில்
**(அலம் : சஞ்சலம், சயந்தனம் : தேர்)**

2. இனமார்ந்த பசுநிரையை வசமாக்கி வேய்ங்குழலை
இசைத்தே பான்முன்
முனமார்ந்த வனமாலை அணிமாயன் தினம்நாணின்
முழுகி ஏங்கக்
கனமார்ந்த ஐம்பதமும் வேய்ங்குழலின் அமைத்(து) இசைத்துக்
கசியும் அன்பர்
மனமார்ந்த பசுபதியை வசமாக்கி னோர்வருமங்
கலத்தின் கீழ்சார்
**(அன்பர் : ஆனாய நாயனார், மங்கலம் : திருமங்கலம்)**

3. வீற்றிருக்கும் மேன்மையது தவத்துறைஆ தியதலங்கள்
மேவப் பாங்கர்
ஏற்றிருக்கும் தகையது, எழு பதுமுனிவர் சிவப்பேறெய்
தியது திங்கள்
கீற்றிருக்கும் சடையினன்குங் குமதனகுந் தரிபாகன்
கிளரும் அன்பர்
போற்றிருக்கும் அம்செவியன் வீற்றிருக்கும் பெருமையது
பூவா ளூரால்

4. மணமலிபைந் துணர்பொதுளும் பொழில்கல(வு) அப் பூவாளூர் மான்மி யத்தைக்
கணமலிபல் அணிநிரம்பு நிதியொன்(று) பெற்றனபோல் கவின என்றே
உணமலிவான் அமுதனைய கவிவலவர் இறுமாப்ப உரைக்கும் தோறும்
குணமலிஇன் சுவைகுதிகொள் செந்தமிழின் மொழிபெயர்த்துக் கொடுத்திட் டானால்

5. அனைய பெருந் திறல்புலவர் பெருமான்யார் எனின்தன்பால் அடைந்தோர்க்(கு) எல்லாம்
இனையல்புரி பசுத்தன்மை அகற்றுபுபே ரின்பநலம் இயைக்கு மாற்றைத்
தனையனைய இமயமட மயில்தனக்குப் பசுத்தன்மை தணப்பித்(து) இன்பம்
துனையஇயை தரப்புரிந்து விளங்குதிரு வாவடுதண் துறைமூ தூரில்

**(இனையல்புரி : வருத்தும், தணப்பித்து :நீங்கச் செய்து, துனைய : விரைந்து)**

6. பரிசுபெற உட்புகுவோர் பரிசுபெற்று வெளிவருவோர்ப் பார்த்து நீவிர்
அரசர்எந்த நாட்டினுக்(கு) என் றிடச்சிலர்இன்று இங்(கு) அரசர் ஆனேம் ஈங்கு
விரசமுன மேஅரசர் இவர்முன்னம் யாமும்மிடி வேந்தர் என்றே
இரசமுற எதிர்விடுக்கும் விதம்பெரிய கொடைச்செல்வம் இயைந்த தாகி

**(விரசுமுனம் : விரைந்து வெளியேறுமுன், மிடி:வறுமை, இரசமுற : சுவைபொருந்த)**

7. ஆங்(கு) ஒருசார் சிலர்இருந்து மாணாக்கர்க்(கு) இயற்றமிழை அன்பின் ஓத
ஆங்(கு) ஒருசார் சிலர்இருந்து வடமொழிநூல் திறம்வாதம் ஏற்றி மேவ
ஆங்(கு) ஒருசார் சிலர்இருந்து சிவபுராணக் கதைகள் அமிழ்தில் சொல்ல
ஆங்(கு) ஒருசார் சிலர்இருந்து முப்பொருளின் இயல்தேற அமைந்த தாகி

**(வாதம் ஏற்றி : விவாதப்பொருளாய் வைத்து)**

8. தண்ணியஆ ரியமொழியும் தமிழ்மொழியும் யாம்புரிமா
தவப்பே றென்றே
கண்ணிஅகம் களிதுளும்பும் கவினுடைத்தாய் அருட்சைவா
கமத்தை ஆராய்ந்(து)
எண்ணிஅள வளவுபுதாம் இருந்தலன்றி ஒரு வீடும்
இச்சி யாத
மண்ணியமா மணிஅனைய முனிவரர்கட்(கு) இடமாய
மடால யத்தில்

(அளவளவு: கலந்துபேசி/ ஆராய்ந்து. ஒரு வீடு : ஒப்பற்ற வீடுபேறு. மண்ணிய : கழுவப்பெற்ற - தூய்மைசெய்யப்பெற்ற)

9. வந்தருள்பஞ் சாக்கரதே சிகன்கருணைக் கடல்மூழ்கி
வடசொல் லோடு
முதிர்ந்தசுவைத் தென்சொல்லும் ஆயகடல் கடைந்(து) அறிவின்
முதிர்ந்த சாரம்
பொதிந்(து)அமைதி ராவிடபா டியஅமிர்தம் அளித்(து) அன்பு
பொருந்தே னுள்ளும்
பதிந்திலகு சிவஞான யோகிஎனும் பாற்கடலில்
பருகு கொண்மூ

(கொண்மூ : மேகம்)

10. அன்னசிவ ஞானயோ கிகளும்மகிழ்ந்(து) அதிசயிப்ப
அவைமுன் யாவும்
மன்னஅமை பலகவிகள் ஒருநொடியில் எளிதுரைக்கும்
வாகை மேயோன்
முன்னஅமை முப்பொருளின் இயல்பைஅடுத் தவர்க்(கு) அழகா
மொழிதல் வல்லோன்
பன்னஅமை கச்சியப்ப முனிவர்பெரு மான் என்னும்
படிமை யோனே

(அணி : அணிகலன், பன்னஅமை : வகைவகையாகச் சொல்லுதல் அமைந்த, படிமையோன் : தவத்தோன்)

11. அந்தநகர் மான்மியத்தை அழகியஅச் சினில்அமைவித்(து)
அளிப்பாய் என்று
சுந்தரம்அத் தலத்தமலன் அடிக்கன்பு பூண்(டு) ஒழுகு
தொண்டர் வேண்ட

நந்தமது புண்ணியந்தான் இருந்தபடி இதுஎனஉ.ள்
நனிஉ வந்து
சிந்தல்இலா(து) ஆய்ந்துகர லிகிதவழுக் களைந்(து) அச்சில்
சேர்த்(து)சுந் தரனால்

**(சுந்தரம் : அழகிய, கரலிகிதவழு : எழுதும்போது ஏற்படும்பிழை)**

12. நலம்படைத்த சிதம்பரவேள் இதம்பெறப்பன் னாள்இயற்று
நற்ற வத்தால்
குலம் படைத்த பேறெனவே வந்துதித்த குணக்குன்றம்
கோதி லாத
புலம்படைத்த பெருமையன்புண் ணியபுருடன் இயற்றமிழ்அம்
புதியில் தோய்ந்தே
பலம்படைத்த பொருள்நயமாம் பலமணிகொண்(டு) உவந்துறையும்
பான்மை மிக்கோன்
**(அம்புதி - கடல்)**

13. புவியரசர் புகழ்பெருமை மீனாட்சி சுந்தரப்பேர்
பூண்ட நான்மைக்
கவியரசி னிடைக்கற்ற கடிமலர்க்கற் பகம்எனது
காம தேனு
சவியமையக் கல்லாப்புன் புலமைவனத் தினைத்தானே
தடிந்து மேவும்
நவியம்அடுத் தவர்களைத்தன் போலாக்கும் தன்மை மரீஇ
நகுமா மேரு

**(சவியமைய : செம்மையுற, நவியம் : கோடரி, மரீஇ : பொருந்த, நகு - ஒளிரும்)**

14. நத்தன்அயன் ஆதியர்கள் பணிந்தேத்தும் பூவாளூர்
நடரா சர்க்கு
நித்தியம்ஆ திகள்என்றும் தணவாது நடப்பவினை
நிலங்கள் மேன்மை
பொத்தியபுண் ணியவழிதான் ஈட்டுபொருள் கொடுவாங்கிப்
பொருத்து நல்லோன்
சத்தியநா வினன் இனிமைத் தியாகரா சப்பெயர்கொள்
தமிழ் வல்லோனே
**(நத்தன் - கண்ணபிரான், தணவாது - குறையாது).**

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# "பூவாளூர்ப் புராணம்"

## பாயிரம்
## விநாயகர்

*திருமாலும் பிரமனும்மற்(று) அமரரும்தாம் அலர்வேதச்*
*சிரத்(து)எஞ் ஞான்றும்*
*ஒருவாத பிரணவத்தின் உரியபொருள் ஒருதான் என்(று)*
*உலகம் தேற*
*மருஆரும் மலர்க்கொன்றை மன்னவன்அப் பிரணவமால்*
*களிறாய்த் தந்த*
*பெருவாழ்வு தரும்களிற்றுக்(கு) இடமாகும் என(து) உள்ளப்*
*பிறங்கல் மாதோ.*

மலர்ந்த வேதத்தின் உச்சியாக விளங்கும் உபநிடதத்தில் எக்காலத்தும் நீங்காத இடம் பெற்று விளங்கும் பிரணவத்தின் உட்பொருள் ஒப்பற்ற பொருளாகிய விநாயகனே என்று திருமாலும் நான்முகனும் மற்றும் அனைத்துத் தேவர்களும் இவ்வுலகத்தவரும் தெளிவுபெற, மணம் நிறைந்த கொன்றைமலர் சூடிய சிவபெருமான் அப்பிரணவத்தைப் பெருங்களிறாக - விநாயகராக அருளினார். உள்ளத்தில் கொண்டவருக்குப் பெருவாழ்வு அருளும் அந்த விநாயகராகிய களிறு எழுந்தருள எனது உள்ளமாகிய மலை ஏற்ற இடமாதலின் அப்பெருமானை என் உள்ளத்தில் எழுந்தருளச் செய்து வணங்குகிறேன். இச் செய்யுள் உருவக அணி.

## 1. பரசிவம்

1. *செம்பொன்னை வளர்தழலில் செறித்துரவை தீர்த்(து) எடுக்கும்*
*செல்வர் போல*
*அம்பொன்செய் மணிமவுலி அரிக்கும்மலர்த் தவி(சு) இருக்கை*
*அயற்கும் ஏனைப்*
*பைம்பொன்செய் உலகினர்க்கும் பாரினர்க்கும் பலஉயிர்க்கும்*
*பவங்கள் நல்கித்*
*தம்பொன்செய் பதம்அருளும் தனிமுதல்வர் எவர் அவரைச்*
*சார்ந்து வாழ்வாம்.*

பொன்னாலான அழகிய மணிகள் பதிக்கப் பெற்ற திருமுடி சூடிய திருமாலுக்கும் தாமரைமலர் இருக்கையில் வீற்றிருக்கும் நான்முகனுக்கும், தேவருலகத்துப் பிறர்க்கும் இவ்வுலகினர்க்கும் மற்றுமுள்ள உயிர்க்குலத்துக்கும் பிறப்பினை அருளி,

செம்பொன்னைப் பெருந்தழலில் பாதுகாப்பாகச் சேர்த்து உருக்கி, அதில் கலந்துள்ள குற்றமாகிய செம்பினை ஒழித்துத் தூய பொன்னாக்கி எடுத்து மகிழும் செல்வர் போலப் பிறவிகள் தந்து உயிர்களைத் தம்மையொத்த தூய பொன்னாக்கும் தமது திருவடிகளை அருளும் ஒப்பற்ற முதல்வர் எவரோ அந்தப் பொருளை - பரசிவத்தை மனம் மொழிமெய்யால் சார்ந்து வாழ்வோம். *- 1 -*

## 2.பராபரை

2. *மணிஒளியும் மலர்மணமும் வயங்(கு) இரவிக் கதிரும் மதிக்*
*கலையும் போலத்*
*துணி(வு)அருளும் சிவபெருமான் உடன்பிரியாத் தன(து) இயல்பைத்*
*தொல்லை ஆன்மாப்*
*பிணிஒருவ எடுத்தருளும் திருமேனி இடத்துமிகப்*
*பிறங்கக் காட்டி*
*அணிவிரவி வீற்றிருக்கும் பராபரையை எஞ்ஞான்றும்*
*அகத்துள் வைப்பாம்.*

மணியும் அதன்ஒளியும், மலரும் அதன் நறுமணமும், விளங்கும் ஞாயிறும் அதன் கதிரும், மதியும் அதன் கலையும் ஆகிய இவை, குணியும் குணமுமாக விளங்கி ஒன்றை ஒன்று பிரியாதவாறுபோல அநாதியான ஆன்மாக்களுக்கு உள்ள மலப்பிணி நீங்க, பெருமான் எடுத்தருளும் திருமேனியினிடத்துத் தமது அருளாகிய இயல்புவிளங்கக் காட்டி, அழகு பொருந்த வீற்றிருக்கும் பராபரையாகிய அம்மையை எக்காலத்தும் உள்ளத்தில் வைத்துப் போற்றுவோம். *- 2 -*

## 3. திருமூலநாதர்

*பொன்பூத்த மணிமார்பன் வளிஅழலும் கணையாகப்*
*புவிதேர் ஆக*
*மின்பூத்த இருசுடரும் உருளாக வெளிவழியா*
*விரைந்து கங்கை*
*கொன்பூத்த சடைதுளும்பப் பகைகடந்(து)எண் வடிவும்ஒரு*
*கோல மெய்யின்*
*தென்பூத்த உறுப்(பு)ஆக்கும் திருமூல நாதர்பதம்*
*சேர்ந்து வாழ்வாம்.*

திருமகள் ஒளிரும் அழகிய ஒளிபொருந்திய மார்பினையுடைய திருமால் சிறிது நேரம் மட்டும் தீ உமிழும்

அம்பாகவும், இவ்வுலகமே தேராகவும், ஒளியுடைய ஞாயிறும் திங்களும் தேர்ச்சக்கரங்களாகவும் விளங்க, அண்டவெளிவழியே பெருமை பொருந்திய தனது சடையில் உள்ள கங்கை தளும்பச் சென்று புன்முறுவலால் முப்புர அசுரர்களையும் வென்று, ஐம்பூதங்கள், ஞாயிறு திங்கள் உயிர் ஆகிய எட்டைத் தனது அழகிய உடம்பின் உறுப்புகளாகக் கொண்ட அருள்தரு திருமூலநாதப் பெருமானின் திருவடிகளை மனம்மொழிமெய்யால் சார்ந்து வாழ்வாம். - 3 -

## வேறு
## 4. குங்கும சுந்தரியம்மை

*நங்கழல் அடுத்தவர்கள் நன்மைஇது போலத்*
*தங்குவர்கள் என்(று) உமை தரித்தவ ரொ(டு) ஒப்பப்*
*பைங்கிளியை அங்கை கொடு பண்உரைப யிற்றும்*
*குங்குமச வுந்தரிதன் கோலம்நினை வாமால்.*

தனது திருவடிகளைச் சரணடைந்தவர்கள் இக்கிளிபோல நன்மைகள் பெறுவர் என்று கூறி அதனை உடன் வைத்துக் தாங்குகின்றவர் போலப் பசிய கிளியைத் தமது அழகிய திருக்கையில் தாங்கி அதற்குப் பண்ணும் உரையும் பயிற்றுவிக்கும் அருள்தரு குங்கும சுந்தரியம்மையின் திருக்கோலத்தை நினைந்து போற்றுவோம். - 4 -

## 5. வெள்ளை வாரண விநாயகர் – தல விநாயகர்

அள்இலைய ஞாங்கர் மழு ஆதிகள்இ ருந்தும்
ஒள்உகிர்கண் ஆதியின்உ ருப்பகைக டந்த
வள்ளல்என வேஒருமரு ருப்பின்இகல் வென்ற
வெள்ளைமத வாரணம்என் மெய்வினைமு டிக்கும்

கூரிய இலை வடிவான மழு முதலிய ஆயுதங்கள் தமது பக்கத்தில் இருந்தும் கூட, தமது ஒளிபொருந்திய நகத்தால் முன்பு ஐந்தலையோடிருந்த பிரமனின் ஒரு தலையைக் கிள்ளி, தனது உருவத்தால் நானும் சதாசிவனே என்ற பிரமனது பகை கடிந்த வள்ளலாகிய சிவபிரானைப் போல, தன்னிடம் ஆயுதங்கள் பல இருந்தும் அவற்றைப் பயன்படுத்தாது தனது ஒற்றைக் கொம்பால் கயமுகா சூரனின் பகைவென்ற வெள்ளை வாரண விநாயகர் தாள் பிறவிகள் தோறும் ஈட்டிவைத்த என்வினைகளைத் தீர்க்கும். - 5-

### 6. முருகக்கடவுள்

*உயர்ந்தவரும் அல்லவரும் ஓங்கியதன் நோக்கால்*
*பயம் தழுவின் ஒப்பார் எனல் பாரை அறி வித்தாங்(கு)*
*இயைந்துமக வான்மகளொ (டு) ஏனல்வளர் மாதும்*
*புயம்தழுவ நின்றபுனி தற்(கு)அடிமை செய்வாம்.*

உயர்ந்தவராயினும் உயர்வுபெற வேண்டியவராயினும் மேலான தமது கடைக்கண் நோக்கால் திருவருளாகிய பயனைப் பெற்றால், அவ்விருவரும் தம்முன் ஒத்த நிலையினராய் உயர்வர் என்று உலகுக்கு அறிவித்ததற்கு ஏற்ப, தேவேந்திரன் மகளான தெய்வயானையம்மையும், தினைப்புனத்திலே வளர்ந்த வள்ளி நாச்சியாரும் ஆகிய இருவரும் தம் முன் ஒத்த நிலையில் தம் திருப்புயத்துஇருபுறம் தழுவ எழுந்தருளியுள்ள புனிதனாகிய முருகக்கடவுளுக்குத் தொண்டுபுரிந்து வாழ்வோம் - 6 -

### வேறு
### 7. திருநந்திதேவர்

*தத்தமக்(கு) இறைவர் ஆய்ந்து தகச்செயும் முறையும் தென்பால்*
*உத்தமன் முறையும் உம்பர் ஆதியோர்க்(கு) உறாது நீங்கக்*
*கைத்தலப் பிரம்பின் ஓச்சிக் கண்ணுதல் சேவை யார்க்கும்*
*பத்தியின் அருளும் நந்தி பனிமலர்ப் பாதம் போற்றி*

வினைகளைத் தக்கவாறு ஆராய்ந்து ஊட்டும் ஊழ்வினையும், எமனால் விளையும் இறப்பும் பொருந்தாது நீங்கும் பொருட்டுப் பெருமானை வணங்க வரும் தேவர் முதலியவர்களைத் தமது திருக்கையில் தாங்கிய பிரம்பினை ஓச்சி, அவர்கள் வந்த வரிசையில் அல்லது அவர்களின் பத்தியில் நோக்கிப் பெருமானைக் கண்டு வழிபட அருளும் திருநந்திதேவரின் குளிர்ந்த தாமரை மலர் ஒத்த திருவடிகளைப் போற்றுவோம். - 7 -

### வேறு
### 8. சண்டேச நாயனார்

*அந்திமதி முடிக்(கு) அணிந்த அழகர்திரு வடிபிழைத்தார்*
*யாரே யாக*
*வெந்திறலின் அவர் உயிரை விட்டுவதே மேலான*
*விமலா னந்தம்*
*தந்தருளும் முத்திஎனத் தாரணியோர் அறிந்(து) உய்யத்*
*தாதை தாள்கள்*
*சிந்தஎறிந் தவர்மலர்த்தாள் சிந்தனைசெய் தவர்மலமும்*
*சிந்து மன்றே.*

மூன்றாம் பிறையைத்தமது திருச்சடையில் சூடிய அழகரான சிவபெருமானின் திருவடித் தொண்டுக்கு இடையூறு செய்கின்றவர் யாரேயாயினும் கடுமையான வலிமையோடு அவர்களது உயிரை வீழ்த்துவதே மேலான குற்றமற்ற பேரின்பம் தந்தருளும் முத்தி என்று, உலகவர் அறிந்து கடைத்தேறத் தனது சிவபூசைக்கு இடையூறு செய்த தன் தந்தையின் கால்களை அப்போதே துண்டாகுமாறு எறிந்த சண்டீசரின் மலர்போன்ற திருவடிகளைச் சிந்தனை செய்தவர் மலமும் சிந்தும் - அழியும். - 8 -

## 9. திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார்

*மட்டுவிரி நறுந்துளப மாலாலும் அயனாலும்*
*மறையி னாலும்*
*சுட்டிஅறி யாதபெரும் சுகப்பொருளை ஒருவிரலால்*
*சுட்டிக்காட்டி*
*மொட்(டு) இளமென் முலைஉமையாள் கொடுப்பஅருந் தியஅமிழ்தம்*
*முழுதும் ஆங்கே*
*கொட்டியது போல்கவிதை பொழிந்த கவுணியர்மணிதன்*
*குலத்தாள் போற்றி.*

தேன்சுரக்கும் மணம்மிக்க துளசி மாலையணிந்த திருமாலும், நான்முகனும், நால்வேதங்களும் சுட்டிக்காட்டி அறிந்துகூற இயலாத பேரின்ப வடிவான சிவபரம்பொருளைத் தனது சுட்டுவிரலால் சுட்டிக்காட்டி; தாமரை மொட்டுப் போன்ற மென்மையான திருமார்புகளையுடைய உமையவள் கறந்து அருத்திய பால் முழுவதையும் அப்பொழுது முதலே கொட்டியது போல ஞானக் கவிதைகளாகிய திருமுறைகளைப் பொழிந்த கவுணியர் குலமணியாகிய திருஞானசம்பந்தர் திருவடிகளை வணங்குவோம். - 9 -

## 10. திருநாவுக்கரசு நாயனார்

*கருங்கடலின் தமை அழுந்தப் பெருஞ்சிலையின் உறப்பிணித்துக்*
*கண்ணோ டாமை*
*ஒருங்(கு) உறுத்த அமணர்சூழாம் துயர்க்கடலின் ஒருங்(கு) அழுந்த*
*உமிழ்பைந் தேறல்*
*தெருங்(கு) இதழ்ப்பொன் கொன்றையும்வெண் தும்பையும்பா(சு) அறுக்கும்முடி*
*திலவ வைத்தார்*
*கரும்கருணைக் கடல்மூழ்கிக் கருங்கடலின் மிதந்தவரைச்*
*சரணம் சார்வாம்.*

ஆழமான கரியகடலில் தம்மை மூழ்கடிக்கப் பெரிய கருங்கல்லுடன் பொருந்தப்பிணைத்துச் சிறிதும் கருணை காட்டாமல் கல்லோடு தன்னையும் தள்ளிய சமணர்கூட்டம் முழுவதும் துயரக்கடலில் ஒருசேர அழுந்துமாறு; தேன் சுரக்கும் பொன்போலும் நெருங்கிய இதழ்களையுடையே கொன்றை மலர்களையும் வெள்ளியதும்பை மலர்களையும் அறுகையும் தம் திருமுடியில் பொருந்தச் சூடிய சிவ பெருமானின் கருணைக்கடலில் மூழ்கி, சமணர்தள்ளிய கருங்கடலில் கல்லையே தெப்பமாகக் கொண்டு மிதந்த திருநாவுக்கரசர் திருவடிகளை மனம் மொழி மெய்யால் பொருந்திவாழ்வோம். - 10 -

## 11. சுந்தர மூர்த்தி நாயனார்

*நீடியதண் கயிலாயத்(து) ஆடியில்தன் நிமலஉரு*
*நிழற்ற ஆங்கே*
*கூடிவரும் பெருங்கிழமை குறித்துமறு பிறப்பிடத்தும்*
*குழகன் முன்நின்(று)*
*ஊடியபெண் தகைதுனி தீர்த்(து) உழிதருதோ ழமையருள*
*உவப்பால் பெற்றுப்*
*பாடிஎனை ஆண்டமுனைப் பாடிவள நாடனையே*
*பாடி வாழ்வாம்*

உயரமான திருக்கயிலை மலைக் கண்ணாடியில் சிவபெருமான் தமது குற்றமற்ற உருவம் தோன்ற, அதனை வருமாறு அழைத்ததால் வந்த ஆலாலசுந்தரருடன் தமக்கு உள்ள மிகப்பெரிய உரிமை கருதி, அவர் நம்பிஆரூரராகப் பிறந்த பிறப்பிலும் அழகனாகிய சிவபெருமான், சுந்தரருடன் ஊடிய அவர்மனைவியாகிய பரவையார் கொண்ட ஊடல் தீர்த்துக் கூடவே அலையும் தோழமையும் தந்தருள மன மகிழ்வுடன் பெற்று அச்சிவனையே பாடி, என்னை ஆட்கொண்ட முனைப்பாடி வளநாட்டவராகிய சுந்தரரைப் போற்றிப் பாடிவாழ்வோம். - 11 -

## 12. திருவாதவூரர்

*வடதிழலின் ஒருநால்வர்க்(கு) அருளுநிலை இதுஎன்று*
*வயக்கி யாங்கு*
*விடம்மிடற்றில் அணிந்தபிரான் குருந்(து) அடியில் இருந்(து) உணர்த்த*
*விழைந்து கேட்டோர்*
*தொடருநிலை இதுஎன்று தெரிந்ததுபோல் கனிந்துருகிச்*
*சொரிந்து கண்ணீர்*
*படர்அருள்மெய்ம் மொழிதொடுத்த மாணிக்க வாசகர்பொற்*
*பாதம் போற்றி.*

கல்லால் நிழலில் சனகாதி நால்வர்க்குச் சின்முத்திரைகாட்டி உபதேசித்த நிலை இதுவாகும் என்று விளக்கினாற் போல நஞ்சினைத் தம்கழுத்தில் நிறுத்திய சிவபெருமான் குருந்தமர நிழலில் எழுந்தருளியிருந்து உபதேசிக்கக் கேட்டவர், அச்சிவனைத் தொடரும்நிலை இதுவாகும் என்று தெரிவிப்பதுபோல் மனம் உருகிக் கரைந்து கண்ணீர் சொரிந்து படர அருள் மெய்ம்மொழியாகிய திருவாசகம் அருளிய மாணிக்கவாசகர் பொற்பாதம் போற்றுவோம். *- 12 -*

**வேறு**

## 13. ஸ்ரீ நமச்சிவாய தேசிகர்

*ஐந்தொழில் நடத்த எதுதனை உருக்கொண்(டு)*
*அடுத்திடும் அதனையே உருக்கொண்டு*
*இந்திய வழியின் இயங்குறா(து) அடங்கும்*
*இருவினை ஒப்பினர்க்(கு) அருளைத்*
*தந்திட உலவாக் கிழிகவு ணியர்தம்*
*தலைவனார்க்(கு) அருளிய துறைசை*
*வந்(து)அருள் நமச்சி வாயதே சிகன்தன்*
*மலரடி வணங்கினம் பெரிதே.*

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழிலையும் நடத்த எது உருக்கொண்டு பொருந்துமோ அந்தச் சிவபரம் பொருளின் திருவுருவையே தமது திருவுருவாகக் கொண்டு, ஐம்புலவழியில் உயிர்இயங்காது அடங்கியிருக்கும் வினைநோரான அடியவர்களுக்கு அருள்புரியும் பொருட்டு, எடுக்க எடுக்கக் குறையாத பொற்கிழியினைத் திருஞானசம்பந்தருக்கு அருளிய திருவாவடுதுறையில் எழுந்தருளியுள்ள சிவமாகிய நமச்சிவாய தேசிக குருமூர்த்தியின் மலர் ஒத்த திருவடிகளைப் பெரிதும் வணங்குவோம். *- 13 -*

## 14. அவையடக்கம்

*பெருங்கடல் முகந்து முகிலினம் உமிழ்ந்த*
*பெருகுநீர் வாரியை உலகின்*
*ஒருங்குதன் அகத்தின் இடுவதும் உளதோ*
*ஓங்கிய வேரிஆ திகள்உள்*
*நெருங்குடைந் தருக்கள் நிழன்றபூ வானூர்*
*நிமலனார் புகழ்பெரி தேனும்*
*சுருங்(கு) எறுப்(பு) அளைபோல் இயன்றவா(று) எம்மால்*
*சொலப்படும் தொக்கபேர வைமுன்*

பெருங்கடலை முகந்து சென்ற மேகக்கூட்டம் வெளிப்படுத்திய நீர் பெருகிய கடலை, உலகம் ஒரு சேரத் தன் அகத்தில் கொள்ளமுடியுமோ? இயலாது. அதுபோல தேன், மகரந்தம், மணம், தளிர், காய் கனி ஆகியவற்றால் ஓங்கி நெருங்கிய பசிய மரங்கள் நிழல் செய்யும் பூவாளூர்த் திருமூலநாதர் புகழ் மிகப்பெரிய தாய் இருப்பினும், அது; எறும்பு தன் உணவைத் துழாவுதல் போல் அறிஞர் ஒருசேரக் கூடியுள்ள அவையில் என்னால் சொல்லப் பெறும். - 14 -

15. *கங்கையும் பனிகால் வெண்மதிக் கொழுந்தும்*
*கடுக்கையும் என்றிவற் றோடு*
*பொங்கிய விடமும் உரகமும் தழலும்*
*புலால்கமழ் அதளும்மெய் தரித்தார்*
*மங்கல மதுரச் செந்தொடைப் பாடல்*
*மடுத்தருள் செவிகளில் சிறுமை*
*தங்கிய எளியேன் பாடலும் மடுப்பார்*
*சலம்இல்சங் கரன்எனும் மாண்பால்.*

கங்கை, குளிர்ச்சியை வெளிப்படுத்தும் மூன்றாம் பிறை, கொன்றை மலர் இவற்றுடன் பாற்கடலில் பொங்கியவிடம், பாம்பு, தழல், புலால் மணக்கும் யானை புலி இவற்றின் தோலையும் தரித்த சிவபெருமான் வஞ்சனையில்லாதவன் மங்கலம் தருகின்றவன் என்ற மாண்பு காரணமாக மங்கலத் தன்மை நல்கும் இனிய சிவந்த மலர் மாலை ஒத்த திருமுறைகளைக் கேட்ட தன் செவிகளால் சிறுமை தங்கிய எளிய எனது பாடலையும் கேட்டு உவப்பார். - 15 -

## வேறு

### 16. புராண வரலாறு

*திருத்தன் நல்கிய புராணம்மூ வாறினுள்*
*சிறந்(து)அருள் தரும்சை வத்து*
*உருத்தி ரப்பெயர் பூண்சங் கிதைதனில்*
*ஒருங்குகேத் திரகாண் டத்(து)*
*அருத்தம் மல்கநற்(கு) உரைத்தசூ விளவனத்(து)*
*ஆன்றமான் மியம்சாலப்*
*பெருத்த வையகத்(து) அனைவரும் தெரிதரப்*
*பெயர்த்(து) உரைக் குவன்மாதோ.*

தெளிவே வடிவான சிவபெருமான் அருளிய பதினெண் புராணங்களுள் சிறந்ததும் அருள்தரும் சைவசமயத்ததுமான உருத்திர சங்கிதையில் உயர்ந்த திருத்தலகாண்டத்தில் பொருள்பெருக நன்கு கூறிய கூவிளமாகிய பூவாளூர் மான்மியத்தை மிகப்பெரும் உலகில் அனைவரும் அறிய மொழிபெயர்த்துக் கூறுவேன். - 16 -

பாயிரம் முற்றிற்று

## 1. நைமிசச் சருக்கம்

1. *ஞாலம் நல்கிய நான்முகக் கடவுள்பண்(டு) ஒருநாள்*
*சீலம் மல்கிய தேவர்கள் சூழ்ந்தனர் ஏத்த*
*ஏலம் மல்கிய தவிசிடை இருந்துழி அவன்பால்*
*வால கில்லியர் ஆதிமா தவர்பலர் அடுத்தார்.*

உலகைப் படைத்த நான்முகன் முன் ஒருநாள் சீலம் மிக்க தேவர்கள் தன்னைச் சூழ்ந்திருந்து ஏத்த, மணம் மிக்க தாமரை மலர் இருக்கையில் இருந்தபோது அவனிடம் வாலகில்லியர் முதலிய அவனது மானசபுதல்வர்கள் ஆகிய தவத்தோர் பலர் வந்து சேர்ந்தனர். - 17 -

2. *வணங்கி நின்றனர் வழுத்தினர் மலர்அணைக் குரிசில்*
*இணங்கு நின்சரண் சரணம்என்(று) அடுத்தனம் எளியேம்*
*அணங்கு செய்கலி யுகத்தினும் அஞ்சுதல் இன்றிக்*
*கணம்கொள் மாதவம் புரிஇடம் காட்டுதி என்றார்.*

வந்தவர்கள் நான்முகனை வணங்கி, வழுத்தி தாமரையிருக்கையில் எழுந்தருளிய மேம்பட்டவரே, அருள் பொருந்திய உமது திருவடிகட்கு அடைக்கலமாக வந்து சேர்ந்தோம். துன்பம் செய்யும் கலியுகத்திலும் அதற்கு அஞ்சாது திரண்டு விளங்கும் மாதவம் புரியத் தக்க இடத்தை எமக்குக் காட்டியருள்க என்று வேண்டினர். - 18 -

3. *அருந்த வத்தினர் உரைத்தமை அம்புயன் கேளா*
*பொருந்(து)உ ளத்திடைப் புராரியைப் போற்றினன் தெளிந்து*
*வருந்தல் இன்றியே நீயிர்மா தவம்இனி(து) ஆற்றத்*
*திருந்(து)இ ருந்தலம் தெரிக்குதும் தெரிமின்என்(று) இயம்பி*

அரியதவத்தினர் ஆகிய அவர்கள் சொன்னதை நான்முகன் கேட்டுத் தன் உள்ளத்தில் பொருந்திய சிவபெருமானைப் போற்றியபின், வருந்துதல் இன்றி நீவிர் மாதவம் இனிது செய்யத்தக்க திருத்தம் வாய்ந்த சிறந்ததலம் எது என்று ஆராய்ந்து கூறுகிறேன் கேளுங்கள் என்று சொன்னான். - 19 -

4. *விழுமம் மல்குதன் மனத்திடை விமலனார் அருளால்*
*பழு(து)இல் சக்கரம் ஒன்(று)உறப் படைத்(து)எதிர் நோக்கிக்*
*குழுமி வந்தமா தவத்தினீர் குயிற்றும்இத் திகிரி*
*தழுவி நின்றுழித் தவம்புரி தக(வு) என விடுத்தான்.*

சிவபெருமான் திருவருளால் நான்முகன் தமது உள்ளத்தில் குற்றமற்ற சக்கரம் ஒன்றினைப் படைத்து, என்னை நோக்கிக் கூட்டமாய் வந்த மாதவர்களே, படைக்கப்பெற்ற இச்சக்கரம் நிலத்தைத் தழுவி நிற்கும் இடமே தவம்புரியத் தக்கஇடமாகும் என்றுகூறிச் சக்கரத்தை விடுத்தான். - 20 -

5. *விடுத்த சக்கரம் விண்நிமிர் நெடியவன் அங்கைப்*
*படுத்த சக்கரம் எனஒளி பரப்பிவான் வழிபோய்த்*
*தொடுத்த தேத்(து)அடை துணர்பசும் சாகைஅம் சோலை*
*அடுத்து மேதகும் ஒருவனம் அணவிநின் றதுவே*

நான்முகன் எறிந்த சக்கரம், திருமால் தம் அங்கையில் ஏந்திய சக்கரம் போல் ஒளிபரப்பி, வான்வழிப்போய், மரக்கிளைகளில் தொடுத்த தேனடைகளும் தளிர்களும் கொண்ட ஒரு சோலையை அடுத்து இருந்த சிறந்த காட்டினைப் பொருந்தி நின்றது - 21 -

6. *மருக்க மழ்ந்தபங் கேருகத் தவிசின்வா னவனை*
*உருக்கும் அன்பொடு பணிந்தனர் உடன்விடை கொண்டார்*
*பொருக்கெ னப்பெயர் நேமியின் புறம் தொடர்ந்(து) அதுபோய்*
*இருக்கும் அவ்வனம் எய்தினர் எய்தரும் தவத்தோர்.*

மணக்கும் தாமரை இருக்கையுடைய நான்முகனைப் பிறர் எய்துதற்கு அரிய தவத்தினராகிய வாலகில்லியர் வணங்கி உடன்விடைபெற்று விரைந்து சென்ற அச்சக்கரம் சென்றவழியே தொடர்ந்து, அது போய் இருந்த அக்காட்டினை அடைந்தனர். - 22 -

7. கான்நி றைந்தவண் தாமரைக் கண்ணியான் கரைந்த
பால்நி றைந்தன மொழிப்படி பருதிகங் கியலுத்
தேன்நி றைந்தகான் தவம்செயச் சிறந்த(து)என்(று) எண்ணி
வான்நி றைந்தமா தவத்தினர் மனமகிழ் சிறந்தார்.

மணம் நிறைந்த வளமான தாமரை மலர் மாலையணிந்த நான்முகன், பால்போன்ற இனிமை நிறையக் கூறிய மொழிப்படி, ஞாயிற்று ஒளியும் புக இயலாது உச்சிக் கிளைகளிலேயே தங்கிய இனிமை நிறைந்த இக்கானகமே நாம் தவம் செய்யச் சிறந்த இடம் என்று உயர்வுமிக்க மாதவத்தோர் சிறந்து மனம் மகிழ்ந்தனர். - 23 -

8. அங்கண் வைகினர் அருந்தவம் ஆற்றினர் வதிந்தார்
கொங்(கு)உ யிர்த்ததா மரையினான் குயிற்றிய நேமி
தங்கும் அக்கடம் நைமிசம் எனப்பெயர் தரித்த(து)
எங்கண் உள்ளபன் முனிவரும் ஈண்டி நோற் (று) இருந்தார்.

அங்கேயே தங்கினர்; தவம்புரிந்து வாழ்ந்தனர். தேன்பிலிற்றும் தாமரையில் எழுந்தருளிய நான்முகன் படைத்த சக்கரம் தங்கிய அக்கானகம் நைமிசம் என்று பெயர் பெற்றது. எங்கெங்கும் உள்ள முனிவர்கள் அனைவரும் அங்குக்கூடித்தவம் செய்திருந்தனர். - 24 -

## வேறு

9. காற்(று)எறி முறம்செவிக் கயம்மு னிக்குழாம்
போற்றுவ குருளையில் புகன்றை ஆனணம்
தோற்றுதி வள்உகிர் வேங்கை தொக்குழி
ஏற்(று)இனப் பகுநிரை ஈன்று போதுவ.

நைமிசத்தில் தனது முறம் போன்ற செவிகளை ஆட்டுந்தோறும் காற்று வீசும் யானைகள் முனிவர் கூட்டத்தைப் போற்றும். புலிக்குட்டிகளோடு கூடிய புள்ளிமுகமுடன் கூரிய நகங்களைக் கொண்ட வேங்கைகள் கூடிய இடத்தில் உயர்இனப் பசுக்கூட்டம் கன்றுகளை ஈன்று விட்டுச்செல்லும். - 25 -

10. கீரிய பொதும்பினுள் கெழுமி வாளரா
வாருவ கோம்பியோ(டு) அடுத்து மாமயில்
ஏர்உற மகிழ்வன எவையும் இன்னணம்
சீர்உற வயின்வயின் செறிந்து வாழ்வன

கீரிப்பிள்ளைகள் வாழும் மரப் பொந்துகளில் கொடிய பாம்புகளும் வாழும்; ஓணானைப் பொருந்தி மயில்கள் சிலமுறவாழும். எவ்வகைப்பட்ட உயிரினங்களும் இங்ஙனம் சிறப்புற இடங்கள் தோறும் செறிந்து வாழும். - 26 -

11. *பகைநசை நொதுமலும் பாற ஓரீஇத்*
*தகையுறு மானையும் தவிர்ந்த நைமிசம்*
*முகைஅவிழ் கடுக்கையர் அருளின் முன்உறும்*
*வகையுறு முத்தியின் வயக்கம் மாண்டதே*

பகையும் நட்பும் அயன்மையும் ஒழிய, ஒன்றுபட்டியங்கும் தகுதியுடன், வேறுபாடு பகை முதலியன அற்ற நைமிசம், மொட்டலர்ந்த கொன்றைமலர் மாலைசூடிய சிவபெருமானின் அருள் முழுதும் பொருந்திய வீடுபேற்றின் ஒளியுடன் கூடிய மாட்சிமை பெற்று விளங்கியது. - 27 -

12. *இயல்பினால் உயிர்சிறந் திட்ட ஊனுடல்*
*அயில்வதல் லால்உயிர் அலைத்து மாண்உடல்*
*செயிர்உறத் தின்பது சிந்தி யாஅவண்*
*பயிலிய மிருகமும் பறவைக் கூட்டமும்.*

அங்கு வாழும் விலங்குக் கூட்டம் பறவைகூட்டம் ஆகியன இயல்பாக இறந்தனவற்றின் ஊனைத் தின்னுமேதவிரப் பிறவற்றைத் துன்பமுறக் கொன்று தின்பதை எண்ணுவதும் இல்லை - 28 -

13. *கடுவளி ஒற்றலில் கதழ்ந்து பார்மிசைப்*
*படுமரக் குளகுவாய்ப் படுப்ப(து) அல்லது*
*நெடுநிலை மரத்(து)உறு குளகு நேர்கலா*
*முடுகுமும் மதம்பொழி முகத்த வேழமே.*

மிகுதியானமும் மதமும் பெருக்கும் யானைகள் கடுங்காற்றினால் உதிர்ந்து விரைந்து தரையில்விழும் மரத்து இலைகளைத் தின்பது தவிர, விழாது மரத்தில் இருக்கும் இலைகளைப் பறித்துத் தின்னா - 29 -

14. *சலம்படு பிறவிகால் சாய்க்கும் தேசொடு*
*சலம்படு தீர்த்தங்கள் தயங்கும் எண்ணில*
*விலம்படு சிறுமைகள் இரிக்கும் மாமணி*
*இலம்படு பொழில்தொறும் இமைக்கும் எண்ணில*

நிலையற்ற பிறவியை அழிக்கும் ஒளியுடைய நீர்மிக்க புனிதநீர்நிலைகள் அங்கு எண்ண முடியாதவாறு எங்கும் விளங்கும். மரப்பொந்துகளில் இருந்து ஒளிவீசும் பருமணிகள், தமது வீடாகக் கொண்ட அப்பொழில் முழுவதும் உள்ள இருள் நீங்க ஒளிவீசும் .- 30 -

15. *கோட்டினம் பூத்தவும் கொடிகள் பூத்தவும்*
*சேட்(டு)இரும் புனல்வளர் திர்த்தம் பூத்தவும்*
*பாட்(டு)அளி மதுவுணப் பரிம ளத்தொடு*
*காட்டுவ பெருங்கவின் கானம் எங்கணும்*

மரக்கிளைகளில், கொடிகளில், சேறுடைய நீர்ப்பெருக் குடைய புனித நீர்நிலைகளில் என்று எங்கும் பூத்த பூக்கள் இசைபாடும் வண்டுகள் தேன் உண்ணத் தந்து, அக்காடு நறுமணத்துடனும் அழகுடனும் விளங்கச்செய்யும். - 31 -

## வேறு

16. *காமம் மல்கிய இத்தகு நைமிசக் காட்டின்மற் றொரு காலத்(து)*
*ஏமம் மல்கிய சவுனகர் ஆதியர் இருந்துநோற் றுழிஅன்னோர்*
*சாமம் மல்கிய கண்டனார் திருவடித் தாமரை மனத்(து) உன்னி*
*ஓமம் மல்கிய நீடிய வேள்வி ஒன்று உஞற்றிநின் றனர்மாதோ.*

அனைவர்க்கும் விருப்பம் மிகச் செய்யும் இத்தகைய நைமிசக்காட்டில் முன்னொரு காலத்தில் திருநீறு மிகப்பூசிய சவுனகர் முதலிய முனிவர்கள் இருந்து நோற்ற போது சாம வேதம் பாடும் விருப்பனாகிய சிவபெருமானின் திருவடித் தாமரையைத் தம் மனத்தினில் நினைந்து அவர்கள் புகழ்வாய்ந்த வேள்வி ஒன்று செய்தனர். - 32 -

17. *யாகம் மன்னிய ஆயிடை இருடியர் ஈட்டமோ(டு) அடுத்திட்டான்*
*மாக வைப்பினும் மண்ணினும் பாதல மருங்கினும் உறைகின்றோர்*
*போகம் முற்றி நன் முத்தியை அடைதரப் புகரறு வழியாக*
*வேகம் நல்கிய வேறுபு ராணமும் இனி(து) உணர்ந்து உயர்சூதன்*

வேள்விகள் நிலைபெற்ற அக்காட்டிற்கு முனிவர் கூட்டமுடன் வானுலகிலும், மண்ணுலகிலும், பாதாளத்திலும் வாழ்வோர் திருவருள் அனுபவம் முற்றி நல்ல வீடுபேறு அடையக் குற்றமற்ற வழிகூறும் புராணங்களை இனிது உணர்ந்த சூதமுனிவர் வந்து சேர்ந்தார். - 33 -

18. *புக்க சூதனை இருந்தமா தவத்தினர் பொள்ளென எதிர் கொண்டார்*
*தக்க ஆதனம் எனப்படும் பிரசியைத் தந்தனர் உபசாரம்*
*தொக்க வாய்மொழி நிறைத்தனர் அகம் களி துளும்பினர் வழிபட்டார்*
*நக்கன் மான்மியம் கேட்கும் ஆதரவுடன் நவிறல்மே யினர்மன்னோ.*

வந்த சூத முனிவரை அங்கிருந்த மாதவத்தோர் எதிர்கொண்டழைத்துவந்து தக்க ஆசனமாகிய பிரசியைத் தந்து இருக்கச் செய்து நிறைந்தஉபசார மொழிகள் கூறி, சிவபெருமானின் பெருமைகளைக் கேட்கும் விருப்புடன் மனத்தில் களிப்புத்துளும்ப வழிபட்டனர். சூத முனிவரிடம் அதனைக் கேட்கும் விருப்புடன் கூறத்தொடங்கினர். - 34 -

## வேறு

19. *தீர்த்த மேன்மையும் சிவதல மேன்மையும் சிறந்த*
*மூர்த்தி மேன்மையும் வருணமும் நிலைகளும் முறையின்*
*ஆர்த்த ஏனைய வழிகளும் அனைத்தும் ஆகியதேன்*
*வார்த்த தால்நினது ஆனன வாரிசம் மேனாள்.*

முன்பு தாங்கள் கூறிய தீர்த்தம், தலம், மூர்த்தி மேன்மைகளையும் அவற்றின் புகழையும் (வருணம்) அவற்றின் இருப்பிடங்களையும் அவற்றை அடைவதற்குரிய வழிகளையும் தேனாக முகத்தாமரை மலர வார்த்தீர்கள். - 35 -

20. *சிறகர் வண்(டு)என அனைத்தையும் தேக்கினம் செம்மாந்து*
*அறவ வைகினம் அவற்றினுள் காவிரி நாட்டில்*
*புறவி னுக்குநல் அருள்புரிந்(து) இருந்த பூ வாளூர்*
*இறைவன் மான்மியம் தொகுப்புற இயம்பினை யன்றே.*

அவை அனைத்தையும் சிறகுடைய வண்டுகளைப் போல் மனத்தில் தேக்கிச் செம்மாந்து வாழ்ந்தோம். அறவனே, அவற்றுள் புறாவுக்குக் கருணை காட்டிய சிபி மன்னனது காவிரிபாயும் சோழநாட்டின் பூவாளூர் இறைவனது பெருமையைத் தொகுத்துக் கூறினீர் அல்லவா - 36 -

21. *அனைய மான்மியம் அனைத்தையும் விரிவினால் கேட்க*
*நினைவின் நாடிய விழைவினம் நிரம்பிய செல்வம்*
*கனைய வார்கடல் உலகினில் பெற்றவர் கலியால்*
*நினையும் மாந்தருக்(கு) ஈவது தகுதியே ஆமால்*

அந்தகு பெருமை முழுவதையும் விரிவாகக் கேட்க நினைத்த பெருவிருப்புடையேம்; ஒலிக்கும் நீள்கடல் சூழ் உலகில் நிரம்பிய செல்வம் பெற்றவர் அதனைப் பெற வறுமையால் நினைப்பவர்க்குத் தருவதே தக்கது ஆகும். - 37 -

22. *ஆத வால்அறம் ஆதிகள் ஆதிகள் வளரும்பூ வாளூர்க்*
*காதை கேள்வியின் வறியரேம் கருத்(து) இனி(து) அடங்க*
*ஓதல் நீதி என்று உரைத்தனர் உரைத்தமை கேட்ட*
*சூத மாதவன் அகத்தொடு முகம்களி துளும்பி*

எனவே அறம் முதலியன வளரும் பூவாளூர்ப் புராணத்தைச் செவிச்செல்வத்தில் வறியவராகிய எம் ஆவல் அடங்கக் கூறுவதே உமக்கு நீதியாகும் என்று கூறியது கேட்ட சூதமாதவர், அகமும் முகமும் மகிழ்ச்சி துளும்பி. - 38 -

## வேறு

23. *அருள்வளர் பூவா ளூரின் அருகனைத் தியானம் செய்து*
*குரு எனும் வியாதன் பாத மலரினைக் கும்பிட்(டு) ஏத்தி*
*மருள்வளர் வினைகால் சீக்கும் மாதவத்(து) ஊக்கம் சான்ற*
*இருடியர் முகத்தின் நோக்கி அமிழ்(து)என இதனைச் சொன்னான்*

திருவருள் வளரும் பூவாளூர்ப் பெருமானைத் தியானம் செய்து, தேவகுருவாகிய வியாழபகவான் திருவடி மலர்களைக் கும்பிட்டுப் போற்றி, அறியாமையால் வளரும் இருவினைகளையும் அழிக்கும் தவத்தால் ஊக்கம் மிக்க முனிவர்கள் முகம் நோக்கி அமுதமாகப் பின்வருமாறு கூறினார். - 39 -

24. *சித்தச நகரின்மேய திருமூல நாதர்பாதம்*
*எத்தனை அளவை யானும் இயம்பிடப் படுமோ அவ்வா(று)*
*உத்தம சரிதம் தானும் ஒருவரால் உரைக்க ஒண்ணா(து)*
*அத்தகு பூவா ளூரின் அமலனார் உரைக்கின் அல்லால்.*

மன்மதன் பேரிலான நகராகிய பூவாளூர்த் திருமூலநாதர் திருவடிப்பெருமைகளை அப்பெருமானே கூறினாலன்றி எந்தஒரு அளவையாலும் யாராலும் கூற இயலாது. - 40 -

25. *உரைத்திடற்(கு) அரிய தேனும் உபகுஎன் இருடி கேட்பத்*
*திரைத்(து) எழு வாணி ஆற்றுத் தீரத்துப் பொதியச் செம்மல்*
*புரைத்தபக் கொய்து சொற்றான் புகன்றதை உபகு என்போன்*
*தரைத்தலை விளங்கச் சொற்றான் சயிமினி வணங்கிக் கேட்ப*

பிறர்யாரும் உரைத் தற்கரியதாயினும் உபகு என்ற முனிவர் கேட்க, அலை எழும் வாணியாற்றுத் தீரத்தில் அதனை அகத்திய முனிவர் உயிர்களின் குற்றம் கெடக் கூறினார். அதனை உபகு, உலகின்கண் சயிமினி முனிவர் கேட்க விளக்கமாகக் கூறினார் - 41 -

26. *அன்னதேல் யானும் நுங்கட்(கு) அருள்வளர் தலத்தின் சீரும்*
*மன்னிய தீர்த்தச் சீரும் மயங்கிய மூர்த்தி தன்பால்*
*துன்னிய சிறப்பும் நீத்தோர் தொக்(கு) எழு பதின்மர் ஆங்கு*
*நன்னர்மெய்ஞ் ஞானம்கேட்டு நகை அழல் வளர்த்த வாறும்*

அவ்வாறே நானும் உங்கட்குத் திருவருள் வளரும் பூவாளூரின் சிறப்பும், நிலைபெற்ற தீர்த்தச் சிறப்பும், ஒளிமிளிரும் பெருமானிடம் நெருங்கிய சிறப்பும், துறவியர் எழுதின்மர் அங்குக் கூடி மேன்மை (நன்னர்) வழங்கும் மெய்ஞ்ஞானம் கேட்டு ஒளிமிக்க வேள்வி வளர்த்ததும்; - 42 -

27. *வழுக்கறு முறையால் வேள்வி வளர்த்துழிப் பிரமன்எய்தி*
*ஒழுக்கமோ(டு) இறைவன் பூசை உஞற்றிய வாறும் அந்த*
*விழுக்(கு)அறு முனிவர்க்(கு) உள்ளம் இரங்கிஎண் புயத்துநாதர்*
*முழுக்கமெய்ஞ் ஞான வண்மை முறையுளித் தெரித்த வாறும்*

தவறு இல்லாதவாறு வேள்வி வளர்த்தபோது நான்முகன் அங்கு வந்து முறைப்படி இறைவனைப் பூசனை புரிந்ததும் தவம்; காரணமாகச்சதைப் பற்றில்லாத உடம்பினையுடைய முனிவர் பால் திருமூலநாதர் மனம் இரங்கி மெய்ஞ்ஞான வளத்தை முழுமையாக முறைப்படி அருளியவாறும். - 43 -

28. *அருந்தவன் தனக்கு நன்றி ஆற்றும்அச் சுவினித் தேவர்க்(கு)*
*இருந்தழல் வேள்விப் பாகம் இனி(து)உற நிறுத்த காலைப்*
*பொருந்துவ(து) அன்றென்(று) ஒழிப் பொருக்கெனப் பெற்ற சாபம்*
*திருந்திய பூசை ஆற்றித் தேவர்கோன் ஒழித்த வாறும்*

சிவன முனிவர்க்கு உதவிய அசுவினித்தேவர்பால் நன்றிகாட்டும் முறையில் அவர்கட்கு வேள்விப் பாகத்தைச் சிவன முனிவர் நியமித்த போது, அதை மறுத்து எழுந்த இந்திரன், தான் பெற்ற சாபத்தைத் தனது திருந்திய பூசனையால் ஒழிந்ததும். - 44 -

29. *சுந்தரன் என்(று)ஓர் மன்னன் தொடுத்(து)ஒரு கலையை வீழ்த்துச்*
*செந்தவன் ஒருவன் இட்ட சாபத்தால் தீம்பூ வாளிக்*
*கந்தர்ப்பன் ஆன காலைக் கண்ணுதற்(கு) அழிய வீணை*
*அந்தணன் அருளால் பூசை இரதிஆ தரித்த வாறும்.*

சுந்தரன் என்ற மன்னன் அம்பு தொடுத்து ஆண் மானைக்கொன்ற போது அதனை வளர்த்த முனிவரின் சாபத்தால் அவன் இனிய மலரம்புகளை எய்யும் மன்மதனாகி எரியுண்ட போது மனம்நொந்து இரதிதேவி சிவபெருமானைப் பூசனை செய்ததும், - 45 -

30. மன்மதனோர் உருவம் பெற்று வந்தனை புரிந்தவாறும்
சீரறா உமையாள் சாபம் செய்யஆ டுழிப்போந்(து) ஈசன்
வீரியம் நுகர்ந்து சென்று கங்கையின் விடுத்துச் சாபம்
சாரஅப் புறவாம் தன்மை தழலவன் ஒழித்த வாறும்.

மன்மதன் உருவம் பெற்று இறைவனை வழிபட்டதும், சிறப்புக் குன்றாத உமையவள் பெருமானுடன் கூடியிருந்தபோது அங்கு வந்த தீக்கடவுளைச் சபிக்க, அவன் சிவபெருமானின் வீரியம் நுகர்ந்து, பின் அவ்வீரியத்தைக் கங்கையிடம் விட்டபோது சாபத்தின் படி புறாவாக ஆகிப் பூவாளூர்ப் பெருமானைப் பூசனை புரிந்து சாபம் தீர்ந்ததும், - 46 -

31. மாதவன் ஒருவற் காக வடாதுசார் கயையின் மேன்மை
தீதறு பூவா ளூர்க்குச் செறியவும் ஆங்குளர் உந்தி
போகவும் அருளி முக்கண் புண்ணியன் கருணை செய்யக்
கோதறப் பிதிரர் வானம் குடிபுகுந்து இருந்த வாறும்.

சிவபெருமான், இரயிக்குவ முனிவர் பொருட்டு வடதிசைக்கயையின் புனிதம் பூவாளூருக்கும் சேரவும், இங்குப் பற்குனி ஆறு பெருகவும், அருள்புரிய இரயிக்குவனால், பிதிரர் குற்றம் தீர்ந்து நரகம் நீங்கித் தேவருலகம் அடைந்ததும். - 47 -

32. நந்தன வனத்தில் சென்று நங்கைபார்ப் பதிமுன் வாங்கும்
சந்திர வதிஓர் ஞான்று தண்மலர் கொய்யப் போந்து
வந்(து)எதிர் மணிகூ டற்கு மனநிறை அழிந்து திமை
சிந்துமஞ் சுளற்குத் தேசு திகழ்மகள் ஆன வாறும்

பார்வதி தேவிக்கு மலர்த்தொண்டு புரியும் சந்திரவதி ஒருநாள் மலர்கொய்யச் சென்றபோது எதிரேவந்த மணிகூடனிடம் மனம் பறிக்கொடுத்துச் சாபத்தால் திமையற்ற மஞ்சுளனுக்கு ஒளிமிக்க மகளாகப் பிறந்ததும் - 48 -

33. சந்திர வதியைக் கண்டு தளர்மணி கூடன்தானும்
சந்திர கூடன் என்னத் தகும்பழ மலையில் தோன்றி
அந்தமில் பொருள்கள் ஈட்ட அடுத்தவன் பூவா ளூரில்
எந்தையை வழிபா டாற்றி மீண்(டு) அவன் ஏகு மாறும்

சந்திரவதியைக் கண்டு மனம் பறிகொடுத்த மணிகூடன் பழமலையாகிய விருத்தாசலத்தில் சந்திர கூடனாகப் பிறந்து எல்லையற்ற செல்வம் ஈட்டப் புறப்பட்டவன் பூவாளூரில் திருமூலநாதரை வழிபட்டு மீண்டதும் - 49 -

34. *சார்ந்தனன் வழிபா டாற்றும் சந்திர சூடன் தானும்*
*கூர்ந்தநல் வனப்பில் சான்ற குமுதையும் தம்முள் நோக்கித்*
*தீர்ந்தவர் வருத்தமிக் கூரச் சிவபிரான் இரங்கி நன்மை*
*ஆர்ந்தபந் சுலன்பால் சித்த ராய்மகள் பேசு மாறும்*

வழிபாடு செய்து வரும் சந்திர சூடனும் பேரழகு மிக்க குமுதையும் தம்முள் காதற்குறிப்புடன் நோக்கி, வருத்தம் மிக, சிவபிரான் இரங்கி மணமுடிப்பதற்காக ஒரு சித்தராய்த் தோன்றிப் பெண்கேட்டுவந்ததும் - 50 -

35. *சித்தராய் வந்து நின்றார் திருமூல நாத ராகத்*
*தொத்(து)அலர் புன்னை நீழல் தோன்றினர் மறைத லோடு*
*மத்தம்உற் றவர்போல் மாழ்கும் மஞ்சுனன் குரவர் கூறப்*
*பத்தியின் லிங்க பூசை பண்ணினன் உய்ந்த வாறும்.*

சித்தராய் வந்த திருமூலநாதரே பின்னர், கொத்தாக மலர்கள் மலர்ந்த புன்னைமரநிழலில் மஞ்சுனனுக்குத்தோன்றிப் பின்னர் மறைதலால் அவன் பித்தம் பிடித்தவன்போல் வருந்த; தந்தையை ஒத்த தேசிகர் சொல் கேட்டுப் பத்தியுடன் சிவலிங்க பூசை செய்து தெளிந்ததும். - 51 -

36. *கூவிள வனத்து நாதர் கொழித்திடும் கருணைப் பேற்றால்*
*மே(வு)இரு வோர்க்கு மன்றல் விதியுளி முடித்த வாறும்*
*தா(வு)அறு நுங்கட் (கு) இங்கே சாற்றுதும் கேண்மின் என்று*
*ஓ(வு)அற முறையே கூறல் ஊக்கினன் சூத மேலோன்*

பூவாளூர் இறைவனது அளவற்ற கருணையால் சந்திரசூடன் குமுதை இருவர்க்கும் திருமணம் முடித்ததும் ஆகியஎல்லாம் வருத்தமற உங்கட்குக் கூறுகிறேன் கேளுங்கள் என்று சூத முனிவர் ஒழிவின்றிக் கூறத் தொடங்கினார். - 52 -

நைமிசச் சருக்கம் முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் - 52 -

## 2. தல விசேடச் சருக்கம்

1. *இருமை கட்குத் திருமிக்(கு) அளிப்பது*
*பொருமை கட்குப் புயவலி நல்குவ(து)*
*உருவ வாணிக்கும் ஒண்கலை ஈவது*
*மருவி வாழும்பூ வாளூர் வளம்பதி.*

திருட கஞளுக்கு மிக்க திருவையும், கொற்றவைக்குத் தோள்வலிமையையும் அழகிய கலைமகளுக்கு ஒளிபொருந்திய கலைகளையும அளிப்பது; இம்மூன்றும் பொருந்தியோன் வாழும் பூவாளூர்வளம் பதி. - 53 -

2. *பொன்அ சும்பிய பூம்புனல் பண்ணைவாய்ப்*
*பொன்னின் அன்னநுண் தா(து) உகும் பூக்குழாம்*
*அன்னம் மன்னி நின்(று) ஆடும் தடந்தொறும்*
*அன்னம் அன்னவ ரும்குடை ந்(து) ஆடுவார்.*

பொன்னின் நுண்துகள் பரவிய மென்நீருடைய வயல்களில் பொன்துகள் ஒத்த மகரந்தத்தை மலர்க்கூட்டம் சொரியும்; அன்னப் பறவைகள் நிலைத்து ஆடும் குளங்கள் தோறும் அன்னம் ஒத்த மகளிர் மூழ்கி நீராடுவர். - 54 -

3. *தமக்கு வாசம் தரும் தரை எங்கணும்*
*இமைக்கும் கண்கள் இமைப்(பு)அறப் பூந்துகள்*
*சுமைக்கண் மாமலர் தூர்த்துப் பெருங்கவின்*
*அமைக்கும் நந்தன வனங்கள் அனந்தமே.*

தமக்கு நறுமணம் வழங்கும் நிலப்பகுதி முழுவதும், பார்ப்போர்கண்கள் வியந்து நோக்க மகரந்தச் சுமைக்கு இடமாக உள்ள மலர்களால் மகரந்தம் பெய்து நிலம் தூர்த்து, மிக்க அழ கூட்டும் நந்தனவனங்கள் மிகப்பல. - 55 -

4. *குளிரும் கூர்சுவை யும்கொடுத் துத்தமக்(கு)*
*அணிசெய் தக்க(து) என் றேபுனல் ஆர்ந்(து) ஒளிர்*
*தளையும் ஆறும் தடாகமும் யாவையும்*
*துளிசெய் தேம்பொழில் சூழ்ந்(து)அக லாதவே.*

நமக்குக் குளிர்ச்சியையும் சுவையையும் தந்து, நம்மீது கருணை காட்டுவன நீர்மிக்க ஆறுகளும் குளங்களும் என்று, தேன்துளிக்கும் இனிய சோலைகள் அவைகளைச் சூழ்ந்து பிரியாது நின்றன. - 56 -

5. *ஐயர் வைகிய ஆடக மாளிகை*
*வெய்ய தாயினும் சுட்(டு)ஒன்று வித்தவால்*
*செய்ய தீச்சிதை யாமை அகம்தழீஇ*
*வையம் உய்ய மழைவளம் செய்யுமே.*

தலைமக்கள் வாழும் ஆடகப்பொன்னால் ஆன மாளிகைகள் விரும்பத்தக்க பொன்னை உருக்கிக் கட்டப் பெற்றனவாதலின் அப்பொன்னின் வெம்மை குறையாததால் குறைக்க எண்ணியே உலகம் உய்ய மழை பெய்யும். - 57 -

6. *மணியி னால்புரி மாளிகை தங்கள்பால்*
*திணிநி லாவிய ஊக்கம் செறிதலால்*
*அணிநி லாவிய சாரளத் தால்வரும்*
*பிணியி லாஇளம் காலினைப் பேணுமே.*

மணிகள் பதித்துக் கட்டப்பெற்ற மாளிகைகள் செறிந்து விளங்கும் உயர்வைத் தம்முள் கொண்டமையால், அழகுபொருந்திய சாரளங்களின் வழியே தடையிலாது உட்புகும் தென்றலால் ஊர், அழகுபெறும். - 58 -

7. *ஈட்டும் ஒண்பொருள் எத்தனை கோடியும்*
*நாட்டி வைக்க நனந்தலை நல்கலால்*
*சேட்டு வான்முழு தும்திக ழாவணம்*
*நீட்டு வார்கொடி யால்கவின் நல்குமே.*

மாளிகைகளில் வாழ்வோர், தாம் ஈட்டிய ஒளிதரும் செல்வம் எத்தனை கோடியாயினும் அதனைச் சேமித்து வைக்க அகன்ற இடத்தை அம்மாளிகைகள் தருவன. அவை, உயரமான வானம் முழுவதும் நம்கட்புலனாகாதவாறு கட்டப்பெற்ற கொடிகளால் அழகுபெறும். - 59 -

8. *கொடுக்குந் தோறும் குரூஉமணல் கேணியின்*
*எடுக்குந் தோறும் இரும்புனல் போல்சுரந்து*
*அடுக்கும் தொல்நிதி யாளர் மனைதொறும்*
*மடுக்கும் செல்வ மகள்அர(சு) ஆளுமே.*

நன்னீர் வழங்கும் பொடிமணற்கேணி, நீரை எடுக்குந்தோறும் மிகுதியாகநீர் சுரப்பதுபோல், செல்வம் சுரந்து பெருகும் வண்ணம் பரம்பரைச் செல்வர் மனைதோறும் உட்புகுந்து திருமகள் அரசாள்வாள். - 60 -

9. *திறம்கொள் அந்தண ரால்மகம் சீர்ப்பன*
*மறம்கொள் மன்னவ ரால்வயம் மாணுவ*
*பிறங்கு நாய்கரி னால்நிதி பெட்பன*
*அறங்கள் யாவும்பின் ஓரின்மிக்(கு) ஆவன.*

அவ்வூரில் திறம் பொருந்திய அந்தணர்களால் வேள்விகள் மாட்சியுறுவன. வீரம் செறிந்த மன்னவர்களால் வெற்றி மாட்சி பெறுவன. சிறந்து விளங்கும் வணிகர்களால் செல்வம் பெருமையுறுவன. அறங்கள் யாவும் மேம்பட்டு விளங்குவன. - 61 -

10. *ஒழுக்கம் யாவையும் ஆங்கே ஒழுக்குவ*
*இழுக்கம் யாவையும் ஆங்கே இழுக்குவ*
*முழுக்க இன்பமும் ஆங்கே முழுப்பன*
*விழுப்பம் இல்லவும் ஆங்கே விழுப்பன.*

ஒழுக்க நெறிகள்யாவும் அங்கு இடைவிடாது மேற்கொள்ளப் பெறுவன. அறமல்லாநெறிகள் யாவும் பின்வாங்குவன; இன்பங்கள் யாவும் அங்கே முழுமைபெறுவன; மேன்மை பெறவேண்டுவனயாவும் அங்கே மேன்மை பெறுவன.- 62

11. *கண்அகல் மாட மேடை கதித்துவான் அகடு தூர்ப்ப*
*விண்எழு பருதிச் செல்வன் மிடைந்தமற்(று) இவற்றின் ஊடே*
*நண்ணுதற் பொருட் டே யன்றோ நகைமணி ஒற்றை ஆழி*
*பண்ணினன் தேர்க்குப் பூட்டும் பரியும் ஒன்று) அன்றி வையான்.*

வானில் ஊர்ந்து வரும் ஞாயிறு; அவ்வூர் மாளிகைகள் மேடைகள் ஆகியன வானிடத்தை அடைத்து நிற்றால் இவற்றின் ஊடே சென்று கடக்க வேண்டியுள்ளதால் ஒளிபொருந்திய அழகிய ஒற்றைச் சக்கரம் உடைய ஒரு தேரினையும் அதில் பூட்டும் குதிரையும் ஒன்றன்றிவேறு வைத்துக் கொள்ளவில்லை. - 63 -

12. *நவமணித் திரளில் செய்து நாகநாடு அளக்கும் மாடம்*
*உயவுவெண் திங்கள் தன்மெய் உறினுறத் தழுவும் தோற்றம்*
*குவளையம் கண்ணி நல்லார் குளிர்முகத் திங்கட் (கு) ஒப்ப*
*அவம்மலி கறையைத் தேய்க்கும் ஆள்வினை போன்ற(து) அம்மா*

ஒன்பான் மணிகள் பதித்துக்கட்டப் பெற்றுத் தேவருலகைத் தீண்டும் மாளிகைகளை கலைகளால் நிறைந்த திங்கள் தன் உடம்பால் தீண்டி உராய்ந்து தழுவுவது, குவளைமலர் போன்ற கண்களையுடைய மகளிரின் குளிர்ந்த முகத்து அழகுபோல் விளங்க வேண்டித் தனது முயற்கறையால் பழி மிக்க தனது முகத்தைத் தேய்த்துக் கொண்டு கறைநீக்கும் முயற்சியாகும் - 64 -

13. *வாரண நிரைகள் ஆர்க்கும் மறுகுசூழ் மாட வீதித்*
*தோரண நிரையின் ஆர்த்த சுடர்மணித் தரளம்கான்ற*
*சீரணி ஒளிமீப் போர்த்த சேயொளி மணிப்பொன் மாடம்*
*ஏரணி பூதி பூசும் எரி நிறைத்(து) இறையே போன்ற.*

யானை வரிசை ஆரவாரிக்கும் தெருக்களைக் கொண்ட மாடவீதிகளில் செவ்வொளிபரப்பும் மாணிக்கத்தால் கட்டப்பெற்ற சிவந்த மாளிகைகளில், தொங்கவிடப்பெற்ற முத்துத் தோரணங்களின் வெள்ளொளி வீசுவதால் அம்மாடங்கள் வெண்ணீறுபூசிய செம்மேனி எம்மானைப் போல விளங்கும். - 65 -

14. *மங்கல வினைகள் எங்கும் மதூரியின் லியங்கள் எங்கும்*
*பங்கய வதனச் செவ்வாய்ப் பரத்தையர் நடனம் எங்கும்*
*கொங்(கு)உயிர் முல்லை மாலைக் கொம்(பு)அனார் குரவை எங்கும்*
*பொங்கிய கலவி இன்பப் புணர்ச்சியில் தோய்வ(து) எங்கும்*

இடங்கள் எங்கும் மங்கலச் செயற்பாடுகள்; இனிய இசைக்கருவிகளின் இசைகள், தாமரை மலரைஒத்த முகமும் செவ்வாயும் கொண்ட பரத்தையர் நடனம்; தேன்துளிக்கும் முல்லை மாலை சூடிய கொம்பு ஒத்த மகளிரின் குரவைக்கூத்து; புணர்ச்சி பொங்கும் இன்பக்கடலில் தோய்தல் விளங்கும். - 66 -

15. *வேதமந்திரங்கள் எங்கும் வினைசெய்மந் திரங்கள் எங்கும்*
*ஓதுசந் தனங்கள் எங்கும் உரைத்தசந் தனங்கள் எங்கும்*
*காதல்செய் பாடல் எங்கும் கருங்கணம் பாடல் எங்கும்*
*சீதள வாசம் எங்கும் தேவர்கள் வாசம் எங்கும்.*

எங்கும் வேதமந்திரங்கள், செயற்படுதற்குரிய ஆலோசனைகள், ஊடல் தீர்க்கச் சந்துசெய்யும் அன்னப்பறவைகள், உரைத்துப் பூசிக் கொண்ட சந்தனக் குழம்பு, அன்பை வெளிப்படுத்தும் பாடல்கள், குயிற்கூட்டத்தின் பாடல்கள், குளிர்ந்த நறுமணம், தேவர்கள் வாழிடங்கள் என்க. - 67 -

16. *இந்திரன் இகந்த செல்வம் எனைத்தையும் அளித்த அவ்வூர்*
*அந்தமில் வளத்தின் நிறப(து) அதிசயம் கொல்லோ அந்தச்*
*சுந்தர நகரம் ஞானம் துகள்அறுத்(து) அருளும் ஆற்றான்*
*முந்திய நாமம் ஆன ஞான கேத்திரம் என்ப முன்னோர்.*

இந்திரன் இழந்த அனைத்துச் செல்வங்களையும் அவனுக்கு அளித்த முடிவற்ற வளமுடைமை அந்நகர்க்கு அதிசய மன்று மலக்குற்றங்களை எல்லாம் அறுத்த ஞானிகள் அந்நகரில் வாழ்வதால் அதன் முன்னைப் பெயரால் அதனை ஞானசேத்திரம் என்பர். - 68 -

17. *தருக்களுள் என்போல் எந்தத் தலத்தினும் சிறந்த(து) இந்தத்*
*திருக்கிளர் தலம்என்(று) உண்மை தெரிப்பது போல நல்ல*
*மருக்கிளர் வில்வ கானம் வளர்தலால் வினைகள் எல்லாம்*
*கருக்கும்அத் தலந்தான் வில்வ கானனம் ஆயதன்றே*

மரங்களுள் என்னைப்போல் சிறந்த மரங்கள் எத்தலத்தும் இல்லை என்றுதன் உண்மைச்சிறப்பைத் தெரிவித்தல் போல; நல்லமணம் வீசும் வில்வக்காடு வளர்தலால் அவ்வூர் நம் வினைகளை எல்லாம் அழிக்கும் வில்வக்கானகமாய் விளங்கும் - 69 -

18. *மாரனுக்கு உருவம்ஈந்த வாய்மையால் பூவா ளூராம்*
*மாரனை இரதிக்(கு) ஈந்து மங்கலம் சிறப்பச் செய்த*
*காரணம் அதனால் கல்யாண புரம்என்(று) ஆகும்*
*சீரிய மன்றல் செய்த சிறப்பினும் அப்பேர் பூணும்*

மன்மதனுக்கு அவன் இழந்த உருவத்தை மீண்டும் அளித்த சிறப்பால் அது பூவாளூர் என்றும்; மன்மதனை இரதிதேவிக்கு அளித்துத் திருமணம் சிறக்கச் செய்ததாலும், கயிலையிலிருந்து இங்குவந்து பிறந்து வளர்ந்த சந்திர சூடன் குமுதை இருவர்க்கும் கல்யாணம் சிறக்கச் செய்து வைத்ததாலும் இவ்வூர் கல்யாணபுரம் என்று பெயர் பெறும். - 70 -

### வேறு

19. *இரயிக் குவன்என்(று) ஒருமா முனிவன்*
*பரவக் கயையில் பயனைப் பிதிரர்*
*விரவப் பெருமேன் மைவிளைத் தலினால்*
*கரவற் றகயா புரியா னதுவே*

இரயிக்குவ முனிவர் தன்பிதிரர் நற்கதிபெறும் பொருட்டுப் பெருமானை வழிபட்டு வடநாட்டுக் கயையின் மேன்மையை அவ்வூர் பெறச் செய்தமையால் கரவில்லாக் கயாபுரி என்ற பெயர் பெற்றது. - 71 -

### வேறு

20. *திருவானைக் காவினுக்குச் சற்(று)ஈ சான*
*திசையின்யோ சனைஒன்றின் முனிவர் போற்றும்*
*உருவார்ந்த தவத்துறைக்கு வடபாற் கவ்வி*
*யூதிஒன்றில் காவிரிக்(கு)உத் தரத்தின் என்றும்*
*மருவா நின்று ஒளிவளரும் பூவா ளூரை*
*மாதவங்கள் பவந்தோறும் வளர்ந்தோர்க் கன்றிப்*
*பெரு(கு) ஆர்வத் தொடும் அடைதல் வணங்கல் ஆதிப்*
*பெருநலம்எய் தாதுதவம் பேணார்க்(கு) எல்லாம்*

திருவானைக்கா என்னும் திருத்தலத்திற்குச் சிறிது கீழ்த்திசையில் ஒரு யோசனை தூரத்தில் காவிரிக்கு வடக்கே, முனிவர்கள் போற்றும் புகழ்மணக்கும் திருத்தவத்துறைக்கு (இலால்குடி) வடபால் 3 கி.மீ. தொலைவில் அமைந்து அருள்ஒளி பொருந்திய பூவாளூரை அடைதலும் அவ்வூர்ப் பெருமானை வணங்குதலும் முதலியன பிறவிகள் தோறும் செய்த தவத்தால் வளர்ந்தவர்களுக்கு அல்லாமல் பிறர்க்கு வாய்க்காது. - 72 -

21. *பருதிதன் உலகில் வாழ்வார் பனிமதி உலகின் வாழ்வார்*
*பொருவில்பொன் உலகில் வாழ்வார் பூமகன் உலகின் வாழ்வார்*
*திருமகள் மார்பன் வைப்பில் சிவணுவர் சிவலோகத்தின்*
*மருவுவர் பூவாளூரின் ஒருதினம் வதிக்கப் பெற்றார்.*

சூரியனுலகில வாழ்வோர்; குளிர்ந்த நிலா உலகில் வாழ்வோர், ஒப்பற்ற தேவருலகில் வாழ்வோர்; நான்முகன் உலகில் வாழ்வோர், திருமகள் வாழும் மார்பினையுடைய திருமால் உலகில் வாழ்வோர் யாரேயாயினும் ஒருநாள் மட்டும் பூவாளூரில் வாழ்ந்தால் அவர்கள் சிவலோகத்தில் நிலையாக வாழ்வர். - 73 -

22. *கடல்வரும் அமுதம் துய்த்துக் கடவுளர் கதியுள்வேட்ட*
*மடவியர் பவளச்செவ்வாய் வரும் அமு(து) இனிது மாந்திப்*
*பட அர(வு) அணிந்தார் ஞான அமுதமும் பருகி வாழ்வர்*
*உடல்உறு பயன்இ(து) என்றாங்(கு) உறுவரை ஊட்டுவோரே.*

பிறவி எடுத்ததன் பயன் என்று பூவாளூரை அடைவோர்; பாற்கடல் அமுதம் உண்டு; பிரமன் முதலிய கடவுளர் கதியினை விரும்பிய இளமை பொருந்தியவர் பவளச்செவ்வாயினர் ஆகிய அரம்பையர் தம் வாயமுதம் ஊட்ட உண்டும், விடப் பாம்புகளை அணிகலனாக அணிந்த சிவபெருமான் அருளும் ஞான அமுதம் உண்டும் வாழ்வர். - 74 -

23. *அந்தணர் பெரியர் கற்றோர் அருட்பணி விடையின் உள்ளோர்*
*இந்நகல் வினைஞர்க்(கு) ஆங்(கு) ஓர் இல்லகம் இயற்றி வைப்போர்*
*உந்(து)ஒளி அமரர் தத்தம் உலகினைக் கொடுக்க நேர்வர்*
*சந்திரன் முடியில் வேய்ந்தார் தம(து) உல(கு) அளிப்ப நேர்வர்.*

அந்தணர் பெரியோர், கற்றவர், திருத்தொண்டர் ஆகியோருக்குப் பூவாளூரில் வீடுகட்டித் தருவோர்க்கு, மிகுஒளியுடைய தேவர்கள் தம் உலகில் வாழ இடம் தருவர்; பிறையணி பெம்மான் தமது உலகும் தர நேர்வார். - 75 -

24. *தினைத்தனைத் தவம்தா னங்கள் செய்யினும் அந்த வைப்பில்*
*பனைத்தனைப் பயனை நல்கும் பழுமர வித்துப்போல*
*எனைத்துள பழிபா வங்கள் ஈண்டினும் ஆங்(கு) உற்றோர்க்குக்*
*கனைத்துஉகு மழைவாய்ப்பட்ட உப்பெனக் கரைந்து போகும்.*

மரத்தில் நன்கு பழுத்த பழவிதை போல அவ்வூரில் தினைத்தனைத்தவம் தானம் செய்தாலும் அதுபனையளவும் பயன்தரும். எவ்வகைப்பட்டபழி பாவம் நிறைந்திருந்தாலும் அவ்வூரைப் பொருந்தி வாழ்வார்க்கு அவை, இடிஇடித்துப் பெய்யும் பெருமழைவாய்ப் பட்ட உப்புப் போல் கரைந்து போகும். - 76 -

25. *பலஎடுத்(து) உரைப்ப(து)என்னே பழிகருங் கொடியும் மேரு*
*குலவரை அடுப்பில் செம்பொன் வண்ணமாம் கொள்கை போல*
*நிலவரை யாவ ரேனும் நின்மலன் பூவா ளூரில்*
*நலமுற இனிது வாழின் நவையறு முத்தர் ஆவார்.*

பலவாறு சொல்ல வேண்டுவதில்லை. பிறரால் நிறம் பற்றிப் பழிக்கப் பெறும் காக்கை கூட, பொன் மலையைப் பொருந்துமானால் செம்பொன் வண்ணமாகும் தன்மைபோல, உலகில்யாரேயாயினும், இயல்பாகவே மலமில்லாதவனாகிய அருள்தரு திருமூலநாதரின் பூவாளூரில் நலமுற இனிது வாழின் குற்றமற்ற முத்தர் ஆவர். - 77 -

26. *தலத்(து)உறு மேன்மை யாது சாற்றினேன் நிற்க இப்பால்*
*நலத்(து)உறு முனிவீர் உம்பர் நாகர்யா வரும்வந்(து) ஆடும்*
*பலத்(து)உறு தீர்த்த மேன்மை பகருதும் கேண்மின் என்னாப்*
*புலத்(து) உறு பொறியை மாற்றும் புண்ணியச் சூதன் சொல்லும்.*

புலன் வழிச்செல்லும் பொறியைச் சிவ நெறியில் மடைமாற்றும் புனிதரான சூத முனிவர், நலத்தால் மிக்க முனிவர்களே, பூவாளூர்த் தலத்தின் மேன்மையை இதுவரை கூறினேன்; இனி தேவர் நாகர் ஆகிய அனைவரும் வந்து நீராடும் புனித ஆற்றல் வாய்ந்த பற்குனியாற்று நீரின் மேன்மை கூறுகிறேன் கேளுங்கள் என்று தொடர்ந்தார். - 78 -

தலவிசேடச் சருக்கம் முற்றிற்று
ஆகத்திருவிருத்தம் - 78.

## 3. தீர்த்த விசேடச் சருக்கம்

1. *இரயிக் குவமா தவன்பத்திக்(கு) இரங்கிக் கயையிற் பயனதிகம்*
*தரஒப்(பு) இகந்த பூவாளூர் தனக்குப் பெருமை நிருமித்த*
*அரவச் சடிலப் பெருமானால் அந்நாள் எழுந்து பற்குனி என்(று)*
*உரவுப் புனல்தண் நதிக்கங்கை ஒழுகும் புனிதம் உல(கு) உறவே.*

இரயிக்குவ முனிவரின் பெரும்பத்திக்கு இரங்கி வடநாட்டுக் கயைத்தலத்தை விட புண்ணியப்பயனை மிகுதியாகத் தரும் பூவாளூருக்குப் பெருமையுண்டாக்கிய அரவம் அணிந்த சடைப்பெருமானாகிய அருள்தரு திருமூலநாதப் பெருமான் திருமுன்பு பற்குனி என்ற பெயருடைய ஓராறு புனிதமுடைய கங்கை போல் உலகம் புனிதமுற ஓடும். - 79 -

2. *சுரந்து வளரும் பாவம் குறிச் சொல்லும் பற்கு எனும்கிளவி*
*நிரந்து நீ என் பதுபோக்கல் நிகழ்த்தும் அதனால் பாவத்தைக்*
*கரந்து போக ஒழித்தலரிக் கமழ்ந்த நறும்பூந் திரைகொழித்துப்*
*பரந்துவந்த நதிக்(கு) உரைப்பர் பற்கு நீ என்(று) ஒரு நாமம்.*

செயல்களால் ஊறி வளரும் பாவத்தைக் குறிப்பது பற்கு என்னும் சொல்; நீ என்ற சொல் போக்குதல் என்ற பொருள்தருவது. பாவத்தை அது முற்றாக மறையுமாறு ஒழித்து மணக்கும் நறும்பூவுடன் கூடிய அலை கொழித்துப் பரந்து வந்த அந்த நதிக்குப் பற்குநீ என்று ஒரு பெயருண்டு - 80 -

3. *தேவர் பிதிரர் முனிவர் கடன் தீராச் சிதடரேனினும்*
*பாவம் முழுதும் செய்(து) ஒழுகும் பதிதர் எனினும் இழிகுலத்தோர்*
*யாவர் எனினும் அதில் முழுகின் முழுகிக் கிடந்த இரும்பவமும்*
*ஓவில் சமுசாரமும் என்னும் உததி இடைநின்று எழுந்தகல்வார்.*

தேவர், முனிவர், பிதிரர், கடன்களைச் செய்யாத அறிவிலியாயினும், பலவகைப்பாவங்களையும் செய்து கொண்டு வாழும் பெரும்பாவியாயினும், பிற இழிந்தன செய்யும் குலத்தில் பிறந்த யாரேயாயினும் பற்குனியில் நீராடின் அதுவரை அவர்கள் மூழ்கிக்கிடந்த பெரும் பாவம் நீங்க ஓயாத சமுசாரத் துன்பம் என்ற கடலை விட்டுக் கரைஏறுவார். - 81 -

4. *தென்பால் கயைஎன்(று) இமையோரும் சிறப்ப உரைக்கும் பூவாளூர்*
*தன்பால் திகழும்பற்குனியாம் துடஉந்தியைத்தக் கிணைகங்கை*
*என்பார் அறிந்தோர் அந்நதியை எய்திப் படிந்தோர்க் கேயன்றி*
*அன்பால் புறத்தே கொடுபோந்(து) அங்(கு) ஆடு வார்க்கும் பயனுறுமே.*

தென்னாட்டுக் கயை என்று தேவர்களும் சிறப்பித்துக்கூறும் பூவாளூரில் விளங்கும் பற்குனியாகிய பெருமை பொருந்திய ஆற்றை அடைந்து அதில் மூழ்கினார்க்கு மட்டுமின்றி, அதன் மீது அன்புடன் அதன்நீரை வேறிடம் எடுத்துப்போய் அதில் நீராடுவோர்க்கும் உரிய நற்பயன் விளையும். - 82 -

5. *வெற்ற பதியின் விதியால்தான் விளைத்த இனிய புண்ணியத்தில்*
*பொற்ற தலத்தின் ஆதரவால் புரிபுண் ணியம்ஓர் பதின்மடங்காம்*
*உற்ற தலம்செய் புண்ணியத்தின் உம்பர் இறைஞ்சும் புட்கரத்துப்*
*பற்றி இழைக்கும் புண்ணியம்தான் பகரின் நூறு மடங்(கு) அதிகம்*

வெற்றிமிக்க தம் ஊரில் விதிப்படிச் செய்த புண்ணியத்தின் பத்து மடங்கு, பூவாளூரில் செய்த புண்ணியம் பெரிது. பூவாளூரில் செய்யும் புண்ணியத்தின் நூறு மடங்கு பெரிது. தேவர்களும் போற்றும் பற்குனியில் செய்யும் புண்ணியம். - 83 -

6. *தடவான் இறைஞ்சும் புட்கரத்துத் தழைபுண் ணியத்துப் பிதிரர்விழை*
*வடபால் கயைசெய் புண்ணியந்தான் வகுக்கின் ஓரா யிரமடங்காம்*
*வடபால் கயை செய் புண்ணியத்தின் வளர்பூ வாளூர் எனும் தென்பால்*
*இடமார் கயைசெய் புண்ணியம்தான் எண்ணிற் பதினா யிரமடங்காம்*

வானோர் போற்றும் கங்கையில் செய்யும் புண்ணியம்போல், பிதிரர் விழையும் கயையில் செய்யும் புண்ணியம் ஆயிரம் மடங்கு பெரும்பயன் தரும். அந்தக் கயையில் செய்யும் புண்ணியத்தைப் போல் பதினாயிரம் மடங்கு பயன்தருவது பூவாளூர் என்னும் தென்பால் கயையில் செய்யும் புண்ணியம். - 84 -

7. *பூவா ளூர்என்(று) உலகமெலாம் புகழும் தலத்தில் அன்பொடு செய்(து)*
*ஓவா(து) எழுந்த புண்ணியத்துக்(கு) உயர்வும் ஒப்பும் அத்தலத்தில்*
*தாவா(து) எழுந்த புண்ணியங்கள் தாமே அலது பிற தலத்து*
*மேவா நின்ற புண்ணியங்கள் மேவா உயர்வும் ஒப்புமே*

பூவாளூர் என்று உலகமெலாம் புகழும் தலத்தில் அன்போடு இடைவிடாது செய்த புண்ணியத்துக்கு ஒப்பும் உயர்வும் இல்லை. அத்தலத்தில் ஒருவர் இடையிடாது செய்த புண்ணியத்துக்கு அப்புண்ணியங்கள் மட்டுமே ஒப்பாகுமேதவிரப் பிறதலத்துச் செய்த புண்ணியங் அதற்கு ஒப்பும் அதனின் உயர்வும் ஆகா. - 85 -

8. *அவ்வாறு உயர்ந்த பூவாளூர் அகத்தில் புரியும் புண்ணியத்தின்*
*அவ்வான் பதிப்பற் குனிநதியின் ஆற்றி எழும்புண் ணியம்அதிகம்*
*அவ்வார் நதிசெய் புண்ணியத்தின் அவ்வூர் சிறப்ப வீற்றிருக்கும்*
*அவ்வார் சடையார் சன்னிதியில் ஆற்றியிடும் புண்ணியம் அதிகம்.*

அவ்வாறு பூவாளூரில் செய்யும் புண்ணியத்தினும் அவ்வூர்ப் பற்குனி ஆற்றில் செய்யும் புண்ணியம் அதிகமாகும். அந்நீண்ட பற்குனி ஆற்றில் செய்யும் புண்ணியத்தை விட, அவ்வூர் சிறப்புறுமாறு எழுந்தருளியுள்ள அருள்தருதிருமூலநாதர் திருமுன் உள்ள பற்குனித் துறையில் செய்யும் புண்ணியம் அதிகம் ஆகும். - 86 -

9. *பொன்னும் மணியும் கொழித்(து) ஒழுகும் பூந்தண் புனல்பற் குனியாற்றின்*
*மன்னு மரபால் படிந்தெழுந்து மலிந்த பிதிரர் தருப்பணம் செய்(து)*
*அன்ன நதியின் கரையிருக்கும் ஆலின்மூலம் தனிற்பிண்டம்*
*தன்னை இடுவோர் பிதிரர்கடன் தணந்து சிவலோகத் தடைவார்*

பிதிரர் பொருட்டுச் செய்யும் கடனை, பொன்னும் மணியும் கொழித்து ஓடும் பற்குனியாற்றில் முறைப்படி நீராடிப் பல பிதிரர்களையும் எண்ணித் தருப்பணம் செய்து, அவ்வாற்றின் கரையில் இருக்கும் ஆலமரத்தடியில் பிண்டம் இடுவோர் பிதிரர் கடன் நீங்கிச் சிவலோகம் அடைவர். - 87 -

10. *கூறும்அனைய புனல்நதியில் குறித்துக் கடன்கள் செயப்பெற்ற*
*மாறு தவிர்ந்த பிதிரரும்தாம் வருந்து நரக வேதனையும்*
*வேறு விளைந்த பல்வினையும் விழுந்து போக எழுந்துபோய்ப்*
*பேறு கதுவும் வான்கதியில் பெயரா(து) இன்பத்து அழுந்துவார்.*

இத்தகைய சிறப்புடைய பற்குனியில் பிதிரர்கடன் செய்ததால் பற்பல பாவம் தீர்ந்த பிதிரர், தாம்துன்புறும் நரகவேதனையும்; பற்பல வினைகளும் தீர்ந்துபோக, நகரத்துன்பத்திலிருந்து எழுந்துபோய், நற்பேறுவசப்படும் மேலான நிலையில் பெயராது இன்பத்தில் திளைப்பர். - 88 -

11. *இயக்கும் காலம் பாத்திரம் என்(று) இரண்டும் ஏனைத் தலங்களினும்*
*பயக்கும் புனல்தீர்த் தங்களினும் பார்க்க வேண்டி னாற்போல*
*நயக்கும் பூவா ளூரிடத்து நறும்பற் குனிமா நதி தீரத்து*
*முயக்கம் தவிர்ப்போர் அவ்விரண்டும் ஓர்ந்து பாரார் வினை முடிப்பர்.*

பிறதீர்த்தங்களில் பிதிர்க்கடன் செய்வோர் அது செய்ய வேண்டிய காலம், ஏற்கும் நல்லோர் ஆகியன பார்த்துச் செய்ய வேண்டினாற்போல, விரும்பத்தக்க பூவாளூர்ப் பற்குனி நதிக்கரையில் பாவத்தொடர்பு அறுத்து கொள்ளப் பார்ப்பவர் முன் குறித்த இரண்டும் பார்க்க வேண்டுவதில்லை; தம் வினை முடிப்பர். - 89 -

12. *யாவன் ஒருவன் ஏற்பல்லன இசைந்தான் இழிந்தோன் ஆயிடினும்*
*ஓவில் அவனே பாத்திரமாம் உறும்கா வங்கள் அனைத்தும் ஆம்*
*பாவம் அறுக்கும் தவம்தாணம் பண்ணத் துணிந்தோர் அத்தலத்தின்*
*ஆவ அங்கைப் பொருள் கிடைத்த அன்றே புரிக தாழாமே.*

பிதிர்க்கடனை ஏற்பவர் இழிந்தோராயினும், அவனே நல்ல பாத்திரம், பொருந்தும் காலம் அனைத்தும் நல்ல நேரமே, பாவம் அறுக்கும் தவம், தாளம் செய்ய பெருமான் திருமுன்ஆன பூவாளூர்ப் பற்குனிக்கரையில் செய்யப் பொருள் கிடைத்த அன்றே செய்க. - 90 -

13. *அயணம் இரண்டும் மதிபருதி அரவு தொடரும் பொழு(து) இரண்டும்*
*பயிலும் உவாவூர் இரண்டும்விதி பாதம் மாதப் பிறப்(பு) இவையும்*
*உயர்வு புரியும் மகாளயபக் கமும்மற் றையவும் உறுநாளின்*
*இயலும் அன்ன சிரார்த்தம் ஆங்(கு) இயற்றின் அளவாப் பயன் உறுமே.*

உத்திராயணம், தட்சிணாயனம், சூரிய சந்திர கிரகணகாலம், காருவா வெள்ளுவா, நட்சத்திரற்கு விதிக்கப்பெற்ற நான்கு கூறுகள், மாதப்பிறப்பு, உயர்வு செய்யும் மகாளய பக்கம் பிறவும், வாய்க்கும். அன்னமிடும் சிராத்தமும் (பிதிர்க்கடன்) அங்குச் செய்தால் அளவற்ற பயன்தரும். - 91 -

14. *அன்னம் அளிப்ப உதவாதேல் பிண்ட மேனும் ஆங்கிடுக*
*சொன்ன இதுவும் கூடாதேல் தோயமேனும் திலத்தோடு*
*நன்னர் மனுவால் இறைத்திடுக நவைதீர் இந்தத் தருப்பணமும்*
*அன்ன சிரார்த்தம் வடகயையின் ஆற்றும் பயனைத் தரும் மாதோ*

அவ்விடத்தில் அன்னசிரார்த்தம் செய்ய இயலாதாயின், பிண்டமாவது இடுக; இதுவும் இயலாதாயின் எள்ளும் நீருமாவது இறைத்திடுக. பாவம் தீர்க்கும் இது வடநாட்டுக் கயையில் அன்ன சிரார்த்தம் செய்த பயன்தரும். - 92 -

15. *அனைய நதிபற் குனிதீரத்(து) அன்னம் அளிப்போர் எவரேனும்*
*நினைய அரிய வளம்சிறந்த நிமலன் உலகத்(து) எளி(து) எய்தி*
*நனை விண்(டு) அலர்ந்த உய்யானம் நண்ணி அன்னம் ஒவ்வொன்றுக்(கு)*
*இனைதல் அறஒவ் வொருகற்பம் எதிரில் போகத்(து) அழுந்து வார்*

பற்குனிக்கரையில் உணவிடும் பிதிர்க் கடன் செய்வோர் யாரேயாயினும், வளம் சிறந்த சிவலோகத்தை எளிதில் அடைந்து, மொட்டு மலர்ந்த உய்யான வனம் அடைந்து, இங்கு உணவிடும் பிதிர்க்கடன் ஒவ்வொன்றுக்கும் பாவவருத்தம் தீர ஒவ்வொரு கற்ப காலம் அதில் வாழ்ந்து ஒப்பற்ற இன்பத்தில் திளைப்பர். - 93 -

16. *இருள்கால் சீக்கும் சோதிமணி ஈழம் இழைமெல் லியகலிங்கம்*
*பொருள்ஏ னையவும் அந்நதியில் புனிதர் தமக்குக் கொடுப்போர்கள்*
*மருள்கால் அறுக்கும் அறிவோடு மண்ணில் பெருஞ்செல் வத்தினராய்*
*அருள்ஆ தரவால் சிவபுரியின் அமர்ந்(து)ஆ னந்தக் கடல் படிவார்*

இருளை ஓட்டும் மணிகள் பதித்துச் சரிகையிட்ட மெல்லிய ஆடை, பிறபொருள் ஏதாயினும் அந்நதியில் புனிதரைக் கண்டு வழங்கின் அறியாமை தொலைக்கும் ஞானத்துடன், இவ்வுலகில் பெருஞ்செல்வராய் வாழ்ந்து மறுமையில் திருவருள் ஆதரவுடன் சிவலோகத்தில் இன்பக்கடலில் மூழ்கித்திளைப்பர். - 94 -

17. *மிருகம் பறவை பருகினும் வாழ் மீன்ஆ திகளும் அப்புனல்பாய்*
*மரமும் கொடியும் அவைபயந்த கனிகாய் நுகர்ந்து வளர்உயிரும்*
*திருகு வினையின் வலிமுருக்கித் தேவர் ஆகும் எனில் அங்கே*
*உருவப் புனல்தோய் மானிடர்கள் உயர்வார் என்ப(து) அதிசயமோ.*

விலங்கு, பறவை, மீன் முதலியவை ஆகிய அவ்வாற்று நீரைப் பருகினாலும் மரம், செடி கொடியும் இவை தந்த காயும் கனியும் உண்டாலும் கூட முருகிய வினைதீர்ந்து தேவராகும் என்றால் அந்நீரில் நீராடுவோர் உயர்வுபெறுவர் என்பது அதிசயமன்று. - 95 -

18. *பாவம் அறுக்கும் நறும் தீர்த்தப் பரிசு பகர்ந்தாம் இனிமுனிவீர்*
*நாவல்தழுவும் இப்புவியின் நவை முற்று அறுக்கும் பூவாளூர்*
*மேவி இனிது வீற்றிருக்கும் விமல மூர்த்தி மேன்மையினை*
*நீவிர் உணர்மின் உரைத்தும்என நிகழ்த்தும் சூத மாதவனே.*

முனிவர்களே பாவம் தீர்க்கும் மணக்கும் பற்குனியாற்றின் சிறப்பினைக் கூறினேன்; இனி, நெற்பயிர் மிகுந்த இப்பூமியின் குற்றமனைத்தும் அறுக்கும் பூவாளூரில் எழுந்தருளியுள்ள இயல்பாகவே மல மற்ற பெருமானின் பெருமையைச் சொல்கிறேன்; கேளுங்கள் என்று சூதமுனிவர் கூறினார். (நாவல் : நற்பெயர்) - 96 -

தீர்த்த விசேடச் சருக்கம் முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் - 96

## 4. மூர்த்தி விசேடச் சருக்கம்

1. *மணிகிடந்(து) இரட்டும் வெரிந்நெடும் புழைக்கை*
*வார்ந்தநான் மருப்(பு)அலை செவியின்*
*அணிநடை அயிரா வதப்பெரும் பாகன்*
*அருச்சனைக்(கு) இரங்கிமுன் இழந்த*
*கணிதம்இல் வளம்கூர் திருஅளித் தலினால்*
*கல்யாண புரத்தில்வீற் றிருக்கும்*
*திணிதரும் எண்தோள் தலைவனார் தம்மைத்*
*திருமூல நாதன்என்(று) உரைப்பார்.*

நடக்கும் போது இருபுறமும் மணிகள் ஒலிக்கும் முதுகும், நீண்ட துதிக்கையும், நீண்ட நான்கு தந்தங்களும், காற்றினைஅலைக்கும் செவிகளும், அழகுநடையும் கொண்ட அயிராவதயானை ஊர்ந்து வரும் இந்திரனின் அருச்சனைக்கு இரங்கி, அவன் முன்பு இழந்த அளவிடற்கரிய வளம் மிக்க செல்வத்தைத்தந்ததால் கல்யாணபுரம் என்று வழங்கப்பெறும் பூவாளூரில் வீற்றிருக்கும் ஆற்றல் வாய்ந்த எண்தோள் ஈசனைத்திருமூலநாதர் என்று கூறுவர். - 97 -

2. *வரிச்சிறைத் தும்பி மதுநுகர்ந்(து) உளரும்*
*வனசநாண் மலரணைக் கிறத்தி*
*விரித்தமெய் அன்பால் வந்தனை புரிந்து*
*விழுப்பொருள் வழங்குதற்கு உரிமை*
*பரித்தமை யாலும் சீபல வில்வத்(து)*
*அடியினில் பயிலுத லாலும்*
*தெரிந்தஅப் பெயரால் திகழ்ந்தகல் யாண*
*புரத்தமர் செல்வனைத் துதிப்பார்.*

அழகிய சிறகுகளையுடைய வண்டுகள் தேன்பருகிச் சிறகு உலர்த்தும் தாமரையில் வீற்றிருக்கும் திருமகள், விரிவான மெய்யன்பால் வணங்கி மேலான செல்வத்தைப் பிறர்க்கு வழங்கும் உரிமை பெற்றதாலும், தெய்வத்தன்மையுடைய வில்வமரத்தடியில் எழுந்தருளியுள்ளதாலும், இப்பெருமானைத் திருமூலநாதர் என்று வழங்குவர். - 98 -

3. *செய்யதீக் கொழுந்தை நீட்டி ய(து) என்னச்*
*சிவந்து வார்ந்(து) ஒளிர்செழும் சடிலத்(து)*
*ஐயர்மா தவர்கள் ஆற்றிய வேள்விக்(கு)*
*அருள்மிகச் சிறந்துமெய்ஞ் ஞானம்*
*ஓய்என அருளும் காரணம் அதனால்*
*உயர்திரு மூலநா தருக்கு*
*வையகம் முழுதும் ஞானதா னேசர்*
*எனும்பெயர் வழங்கிடப் பெறுமால்*

செம்மைநிறம் கொண்ட தீக்கொழுந்தை நீட்டியது போல், சிவந்து நீண்டு ஒளிவீசும் செஞ்சடையப்பர், மாதவத்தோரின் வேள்விக்கு உவந்து, திருவருட் பொலிவுடன் கூடிய மெய்ஞ்ஞானம் விரைந்து அருளும் காரணத்தால் இப்பெருமானை ஞான தானேசர் என்று பெயரிட்டு வழங்குவர். - 99 -

## வேறு

4. *வில்வ வனத்தில் வதிந்தருளும் விழைவால் வில்வ வனநாதர்*
*செல்வம் மிகுந்த மங்கலத்தைச் சேர்ந்த இரதிக்(கு) உதவுதலால்*
*கல்வி மிகுந்தோர் கல்யாண நாதர் எனவும் கரைந்திடுவார்*
*பல்வந் தனைசெய்(து) இமையோரும் பயிலும் பூவா ளூரரையே.*

வில்ல வனத்தில் வீற்றிருப்பதால் வில்வவனநாதர் என்றும் திருமண வாழ்வை இரதிக்கு உதவியதால் கல்யாண நாதர் என்றும் தேவர்களும் வணங்கி வாழும் பூவாளூர் இறைவனை அறிவுமிக்கோர் என்றும் புகழ்ந்து கூறுவர். - 100 -

5. *அன்பர் ஒருவர் தமக்(கு) இரங்கி ஆர் [illegible] துவை முடிப்பதற்குத்*
*துன்ப [illegible] றும் சித்[illegible] எனத் தோன்றித்தூது நடத்தலினால்*
*இன்பம் எவையும் கொடுத்தருளும் இனிய பூவா ளூரமர்ந்த*
*நன்பொன் அனையார் தமைச்சித்த நாதர் என்று நவிற்றுவரால்.*

அன்பர் ஒருவர்க்கு இரங்கிச் சிறந்த திருமணம் முடிப்பதற்குத் துன்பம் தீர்க்கும் சித்தராக வந்து திருமணத்தின் பொருட்டுத் தூது சென்ற காரணத்தால், இன்பங்களையெல்லாம் வழங்கும் பூவாளூரில் எழுந்தருளியிருக்கும் சிறந்த பொன் ஒத்த பெருமானைச் சித்த நாதர் என்றும் போற்றுவர். - 101 -

6. *உரைத்த பெயருள் ஒன்றேனும் உரைப்போர் தமக்கும் அப்பெயர்தான்*
*புரைத்த பாவம் அனைத்தினையும் புரட்டும் அமரர்க்(கு) எவ்வானின்*
*நிரைத்த போகம் அனைத்தினையும் நிறுத்தும் போகம் வெறுத்தவர்க்குத்*
*திரைத்த நறுநீர் முடி வைத்தார் செய்ய பாத நிழல் சேர்க்கும்.*

இங்குக் கூறிய பெயர்களுள் ஒரு பெயரைக் கூறி அப்பெருமானை அழைத்தாலும், குற்றம்பட்ட பாவம் அனைத்தையும் அப்பெயர் தலைகீழாக்கும், தேவர்க்குரிய வாலுலகஇன்பங்கள் அனைத்தையும் உரியதாக்கும், உலகியல் இன்பம் வெறுத்த முனிவர்கட்கு எனில் அலைஎறியும் கங்கை சூடிய பெருமானின் திருவடியில் சேர்க்கும். - 102 -

7. *மக்கள் தமக்(கு)அப் பெயரிட்டு வழங்கு வாரும் மண்ணுலகில்*
*தொக்க பொருளின் வளத்தோடும் சுற்றம் துவன்றப் பிணி பாவம்*
*ஒக்க ஒழிந்து வான்கதியில் உயர்ந்த போகம் மிக நுகர்வார்.*
*மக்கள் எவரும் அவ்வாறு வாழ்ந்து கதியை மருவுவார்.*

தம் மக்களுக்கு இந்தப் பெயர்களைச் சூட்டுகின்றவர்கள், இவ்வுலகில் பெரும் செல்வத்துடன் சுற்றத்தார் பொலிய நோய், பாவம், தீர்ந்து மேலான இன்பமுடன் வீட்டுலகில் வாழ்வார். இப்பெயரிடப் பெற்ற அம்மக்களும் அவ்வாறே நன்னிலையுறுவர். - 103 -

8. *மறைகள் முழங்கும் பூவாளூர் வரதர் நாமம் இட்டழைக்கும்*
*பறவை பசுஆதியும்பண்டைப் பாவம் முழுதும் கழீஇவளங்கள்*
*நிறையும் துறக்கத்(து) அரம்பையர் பால் நீடு போகம் நுகர்ந்(து) அப்பால்*
*பிறையும் புனலும் முடிக்(கு) அணிந்த பெருமான் பணிசெய்(து) அருள்பெறுவர்.*

வேதம் முழங்கும் பூவாளூர்ப் பெருமான் பெயரிட்டு அழைக்கப்பெறும் பறவை பசு முதலியனவும் அவற்றின் முன்னைப் பாவம் தீர்ந்து, வளம் நிறைந்த சுவர்க்கத்தில் அரம்பையர் பால் இன்பம் நீடு நுகர்ந்து, பின்னர் பிறையும் கங்கையும் சூடிய சிவன் பணிசெய்து அவ்வருள் பெறும் வீடுபேறு பெறுவர். - 104 -

9. *தக்க முனிவர் பூசித்த தகைசால் வில்வ வனத்(து) என்றும்*
*நக்கன் உறையும் திருக்கோயில் நண்ணிப் பசும்புல் பசுஆதி*
*மிக்க பசிக்கு மேய்ந்திடினும் விழுமப்பணி செய் தனஎன்றே*
*பொக்கம் மாற்றி மேற்கதியில் புகுவித்திடும்அப் புண்ணியனே.*

தகுதி வாய்ந்த முனிவர்கள் பூசித்த தகுதி மிக்க வில்வவனத்துப் பெருமான் எழுந்தருளியுள்ள திருக்கோயிலில் உள்ள புல்லைஅங்குச் சென்று பசியால் மேயும் பசு முதலியன, மேலான உழவாரம் செய்தவையாகக் கருதி அவற்றின் குற்றத்தை மாற்றி மேற்கதியில் பெருமான் நிறுத்துவான். - 105 -

10. *வளங்கூர் வில்வ வனத்தமர்ந்த வரதர்க்(கு) எனவே விடப்பட்ட*
*இளம்பூ வைபைங் கிளிஉரகம் இரலைதகர்என்(று) இவையனைத்தும்*
*களம்கூர் வினைகள் முழு(து) இரியக் கயிலை மலையில் பெருங் கணமாய்த்*
*துளங்கா அறிவிற் சிவபெருமான் சுடர்ப்பொற் கோயி லிடை வதியும்.*

வளமான வில்வவனத்தில் எழுந்தருளியுள்ள பெருமானுக்கு நேர்ந்துவிட்ட இனிமையான நாகணவாய்ப் பறவை, கிளி, பெண் குரங்கு, கலைமான், ஆட்டுக்கிடா ஆகிய அனைத்தும் கரியபாவம் தீர, கயிலையில் பெருங்கணத்தனவாய் கலங்காதஞானத்துடன் பெருமாள்ன்கோயிலில் வாழும். - 106 -

11. *கடன் கொண் டேனும் செய்யாத கருமம் பலவும் புரிந்தேனும்*
*அடல்மிக்(கு) உடையார் மனைமைந்தர் தம்மை வளர்க்கு மாறேபோல்*
*அடல்வெள் விடையார்க்(கு) எத்திறத்தும் பொருள் ஆர்த்துனரே மெய்யன்பர்*
*உடையோ ராயும் பொருள் உதவார் பொய்யன்பினரே வழிபடினும்.*

கடன்வாங்கியாவது அல்லது செய்யக்கூடாத செயல்செய்தாவது, தமது மக்களை வலிமைமிக்க பெற்றோர் வளர்ப்பதுபோல், ஆற்றல் மிக்க விடையேறிய பெருமானுக்கு எல்லாவகையும் பொருள் வழங்குகின்றவர்களே மெய்யன்பர், வழங்கச் செல்வம் இருந்தும் வழங்காது வழிபாடு மட்டும் செய்கின்றவர்கள் பொய்யன்பரே ஆவர். - 107 -

12. *மெய்யன் பினரே பொருள்அளித்து வேட்ட வேட்டாங்(கு) அருள்பெறுவர்*
*பொய்யன்பினர்கள் பொருள் அளியார் புகழ்ந்தா ரேனும் பூவானூர்*
*ஐயரிடத்து மிகப்பயனை அடையார் அந்தோ ஈ(து) என்னை*
*உய்யல் உறுவார் பொய்ப்பொரு ளே உறுதிப் பொருளா வைப்பர்களோ.*

மெய்யன்பர்களே செல்வம் அளித்துத் தாம் விரும்பிய பயனை விரும்பிய வாறே பெறுவர். பொய்யன்பர்கள் செல்வம் வழங்காமல் புகழ்ந்து கூறிவணங்கினாலும் இவரிடத்து மிகுபயன் பெறமாட்டார். எனவே தாம் ஈடேற விரும்புகின்றவர் நிலையற்ற செல்வத்தை உறுதிப்பொருளாகக் கருதாது கோயிலுக்கு வழங்கி ஈடேறுவர். - 108 -

13. *வறியர் பசியைத் தணியாத மன்றும் பொருளான் கொடு நிரயத்து*
*உறுவர் எனில்யல் பொருள்களையும் உதவி வளர்க்கும் பூவாளூர்*
*இறைவர் பலி பூசனை ஆதி இனிது சிறப்பி யா(து) ஈட்டி*
*நிறைவித் திடும்பா வியத்தார்போய் நிரயம் உறுதற்(கு) ஐயுறலோ.*

எல்லாரும் இறைவனுக்கு மக்களேயாதலால் வறிய ஒருவர் பசியைத் தணிக்காத பெரும் பொருள் காரணமாக உரிய அவர் கொடிய நரகம் சேர்வர் என்றால், அனைத்துச் செல்வங்களையும் அருளும் இவ்விறைவனுக்குக் காணிக்கை, பூசனை முதலியன சிறப்புறச் செய்யாது குவித்து நிறைக்கும் கஞ்சர், நரகடைவர் என்பதற்கு ஐயமில்லை. -109-

14. *செல்வம் இலரேல் உழவாரம் செய்க கோயில் அலகிடுக*
*நல்ல பசுவின் மயநீரால் நாளும் தெளிக்க சிறுதுாறு*
*கல்லி எறிக மலர்பறித்துக் காமர் அலங்கல் தொடுத்து அணிக*
*அல்லல் அகற்றிப் பெரும்போகம் அளைய வேண்டும் கருத்தினரே*

செல்வம் இல்லாதவராயினும் உழவாரப்பணி செய்க, திருக்கோயில் பெருக்குக, நல்ல பசுவின் சாணநீரால் தெளிக்க - மெழுகுக, சிறுபுல்லாயினும் தோண்டி எறிக, மலர் பறித்து அழகிய மாலை தொடுத்துச் சூட்டுக, இவைஎல்லாம் பெரும் போகம் விரும்பும் வறியவரும் செய்து பெரும் போகம் துய்த்தற்கு உரியன. -110-

15. *உடலிற் பிணியால் பணிபுரிதற்(கு) ஊக்கம் இலரேல் புனலாடிக்*
*கடவுட் கோயில் வலம்வருக காலந்தோறும் தரிசிக்க*
*விடம் உண்(டு) இருண்ட கண்டர் புகழ் விரிக்க தியானம் செய்திடுக*
*அடர்வல் வினையைக் கெடுத்(து) இன்ப ஆழி படிய வேண்டுநரே*

கொடிய ஊழ்வினையை ஒழித்து, இன்பக்கடலில் திளைக்க விரும்புகின்றவர்கள், உடல் நோயால் முன் குறித்தன செய்ய இயலாதவராயின், பற்குனியில் நீராடி, கோயில் வலம் சூழ்க, காலபூசைகளில் வணங்குக, நஞ்சுண்ட கண்டத்துப் பெருமான் புகழை விரிவாகத் தியானம் செய்க. -111

16. *கோயில் அடுத்துத் தரிசிக்கக் கூடாவசத்தர் ஆயிடினும்*
*வாயில் அடுத்துத் தரிசிக்க வாயில்அடுக்க மாட்டாரும்*
*பாய தமது கடைத்தலையில் படர்ந்து சிகரம் தரிசிக்க*
*மாய வினையின் வலிபுருக்கி வாழவேண்டும் கருத்தினரே*

வஞ்சனையான ஊழ்வினையின் ஆற்றலைக் கெடுத்து நலமுடன் வாழ விரும்புவோர் திருக்கோயிலுக்கு வந்து வலம் சூழ இயலாதவராயின், திருக்கோயில் வாசலுக்கு வந்து வணங்குக, கோயில் வாசலுக்கு வரஇயலாதவர், தமது வீட்டு வாயில் வந்து கோபுரம் வணங்குக. - 112 -

17. *எழுந்து நடந்து கடைத்தலை முன் எய்த மாட்டார் ஆயிடினும்*
*விழுந்து கிடந்த வா(று) ஆங்கே வில்வ வனத்தில் வீற்றிருக்கும்*
*கொழுந்து மதியம் மிலைத்தவர்தம் கோலம் நினைந்து பெயர்மொழிக*
*அழுந்து படும்பல் பவக்கடலின் அகல வேண்டும் அறிவினரே.*

நோய் காரணமாக, எழுந்து நடக்க இயலாதவர், பிறவிக் கடலின் அகலவேண்டுமாயின் படுத்துக் கிடந்தவாறே இப்பெருமானின் அருட்கோலம் நினைந்து திருப்பெயர் கூறுக. - 113 -

18. *பிறவிப் பகைக்கும் பிணிப் பகைக்கும் பெயராப் பாவப் பெரும்பிணிக்கும்*
*மறம்மிக்(கு) உயிர்க்கும் படை வில்வ வனத்தில் இனிது வீற்றிருக்கும்*
*அறவர் மகிழும் திருப்பணியே ஆகும் அவற்றுள் மிக உயர்ந்த*
*இறைவர் உறையும் திருக்கோயில் இயல்பின் எடுக்கும் புண்ணியமே*

பிறவிப்பகை, பிணிப்பகை, தீராதபாவப் பெரும்பகை ஆகியவற்றை வெற்றிமிக்குத் தொழிற்பட்டு தீர்க்கும் படை, வில்வவனத்தில் எழுந்தருளியுள்ள அறவடிவனாகிய பெருமானுக்குச் செய்யும் திருப்பணியேயாகும். இத்தகு திருப்பணிகளில் மிக உயர்ந்தது திருக்கோயில் சிறப்புறக் கட்டும் புண்ணியமாகும். - 114 -

19. *பொருள் மிக்(கு) உடையோர் இட்டிகையால் புரைதீர் சிலையால் இழைத்திடுக*
*பொருள்மிக்(கு) உடைமை இல்லாதார் பொறுப்ப மரத்தால் மண்ணினால்*
*திரணம் அதனால் செய்திடுக தேவ தேவன் இருவோர்க்கும்*
*பொருவில் பயனைச் சமமாகப் பொருந்தக் கொடுத்(து) அளிப்பன் வினை அறவே*

செல்வம் மிகவுடையவர் செங்கல், கருங்கல் ஆகியவற்றாலும், செல்வமிக இல்லாதார் மரத்தாலும், மண்ணினாலும் வைக்கோல், கீற்று ஆகியவற்றாலும் திருக்கோயில் அமைக்க. இரு சாரார்க்கும் இறைவன் ஒத்த புண்ணியத்தையே தருவான். - 115 -

20. *வரும்திர ணத்தால் கோயில் வகுத்தபுண் ணியத்திற் கோடி*
*திருந்துமண் அதனாற் செய்யின், செப்பும்இப் பயத்(து) இரட்டி*
*பொருந்துவண் மரத்தால் செய்யின், பொருந்தும் இட்டிகைக்கு நாற்றி*
*தரும்தகு சிலையாற் செய்யின் சாரும் எண்மடங்கு பேறு*

புல் வகையால் கோயில் கட்டுவது போன்று கோடிமடங்கு புண்ணியம் மண்ணால் கட்டுவதும், மண்ணால் கட்டும் புண்ணியத்தில் இருமடங்குபுண்ணியம் மரத்தால் கட்டுவதும், இதனின் நான்கு மடங்கு புண்ணியம் செங்கல்லால் கட்டுவதும், இதனின் எட்டுமடங்கு புண்ணியம் கருங்கல்லால் கட்டுவதும் தரும். - 116 -

21. *புதி(து) உறப் பணிகள் வேறு புரிவதில் பழைய(து) ஒன்றை*
*விதியுள் புதுக்கு வோர்க்கு மிக்கபுண் ணியம்தான் எய்தும்*
*மதிமுடிக்(கு) அணிந்த வில்வ வனத்தினர் கோயில் பேணும்*
*அதிபயன் சிவனே ஆவ(து) அல்லது பிறிதொன்(று) அன்றே.*

புதுக்கோயில் எழுப்புவதினும் பழங்கோயில் ஒன்றை விதிப்படி புதுக்குவோர்க்கு மிக்க புண்ணியம் உண்டாகும். பிறை சூடிய வில்வவனத்து இறைவன் திருக்கோயிலைப் பேணுவதாலான மிக்க பயன் பேணுகின்றவரைச் சிவனாகவே ஆக்குவதன்றி வேறொன்று இல்லை. - 117 -

## வேறு

22. *பொருள்அளவை தனக்கேற்ப வில்வவன நாதருக்குப்*
*பொற்பார் கோயில்*
*திருமலிய இழைத்தவர்கள் செறிந்தபல பாவவினைச்*
*சிமிழ்ப்பின் நீங்கி*
*மருவுவட கயிலையிற்போய் கணநாத ராய்இருப்பர்*
*வகுத்தோர் சுற்றம்*
*குருமலிபொன் உலகிடை இந்திரர்பதினால் வர்கள் அளவும்*
*கூடி வாழ்வார்*

தமது செல்வ அளவுக்கு ஏற்ப வில்வவனநாதருக்கு அழகிய திருக்கோயிலை உயர்வு பொருந்தக் கட்டியவர்கள், தமது பாவச் செயற்கட்டினின்றும் நீங்கி வடதிசைக் கயிலையில் கணநாதராக இருப்பர்; இவரது சுற்றத்தார் ஒளிமிக்க தேவருலகில் இந்திரர் பதினால்வர் ஆளும் காலம் வரை பொருந்தி வாழ்வர். - 118 -

23. *எம்முடைய திருமூல நாதர்அமர் திருக்கோயில்*
*இனிது செய்தோர்*
*தம்முடைய பிதிரர் எலாம் தணவாத பெருநிரயத்*
*தடையின் நீங்கி*
*விம்மு பெருஞ் சுகக்கதியின் மேவுவர் மற்(று) அவர்குலம்மே*
*தினியிற் பானு*
*ஒண்மதி என்(று) வழக்கம் இவை உள்ளளவும் நசியாமல்*
*உவந்து வைகும்*

எமது திருமூலநாதர் எழுந்தருளிய திருக்கோயிலை இனிமையுறக்கட்டியோர்களின் பிதிரர்கள், தாம் நீங்குதற்கு அரிய நரகத்திலிருந்து விடுபட்டு மிகப்பெரும் இன்பமயமான உலகில் சொர்க்கத்தில் வாழ்வர். அவர் குலம், இவ்வுலகில் ஞாயிறும் திங்களும் உள்ளவரை அழியாமல் மகிழ்ச்சியுடன் வாழும். - 119 -

24. *யாவன்ஒரு பணிவிடையை ஆலயத்தில் இழைக்கின்றான் அவனுக்கு எந்தப்*
*பாவவினை களும்நசிக்கும் பாக்கியம்எல் லாம் அவற்கே பல்கும் விண்ணில்*
*காவலனும் அவன்ஆணைக்(கு) அஞ்சுவன்மற்(று) அவன்நினைந்த கருமம் எல்லாம்*
*பூவுலகின் எளிதாக முற்றும்அவன் பெருமையையார் புகல வல்லார்*

யாரொருவர் திருக்கோயில் பணி செய்தாரோ அவருடைய பாவங்கள் அழிய, நற்பேறுகள் அனைத்தும் அவனிடம் பெருகும், இந்திரனும் அவன்ஆணை மீற அஞ்சுவான்; அவன் நினைத்தன எல்லாம் இவ்வுலகில் எளிதாக நிறைவேறும்; அவன் பெருமை கூற வல்லார் யாரும் இல்லை. - 120 -

## வேறு

25. *நாத்திகன் நடுநிலை பிழைத்த நாவினன்*
*வேத்(து) அவை கேட்ட வெம் கோள்வி ரித்தவன்*
*பாத்திரத்(து) இடும்பொருள் படுத்தி டாதவன்*
*மூத்தவர் தந்தைதாய் மொழியைக் கீழ்ந்தவன்*

நாத்திகன், நடுநிலை தவறியவன், பிறர் அவையில் கேட்ட கொடுஞ்செயலை விரித்துப்பலபடக்கூறுவோன், ஏற்பவர் பாத்திரத்தில் இட வேண்டியதை இடாதவன், மூத்தவர், தந்தை, தாய் சொல்லைச்சிதைத்து நடந்தவன். - 121 -

26. *பிறர்உறக் கொடுத்ததைப் பிடுங்கிக் கொண்டவன்*
*பிறர் பொருள் கவர்ந்தவன் பீழை செய்தவன்*
*பிறர்மனை விழைந்தவன் பிள்ளை விற்றவன்*
*பிறர் வளம் கண்(டு)உளம் பொறாத பெற்றியன்*

பிறர் அனுபவிக்கக் கொடுத்ததைப் பிடுங்கிக் கொண்டவன், பிறர் பொருள் கவர்ந்தவன், துன்பம் செய்தவன், பிறர் மனைவியை விரும்பியவன், தன் பிள்ளையை விற்றவன், பிறர் வளமை கண்டு பொறாதவன். - 122 -

27. அண்டர்நா யகர்தமக்(கு) அமுதம் கூட்டி டா(து)
உண்டவன் மறைகள்ஓ தாது விட்டவன்
மண்(டு)அழல் வளர்த்திடான் மறையின் ஐந்(து) எனக்
கொண்டஎச் சங்களைக் குயிற்றி டாதவன்

இறைவனுக்கு, தான் உண்ணும் உணவைப் படைக்காமல் உண்டவன், அந்தணருள் மறைகளை ஓதாது விட்டவன், வேள்வி செய்யாதவன், மறைகூறும் ஐந்து வேள்விகளையும் செய்யாதவன்; - 123 -

28. வீரனைக் கொன்றவன் விரதம் கொன்றவன்
போரிடை வஞ்சனை புரிந்து வென்றவன்
ஆரியர்க்(கு) இரும்பழி நாட்டி இட்டவன்
ஊரினைக் கெடுத்தவன் ஊன்விற்(று) உண்டவன்

வீரனை, தான் கொண்ட விரதத்தைக் கொன்றவன், போரில் வஞ்சனையால் வென்றவன், தலைவனுக்குப் பெரும் பழிவர நடந்தவன், ஊரைக் கெடுத்தவன், புலால்விற்று அது கொண்டு உண்டு வாழ்கின்றவன்; - 124 -

29. செய்ந்நன்றி கொன்றவன் சினக ரத்திடை
ஐயநுண் இடையினர் ஆகம் தோய்ந்தவன்
பொய்யுரை புகன்றவன் பூசு ரக்கொலை
மையலின் இழைத்தவன் மாதைக் கொன்றவன்

செய்ந்நன்றி கொன்றவன், திருக்கோயிலில் பெண்களைக் கூடியவன், பொய்யுரைத்தவன், அந்தணரைக் காமம் காரணமாகக் கொன்றவன்; - 125 -

30. தருநிரை தடிந்தவன் தடாகம் தூர்த்தவன்
இருமுது குரவர்பால் இடுக்கண் செய்தவன்
கருவினை அழித்தவன் கன்னி யைப்புணர்ந்(து)
ஒருவினன் முதல்உப பாத கத்தரும்.

மரவரிசைகளை வெட்டியவன், குளத்தைத் தூர்த்தவன், பெற்றோருக்குத் துன்பம் விளைத்தவன், கருக்கொலை புரிந்தவன், கன்னியைப் புணர்ந்துபின் அவளை மணந்து கொள்ளாதவன் முதலிய மாபாதகரும்; - 126 -

31. குரவனைக் கொன்றவன் குரத்தி கொங்கைதோள்
விரவுறப் புணர்ந்தவன் வெங்கள் உண்டவன்
இரணியம் திருடினோன் இவரைக் கூடினோர்
பர(வு)இவர் ஆதிமா பாத கத்தரும்.

அரசனைக் கொன்றவன், அரசியைக் கூடியவன், கட்குடியன் பொருள் திருடியவன், இவர்களைச் சேர்ந்து இவர்களைப் போற்றியவர்கள் ஆகிய மாபாதகரும் - 127 -

32. *குழகனை நிந்தனைகூறி நின்றவன்*
*பழகுவே தாகமம் பழித்து நின்றவன்*
*விழவுபூ சனைவிம லர்க்கு நீக்கிய*
*அழிதகை முதல்அதி பாத கத்தரும்*

சிவனை அல்லது முருகனைப் பழித்தவன், வேதாகமங்களைப் பழித்தவன், இறைவனுக்குரிய பூசனையைத் தடுத்த அதிபாதகரும் - 128 -

33. *உய்ந்திடும் நெறிஎது என்னில் ஊர்விடை*
*அந்தணர் ஆலயம் ஆக்கிப் போற்றலே*
*மைந்துடை ஆலயம் வகுக்கும் ஆள்வினை*
*நந்தினர் உய்யவும் நவிலக் கேண் மினோ.*

ஆகிய அனைவரும் ஈடேறும் வழி எது? என்றால் விடையேறிய பெருமானுக்கு ஆலயம் கட்டிப் பேணுதல் ஆகும். அழகிய ஆலயம் கட்டும் முயற்சியை விரும்பினோர் உய்யும் நெறி கூறுகிறேன் கேளுங்கள் - 129 -

34. *உருத்திர கணிகையர் ஓடை யானைமா*
*செருத்தல்ஆன் வயல்திகழ் பாத்தி ராதியுள்*
*கருத்(து)உறு விருப்பினால் கையில் வாய்ந்தன*
*பொருத்தி மிக்(கு) இறைஞ்சிடில் போம்அப் பாதகம்.*

திருக்கோயிலுக்கு; சொக்கக் கூத்தாடும் மகளிர், முகபாடம் அணிந்தயானை, மிகு பால் கறக்கும் பருமடிப்பசு, வயல், கோயிலுக்குத் தக்க பாத்திரம் ஆகியவற்றை மனவிருப்பத்துடன் கையிற் கிடைத்தன தந்து பெருமானை வணங்கினால் முற்கூறிய பாவங்கள் தொலையும். - 130 -

35. *கவற்றுவன் பாதகம் கழியக் கூறிய*
*இவற்றினும் வல்உறா(து) எளிதின் உய்யவும்*
*நவிற்றுவன் கேண்மினோ நன்மை எய்துவான்*
*தவற்(று) உல(கு) இடும்பையில் தணந்த அந்தணீர்*

அந்தணர்களே; தவறு செய்யாது உலகத் துன்பத்தில் நீங்கி நன்மையே எய்த வாட்டிவதைக்கும் பாவம் கழியக் கூறிய இவற்றினும் எளிய வழி கூறுகிறேன். - 131 -

## வேறு

36. *விளங்கு பஞ்சமி பூரணையின் பக்கம் மேவிய பதினான்கு*
*துளங்கும் அட்டமி ஆதிரைகும் பத்தில் தோன்றிய மகம்ஆடி*
*உளம்கொ ளும்தலை உவாவொடு கூடிய மதித்தினம் மீனத்தின்*
*உளம்கொள் பூரணை அம்மதி இடைவரும் ஓங்கும்உத் தரம்என்றா*

பஞ்சமி, நிறைநிலா நாளிலிருந்து பதினான்காவதான சதுர்த்தசி, அட்டமி, திருவாதிரை, மாசி மகம், காருவா, வெள்ளுவா, பங்குனி உத்திரம். -132-

37. *திங்கள் வாரத்தில் கூடிய தலைஉவா செங்கதிர் வாரத்தில்*
*தங்கு சத்தமி அயனம்முன் னாகமேல் சாற்றிய அவைஎன்றா*
*பங்கு முற்றும் அனைவகை நாளினும் பற்குனி நீராடி*
*பொங்கு மாமறை அந்தணர்க்(கு) ஏன்றபல் பொருள்களும்*
*கொளவீசி*

திங்கட்கிழமை வரும் அமாவாசை, ஞாயிற்றுக்கிழமை வரும் சப்தமி, உத்தராயணம் முதலியனவாக முற்கூறிய பொழுதுகளில் பற்குனியில் நீராடி, பொலியும் மாமறை வல்ல அந்தணர்களுக்கு ஏற்ற பொருள்களை மிகுதியும் தந்து. -133-

38. *ஆன நெய் பொழிந்(து) அரவிந்த நாளநூல் ஆக்கிய திரியிட்டு*
*ஞான நாயகன் திருமுன்னர் விளக்(கு) உறீஇ நறும்புகை கமழ்வித்து*
*வான நாயகன் திருமுடிக்(கு) ஆவின்பால் மந்திரத்(து) இனி(து) ஆட்டி*
*ஈனம் நீங்கிய சுகந்தமும் வில்வமும் எடுத்(து) எடுத்(து) அர்ச்சித்து*

பசுநெய் ஊற்றி தாமரை நூல் திரியிட்டு, இறைவன் திருமுன்பு விளக்கேற்றி, நறும்புகையிட்டு, இறைவனுக்கு பசும்பால் கொண்டு மந்திரத்துடன் திருமுழுக்காட்டி, குற்றமற்ற நறுமணப் புகைக்காட்டி, வில்வத்தை எடுத்து எடுத்து அர்ச்சனை செய்து -134-

39. *மூன்(று)இ ரட்டிய சுவையின்நால் உண்டியும் முதல்வனுக்(கு) இனி(து) ஊட்டி*
*ஆன்ற அந்தணர் அருட் சிவ பத்தர்கள் ஆர்வலர் இவர்க்கெல்லாம்*
*ஏன்ற வாறுநால் உண்டியும் அளித்(து) அளித்(து) இறைஞ்சிவந் தனைசெய்யின்*
*மான்ற பாதகச் சிமிழ்ப்பினின்(று) எழுந்துபோய் வான்கதி களிற்சேர்வார்*

அறுசுவை உண்டியை இறைவனுக்கு ஊட்டி, அருள் நிறைந்த அந்தணர் சிவபத்தர், வழிபாட்டில் ஆர்வம் மிக்கவர் இவர்கட்கெல்லாம் ஏற்றவாறு நால்வகை உணவும் ஊட்டி ஊட்டி வணங்கிப் பணிந்தால், மயக்கம் தரும் பாதகக்கட்டு விடுபட்டு விண்ணுலகக் கதிகளில் சேர்வார். -135-

## வேறு

40. *வீரம்மே வியபாவம் விளையாத இயல்பினர்கள்*
*மாரனார்க்(கு) உருவளித்த வள்ளலார் திருமுடியின்*
*ஈரநீர் சிறி(து) ஆட்டின் ஏழுலகும் நடுநடுங்கக்*
*கோரமாய் எழுகங்கை குலநதிதம் முடிக்(கு) அணிவார்*

வீரம் காட்ட வந்த பாவம் செய்யாத இயல்புடையோர், மன்மதனுக்கு உருவளித்த சிவபெருமான் திருமுடியில் தண்ணிய நீர் கொண்டு திருமுக்காட்டின், ஏழு உலகும் நடுநடுங்க வந்த கங்கை முதலிய புனித ஆறுகளில் நீராடிய புண்ணியம் பெறுவர். - 136 -

41. *அலகில்புகழ்ப் பூவாளூர் அமலனார் திருமுடியின்*
*மலர்அணிவார் மதியணிவார் வலம்வந்து விழுந்து கர*
*தலம்முகிழ்ப்பார் சுரர்சூழ்ந்து தாழ்ந்(து) இருகை முடிக்கூப்பி*
*நல வரங்கள் வேட(டு) இரப்ப நாயகராய் வீற்றிருப்பர்*

அளவற்ற புகழுடைய திருமூலநாதரின் திருமுடியில் மலர் சூட்டுகிறவர், அறிஞராவர் - ஞானியாவர்; வலம் வந்து தரையில் படிந்து கை கூப்புவார், தேவர்கள் வணங்கிச் சூழ்ந்து நின்று இருகைகளையும் தலைக்கும் மேல் கூப்பி நல்லவரங்கள் அருளுமாறு விரும்பிக் கேட்கும் வண்ணம் தலைவராக வீற்றிருப்பார். - 137 -

42. *மல்லல்புனல் சூழ் வில்வ வனத்தில்ஒரு மறையவருக்(கு)*
*இல்இயற்றி நிலம்ஆதி ஈந்தவரைத் தாபிக்கின்*
*பல்அமரர் தொழுஇலிங்கப் பதிட்டைபுரி பயன்எய்தும்*
*நல்சிவ பத்தர்களை நாட்டினும்அப் பயன் எய்தும்*

நீர் வளம் மிக்க வில்வவனத்ல் ஒரு மறையவருக்கு வீடுகட்டித் தந்து, நிலம் முதலிய தந்து குடியிருத்தினால் தேவர்கள் பலரும் வணங்கும் சிவலிங்கம் எழுந்தருளச் செய்யும் புண்ணியம் வாய்க்கும். இச்செயல்களை நல்ல சிவ பக்தர்களுக்குச் செய்தாலும் அப்புண்ணியம் வாய்க்கும் - 138 -

43. *திருமூல நாதர்அமர் திருக்கோயில் அலகிட்டுப்*
*பெரு(கு)ஆர்வத் தொடுமெழுகிப் பிறங்குசுதைக் கோலமிடின்*
*மருவாரும் மலர்ச்செல்வி வதிந்துஅவர்மா மனைஎங்கும்*
*ஒருநாளும் ஒழியாமே ஒண்பொருளால் அலங்கரிக்கும்*

திருமூலநாதர் எழுந்தருளியுள்ள திருக்கோயிலை, மிக்க ஆர்வத்துடன் அலகிட்டு, வெள்ளசுதைக் கோலமிடின் மணமிக்க செந்தாமரைச் செல்வியாகிய திருமகள், அவர் வீட்டு இடம் எங்கும் இடைவிடாது நாளும் வாழ்ந்து, ஒளி பொருந்திய செல்வத்தால் வீட்டினை அணிசெய்வாள் - 139 -

44. *திங்கள்விழா வருட விழா திவசவிழா இவைபுரிந்து*
*வெங்கடுவால் அலங்கரித்த மிடற்(று)உடைய வில்வவனத்து*
*அங்கணரை வழிபடுவோர் அகல்மனையின் ஒழியாமே*
*மங்கலநல் வினைத்தொழில்கள் வைகலும்வை கலும்வளரும்*

திங்கள் விழா, ஆண்டுநிறைவு விழா, திருக்குட நன்னீராட்டுப் போன்றவற்றின் நினைவு வழிபாட்டுநாள் இவை நடத்தி, விடம் அடக்கிய திருக் கழுத்துடைய வில்வனத்தாரை வழிபடுவோரின் அகன்ற மனைகளில் மங்கல நல்வினைகள் நாடோறும் இடைவிடாது வளரும். - 140 -

45. *எம்பெருமான் வில்வவனத்(து) இறையவன்மா தவர்அமரர்*
*தம்பெருமான் திருவிழாத் தனில்இரதம் தரிசித்தோர்*
*கொம்(பு) அனையா ளொடுவிடை மேற் கொண்டுவரத் தரிசித்தோர்*
*வெம்புமலம் கெடச்சீவன் முத்தர்களாய் வீற்றிருப்பார்.*

வில்வவனத்து இறைவனும், மாதவத்தோர் அமரர் ஆகியோருக்குத் தலைவனுமாகிய திருமூலநாதப் பெருமானை அருள் தரு குங்கும சுந்தரி அம்மனுடன் திருத்தேரில் கண்டு வணங்கியோர், வாட்டிவதைக்கும் மும்மலமும் கெட முத்தர்களாய்ச் செம்மாந்திருப்பர்; - 141 -

46. *செல்வம்மலி வில்வவனச் சிவலிங்கத்(து) அருட்பெருமை*
*சொல்வகையின் முற்றுவதோ தூயமுனி வீர் முனிவர்*
*வல்வினைகள் கெடவேள்வி வளர்த்தபடி கேண்மின் என*
*நல்வினைசெய் சூதமுனி நயந்(து) எடுத்து மொழியுமால்*

இன்பம் மிக்க வில்வவனச் சிவலிங்கத்து அருள்புரியும் பெருமை நம் சொல்அளவில் சொல்லி முடியாதது. தூயமுனிவர்களே முனிவர்கள் தமது வல்வினைகள் கெட வேள்வி வளர்த்த வகை கூறுவேன் கேளுங்கள் என்று புண்ணியச் சூத முனிவர் எடுத்துக்கூறத் தொடங்கினார். - 142 -

மூர்த்தி விசேடச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - 142 -

## 5. வேள்விச் சருக்கம்

1. *திருமலியும் மணிமாடம் செறிந்துபல வளம்துவன்றித்*
*தெய்வ நாட்டைப்*
*பொரும்இறைவர் தவத்துறையில் போந்துவினை முழு(து) இரியப்*
*பூசித்(து) அங்குப்*
*பிரு(கு), அங்கி ரசு, வசிட்டன் காசியபன்அத் திரிகுச்சன்*
*பெருமை சால*
*மருவுகவு தமன்இவர்கள் எழுவரும்மா தவம் புரிந்து*
*வசிக்கும் நாளில்*

பிருகு, அங்கிரசு, வசிட்டர், காசியபர், அத்திரி, குச்சன், பெருமை மிகு கவுதமர் ஆகிய எழுவரும் செல்வம் மலிந்த அழகிய மாளிகைகள் செறிந்து பலவளங்களும் நிறைந்து தேவலோகத்தை ஒத்து விளங்கும் எழுமுனிவர்க்கு இறைவர் எழுந்தருளியுள்ள திருத்தவத்துறைக்கு வந்து, தமது ஊழ்வினை முழுவதும் நீங்கப் பூசனைபுரிந்து வாழும் நாளில் - 143 -

2. *மாதவர்அன் னவர்மைந்தர் பாற்கவரே ஆங்கிரசர்*
*வளர்வா சிட்டர்*
*காதல்செய்கா சிபர்ஆத்தி ரேயர்கவுச் சர்கள் கவுத*
*மீயர் என்றா*
*ஓதும்இவர் எழுபதின்மர் உடங்கிருந்து தம்முள் இது*
*உசாவி னார்கள்*
*தீதில்புரம் வனம்ஆ றிகேத் திரம்திகழ்வி மானம் ஐந்தும்*
*சிறந்த தானம்*

இந்த ஏழுமுனிவர்களின் மக்களாகிய பாற்கவர், ஆங்கிரசர் தவம் வளர் வாசிட்டர், பத்திமிக்க காசிபர், ஆத்திரேயர், கவுச்சர்கள் கவுதமீயர் முதலிய எழுபதின்மரும் கூட இருந்து தீதில்லா ஊர், வனம், ஆறு, சேத்திரம், விமானம், ஆகிய ஐந்தும் சிறந்த இடம் எது என்று தம்முள் கலந்து பேசினர். - 144 -

3. *நெடுங்காலம் தம(து) அறிவின் ஆராய்ந்தும் தெளியாது*
*நெருரேல்என்(று) ஏகி*
*கொடுங்காலன் உயிர்குடித்த கூத்துஅயர்சே வடிக்குழைக்கா(து)*
*அழகர் தம்பால்*
*கடுங்காதல் அன்புடைய தாதையார்தாள் இணை வணங்கிக்*
*கடாவி நின்றார்*
*ஒடுங்காத கருணையினால் எழுவரும்மற்(று) எழுபதின்மர்க்(கு)*
*உணர்த்தி னாரால்*

நெடுங்காலம் தம் அறிவால் ஆராய்ந்தும் தெளிவு ஏற்படாமையால், கொடிய காலனுயிர்க்குடித்த கூத்தாடும் சேவடியனாய், குழைக்காதனாய் உள்ள சிவபெருமான் மீது பெருங்காதலுடைய தம் தந்தையரது இருதிருவடிகளையும் வணங்கித் தம் ஐயம் தீர்க்க வேண்டினார். ஏழு முனிவர்களும் வளரும் அன்புடன் எழுபது முனிவர்களாகிய தம்மக்களுக்கு உண்மை உணர்த்தினர். - 145 -

4. *எத்தகைய புரங்களிலும் பூவாளூர் எனும்புரமும்*
*இலங்கு கானின்*
*உத்தமம்ஆ கியவில்வ வனமும்நதி களின்மலர்கள்*
*உந்தி ஓடி*
*முத்(து)எறியும் பற்குனியும் தலங்களில்சீர் முதிர்ஞானத்*
*தலமும் தெய்வச்*
*சித்திரம்ஆர் சிகரத்தில் கல்யாண சிகரமுமே*
*சிறந்த ஆகும்.*

எத்தகைய ஊர்களிலும் சிறந்தது பூவாளூர், வனங்களில் உத்தமமானது வில்வவனம், நதிகளில் மலர்களை உந்தி வந்து முத்து எறியும் பற்குனி ஆறும், தலங்களில் சிறப்பு முதிர்ந்த ஞானத்தலமும், தெய்வத்தன்மை பொருந்திய அழகிய திருக்கோபுரங்களில் கல்யாண சிகரமுமே சிறந்தனவாகும். - 146 -

## வேறு

5. *அனையபுரம் முதலான ஐந்(து) உறுப்பும் மிகச் சிறந்த*
*தனைநிகரும் ஒருதானம் தக்கதிரு மங்கலமே*
*வனைபுகழ்சேர் அன்பிலென வகுத்தஇரு தலத்திடையே*
*சினைஅவிழ்மென் மலர்ச்சோலை திகழ்தரவீற் றிருக்குமால்*

இத்தகைய ஊர் முதலான ஐந்தும் மிகச் சிறந்ததாய்த் தன்னைத் தானே ஒத்த இடம், தகுதிவாய்ந்த திருமங்கலம், புகழ் அலங்கரித்த அன்பில் என்ற இருதலங்களிடையே கிளைகளில் மலர்ந்த மலர்களையுடைய சோலைகள் விளங்க உள்ளது. - 147 -

6. *அத்தலத்தில் திருமூல நாதர்எனும் அருட்பெயரின்*
*உத்தமத்தில் உத்தமமாய் ஒளிர்சுயம்புச் சிவலிங்கம்*
*எத்திசையில் உள்ளார்க்கும் இனி(து)அருள வீற்றிருக்கும்*
*மெத்தியஅன் புடையீரும் வெட்டெனப்போய்ப் பெறுகென்றான்*

அத்தலத்தில் திருமூலநாதர் எனும் அருட்பெயருடன் உத்தமத்தில் சிறந்த உத்தமமாய் ஒளிவீசும் சுயம்புவின் சிவ லிங்கம் எத்திசை யினர்க்கும் அருள்புரிய எழுந்தருளியுள்ளது. மிக்க அன்புடையநீவிர் விரைந்து சென்று அருள்பெறுக என்றார். - 148 -

7. *அகத்திடை யே எழும் மகிழ்ச்சி முகத்துவழி யாய்அலரத்*
*தகத்தவத்துள் உழக்கின்ற தாதையர்சொல் தலைக்கேளா*
*மிகத் துதித்துப் பணிந்(து)எழுந்து விளங்கும் எழு பதின்மர்களும்*
*உகத்தினும் நின்று அருள் கொழிக்கும் உயர்ஞானத் தலம் அடுத்தார்.*

தவத்தில் தக்கவாறு பழகுகின்ற தந்தையர் சொல்லைக் கேட்டு உள்ளத்துப் பெருமகிழ்ச்சி முகத்துவழி மலர, அவர்களை மிகப்போற்றி, பணிந்து எழுந்து, யுகமுடிவிலும் அழியாது நிலைத்து அருள் கொழிக்கும் உயர்ஞானத்தலமாகிய பூவானூரை அடைந்தனர். - 149 -

### வேறு

8. *வார்ந்தபற் குனியில் தோய்ந்து மரபுளிக் கடன்கள் முற்றித்*
*தோய்ந்தமெய் அன்பி னோடும் திருமூல நாதர் முன்பு*
*நேர்ந்தவைங் காந்தம் ஈர்க்கும் நெட்டிருப்பு ஊசி போலச்*
*சார்ந்தனர் துதிகள் ஆர்த்தித் தாழ்ந்துமற்(று) இதனைச் சூழ்ந்தார்*

நீண்ட பற்குனியில் நீராடி, மரபுப்படிக்கடமைகளை முடித்து, சிறந்த மெய்யன்புடன் திருமூலநாதப் பெருமான் திருமுன்பு, வலிமையான காந்தம் ஈர்க்கும் நெட்டிரும்புஊசிபோலச் சென்றடைந்து, துதித்து, தரையில் விழுந்து வணங்கி இங்ஙனம் எண்ணினர். - 150 -

9. *ஈங்குவந்(து) அடுத்தலோடும் என்னென மொழிகேம் பாரம்*
*நீங்கினார் போலச் சிந்தை நிறைந்தமம் மர்கள் நீங்கி*
*ஓங்கிய(து) ஆத லாலே உயர்ந்தஇத் தலத்து நாமே*
*வீங்கிய போகம் வேட்டல் விதியுமன்(று) உயர்வுமன்றே*

எப்படிக் கூறுவோம் : இங்கு வந்து சேர்ந்ததுமே மனச்சுமை நீங்கினாற் போல மனம் நிறைந்திருந்த அறியாமை நீங்கி அறிவு ஓங்கியது. உயர்ந்த இத்தலத்தில் நாம் உலக இன்பங்களை விரும்புதல் விதியுமாகாது, இத்தலத்தில் உயர்வுதருவதும் ஆகாது. - 151 -

10. *காலஎல் லைகளின் நீங்கும் கடவுளர் போகம் எல்லாம்*
*சாலவன் பிறப்பின் மீட்டும் சார்ந்(து) உயிர் தளர்வ தன்றிச்*
*சீலமெய்ஞ் ஞானா னந்தம் திளைக்கும் அந் நெறியோ காணா*
*மேலென முயன்(று)எல் லோரும் மேவுறு கதிகள் தம்மால்*

மேலானது என்று எல்லாரும் அடைய விரும்பும் திருமால் முதலிய கடவுளர் பதங்கள் எல்லாம், உரிய அவ்வக்கால எல்லைகளில் அவர்களை விட்டு நீங்கும். அதனால் வலிமைவாய்ந்த பிறப்பில் உயிர்கள் மீண்டும் சார்ந்து தளருமே தவிர உயிர்கட்கு உரிய சீலமாகிய மெய்ஞ்ஞான ஆனந்தத்தில் திளைத்தற்குரிய நெறிகாணமாட்டா. - 152 -

11. *வித்தக யோகம் ஆதி விளைத்திடும் அழியா இன்ப*
*முத்தியும் முகுந்தன் ஆதி மொய்த்திடும் கதியும் மன்றக்*
*கைத்(து)எழும் நமதுவேட்கை கைகட வாமல் இனிதே*
*உத்தம மெய்ஞ்ஞானத்தை உறுநெறி முயறல் வேண்டும்.*

திருமால் முதலியோர் மிக விரும்பி வாழும் பத முத்தியை வெறுத்து எழும் நமது விருப்பம், நன்மை தரும் யோக ஞானங்களால் பொருந்துகின்ற அழியாத இன்பம் தரும் முத்தியைக் கைநழுவ விடாமல் உத்தமமாகிய மெய்ஞ்ஞானத்தைப் பெற உரிய வழியில் முயல வேண்டும். - 153 -

12. *மேதகு ஞானம் முக்கண் விமலரால் உணர்வதன்றி*
*ஓ(து)உயிர் வருக்கம் தன்னால் உணர்வ(து) ஒன்(று) அன்றே அந்தச்*
*சேதனப் பொருளாய் உள்ளார் திருவுளம் மகிழும் வண்ணம்*
*தீதறு வேள்வியொன்று செய்தும் என்(று) அதனைச் செய்வார்.*

மேன்மை பொருந்திய ஞானம், முக்கண்களுடைய இயல்பாகவே மலமில்லாத தூயராகிய சிவபெருமானால் உணர்வதே தவிர, உயிர்க்குலத்தால் தாமே உணர்வதன்று. அந்த ஞானப்பொருளாய் உள்ளவர் திருவுளம் மகிழ, குற்றமற்ற வேள்வி ஒன்று இயற்றுவோம் என்று முடிவு செய்து வேள்விக்கு முயன்றார். - 154 -

13. *இட்டிகை கொணர்ந்து வேதி ஆதிகள் இயல்பின் ஆக்கி*
*அட்(டு)ஒளி மணியால் பொன்னால் பாத்திரம் அனைத்தும் ஆக்கி*
*மட்(டு)உமிழ் சோமம்ஆதித் திரவிய வகைகள் எல்லாம்*
*தட்(டு)அற வருவித்(து) அன்னார் தனித்தனி தொடங்கினார்கள்*

செங்கற்கள் கொண்டுவந்து வேள்விக் குண்டம் முதலியவற்றை முறைப்படி அமைத்து, ஒளியுடைய மணிகளால் பொன்னால் பாத்திரம் அனைத்தும் ஆக்கிக் கண்டு, சாற்றினை வெளிப்படுத்தும் சோமப்பூண்டு முதலிய பொருள்களை எல்லாம் குறைவின்றி வரவழைத்து அவர்கள் தனித் தனியே வேள்வி தொடங்கினர். - 155 -

**வேறு**

14. *இருந்து விக்களும் ஈண்(டு) இயமானரும் எல்லாம்*
*கருத்து மிக்(கு)உறு காதலால் தீக்கையைக் கலந்தார்*
*திருத்தன் சன்னிதி தனிற்சிவ னார்தமக்(கு) உரிய*
*பெருத்த வேள்வியைப் பேணுதல் தொடங்கிமற் றவர்தாம்*

நிறைந்த யாகபுரோகிதர்களும், வேள்வி நடத்தும் தலைவர்களும் கருத்துமிக்க அன்பால் விரதநியமத்தை மேற்கொண்டனர். சிவபெருமான் திருமுன்பு அவனுக்குரிய பெரிய சைவசாத்திர வேள்வியைப் பேணத்தொடங்கினர். -156-

15. *இட்டி யேபிர வாக்கியம் அக்னிட் டோமம்*
*முட்டி லாவிதை ஆதியாம் சமத்தைகண் முயன்ற*
*சட்ட காலம்மூன் றினும்சவ னங்கள் மூன்றினையும்*
*கட்டம் நீக்கும்ஓர் கற்பநூல் விதிப்படி கண்டார்.*

வேள்வி, ஓமத்தீ, வேள்விநிறைவில் செய்யப்பெறும் ஓமம் ஆகியவற்றில் தட்டுப்பாடின்றி விதை முதலிய சமத்தைகளை (விறகுகள்) கொண்டு முறைப்படி மூன்று காலத்திலும் துன்பம் நீங்க ஒப்பற்ற கற்ப நூல் விதித்த படி செய்தனர். -157-

**வேறு**

16. *காசில் சாம வேதியர்கள் கானம் இனிது தொடங்கினார்*
*ஏசில் ஓதிர் கணத்தினர் இயற்றி னார்கள் சமுசனையை*
*ஆசில் அத்து வரிக்கணத்தார் ஆத்து வரம்பண் ணினர் நாட்டும்*
*தேசு மலிஎண் கோணம்உறச் செய்த யூபம் அலங்கரித்தார்.*

குற்றமற்ற சாமவேதம் ஓதுவார், சாமகானத்தை இனிதுதொடங்கினார்; ஏசுதல் இல்லா இரண்டாம் யசுர் வேதம் ஓதும் குழுவினர் ஆத்துவரம் பண்ணை, ஒளிமிக்க எண்கோணம் பொருந்த வேள்வித்தூணை அலங்கரித்தனர். -158-

17. *நானா விததெய் வப்பசுக்கள் பலவும் நாணால் யாத்திட்டு ஓர்*
*ஆனா மறையின் மந்திரத்தால் அவற்றைப் படுத்து வபை எடுத்துக்*
*கான்ஆர் தழல்ஆ குதிசெய்தார் கரைந்த ஏனை அங்கத்தின்*
*ஊன்ஆ குதியும் விதியானே உஞற்றி னார்கள் வழுவாமே.*

பலவகைப்பட்ட தெய்வத்தன்மைவாய்ந்த பசுக்களை நாண் கொண்டு பிணித்து, ஒப்பற்ற வேதமந் திரத்தால் அப்பசுக்களை அகப்படுத்திக் கொன்று அவற்றின் வயிற்று நாபிக்குள் இருக்கும் வெண்துகில் போன்ற புரையாகிய புலாலை எடுத்து மணம் மிக்க வேள்வித் தழலில் ஓமப்பலி இட்டனர். பிற உறுப்பு ஊனையும் விதிப்படி ஓமப்பலியிட்டனர். -159-

18. *வேள்விச் சபையில் உள்ளாரை இறந்த ஏனை அந்தணரை*
*ஆள்வித் தகனென் றேதுரித் திட்(டு) ஆற்(று)அப் பூசை இயற்றினார்*
*கேள்வித் துறைமா தவர்தம்பால் கிளந்த பாகம் இனி(து) ஏற்று*
*வாள்விட் டெரிக்கும் மணிமவுலி வான நாடர் மகிழ்கூர்ந்தார்.*

வேள்வி அவையில் உள்ளவரைத் தவிர, ஏனைய அந்தணர்களை ஆள்வித்தகன் என்று குறித்துச் செய்யும் பூசை இயற்றினர். ஒளிவீசும் அழகிய திருமுடிசூடிய தேவர்கள், கேள்வித் துறை வல்ல மாதவர்களிடம் தத்தமக்கு ஒதுக்கப்பட்ட பாகத்தை ஏற்று மகிழ்ச்சி மிகுந்தனர். - 160 -

19. *அமலன் வில்வ வனநாதன் அமரர்க்(கு) அமரன் தனைக் குறித்து*
*விமல வேள்வி மாதவர் செய்விளக்கம் உரைத்தாம் முனிவீர்காள்*
*பமரம் முரலும் மலர்க்கடவுள் படர்ந்த படியும் கேண்மின்என*
*உமிழ்தண் சுவையின் அமிழ்தம் என உரைக்கும் சூத மாதவனே.*

இயல்பாகவே மலமற்றவனும், வில்வனத்தலைவனும், தேவர்க்கெல்லாம் தேவனும் ஆகிய பெருமானைக் குறித்து மாதவர் வேள்வி செய்த விளக்கத்தைக் கூறினோம். முனிவர்களே இனி, வண்டுகள் முரலும் தாமரையில் எழுந்தருளிய நான்முகன் வந்ததையும், கேளுங்கள் என்று அமுதம் வெளிப்படும் சுவை பொருந்தச் சூத மாதவன் கூறினான். - 161 -

வேள்விச் சருக்கம் முற்றிற்று
ஆகத் திருவிருத்தம் 161.

## 6. பிரமன் வரவுச் சருக்கம்

1. *இன்னணம் மகம்தவர் இயற்றுழி பூலோக*
*நன்னர்வளம் நோக்கநறு மாமலரின் மேலோன்*
*தன்இயல்பி னால்தமது லோகமதின் நீங்கி*
*அன்னம்மிசை ஊர்ந்துவெளி ஆற்றின்இயல் கின்றான்*

இவ்வாறு முனிவர்கள் வேள்வி இயற்றிய போது, இப்பூவுலகின் நன்மை பொருந்திய வளம்காண, தாமரை இருக்கையன் ஆகிய நான்முகன், தன்னியல்பாகப் பிரம லோகத்தை நீங்கித் தன் ஊர்தியாகிய அன்னப் பறவை ஏறி விண்வெளியில் சென்றான். - 162 -

2. *வில்வளரும் மாடம்மலி வில்வவனம் நேரே*
*எல்வளரும் வான்நெறிஇ யங்கலுறு காலைக்*
*கல்வரை எனக்கடவுள் அன்னம் அசை யாமே*
*நில்வினைஅ தாய்அதுதன் நெஞ்சம் உணர்(வு) எய்த*

ஒளிவளரும் மாளிகைகள் நிறைந்த வில்வவனத்தின் மேல் நேரே, ஒளிவளரும் வான் வெளியில் சென்று கொண்டிருந்தபோது, தெய்வத் தன்மையுடைய அன்னம் கல் மலைபோல அசையாது மேற் செல்லாது, நல்வினை காரணமாக அது நெஞ்சில் தோன்ற நின்றது. - 163 -

3. *முன்பின்இரு பக்கம்இரு நால்திசையும் முட்டி*
*வன்புகுறை கின்றமட அன்னம்அதை நோக்கா*
*என்படுவ(து) ஈ(து)என இலங்குமுடி வேதன்*
*அன்பினொ(டு) பார்த்தனன் அகன்ற புவி தன்னை*

முன்னும் பின்னும் இருபக்கங்களிலும் எண்திசைகளிலும் முட்டித் தன்வலிமை குறையும் இளஅன்னத்தைப் பார்த்து இதுபகு என்ன நேர்ந்தது என்ற ஒளி விளங்கும் முடி சூடிய நான்முகன் அகன்ற நிலவுலகைப் பார்த்தான். - 164 -

4. *பார்த்தளவில் வில்வவன நாதர்எதிர் பண்ணும்*
*தீர்த்தர்விழை ஆகுதிகள் தீம்புகைமு கத்தின்*
*ஆர்த்த அவர் வாயின்மறை அம்செவிநி றைத்த(து)*
*ஓர்ந்(து) இது சிறந்ததலம் ஆகும் என உன்ன*

பார்த்த அளவிலேயே வில்வனநாதர் திருமுன்பு புனிதர்கள் வேள்வி இயற்றும் ஓமப்பலிகளின் புகை தம் முகத்தில் படிய அப்புனிதர் கூறும் மந்திர ஒலி தமது அழகிய செவியை நிறைத்ததைக் கவனித்து இது சிறந்த தலமாகும் என்று எண்ணினான். - 165 -

## வேறு

5. *அச்சமும் அன்பும் தோன்ற அதிசய மனத்தன் ஆகி*
*வெச்சென வோடு தாண்என்(று) எழுந்தவேர் விளங்கு மெய்யன்*
*உச்சியிற் குவித்த கையன் ஒலிமறை துதிக்கும் நாவன்*
*நச்சிய ஊர்திவிட்டு நண்ணினன் பூவா ளூரை*

இவ்விடம் காணாது செல்லுதல் தவறு என்ற எண்ணத்தால் அச்சமும், காண வேண்டும் என்ற அன்பும் தோன்ற, அதிசயித்த மனத்துடன் உடல்வெப்பம் மிக, தண்ணிய வியர்வை விளங்கும் மெய்யனாய், உச்சியிற் குவித்த கையனாய், மறை ஒலி துதிக்கும் நாவனாய், விரும்பி ஏறி வந்த ஊர்திவிட்டு இறங்கிப் பூவாளூரை அடைந்தான். - 166 -

6. பெருமறை வாதம் சில்லோர் பிரமவா தங்கள் சில்லோர்
கருமவா தங்கள் சில்லோர் காழ்அறு ஞானம் சில்லோர்
மருவிய கணிதம் சில்லோர் வழங்கிய நீதி சில்லோர்
பொருவில்கற் பங்கள்சில்லோர் புராணவா தங்கள் சில்லோர் - 167 -

சிறந்த பெரு மறைகளில் விவாதிப்போர் சிலர், பிரம்மம் பற்றி விவாதிப்போர் சிலர், வினைபற்றி விவாதிப்போர் சிலர், குற்றமற்ற ஞானம் பற்றி விவாதிப்போர் சிலர், பொருந்திய கணிதம் பற்றிச் சிலர், வழங்கும் நீதி பற்றிச் சிலரும் ஒப்பற்ற மந்திர சாத்திரம் ஆகிய கற்பங்கள் பற்றிச் சிலரும் புராணம் பற்றிச் சிலரும் அங்கு விவாதிப்பதைக் கண்டான் - 167 -

7. சிலர்கள்ஆ கமத்தின் வாதம் சிலிர்வியா கரண வாதம்
சிலர்மிகு நிகண்டி ன் வாதம் சிலர்கள்காப் பியத்தின் வாதம்
சிலர்கள்நா டகத்தின் வாதம் சிலர்அலங்கார வாதம்
சிலர்தனுவேத வாதம் சிலர்ஏனைக் கலையின் வாதம்

ஆகமம், வியாகர்ணம், நிகண்டு, காப்பியம், நாடகம், அலங்காரம், தனுர்வேதம், பிறகலைகளைப் பற்றி ஆங்காங்குச் சிலர் விவாதிக்கக் கண்டான். - 168 -

8. இவ்வகை வாதம் எல்லாம் இருடியர் செய்யாநிற்பச்
செவ்விய தெய்வ வேள்வி சிறந்(து) எதிர் விளங்கித் தோன்ற
அவ்வியம் அகன்ற சிந்தை அயன்மிக மகிழ்ந்து வல்லே
கவ்வைஅம் புனலில் தோய்ந்து கடன்கழித்(து) அடுப்பச் சென்றான். -169-

இவ்வகைப்பட்ட விவாதங்களையெல்லாம் முனிவர்கள் செய்ய, சிறந்த தெய்வத் தன்மை வாய்ந்த வேள்வி சிறந்து எதிரே தோன்ற, வஞ்சனையற்ற மனத்து நான்முகன் மிகமகிழ்ந்து; விரைந்து ஆரவாரத்துடன் ஓடும் பற்குனியில் நீராடி நீர்க் கடன்கழித்து வேள்விச் சாலையை நெருங்கிச் சென்றான். - 169 -

9. இனி(து)உற வேள்வி ஆற்றும் இருடியர் முதலோர் எல்லாம்
கனியொடு கந்த மூலம் கையுறை யாக ஏந்திப்
புனிதமென் மலரி னானைப் போந்(து)எதிர் கண்டார் அன்னான்
அனையவர் தம்மைக்கையால் அமைத்(து)உயர் கோயில் புக்கான்.

நான்முகன் வருவது கண்ட வேள்வி இனிது செய்யும் முனிவர்கள் முதலியோர், கனிகள், கிழங்குவகை ஆகியவற்றைக் காணிக்கையாக ஏந்தி வந்து புனிதத்தாமரைக்குரிய நான்முகனை எதிரே கண்டார். அவர்கள் எல்லாரையும் தம்கையெடுத்து வாழ்த்தி அவன் திருக்கோயிலுட் புகுந்தான். - 170 -

10. *மாதவர் மருங்கு சூழ மந்திரம் புகுந்த வேதன்*
*தீ(து)அற எதிரே தோன்றும் திருமூல நாதர் செய்ய*
*பாதபங் கயத்தின் வீழ்ந்து பணிந்(து) எழுந்(து) ஆடிப்பாடிக்*
*காதலின் வலம்வந்(து) என்னைக் காத்தி என்(று) இரந்து பின்னும்*

தவத்தோர் பக்கமெல்லாம் சூழக் கோயிலுட் புகுந்தவன், தீதுகள் கழிய எதிரில் தோன்றிய திருமூலநாதரை அவரது செந்தாமரைத் திருவடியில் வீழ்ந்து வணங்கி எழுந்து ஆடியும் பாடியும் அன்பினால் வலம் வந்து என்னைக் காத்தருள்க என்று வேண்டினான். மேலும், - *171* -

11. *இத்தலப் பெருமை சற்றும் எண்ணுறா எளியனேற்குப்*
*பத்திதந்(து) அருள வேண்டிப் படர்சிறை அன்னம் தன்னை*
*உத்தம பெயரா வண்ணம் உம்பரில் தடையச் செய்தாய்*
*பொத்துமெம் பிழையை ஈங்குப் பொறுத்தி என்(று) உரைத்து மீண்டான்*

உத்தமனே, இத்தலத்தின் பெருமையைச் சிறிதும் எண்ணாத எளிய எனக்கு அன்பினை அருளித் திருவருள் புரிய, பெரிய சிறகுடைய அன்னப்பறவையை அதுமேற் செல்லா வண்ணம் வானத்தில் தடைபடுமாறு செய்தாய். பாராது மூடி மறைத்த என்பிழையைப் பொறுத்தருள் என்று வேண்டி மீண்டான். - *172* -

12. *அந்திவந்து ஆற்றும் வேள்வி அந்தணர் முகத்தின் நோக்கி*
*இந்தலைப் பகத்தின் நாதர் இன்அருட்(கு) உரியராவீர்*
*எந்(து)இனி வேறுஅப் பால்போய் எய்திடும் கருமம் என்னா*
*மந்திர வேள்விச் சாலை மலர்முகத் தோடு புக்கான்*

அந்தி வேள்வி ஆற்ற உள்ள அந்தணர்களைப்பார்த்து. இவ்வுலத் தலைவனான திருமூலநாதரின் இனிய அருளுக்கு உரியராயினீர். இனிப்பிறவிடம் சென்று அடைய வேண்டிது உமக்கு இல்லை என்று கூறி வேள்விச் சாலைக்குள் மகிழ்ச்சியுடன் புகுந்தான். - *173* -

13. *சாலையை அடுத்த வோடும் தாபதர் தயங்கும் கஞ்சம்*
*ஆலயம் ஆக்கி னானுக்(கு) ஆதனம் அருக்கி யங்கள்*
*மாலையின் உதவித் தீங்காய் வண்கனி ஆதி நல்கி*
*வேலையின் அமிழ்தம் என்ன விழுத்துதி விளம்பிச் சொல்வார்*

நான்முகன் வேள்விச் சாலையை நெருங்கியதுமே சடையுடைய சுரவியர் தாமரை இருக்கை கொண்ட அவனுக்கு இருக்கை தந்து, படையலிட்டு, நீர் இறைத்து, முறைப்படி தீங்காய் கனி முதலியன நல்கிப் பாற்கடல் அமுதம் என்று சொல்லத்தக்க மேலான துதிகூறினார். - 174 -

14. *அன்னயிர்(கு) உயர்ந்தோன் நீஇங்(கு) அடுத்தலால் அமலர் தம்பால்*
*என்றும்அன் பில்லேம் செய்யும் எழில்மகம் முற்றிற்றே யாம்*
*மன்னிய வில்வ மூல வரதர்க்கும் மகிழ்ச்சி யேயாம்*
*துன்னிய அவிகள் சாலச் சொரிந்துசெய் வேள்வி தன்னால்*

அத்தகைய உயர்ந்தவனாகிய நீர் இங்குவந்ததால் சிவபிரான்பால் மிக்க அவி சொரிந்து செய்யும் அன்பினால் பாதுகாப்புச் செய்யும் அழகிய வேள்வி நிறைவு பெற்றது. நும்வரவு என்றும் நிலைத்த இறைவனுக்கும் மகிழ்ச்சி தந்தது. - 175 -

15. *நாங்களும் வில்வ மூல நாதனார் அருளால் வேள்வி*
*ஓங்கிய பயனைச் சால உற்றனம் அதுவு மன்றி*
*நீங்கரும் பிரபஞ் சத்தின் நிகளமும் இன்றே நீத்தாம்*
*பாங்குறும் பரமா னந்தப் பரவையுள் படிந்தாம் என்றார்*

நாங்களும் வில்வமூலநாதர் திருவருளால் வேள்விப் பெரும் பயனை மிகப்பெற்றோம்; மேலும் நீங்குதற்கரிய உலகத்தளையும் நீங்கினோம்; பாங்கான மேலான இன்பக்கடலில் தோய்ந்தோம் என்று - 176 -

16. *செஞ்சொலால் இனைய கூறித் திசைமுக னோடும் அங்கண்*
*எஞ்சிய வேள்வி ஆற்றி இனியமா புண்ணி யங்கள்*
*விஞ்சுற வளரும் சுத்தி யேகனி தினத்தின் மெய்யார்*
*மஞ்சனுக்(கு) உரிய நெய்தோய் வடைஅழல் மடுத்திட் டாரால்*

இணக்கமான சொற்களால் இங்ஙனம் கூறி, நான்முகனோடு கூடி எஞ்சிய வேள்வி முடித்து, இனிய பெரும் புண்ணியங்கள் மிக்குற வளரும் தூய்மை மிக்க அந் நன்னாளில் நான் முகனுக்கு உரிய நெய்தோய்ந்த வடையைத்தந்து உண்பித்தனர். - 177 -

## வேறு

17. *சனகன்முத லோர்இறைஞ்சும் தமனியநூ புரமலர்த்தாள்*
*அனகர்மகிழ் உமையோடும் அடல்மழவெள் விடை மேலால்*
*இமையவரும் பூதகணம் எம்மருங்கும் மிக நெருங்க*
*முனிவர்சொரி வடை அவிதம் முகம்கமழ எதிர் நின்றார்*

முனிவர் சொரிந்த வபை ஆகிய அவிப்பலிப்புகை தம் முகத்தில் கமழ, சனகாதி முனிவர் முதலியோர் இறைஞ்சும் பொற்சிலம்பு பணிந்த திருவடியினராகிய திருமூலநாதர் உமையம்மையுடன் வெற்றி மிக்க விடை மேல் ஏறித்தம்முள் இனமான பூதகணம் எவ்விடத்தும் மிக நெருங்க, எதிர் தோன்றியருளினார். - 178 -

18. *சயசயஎன்(று) ஏத்தெடுத்துத் தனிநெடுவா னிடைஎங்கும்*
*வயநெடுவேல் அமரர்சொரி மலர்மாரி நிலம்மறைப்ப*
*இயம் முழுதும் பலர்இயம்ப எதிர்நின்றார் தமைநோக்கி*
*அயன்நெடுமா தவர்பலரும் அஞ்சலியோ(டு) எழுந்திருந்தார்.*

ஒப்பற்ற நீளவானிடை நெருங்கிய வெற்றி பொருந்திய வேல் ஏந்திய தேவர்கள், சய சய என்று ஏத்தொலி கூறிச் சொரிந்த மலர் மழை நிலத்தை மூட, பலர் இன்னிசைக்கருவி முழக்க, தம் எதிரே தோன்றிய திருமூலநாதரைக் கண்டதும் நான்முகனோடு முனிவர்களும் வணங்கிக் கொண்டே இருக்கைவிட்டு எழுந்தனர் - 179 -

19. *ஆராத காதலினால் அனைத்(து) எலும்பு நெக்(கு) உடைய*
*வேர்ஆட உடல்முழுதும் விழித்துணைகள் பொழிகின்ற*
*நீர்ஆகத் திடைஇயிர்ந்த நிறைநீற்றின் வண்ட லிடப்*
*பார்ஆர விழுந்(து) எழுந்து பன்முறை சூழ்ந்(து) ஏத்துவரால்*

தெவிட்டாத பேரன்புடன் எலும்புகள் நெக்குடைய, உடல் முழுதும் வியர்வை அரும்ப, விழிகள் பெருக்கும் மகிழ்ச்சிக் கண்ணீர் உடம்பில் அள்ளிப்பூசிய திருநீற்றை வண்டலாக ஆக்க, நிலத்தில் நன்குபடிய வீழ்ந்தும் எழுந்தும் பலமுறை வணங்கிப் போற்றினர் - 180 -

## வேறு

20. *புள்ஆ கியநான் முகன்நீள் முடியும்*
*போர்ஏ னமதா கியமால் பதமும்*
*தள்ளா வலியும் மனமும் தலைமைச்*
*சலமும் தளரத் துருவிப் பணியும்*
*நள்ளார் அமுதச் சுவையே சரணம்*
*நரர்ஆ யினும்நன் மையின்ஏத் துனர்பால்*
*விள்ளா தவிளங்(கு) ஒளியே சரணம்*
*மெய்ஞ்ஞா னதலத்(து) இறைவா சரணம்.*

அன்னப்பறவையாக நான்முகனும், போரில்வல்ல காட்டுப்பன்றியாகத் திருமாலும் முறையே திருமுடியையும் திருவடியையும் தேடி, தமது குன்றாத வலிமையும் மன உறுதியும், தலைமைப் போட்டியும் தளர்ந்ததால் பணியும் செறிவுமிக்க அமுதச்

சுவையானவனே; மனிதராயினும் நன்மையுறப் போற்று கிறவரிடத்து வேறுபடாத ஒளியோடு விளங்கும் ஒளியே, மெய்ஞ்ஞான தலத்து இறைவனே உனக்கு அடைக்கலம். - 181 -

21. *தண்ஆர் மதிவேய்ந் தபிரான் சரணம்*
*தழலா டியசங் கரனே சரணம்*
*பண்ஆர் தருவீ ணைதரா சரணம்*
*பனிமால் வரையின் மருகா சரணம்*
*கண்ஆர் தருவாள் நுதலாய் சரணம்*
*கடமா கரிஈர் உரியாய் சரணம்*
*விண்நா டர்விழுத் துணைவா சரணம்*
*மெய்ஞ்ஞா னதலத்(து) இறைவா சரணம்*

தண்ணிய பிறை சூடிய பெருமானே, தழல் ஏந்தி ஆடிய சங்கரனே, பண்ணோடு பொருந்திய வீணை இசைத்தவனே, இமவான் மருகனே, நெற்றிக்கண் பொருந்திய ஒளியுடைய திருநுதல் உடையவனே, மதம்மிக்க பெரிய யானையின் ஈரத்தோல் போர்த்தியவனே, தேவர்களுக்கும் மேலான துணைவனே, மெய்ஞ்ஞானத்தலத்து இறைவனே உமக்கு அடைக்கலம். - 182 -

22. *சங்கக் குழையாய் சரணம் சரணம்*
*சங்கத் தலைவா சரணம் சரணம்*
*கங்கைச் சடையாய் சரணம் சரணம்*
*கங்கைத் தலைவா சரணம் சரணம்*
*பங்கத்(து) உமைவாழ் பவனே சரணம்*
*பங்கத்(து) எமைநீப் பவனே சரணம்*
*வெங்கண் பணிஆ பரணா சரணம்*
*மெய்ஞ்ஞா னதலத்(து) இறைவா சரணம்*

சங்கக் குழையணிந்தவனே, தமிழ்ச் சங்கத்தலைவனே, கங்கையைச் சடைத் தலையில் சுமந்தவனே, கங்கைக்குத் தலைவனே, ஒருபாகத்து உமையோடும் வாழ்பவனே, நாங்கள் குற்றம் புரியாது நீங்கச் செய்பவனே, கொடுங்கண்களையுடைய பாம்பணி அணிந்தவனே, மெய்ஞ்ஞான தலத்து இறைவனே உமக்கு அடைக்கலம். - 183 -

23. *மணம்ஆர் தருவில் வவனத்(து) ஒளிரும்*
*மணியே நினதாள் உறும்அன் பினரே*
*துணிவார் சமுசா ரஅலைத் திரளைத்*
*துணியா அடி யே முழ்நின் பத்தியினால்*
*பிணியார் சமுசா ரநெடுந் திரைகள்*

*பிறழும் பிறவிக் கடலைக் கடவாத்*
*திணிஆர் அருள்வான் கரைசே ரும்வகை*
*செய்யாய் சிவசங் கரஎன் றனரால்.*

சிவசங்கரனே மணம் மிக்க மரமாகிய வில்வ மரங்கள் அடர்ந்த காட்டில் ஒளிரும் மணியே, உன் திருவடியை அடைக்கலமாகப்புகும் அன்பரே சமுசார அலைக்கூட்டத்தைக் கடப்பர். அதனைக் கடவாத நாங்களும் உன் பத்தி காரணமாக, அப்பிறவிக்கடலைக் கடந்து, நிறைந்த உனது திருவருளாகிய மேலான கரைசேரும் வகை செய்தருள்க என்று வேண்டினர். - *184* -

## வேறு

24. *இருடியர் எழுபதின் மரும்இருள் மலவலி யினைநூறிப்*
*பொருள்களின் உயரிய பொருள்எனும் அடிநிழல் புகுமாறே*
*உருகினர் துதி செய அவர் உளம் அறிதரு உமை பாகர்*
*தெருள்தரும் அருளினை அருளிய திகழ்திரு உளரானார்*

முனிவர்கள் எழுபதின்மரும் தம் ஆணவ மன வலிமையை அழித்துப் பொருள்களில் உயர்ந்த பொருளாகிய திருவடிநிழல் புக உருகித் துதிசெய்ய, அவர்களது உள்ளம் அறிந்த உமைபாகர், அவர்கள் உரிய தெளிவு பெற அருளும் அருளினை அவர்கட்கு வழங்கும் பொருளாயினார். - *185*

25. *அடர்சிறை அனம்வெளி வழிநடை தடையுண அயன்மேவி*
*இடர்கெட வழிபட இருடியர் அவனொடு(டு) எஞ் சியவேள்வி*
*நடவலும் இறையவர் வரஇது இனியவர் நலஞானம்*
*உடையவன் இடைபெறல் உணர்மின்என்று உரைசெயும் உயர்சூதன்.*

அடர்ந்த சிறகுகளையுடைய அன்னத்தின் விண்வெளிச் செலவு தடைபட, பிரமன் தன் இடர் கெட வழிபடவும், முனிவர்கள் அவனுடன் சேர்ந்து எஞ்சிய வேள்வியை நடத்தி முடிக்கவும் அதன் பொருட்டு ஞானவடிவனாகிய சிவபெருமான் எழுந்தருளல் கூறினோம். இனி, அவர்கள் ஞான நலத்தை ஞானமே வடிவாக உடையவனிடம் பெற்றதை உணருங்கள் என்று உயர்சூத முனிவர் கூறினார் - *186* -

பிரமன் வரவுச் சருக்கம் முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம் 186

## 7. ஞான உபதேசச் சருக்கம்

1. *மாதவர் எழுபதின் மருக்கும் வள்ளலார்*
*மேதகு ஞானம்அங்(கு) அருள வேட்டமை*
*பாதபங் கயப்பணி அலது மற்(று) உறாக்*
*காதல்செய் நந்திதன் கருத்தில் தெள்ளினான்*

எழுபது மாதவர்க்கும் சிவபெருமான் மேன்மை பொருந்திய ஞானம் உபதேசிக்க விரும்பியதை, அவனுடைய திருவடித் தாமரைக்குப் பணிசெய்வதல்லது வேறு செய்யாக் காதல் மிக்க நந்திதேவர் மனத்தில் தெளிந்தார். - 187 -

2. *படை எலாம் மிடைதரு பூதநாதரை*
*அடைதரும் அமரரை அங்கண் வே(று)உற*
*மிடைதரும் எவரையும் விலக்கி னான்அரோ*
*உடையவன் திருவுளக் கருத்தை உன்னியே.*

பெருமானது திருவுளம் அறிந்த நந்திதேவர், படைகள் தாங்கிய பூதநாதர்களையும் தேவர்களையும் அங்கிருந்து வேறு இடம் செல்லச் செய்து அங்கு இருந்த எத்தகையவரையும் அங்கிருந்து விலக்கினான். - 188 -

3. *ஓ(து)இரு வினைச்சமம் உற்று நின்றிடு*
*மாதவர் எழுபதின் மருக்கு நாதனார்*
*தீ(து)அற அருள்விழி சேர்த்திக் கைத்தலம்*
*பாதபங் கயம்அவை பதித்திட் டார்சிரம்*

சாத்திரங்களில் கூறியவாறு இருவினையும் நேரான எழுபது மாதவர்களுக்குத் தீதெல்லாம் தீர அருள்விழி சாத்தி(கடைக்கண் நோக்கு - நயன தீக்கை) தனது கைத்தலம் சாத்தி (ஸ்பரிச தீக்கை) தம் திருவடிகளையும் அவர்கள் தலையில் பதித்தருளினார்(திருவடி தீக்கை). - 189 -

4. *திருஅருள் கொடுத்தபின் திகைப்பு நீங்குற*
*மருவிய சிவம்என வந்த தன்னையும்*
*மருளின்நல் லதைஅறி யாத ஆவியும்*
*இருள்மல இயல் பையும் இயம்பப் புக்கனர்*

திடும் என்று தம்பால் வீழ்ந்த திருவருளால் முனிவர்களுக்கு ஏற்பட்ட திகைப்பு நீங்கியபின், அருள வந்த சிவம் ஆகிய தன்னையும், தெளிந்த அறிவின்மையால் பதியியல்பை அறியாத உயிரையும், இருள் மலமாகிய ஆணவ மல இயல்பையும் கூறப்புகுந்தார். - 190 -

## வேறு

5. *எண்இ லாதன அண்டம்மற்(று) அவை எலாம் ஈண்ட*
*நண்ணும் மாயையோ சடம்நவில் மலங்கள்மூன் றானும்*
*வண்ணம் வே(று)உற அவத்தைஆ தியின்வருந்(து) ஆன்மாப்*
*பண்ணு வான்நலன் அருளினாற் படைப் பவன் யானே*

அண்டங்கள் எண்ணற்றன. அவை திரள வந்த மாயை அறிவற்றது. மும்மலத்தாய் செயல்கள் வேறுவேறாக அதனால் வரும் துன்பத்தால் வருந்தும் ஆன்மாவுக்கு நலன் செய்ய, அவ் ஆன்மாக்களை உலகில் பிறப்பிக்கின்றவன் நானே. - 191 -

6. *சிவன்உ ருத்திரன் சச்சிதா னந்தன்தே வேசன்*
*பவன்ப ராபரன் நிற்குணன் நின்மலன் பழையோன்*
*நவைஅ றுப்பவன் எனமறை நவில்பவன் எவனோ*
*அவன்எ னத்தவ முனிவர்காள் எமைஅறி மின்களோ.*

சிவன், உருத்திரன், சச்சிதானந்தன், தேவேசன், பவன், பராபரன், நிர்க்குணன், நின்மலன், பழையோன், நவை அறுப்பவன் என்று மறைகளால் கூறப்பெறுகின்றவன் எவனோ அவனே நான் என்று தவமுனிவர்களே எம்மை அறிந்து கொள்ளுங்கள். - 192 -

7. *அண்டம் ஓர்அணு எனப்பெரி தாய்அணு அண்ட*
*பிண்ட மேஎனச் சிறியதாய்ப் பெயர்தரா நிறைவாய்*
*விண்டி டாதமெய் அருளினால் அலதுமே வாதாய்க்*
*கொண்ட தாம்எம(து) இயல்பையா வரும் குறித்(து) அறியார்.*

அண்டம் ஓர் அணு என்று கூறுமாறு பெரியனாய்; அணு அண்ட பிண்டமே என்று கூறுமாறு நுண்ணியனாய், நிலைமாறா நிறைவானவனாய், யாராலும் இப்படியன் என்று சொல்ல இயலாதவனாய், மெய்யருளாலன்றிப் பொருந்தாதவனாய் உள்ள எமது இயல்பை யாராலும் உருவம் குறித்துக் கண்டறியார். - 193 -

8. *நம்ம னோர்புரி தவப்பயன் நொண்(டு) எளி(து) அருளச்*
*செம்மை ஆதியின் அவயவத் திருவுரு எடுத்தாம்*
*எம்மை ஓர்ந்தவர் எம(து) இயல் உருவமும் ஓர்வார்*
*மம்ம ராளர்இவ் அவையவ வடிவமும் ஆய்ந்(து) அறியார்*

உம்மைப் போன்றவர் புரியும் தவப்பயனை முகந்து எளிதில் அருள்புரிய ஆதிகாலத்தில் செம்மையான உறுப்புகளுடன் கூடிய திருவுரு எடுத்தோம். எமது உண்மை இயல்பை ஆய்ந்தறிந்தவர், நாம் இயங்க மேற்கொள்ளும் உருவத்தையும் ஆராய்ந்து அறிவார். அறியாமையுடையார் இவ்வகையிலான உறுப்புகளுடன் கூடிய வடிவத்தையும் அறியார். - 194 -

9. *விமல யோகமும் போகமும் வீடும்மெய்ந் நூலும்*
*அமரர்ஆ தியர்க்(கு) ஆற்றும்ஐந் தொழிலும்ஏ னையவும்*
*எமது பாவனைத் திருவுரு இல்லையேல் இலவாம்*
*எமது பாவனைத் திருவுரு உண்டெனில் உண்டாம்*

குற்றமற்ற யோகநிலையும் போகநிலையும், வீடுபேறும், மெய்ஞ்ஞான நூலும் தேவர் முதலியோரிடத்துப் புரியும் ஐந்தொழிலும் பிறவும் எமது பாவனைத் திருவுருவால் உண்டாவன. பாவனைத் திருவுரு இல்லையேல் அவையும் இல்லையாகும். - 195 -

10. *இருண்ட ஆணவம் அகன்றவார் அறி(வு) எம(து) உருவாம்*
*தெருண்டு பார்மினோ செய்தவ முனிவரீர் மலமாய்*
*மருண்ட மாயையைக் கடந்தநாம் மாயையின் உருவாம்*
*வெருண்ட ஆருயிர் எனஒரு காலத்தும் மேவாம்*

அறியாமையே வடிவான ஆணவமில்லாத அகன்ற நீள் மெய்ஞ்ஞானமே எமது உரு. முனிவர்களே தெளிவுற நோக்குங்கள். மலமாய் திரிபுணர்ச்சி தரும் மாயையைக் கடந்த நாம் மாயையின் வடிவமாய் விளங்கும் உயிராக ஒரு காலத்தும் பொருந்த மாட்டோம். - 196 -

11. *மாயை யால்இயற் றிடப்படும் உருவெலாம் நிலையா*
*மாயு மால்எம(து) உருவம்எஞ் ஞான்றும்மா யாதால்*
*மாயன் ஆதியர் மாயையின் உருஎடுத்(து) எடுத்து*
*மாயும் நீர்மையர் அவர்பதி எனவர மாட்டார்.*

மாயையால் ஆன உருவங்கள் நிலையான்அழியும். எமது உருமெய்ஞ்ஞான உருவாதலால் எந்த ஒரு காலத்தும் அழியாது. திருமால் முதலியோர் மாயை உரு எடுத்து எடுத்து இறக்கும் தன்மையர். அந்நிலையில் அவர்கள் பதியல்லர். - 197 -

12. *மாயன் மாமலர் அயன்இவர் மாதவப் பயத்தால்*
*மேயி னார்திதி சிருட்டி என்(று) இவை விளம்(பு) இவர்க்கும்*
*தூய தாகிய திதியொடு சிருட்டியும் துடைக்கும்*
*நாயன் ஆகிய நமையன்றி நண்ணுவ(து) இலையே.*

திருமால் நான்முகன் ஆகிய இவர்கள், தமது தவப்பயனால் முறையே காத்தல் படைத்தல் புரிகின்றனர், துடைக்கும் தலைவனாகிய நம் அருளாலன்றி, இவர்கள் தூயதாகிய காத்தலும், படைத்தலும் செய்தல் இயலாது. - 198 -

13. *அலகிலாதன உயிர்எனப் படுவன அவைதாம்*
*நிலவும் ஆணவத் தனபல நிறைந்தஆ ணவத்தோ(டு)*
*உலைவ(வு)இ லாக்கரு மத்தன பலஉ ரைத் தவற்றோ(டு)*
*இலகு மாயைய பலஎன மூவகைப் படுமால்*

உயிர்கள் அளவற்றன. அவை ஆணவம் மட்டுமே உடைய விஞ்ஞானகலர், ஆணவம் கன்மம் இரண்டும் உடைய பிரளயாகலர், ஆணவம், கன்மம், மாயை மூன்றும் உடைய சகலர் என்றும் மூவகைப்படும். - 199 -

14. *அநாதி முத்தனாய் இருப்பவன் அரன்எனும் நாமே*
*அநாதி பந்தமாய் இருப்பன ஆருயிர் அனைத்தும்*
*அநாதி முத்தன்ஆ கியஎம(து) அருளினால் அந்த*
*அநாதி பந்தம்நீங் குறஅனு பந்தமும் அடுக்கும்*

அநாதி முத்தன் அரனாகிய நாம் மட்டுமே. அநாதியே மலக்கட்டுடையன ஆருயிர் அனைத்துமாகும். அநாதி முத்தனாகிய எமது அருளால் உயிர்க்குள்ள அநாதி மலக்கட்டாகிய ஆணவம் நீங்குதற் பொருட்டே அனுபந்தங்களாகிய மாயையும் கன்மமும் பொருந்தும். - 200 -

15. *உயிர்கள் சார்ந்ததன் வண்ணமாய் இருப்ப(து)உண் மையினால்*
*செயிரில் நீக்கம் நாம் செறித்திடும் மாயையே கருமம்*
*மயர்இ லாஅவை இரண்டையும் அளவளாய் மும்மை*
*மயரும் ஆர்ந்(து) அவை போக்கொடு வர(வு) எலாம் மருவும்*

உயிர்கள் சார்ந்தன் வண்ணமாய் விளங்குபவை. இதனால் ஆணவத்தைச் சார்ந்துள்ள உயிர், குற்றமற்ற நீக்கம் பெற, நாம் உயிருடன் மாயைகன் மங்களை சேர்த்தோம். சோர்வின்றி வளரும் அவை இரண்டையும் அளவாகக் கலந்து வைத்ததால் அம்மூன்று குற்றங்களையும் உயிர் அனுபவித்து இறப்பையும் பிறப்பையும் பொருந்தும். - 201 -

16. *மறைக்கும் ஆணவத்(து) அழுந்திய மாண்உயிர் கலாதி*
*நிறைக்கும் ஞானமாய்க் கருமங்கள் நிகழ்த்தியாள் என(து) என்று*
*உறக்கமே விழிப்பே இரண்டுடன் உடல்வெவ் வேறு(று) எடுத்துத்*
*துறக்கம் நானிலம் நரகம் என்று இவைதொறும் அழலும்*

அறிவை மறைக்கும் ஆணவத்தில் அழுந்திய ஆனால் மாண்புற வேண்டிய உயிர், கலை முதலியன மறைக்கும் ஞானமாய் வினைகள் செய்து யான் எனது என்ற பற்றுகளால் இறப்பு, பிறப்பு; சுவர்க்கம், இவ்வுலகு, நரகம் என்று இவைகளில் மாறி மாறி இன்பதுன்பங்களை அனுபவிக்கும் - 202 -

17. *மூல ஆணவத்(து) ஆருயிர் இயங்குநாள் காறும்*
*மாலும் மாயையும் கருமமும் மலம்என மயக்கும்*
*மேலும் மாயைதான் சுத்தமே அசுத்தம் என்(று) இரண்டாய்ச்*
*சால வேதனு ஆதிநான்(கு) ஆகியும் சாரும்*

மூலமலமாகிய ஆணவத்துடன் உயிர் இயங்கும் காலம்வரை, மயக்கும் மாயையும் கன்மமும் மலமாக உயிரை மயக்கும். மேலும் மாயை சுத்த மாயை அசுத்த மாயை என்று இருவகையில் நின்று உடல், கருவி, உலகு, நுகர் பொருள்களாகவும் உயிரை வந்தடையும். - 203 -

18. *கருமம் என்ப(து)ஆ காமியம் சஞ்சிதம் காழ்த்து*
*மருவி டும்பிரா ரத்தம்மூன் றாய்வரன் முறையே*
*பொருவில் நல்வினை தீவினை புண்ணிய பாவம்*
*ஒரு(வு)இல் இன்பதுன் பங்கள்என்(று) ஒன்றிரண்டாகும்*

கருமம் அல்லது வினை என்பது, இப்பிறப்பில் செய்யப் பெறும் இயற்று வினை (ஆகாமியம்), இனி அனுபவிக்கச் சேர்த்து வைத்தவினை ஏறுவினை(சஞ்சிதம்); பக்குவப்பட்டு இப்பிறப்பில் நாம் அனுபவிக்க ஏற்றவினை (பிரார்தம்,ஊழ்) என்று மூன்றாகி, முறைப்படி ஒப்பற்ற நல்வினை தீவினை;இவற்றாலாய புண்ணியம் பாவம் அதனால் வரும் இன்பம் துன்பங்களாக உயிரை வந்தடையும். - 204 -

19. *உருவத் தால்கரு மம்பல ஈட்டியும் உருவம்*
*கருமத் தால்பல ஈட்டியும் கலங்குவ(து) அன்றித்*
*திருவத்(து) எமது அருளினைச் சேர்ந்து பேரின்பம்*
*மருவத் தான்அறியாதுமும் மலத்(து) உறும் உயிரே*

பிறப்புகளால் வினைபல பெருக்கியும், பெருக்கிய வினைகளால் பிறப்புகள் பல பெற்றும் உயில் கலங்குமே தவிர, திருவருளாகிய எமது அருளினை சேர்ந்து பேரின்ப வீடுபெற அறியாத மும்மலச் சார்பில் பொருந்தும். - 205 -

## வேறு

20. உழிதரும்ஆ ருயிர்க்(கு) கிரங்கி அநாதிசிருட்டி யின்யாமே
உலகத்(து) எங்கும்
கழிசிறப்பில் தலம் தீர்த்தம் மூர்த்தி என உருக்கொண்டு
கரிசு தீர்த்து
வழி அருளும் சிவதருமம் அபுத்தியினால் புத்தியினால்
மலிவித்(து) அப்பால்
இழிவில் இரு சரியைமுதல் எட்டானும் மும்மலமும்
இறுத்து மன்றே

பிறப்பு இறப்புகளில் சுழலும் உயிர்கள் மீது இரங்கி, அநாதி காலப்படைப்பிலேயே நாம் உலகமெங்கும் அளவற்ற சிறப்புடைய தலம், தீர்த்தம், மூர்த்தி என்ற மூவுருவும் கொண்டு, உயிரின் குற்றம் தீர்த்து, நல்வழி அருளும் சிவ தருமத்தை - பதிபுண்ணியத்தை உரிய நினைப்பின்றியும், உரிய நினைப்புடனும் செய்யும் உயிரிடம் பெருக்கி, பின்னர் சரியையின் சரியை முதலிய பதினாறினாலும் மும்மலத்தையும் அழிப்போம். - 206 -

21. கேவலமே சகலம் இவை கீழ்ப்படுத்துக் கிளர்ந்(து) எழுந்த
உண்மை ஞானம்
மேவுதலும் சிலர்என்பால் இரவிவிழி எனஒன்றாய்
விரவு வார்கள்
தாவில்அருள் வளர்சுத்த ஐந்தவத்தை யினும் முறையே
சார்வார் சில்லோர்
ஓவில்அருந் தவத்தீர்என்(று) உரைத்(து) இறைவன் திருமூல
இலிங்கத்(து) ஆனார்

இடையீடில்லா அருந்தவத் தோரே; கேவலநிலை, சகல நிலை ஆகியவற்றைக் கீழாக்கிக் கிளர்ந்து மேல் எழுந்த உண்மை ஞானம் பொருந்துதலால் சிலர் என்னிடம் ஞாயிறும் விழியுமாக ஒன்றுபட்டுக் கலப்பர், குற்றமற்ற அருள் வளர்த்த ஐவகை அவத்தையினும் முறையே சிலர் என்னைச் சார்பவர் என்று சொல்லி இறைவன் திருமூலலிங்கத்தில் அமைந்தார். - 207 -

22. ஆங்(கு)அடுத்த நான்முகனும் மறைந்துகுன(து) உலகினிற் போய்
அமர்ந்து வாழ்ந்தான்
தீங்குதலை மழலைமொழித் தேவியொடும் திருமூல
நாதர் தோன்றி

*ஓங்கிய மெய்ஞ் ஞானம் உணர்த்திய முனிவர் அனைத்தினையும்*
*உணர்ந்து தெளிந்*
*தேக்குபர மானந்தப் பெருங்கடலின் ஒன்றாகித்*
*திளைத்து வாழ்ந்தார்*

அங்கு வந்திருந்த நான்முகன் மறைந்து தன் உலகிற்போய் இருந்து வாழ்ந்தான். இனியகுதலை மொழியும் அருள்தரு குங்கும சுந்தரியம்மையோடு திருமூலநாதர் தோன்றி உயர்ந்த மெய்ஞ்ஞானம் உணர்த்தப்பெற்ற முனிவர்கள், அனைத்தையும் உணர்ந்து தெளிந்து நிறைந்த மேலான இன்பக் கடலில் கலந்து திளைத்து வாழ்ந்தனர். - 208 -

23. *அறம் கிளரும் அவபிருத இட்டி முடித்(து) அலைதவழ் பற்*
*குனிநீ ராடி*
*நிறம்கிளர்வெண் பட்டுடுத்தார் நிகரில்முனி வரர் நிசுளா*
*புரியின் வாழும்*
*பிறங்(கு) ஒளிவேல் சுதவர்ம வேந்தனும்ஆங்(கு) எய்திஅவ*
*பிருத நானம்*
*திறம் கிளரச் செய்துமுனி வரர் மகிழ அந்தணர்க்குச்*
*செய்தான் தானம்*

தன் னொப்பில் முனிவர்கள், அறத்தால் உயர்ந்த வேள்வி முடித்தபின் செய்யத் தக்க விருப்பச் செயல்கள் முடித்து. அலை தவழும் பற்குனியாற்றில் நீராடி, ஒளி மிக்க வெண்பட்டுடுத்தார்கள். நிசுளா புரியில் வாழும் ஒளி விளங்கும் வேல் ஏந்திய சுதவர்ம வேந்தனும் அங்கடைந்து வேள்வி முடித்ததால் நீராடி. பின்னர் முனிவர் அந்தணர் ஆகியோர் மகிழ அவர்களின் மேன்மை மேம்படத் தானம் பல புரிந்தான். - 209 -

24. *அவபிருத நானம் எந்தப் புனலிடைச்செய் யினும்அந்த*
*அலங்கல் தெண்ணீர்*
*சிவம் மலிவான் கங்கையினும் பயன்தரும்என் றால் சிறந்த*
*பூவா ளூரின்*
*உவமையில் பற் குனிநதியில் அவிபிருத நானமுறச்*
*செய்தோர்க்கு எல்லாம்*
*தவம் மலியும் பயன்இனைத்(து) என்(று) எடுத்துவரைந்(து) அமரருக்கும்*
*சாற்றல் ஆமோ*

அவபிரத நானம் எவ்வகைப்பட்ட ஒளியுடைய தெளிந்த நீரில் செய்தாலும் அது சிவத்தன்மை மிக்க கங்கையினும் பெரும் புண்ணியம் தரும் என்றால் பூவாளூரின் ஒப்பற்ற பற்குனியில் அத்தகைய நீராடல் புரிந்தோர்க்கு எல்லாம் சேரும் தலம் மலிந்த பயன் இத்தகையது என்று அளவிட்டுக்கூறுதல் தேவர்களுக்கும் இயலாத ஒன்றாகும். - 210 -

25. *வேட்டமனு அங்கியொடு தத்தம்இருக் கையைஅடைந்து*
*விதியின் ஆற்றால்*
*ஈட்டும்அர ணியில்கடைந்த அங்கியினை உடன்கூட்டி*
*இனிமை கூர*
*நாட்டமுறும் ஆகுதிநித் தலும்ஓம்பித் திருமூல*
*நாதர்பாதம்*
*மூட்டும்உளத் தினராகி முனிவர்எல்லாம் பரவெளியில்*
*முயங்கா நின்றார்*

தாம் விரும்பியவாறு மந்திரத்தால் கூட்டிய வேள்வித் தீயுடன் தீக்கடைக் கோலால் மூட்டிய தீயினையும் கூட்டி இனிமைமிக, விரும்பத்தக்க ஆகுதியினை நாடோறும் பேணி, திருமூலநாதர் திருவடியைத் திருவருளைத் தம் உள்ளத்தில் மேன்மேலும் மிகுவிக்கும் மனத்தராய் முனிவர் அனைவரும் மேலான பேரின்ப வெளியில் பொருந்தி வாழ்ந்தனர். - 211 -

26. *சிலநாள்இங் ஙனம்அகல உறங்கினவர் கைப்பொருள்போல்*
*செயல்கள் நீங்க*
*விலகாத பேரின்ப மேலீட்டின் செவ்வியது*
*மேவ வோடும்*
*கலவாத அறிவினர்கள் அங்கியினை உளத்(து) ஒடுக்கித்*
*துரியா தீத*
*நிலையான சிவபோகத்(து) ஒன்றாகி அசைவற்று*
*நெடிது வாழ்ந்தார்.*

இவ்வாறு சில நாட்கள் செல்ல, உறங்கியவர் கைப்பிடித்த பொருள் இயல்பாக நழுவுதல் போல வினைகள் நீங்க, பிரியாத பேரின்ப மேலீட்டினால் செம்மைநலம் பொருந்த, கண்டபடி அலையாத அறிவுடையராய், ஞானத்தீயைத்தம் உள்ளத்தில் ஒடுக்கித்துரியாதீத நிலையாகிய சிவபோகத்தில் கலந்து நிலை குலையாது வாழ்ந்தனர். - 212 -

27. *முனிவர்எழு பதின்மருக்கும் திருமூல நாதர்அருள்*
*முதிர்மெய்ஞ் ஞானம்*
*இனிதுதெரிந்(து) அருளியவா(று) இதுவாகும் இனி அறத்தின்*
*இயற்கை வல்லீர்*
*பனிமலர்க்கற் பகப்பொதும்பர் நிழலிருந்து விண்ணவர்தம்*
*பதி ஆள் வேந்தன்*
*கனி(வு) உளத்தின் அருச்சனைசெய் கதைகேண்மின் எனச்சூதன்*
*கரைதல் உற்றான்*

அற இயற்கையின் வண்ணம் வாழ வல்லவர்களே, எழுபது முனிவர்களுக்கும் திருமூலநாதர் முதிர்ந்த மெய்ஞ்ஞானம் அருளிய பாங்கு இதுவாகும். இனி குளிர்ந்த மலர்களையுடைய கற்பகச் சோலையின் கீழ் இருந்து தேவலோகத்து அமராவதியை ஆளும் இந்திரன், கனிந்த உள்ளத்துடன் வழிபாடு செய்த கதையைக் கேளுங்கள் என்று சூத முனிவர் அதனைக் கூறத் தொடங்கினார். - 213 -

ஞான உபதேசச் சருக்கம் முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம் 213.

## 8. இந்திரன் அருச்சனைச் சருக்கம்

1. *அருந்தவப் பிருகுவின் ஆர்வப் புத்திரன்*
*திருந்திய மாதவச் சிவனன் என்பவன்*
*பொருந்(து)இம வரைப்புறம் பொதிந்த கானத்(து)*
*இருந்(து) அரும் தவத்தினை இழைத்திட் டான் அரோ.*

அரியதவத்தால் சிறந்த பிருகு முனிவரின் பேரன்புக்கு உரிய மகனாகிய திருத்தமான தவநிலையுடைய மாதவத்துச் சிவன முனிவர் இமயமலைச் சாரலில் தரை மறைத்த மரங்கள் அடர்ந்த ஒரு காட்டில் இருந்து அரிய தவத்தை மேற்கொண்டார். - 214 -

2. *புண்ணிய உடம்பெலாம் புற்று மூடிய(து)*
*ஒண்நிறத் தளிர்மலர் உறுசு வைக்கனி*
*எண்இல துவன்றிய இணர்த்த தாருவும்*
*திண்ணிய கொடிகளும் சிறைசெய் திட்டவே*

தவத்தால் புனித முற்ற உடம்பைப் புற்று மூடியது. ஒளி பொருந்திய நிறத்துத்தளிர் மலர், மிக்கசுவையுடையகனி என்று எண்ணற்றன பொலிந்த பூங்கொத்துக்களைச் சுமந்த மரங்களும் வலிய கொடிகளும் முனிவரை மூடி மறைத்தன. - 215 -

3. *அன்னணம் சிவனன்அங்கு அமரும் நாளையில்*
*தன்நிகர் இலாதசை யாதி என்(று)ஒரு*
*மன்னவன் அருந்தவ வரத்தில் தோன்றிய*
*துன்னிய பேரெழில் சுகன்னி என்பவள்*

இங்ஙனம் சிவனமுனிவர் தவம் புரியும் நாளில், தன்னொப்பில்லாத சையாதி என்ற ஒரு அரசனின் அருந்தவப் பேரெழில் மகள் ஆகிய சுகன்னி என்பவள் - 216 -

4. *பாங்கியர் பற்பல்ஆ யிரர்தன் சூழ்தர*
*ஓங்கிய புறநகர் உற்ற அவ்வனம்*
*தாங்கரு மகிழ்ச்சியில் சார்ந்து தண்மணம்*
*வீங்கிய மலர்பல விரும்பிக் கொய்பவள்*

பல்லாயிரம் பாங்கியர் சூழ, சிறந்த அந்நகரின் புறத்தே உள்ள புற நகர்க் காட்டினை அளவற்ற மகிழ்ச்சியுடன் அடைந்து தண்ணிய மணமிக்க மலர்களைக் கொய்தாள். - 217 -

5. *முல்லையும் மயிலையும் முற்றும் சூழ்தர*
*மல்லல்அம் புற்(று)அது வயங்கக் கண்டனன்*
*ஒல்லை அங்(கு) அடுத்(து) இதின் உளது யாதென*
*வில்லியின் விழியினால் இனிது நோக்கினாள்*

முல்லை, மயிலை மலர்த்தாவரங்கள் முழுவதும் சூழ வளமான அப்புற்று விளங்குவதைக் கண்டாள். விரைந்து அங்குப் போய், இப்புற்றுள் உள்ளது யாது? என்று அறியும் நோக்கினை மன்மதன் பார்வை தூண்ட அப்புற்றினைக் கண்டாள். - 218 -

6. நோக்கிய வில்லியின் நோற்கும் மாதவன்
தேக்(கு)அருள் விழிஒளி திகழ்ந்து தோன்றலும்
பூக்குழல் சுகன்னிதான் பொன்வண்(டு) ஈதுஎனத்
தூக்கையில் துரும்பினால் சுலாவிச் சூன்றனள்

தவம் செய்யும் சிவன முனிவரின் அருள்தேக்கிய ஒளிவிழி, மன்மதன் பார்வையால் மிகச்சிறந்து தோன்ற, மலர்க்குழல் மடந்தை சுகன்னி, இது பொன்வண்டு போலும் என்று எண்ணித் தனது தூய கையில் கொண்ட ஒரு துரும்பால் அதனைச் சுற்றிக் குடையைத் தொடங்கினாள். - 219 -

7. *விழியிணைக் கொண்டதும் மேவும் யோகம் அங்(கு)*
*அழிதர யார் கொல்என்(று) அறவன் நோக்கினான்*
*எழில்மிகும் இரதியும் இணைகொ லோ எனும்*
*கழிவளப் பின்னாள்உருக் கண்ணுற் றான் அரோ*

விழியைத் தோண்டத் தொடங்கியதும் தனது யோகநிலை கெட, யாரது என்று சிவன முனிவன் பார்த்தான். பேரழகு வாய்ந்த இரதியும் இணையாவளோ என்று எண்ணத்தக்க பேரழகுடைய சுகன்னி உருவைக் கண்டான். - 220 -

8. *சிறைஅழி புனல்எனச் சிறந்த மாதவன்*
*நிறைஅழி உள்அகம் நெரேல் என்(று) ஈர்ங்கதிர்ப்*
*பிறைநுதல் மடந்தைபால் பெட்பச் சென்றது*
*மிறை வளர் மாரனும் விசிகம் தூண்டினான்*

சிறந்த சிவனமுனிவர், அணை உடைந்த நீர்போல், தன் நிறையழிந்து விரைந்து, நுட்பமும் ஒளியுமுடைய மூன்றாம் பிறை ஒத்த நெற்றியுடைய சுகன்னி பால் மனம் செல்ல, காமக் குற்றமே வளர்க்கும் மன்மதன் தன் மலரம்புகளை அவன்மேல் எய்தான். - 221 -

9. தீ(து)அறு யோகத்தில் சிந்தை தீர்தர
வேதம் அங்(கு) இழைத்ததை யாதும் எண்ணலன்
மாதிடை உளத்தினை மாட்டி னான்எனின்
மேதகு காமநோய் வெல்லற் பாலதோ

யோக நெறியினர் மனம்தடுமாறுதல் கூடாது என்று மறைபுகல்வதை எண்ணாது, யோக நிலையில் நின்ற அவன்மனம் அதனைக் கைவிட்டுவிட, தன்மனத்தைச் சுகன்னி பால் செலுத்தினான். எனவே வலிமை மிக்க காமநோய் யாராலும் வெல்லத்தக்கதன்று என்பது விளங்கும். - 222 -

10. *வற்றிய உடம்பினன் மறுத்த உண்டியன்*
*பற்றிய யோகினன் படிவ மாதவன்*
*உற்றனன் காமநோய் என்னில் ஔவர்*
*முற்றிய காமத்தின் மூழ்கி டாதவர்*

வேளை தோறும் உணவு மறத்து உண்டதால் உடல் வற்றியவனாய், யோக நிலையினனாய்த் தவவேடம் கொண்ட சிவனமுனிவனே காமநோயுற்றான் என்றால் முற்றிய காமத்தில் மூழ்கிச் செயற்படாதவர் யார்தான் உள்ளார்? யாருமில்லை என்க. - 223 -

## வேறு

11. *மாரவேள் சரங்கள் பாய மையல்கொள் சிவனன் என்பான்*
*வீரவேல் அனைய வாட்கண் விளங்கிழை யவள்முன் கையை*
*வாரம்ஆ கியதன் நெஞ்சும் பின்னிட மலர்க்கை நீட்டிப்*
*பாரவான் புற்று விண்டு பார்விழப் பற்றினானால்*

மன்மதன் அம்புகள் பாய, மையல்கொண்ட சிவனன், வீரவேல் ஒத்த ஒளியுடைய கண்களைக் கொண்ட சுகன்னியின் கையைத் தன் காதல் வயப்பட்ட நெஞ்சு பின்னிடத் தன் மலர்க்கையால் பற்றினான். - 224 -

12. *துலங்கிய சுகன்னி அஞ்சித் தொடிக்கரம் விதிர்த்துத் தள்ளி*
*அலங்கலும் குழலும் சோர அலறிவேர் நுதலின் ஆட*
*இலங்(கு) அரை மணிக்காழ் சிந்த இணைச் சிலம்பு இரங்கி ஆர்ப்பக்*
*குலம்செழு பாங்கி மார்தம் குழுவிடை ஓடி வீழ்ந்தாள்*

நடந்ததை உணர்ந்த சுகன்னி நடுங்கி, வளையல் அணிந்த கரத்தால் அவன் கையைத் தள்ளிவிட்டு, மாலையும் கூந்தலும் தொங்க, அலறி, நெற்றியில் வியர்வை துளிக்க, இடையில் கட்டிய ஒளிவிடும் எட்டுமணிக்கோவை சிந்த, சிலம்புகள் ஒலிக்க, தன் இனமான பாங்கியர் குழுவிடம் ஓடி வந்தாள். - 225 -

13. *நடுங்கிய உடம்பும் காய்ந்த நாவும்வார் இமைகள் கூம்பி*
*ஒடுங்கிய விழியும் ஓவா(து) ஓங்கிநீள் உயிர்ப்பும் வீங்கிப்*
*படும்கவின் நெஞ்சும் நோக்கிப் பயந்தனள் இவளாம் என்று*
*கொடுங்குழைப் பாங்கிமார்கள் கொம் எனத் தெருட்டினாரால்*

உடம்பு நடுங்க, நாப்புலர, நீண்ட கண் இமைகள் கூம்ப, ஒடுங்கிய விழியும், இடைவிடாப் பெருமூச்சும், வீங்கித்தாழும் நெஞ்சும் கண்டு இவள் பயந்தனள் போலும் என்று வளைந்த காதணியணிந்த பாங்கியர் உண்மை உணர் குறிப்பில் அதட்டி, மனத்தைத் தெளிவித்தனர். - 226 -

14. *மார்பிடை எடுத்துப்புல்லி வருடிஓர்து கிலின் ஒற்றி*
*கார்பரந் தனைய கூந்தல் கையினால் ஒதுக்கியிட்டுச்*
*சோர்பனி முகத்து மென்கால் சுழலவார் விசிறி ஊக்க*
*ஓர்பவள் ஆகி மெல்ல ஓடுஅரித் தடங்கண் விண்டாள்*

மார்போடு எடுத்தணைத்து, தடவிக் கொடுத்து, துகிலால் வியர்வை ஒற்றி, பரந்த மேகம் ஒத்த கூந்தலைக் கையால் ஒதுக்கி விட்டு, சோர்ந்த அவள் முகத்தில் குளிர்ந்த மென்காற்றுச் சூழல விசிறினர். இவற்றால் சுகன்னி தெளிவு பெற்றுச் செவ்வரி படர்ந்த கண் விழித்துக் கண்டாள். - 227-

15. கையாறு சிறி(து) அகலச் சுகன்னிஅயா உயிர்த்திருக்கும்
காலம் தன்னில்
சையாதி எனும் இறையும் மனைவியர்நா லாயிரவர்
தன்னைச் சூழ
உய்யானம் எனச் சிறந்த ஓங்கும்அந்த வனத்தின் உறு
விநோதம் ஆக
நையாத பெருங்களிப்புத் தலைசிறப்ப கொய் உளைமா
நடவிச் சென்றான்

திகைப்புச் சிறிது அகன்று, சுகன்னி பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்த பொழுது, தந்தையாகிய சையாதி நாலாயிரம் மனைவியர் சூழ, தேவலோகத்து உய்யான வனம் ஒத்த அவ்வனத்தின் சிறப்புக்காக, குறையாத பெரும் களிப்பு மிக மேம்பட பிடரி முடியுடைய குதிரையை நடத்திச் சென்றான். -228 -

16. கவனவாம் புரவியினின்று இழிந்துவனத்(து) உள்உறப்போய்க்
கலந்த காலை
சிவனன்நீ டிய புற்றின் எதிர்தோன்றத் திப்பியம்திப்
பியம்என்(று) ஓடி
உவகையொ(டு) அடுத்(து) இறைஞ்சி எழுந்துமுனி வரன்ஒளிரும்
உருவம் நோக்கி
அவலம்ஆர் விழிப்புனல் கண்(டு) ஆர்செய்தார் இவற்(கு) இ(து) என்(று)
அருகே பார்த்தான்

வேகநடை விரும்பும் குதிரையிலிருந்து இறங்கி, வனத்தினுட் புகுந்து அதன் வனப்பில் கலந்தபோது, தன் எதிரே உயரமான புற்றில் சிவன முனிவன் தோன்றக்கண்டு, வியக்கத்தக்கது இது என்று களிப்புடன் சென்று வணங்கும் பொழுது, மேன்மை ஒளிரும் அவன் உருவம் நோக்கி, துன்பம் நிறைந்த கண்ணீர் கண்டு இவனுக்கு யாரிது செய்தார் என்று அருகில் சென்று பார்த்தான். - 229 -

17. *கோல்தொடிக்கைப் பாங்கியரும் தன்மகளும் ஒருங்கிருந்த*
*குழுவை நோக்கி*
*ஆற்றரிய இடர்இவற்(கு) இங்கு ஆற்றியவர் இவரே என்(று)*
*அகத்துக் கொண்டு*
*காற்றினும்வல் விரைந்(து)அடுத்துத் தனித்தனி கூய் முனிக்(கு) இடுக்கண்*
*கண்டார் யாரே*
*சாற்றுகஎன் றான்தந்தை பாங்கியர்யான் அறியேன்யான்*
*அறியேன் என்றார்*

திரண்ட வளையல் அணிந்த தோழிமாரும் தன் மகளும் ஒருசேர இருந்த குழுவை நோக்கி, பொறுத்தற்கு அரிய துன்பத்தை இவனுக்கு இங்குச் செய்தவர் இவரேயாதல் வேண்டும் என்று எண்ணி, காற்றினும் விரைந்து வந்து அவர்களைத் தனித்தனியே அழைத்து, "இம்முனிவருக்குத் துன்பம் செய்தவர் யார் சொல்க" என்றான். பாங்கியர் "எனக்குத் தெரியாது" என்று ஒவ்வொருவரும் கூறினர். - 230 -

18. *எல்லாரும் முனிக்(கு) இடுக்கண் புரியாமை உரைத்துரைத்(து) அங்(கு)*
*ஏக வல்லே*
*வில்ஆரும் கொடும்புருவச் சுகன்னிஅடி பணிந்(து) எழுந்து*
*விளம்பு கின்றாள்*
*செல்ஆரும் நெடும்புற்றின் இல்லிவழி யேமுனிவன்*
*செங்கண் தோன்ற*
*எல்ஆர்பொன் வண்(டு) எனத்து ரும்புகொடு சுலாவினேன்*
*எந்தாய் எந்தாய்*

எல்லாரும் முனிவர்க்குத் தாம் துன்பம் செய்யாததைச் கூறிச் செல்ல, வில்லாக வளைந்த புருவமுடைய சுகன்னி, தந்தையடி பணிந்து தந்தையே, மேகம் அளாவிய உரமான புற்றின் துளைவழியே முனிவரின் கருணையாற் சிவந்த கண்கள் தோன்ற ஒளி பொருந்திய கருவிழிகளைக் கருவண்டு என்று நினைத்துத் துரும்பு கொண்டு சுற்றிக் குடைந்தேன் என்றாள். - 231 -

19. *அறியாமை யால்அடி யேன் விழியிணைவண்(டு) எனக்கொண்ட*
*அறத்திண்ண மிக்கோன்*
*செறிவார்வெள் வளைமுன்கை தன்கரத்தால் பிடித்தனன் யான்*
*திகைத்துத் தள்ளி*
*வெறியார்ந்த மலர்க்கூந்தல் பாங்கியர்பால் வல்விரைந்து*
*மீண்டு சேர்ந்தேன்*
*நெறிஆரும் மனுவேந்தே நிகழ்ந்தபடி இதுஎன்று*
*நிகழ்த்தித் தாழ்ந்தாள்....* - 232 -

அறநெறி ஆளும் மனுவேந்தே; அறியாமையால் அவ்விழிகளை நான் வண்டு என்று நினைத்துத் தோண்ட முயல; அறத்தின் மிக்க முனிவர், வளையல் செறிந்த என் முன்கையைத் தன்கையால் பற்றினான். நான் திகைத்து அவனைத் தள்ளி மணம் மிக்க மலர் சூடிய பாங்கியரிடம் மிக விரைந்து மீண்டு வந்தேன். இதுவே நிகழ்ந்தது என்று கூறி வணங்கினாள். - 232 -

20. *அந்தோஎன் செய்தனைஎன் ஆயினும்ஆ குகஇனிநீ*
*அஞ்சேல் என்னாக்*
*கொந்(து) ஆரும் மலர்க்கூந்தல் குமரியை அங்(கு) இரீஇ முனியைக்*
*குறுகி ஏத்தி*
*எந்தாய்என் மகள்பிழைத்த பிழைபொறுக்க வேண்டும் என*
*இரந்தா னாகச்*
*சிந்தாத கவலைஎலாம் சிந்திமுனி வரன்இதனைச்*
*செப்பி னானால்* - 233 -

அந்தோ என்ன செயல் செய்தாய்; என்ன நடந்தாலும் சரி. நீ அஞ்சாதே என்று கூறி, கொத்தான மலர் சூடிய கூந்தலுடைய சுகன்னியை அங்கே இருத்தி விட்டு, முனிவரை நெருங்கிச் சென்று வணங்கி, "என் தந்தையே என்மகள் பிழைத்த பிழை பொறுக்க வேண்டும்" என்று வேண்ட, இதுவரை சொல்லாமல் அடக்கி வைத்திருந்த தன் கவலை எல்லாம் வெளிப்படுத்தி, சிவனன் பின்வருமாறு கூறினான். - 233 -

## வேறு

21. *மன்னர் மன்னநின் மாமகள் செய்பிழை*
*தன்னை யான்பொறுக் கத்தவ வேண்டின்அக்*
*கன்னி யைக்கடி செய்(து) எனக்(கு) ஈமதி*
*நின்னை யும்சபிப் பேன்இது நீக்கிடின்*

"மன்னர் மன்னனே உன் சிறந்த மகள் செய்த பிழையை நான் மிகப் பொறுக்க வேண்டுமானால், அவளை எனக்கு மணம் செய்து கொடு. இது செய்யாவிடில் நான் உன்னையும் சபிப்பேன்" என்றான். - 234 -

22. *என்று கூறலும் ஏந்(து)இலை வேலவன்*
*நன்று நானும் உய்ந் தேன்நவில் செய்தியை*
*இன்று சாலமு டிப்பல்எந் தாய் என*
*ஒன்றும் அன்பின் உவந்(து)இது செய்தனன்*

என்று முனிவர் கூற, இலை வடிவான வேல் ஏந்திய அரசன், நானும் பிழைத்தேன், "இன்றே நீ சொன்னபடி மிக முடிப்பேன்" என்று மிக்க அன்புடன் மனமுவந்து பின்வருமாறு செய்தான். - 235 -

23. *முனிவ ருக்கும்முடி கெழு வேந்தர்க்கும்*
*புனித யோகர்க்கும் பொறப முடங்கல் உய்த்(து)*
*இனிதின் யாரையும் ஈண்டுவித்(து) அங்கிமுன்*
*பனி மலர்க்குழல் பாவையை நல்கினான்*

முனிவர்களுக்கும், முடிமன்னர்க்கும், புனித யோகியர்க்கும், பொலிவு பெற மண மடல் அனுப்பி, அனைவரையும் இனிது கூடச் செய்து தீ முன்னர் தண்ணிய மலர் சூடிய கூந்தலுடைய சுகன்னியை முனிவர்க்குத் தந்தான். - 236 -

24. *செய்த வத்துச் சிவனன்என் பான்மதன்*
*கைத வத்துக் கணைகதம் காற்றுவான்*
*பொய்தன் மன்னன் புதல்விடை வேட்(டு) அவண்*
*உய்தல் கொண்(டு) உடன் வாழ்ந்திருந் தான்அரோ*

செய்தவம் மிக்க சிவன முனிவன், வஞ்சனையான மன்மதனின் மலர் அம்புகளின் வலிமையை மேலும் ஒளிவிடச் செய்ய தோழிமாருடன் கூடிய மன்னன் மகளை மணந்து கூடி வாழ்ந்தான். -237 -

## வேறு

25. *இவ்வாறு சிவனன் எனும் இருடி மனை வாழ்க்கைக்குச்*
*செவ்வாய்மைத் துணையாகிச் செய்பணியில் தலைநின்று*
*துவ்வாத அமிழ்தனைய சுகன்னி ஒழு கிடுநாளில்*
*அவ்வார்தண் பொழில் கானத்(து) அசுவினிதே வர்கள் அடுத்தார். - 238 -*

இவ்வாறு சிவன முனிவனின் இல்லறத்துக்குச் செம்மை சேர்க்கும் வாய்மையுடைய துணையாகிச், செய்ய வேண்டிய கடமைகளில் தலை சிறந்து விளங்கி, துய்க்கப் பெறாத அமுதம் ஒத்த சுகன்னி வாழும் நாளில் அந்த நீண்ட குளிர்ச்சியான சோலையுடனான காட்டிற்கு அசுவினி தேவர்கள் வந்தனர். - 238 -

26. *ஆங்(கு)ஒருசார் நின்றஅனங் கினைநோக்கி அடுமதனன்*
*பூங்கணையால் அலைப்புண்டு புரைபட்ட உளத்தினராய்*
*மாங்குயிலின் இசைமருட்டு மழலைமொழித் திதலைமுலை*
*வீங்குபணைத் தோள்மங்கை விழிஎதிர்நின்(று) உரை செய்வார்*

அங்கு ஒரு பக்கம் நின்ற சுகன்னியைப் பார்த்து, மனத்தை வாட்டும் மன்மதனின் மலர்க் கணையால் அலைக்கழிக்கப்பெற்று, குற்றம்பட்ட உள்ளத்துடன், மாஞ்சோலைக் குயிலின் இனிய குரலையும், மருளச் செய்யும் மழலை மொழியையும் பொற்சுணங்கு உடைய முலைகளையும் பருத்துத் திரண்ட தோள்களையும் உடைய சுகன்னி முன்நின்று பின்வருமாறு கூறினர். - 239 -

27. *மாந்தளிரின் நிறத்(து) அணங்கே வரவருணன் நீதான்*
*காந்தருவ மடமாதோ கவின்மிகுகின் னரமாதோ*
*வாய்ந்த எழில் அரமகளிர் வனப்பின்மிகு வனப்புடை யை*
*ஏந்து இளமென் முலைக்கொடி யே இருநிலமா தோஅல்லை*

"மாந்தளிர் நிறமுடையவளே, மேலான ஒளியுடைய நீ, இளைய கந்தர்வப் பெண்ணோ, அழகு மிக்க கின்னரப் பெண்ணோ, எழில் வாய்ந்த தெய்வப் பெண்களின் மிக்க பேரழகுடையாய். ஏந்திய இளைய முலையுடைய கொடியே நீ இவ்வுலகப் பெண் இல்லை". - 240 -

28. *மணிமுறுவல் சுந்தரியே மந்தகா சினிநீயார்*
*அணிமிகுந்த உன்னுடைய அரும்புஇளமென் முலைநோக்கிப்*
*பிணிஉழந்து தளர்ந்தனம் யாம் பிறங்கும்அசு வினிதேவர்*
*தணிவரு நோய் எமைத்தணப்பத் தண்ணருள் செய்(து)*
*அருள் கென்றார்*

"அழகிய புன்முறுவல் அழகியே, புன்முறுவல் பூக்கும் நீ யார்? அழகு மிக்க உனது அரும்பு ஒத்த இளமென் முலைநோக்கிக் காமநோயால் துன்புற்றோம். விளங்கும் அசுவினி தேவர்கள் நாங்கள். பிறரால் தணித்தற்கரிய காமநோய் எம்மை விட்டு நீங்க கருணை செய்" என்றனர். - 241 -

29. *உய்யாத பெருங்காமத்(து) உரைக்கின்றார் முகம்பாராள்*
*பொய்யாத நெடுங்கற்பின் புறஅடி நோக் கினள் புகல்வாள்*
*சையாதி மகள்சிவனன் தன்மனைவி சுகன்னி என்பேர்*
*எய்யாது விழைந்த நுமக்(கு) எளியேன்அல் லேன் என்றாள்*

நீங்காத பெருங்காமத்துடன் கூறும் அவர்கள் முகத்தைப் பாராதவளாய், பொய்யாத பெருங்கற்பின் காரணமாகத் தனது கால்களைப் பார்த்துக் கொண்டு, "சையாதி மன்னன் மகள், சிவன முனிவனின் மனைவி, சுகன்னி என்பேர், என்னைப் பற்றி அறியாமலே என்னை விழைந்த உமக்கு நான் உடம்படுகின்றவள் இல்லை". - 242 -

30. *வெறுத்தமொழி யால்மறுப்ப வெற்றஉடம் பினராகி*
*மறுத்தபுதே வர்கள்மொழிவார் வரரோக மடமாதே*
*உறுத்த இள மையும்வனப்பும் அழகியஎம் பால்உளத்தை*
*நிறுத்துவிழுத் திடினன்றோ நின்பெண்மைக்(கு) உறுபயனால்*

என்று சுகன்னி வெறுத்துக் கூறி மறுப்ப, காமம் நுகராமையால் பயனற்ற உடம்பினராகி அதனை மறுத்துக் கூறிய தேவர்கள், "காரமுள் போன்று மறுத்துக் கூறும் இளமங்கையே உன்பால் பொருந்திய இளமையும் வனப்பும் உறுபயன் பெற வேண்டுமானால் அழகிய எம்பால் உன் உள்ளத்தை நிறுத்து. அதுவே பயன் தருவது". - 243 -

31. *நரைஎழுத்து திரைவிழுந்து நனிமூத்த தாபதனால்*
*அரையன்மகள் ஆனஉனக்(கு) ஆர்வம்நிரம் புவதாமோ*
*வரயனைய மணிமுலையாய் வழாக் கற்பின் நிலை வழுவிப்*
*புரைபடும்என் றால்அதுவும் போகாமை புகலக் கேள்*

"நரை தோன்றி, தோல் சுருக்கம் விழுந்த முனிவரால், அரசனின் இளமகளான உன் காம இச்சை நிரம்பாது. குன்று போன்று அழகுடைய முலையுடையவளே எம்மைநீ கூடின் உன் வழுவாத கற்பு நிலை குன்றும் என்றால் எம்மைக் கூடுவதால் கற்புக் குன்றாமை பற்றிக் கூறுகின்றேன் கேள்". - 244 -

32. *எடுத்தஉடற் கேயன்றி இன்னுயிர்க்கு முறையில்லை*
*அடுத்(து)ஒளிர்இத் தடத்திடை உன் அன்பனுடன் இருவேமும்*
*தொடுத்தபெருங் காதலினால் தோய்ந்(து)எழுந்தால் மூவருக்கும்*
*அடுத்த எழில் உருஒப்ப வயங்கும் மதர் நெடுங்கண் ணாய்*

"களிப்புடைய நெடுங்கண்ணளே, கற்புமுறை என்பது உயிருக்கு இல்லை; அவ்வுயிர் எடுத்த உடம்புக்கே உரியது. எனவே அருகில் உள்ள இக்குளத்தில் உன் கணவனுடன் நாங்கள் இருவரும் மிக்க காதலுடன் மூழ்கி எழுந்தால், மூவரும் ஒத்த அழகுடன் விளங்குவோம்". - 245 -

33. *எங்கள்உரு மூன்றுள்ளும் எவ்வுருவில் உனக்(கு) ஆர்வம்*
*தங்குவதோ அவ்வுருவே தழீஇக் கொள்க எனவுரைத்தார்*
*திங்கள்நுதல் சுகன்னி ஒன்றும் செப்பாது மதித்(து)ஏகி*
*அங்கிகரி யாவரைந்த அன்பனுக்(கு)எல் லாம்கிளந்தாள்*

"எங்கள் மூவரில் எந்த உருவில் உனக்கு ஆசை தங்குகிறதோ, அவரைத் தழுவிக் கொள்" என்றனர். பிறைநுதல் உடைய சுகன்னி மறுமொழி கூறாது அவர்கள் கூறியதை மதித்துச் சென்று, தீயினைச் சாட்சியாக வைத்துத் தன்னை மணந்த சிவனமுனிவர்க்கு அனைத்தையும் கூறினாள். - 246 -

34. *மாதவன்அம் மொழியோளா வருத்தும்மிகும் இவ்வுடம்பின்*
*ஏதம்உழன்(று) இருக்கின்றோம். இதுநீங்க இளமையொடு*
*மேதகைய எழில்உருவம் மேவும்எனின் அதற்(கு) அப்பால்*
*போதுஅனைய விழிமடவாய் போந்தபடி காண் போமால்*

சிவன முனிவன் அதுகேட்டு, மலர்ப்போது ஒத்த விழியுடையவளே, இவ்வுடம்பால் துன்பப் பட்டு இருக்கின்றோம். இது நீங்க, இளமையுடன் மேம்பட்ட பேரழகும் பொருந்தும் என்றால் அதன்பின் வருவது காண்போம் என்றான். - 247 -

35. *ஒல்லைபோய் அத்தேவர்க்(கு) உடன்படு எனப்பொறுமை*
*வல்லமா தவத்தோன்றல் மனைவிதனை முன்விடுத்து*
*மெல்லவே நடந்(து) ஆங்கு மேவுதற்கு வழிக் கொண்டான்*
*செல்லல்தீர் அம்மாதும் சென்(று) அவர் சொற்(கு) உடன்பட்டாள்* - 248 -

விரைந்து போய் அத்தேவர்களுக்கு இணங்கு என்று பொறுமை மிக்க சிவன முனிவன் மனைவியை முன் அனுப்பி, மெல்ல நடந்து அங்குச் சென்றான். மனத்துயர் தீர்ந்த சுகன்னியும் அவர்பால் சென்று அவர்கள் சொற்படி நடக்க உடன் பட்டாள். - 248 -

36. *அவத்துறையின் வழியடைத்திட்(டு) அறத்துறையின் வழிஒழுகும்*
*தவத்துறைமுற் றியசிவனன் சார்ந்(து)அடுப்ப எதிர்நோக்கிப்*
*பவத்துறையின் உயர்தேவர் பண்பினொடும் அளவளாய்ச்*
*சிவத்துறையின் வழிஉய்க்கும் தீர்த்தம்உடன் படிந்தனரால்*

பாவவழி அடைத்து அறவழி நடக்கும் தவத்தில் முதிர்ந்த சிவனன், அங்குச் சென்றடைய, எதிர்நோக்கி இருந்த பிறப்பால் உயர்ந்த அசுவினி தேவர்கள் அவனுடன் பண்பு பொருந்தப்பேசி, மங்கல வழியில் செலுத்தும் புனிதநீர்க் குளத்தில் மூழ்கினர். - 249 -

37. *பூ அமர்ந்து மணி துறுமிப் பொன்வரித்து மிளிர்கரையின்*
*மூவரும் அங்(கு) உடன்ஏறி மொய்த்தபெரும் வனப்பினொடும்*
*தாவரிய இளமைவலி தழைத்தோங்கித் தேவர்கள்தம்*
*பாவனைக்கும் பகுப்புஅரிதாம் படிஒப்ப விளங்கினார்*

பூக்கள் மலர்ந்து, அழகு செறிந்து, அழகுறக் கட்டப் பெற்ற குளக்கரையில் மூவரும் ஒருசேர ஏறினர். மூவரும் செறிந்த பேரழகு உடையவராய், துன்பமற்ற இளமை வலிமை ஆகியன தழைத்து ஓங்கி, தேவர்களும் கூட இவர்கள் யார் யார் என்று பிரித்தறிய மாட்டாதபடி தம்முள் ஒத்து விளங்கினர். - 250 -

38. *தூயபெருங் கற்புடைய சுகன்னிஅவர் தமைநோக்கி*
*ஆயஎன(து) அருங்கற்புக்(கு) அழி(வு)இன்றேல் என்னுடைய*
*நாயகனே எனக்(கு)இன்னும் நன்னுகஎன்(று) உளத்(து) எண்ணிப்*
*போயணைய சிவனனையே பூங்கரத்தால் தழுவினாள்.-*

தூயபெருங் கற்புடைய சுகன்னி அவர்களைப் பார்த்து, எனது சிறந்த பெருங்கற்புக்கு அழிவு இல்லாதபடி என்கணவனே எனக்கு இன்னும் வாய்க்க வேண்டும் என்று எண்ணிப்போய், சிவன முனிவனையே தனது மென்மையான கரத்தால் அணையுமாறு தழுவினாள். - [illegible]1 -

39. *திப்பியம்ஆகியஇளமை திகழ்வனப்பின் உருவாய்ந்த*
*அப்பெரிய சிவனனும்மிக்(கு) அழகியமன் னவன் மகளும்*
*செப்(பு)அனைய மணிமுலையும் திணிநெடுந்தோள் களும்நெருமகை*
*ஒப்பரிய பேரின்பம் உற்றார்போல் ஆயினார்*

வியக்கத் தக்கதாகிய இளமை விளங்கும் அழகிய உருப்பெற்ற சிவன முனிவனும், மன்னனின் மிக அழகிய மகளாகிய சுகன்னியும் ஆகிய இருவரும், சூதாடு கருவி ஒத்த அழகிய முலையும் வல்லமை வாய்ந்த திரண்ட தோள்களும் ஒன்றில் ஒன்று அழுந்த ஒப்பற்ற பேரின்பம் உற்றவர் போல் ஆயினர். - 252 -

40. *தலையாய அறிவினர்கள் தரையாரே ஆயிடினும்*
*நிலையாதும் பிழையாரேல் நினையாதும் பயன்பெறுவர்*
*உலைவாயின் விசும்பினர்க்கும் உள்ளியது முடியாது*
*கலைவாய்ந்த முனிகளிப்பக் கடவுளர்கள் சுழ்த்தனரே*

தம் நிலையில் பிழையாராயின் தலை சிறந்த அறிவுடையார் இப்பூவுலகராயினும் நினையாத சிறப்பெல்லாம் பெறுவர். அறமல்லாதன பேசுவதால் தம்மனம் நடுங்கப் பேசுவோர் தேவர்களேயானாலும் அவர்கள் நினைத்தது முடியாது என்றபடி கலையறிவு மிக்க சிவனை முனிவன் களிக்க, அசுவினி தேவர்கள் நாணினர். - 253 -

41. *நாண்அலைப்பத் தலைசாய்த்தார் நல்லஅசு வினிதேவர்*
*பேணும்அவர் முகத்(து) எழுந்த பிழையினை எதிர்நோக்கிப்*
*பூண்அலைக்கும் முலைமாதைப் புடைநீக்கி மாதவத்தோன்*
*மாண்உருவம் அளித்தீரே மறவேன்இ(து) என விளம்பும்.*

நல்ல அசுவினி தேவர்கள் நாணம் வருத்தத் தலைகுனிந்தனர். அவர்கள் முகத்தில் எழுந்த மிகப் பெரும் துன்பத்தை எதிரே கண்டு, முலைகள் வருந்துமாறு அணிகலன்கள் அணிந்த சுகன்னியை ஒருபால் போக்கி சிவன் தேவர்களைப் பார்த்து "மாட்சிமைப் பட்ட உருவம் எனக்கு அளித்தீர், இதனை நான் மறவேன்" என்று கூறி, - 254 -

## வேறு

42. *தேவர் நோயறத் தீர்த்திடும் தேவர்காள் நுமக்கு*
*மேவு வேள்வியில் சோமபா னம்பெறு விதியைத்*
*தாவில் வேள்விஒன்று இயற்றிஅத் தக்க வேள்வியில் யாம்*
*ஓவுஇ லாமலே உறும்வகை நாட்டுதும் கொண்மின்*

"தேவர்களின் நோய் முற்றும் தீர்க்கும் தேவர்களே, வேள்வியில் நீவிர் சோமபானம் பெறும் முறைமையைக் குற்றமற்ற வேள்வி ஒன்று இயற்றி இடைவிடாமல் அதுபெறும் வகையை நிலை நாட்டுவேன்; ஏற்றுக் கொள்ளுங்கள்" - 255 -

43. *என்று தேவர்கள் மகிழ்வுற முகமனோடு இயம்பி*
*வென்றி வேல்வலம் ஏந்துசை யாதியை விளித்து*
*நன்று வேள்விஒன்(று) உனக்(கு) இரும் பயன்உற நடாத்தல்*
*இன்று வேட்டனம் என்றனன் அவன் எலாம் இறுத்தான்*

என்று தேவர்கள் மகிழ உபசார மொழிகளும் கூறி, வெற்றிவேல் வலக்கையில் ஏந்திய சையாதி மன்னனை அழைத்து உனக்குப் பெரும்பயன் உண்டாக நல்ல வேள்வி ஒன்று செய்ய இன்று விரும்பினோம் என்றார். அவன் வேள்விக்குரிய அனைத்தையும் கொண்டுவந்து சேர்த்தான். - 256 -

44. *அரிய மாதவ முனிவரர் அளவிலர் தொக்கார்*
*பெரிய மாதவச் சிவனன்என்(று) உரைத்திடும் பெரியோன்*
*விரியும் மாமறை விளம்பிய விதிப்படி ஈசற்(கு)*
*உரிய வேள்விஒன்(று) உவப்பினோ(டு) உஞற்றல்மே யினனால்.*

அரிய மாதவத்தோர் முனிவர் முதலியோர் அளவின்றிக் கூடினர்; பெருந்தவத்தோன் என்று போற்றப்பெறும் சிவன முனிவன், விரிவான சிறந்த மறைகூறிய வண்ணம், மகிழ்வுடன் சிவபெருமானுக்கு உரிய வேள்வி ஒன்று செய்யத் தொடங்கினான். - 257 -

45. *இருவர் ஆகிய அசுவினி தேவர்என் பவர்க்கும்*
*பொருவில் பாகத்தை நியமித்தான் பூசுரர் பெருமான்*
*மருவு காதலின் நியமித்த மரபினைக் கேட்டான்*
*அருவி பாய்மத முகத்(து)அயிராவதப் பாகன்*

இருவராகிய அசுவினி தேவர்கட்கும் ஒப்பற்ற பகுதியை நியமித்தான் சிவன முனிவன். பொருந்திய அன்பினால் நியமித்ததை, அருவிபோல் மதம் பெருகும் அயிராவதம் ஊரும் இந்திரன் கேள்விப்பட்டான். - 258 -

46. *ஒளிறு வச்சிரம் அங்கையில் ஒய்என எடுத்துக்*
*களி(று)இ வர்ந்துபொன் உலகினைக் கழிந்துநா னிலமேல்*
*வெளி(று) இல் கேள்வியோன் வளர்த்திடும் வேள்வியின் சாலை*
*குளிறு வார்முர(சு) ஒலிஎழக் குழுவொடும் வந்தான்*

ஒளி பொருந்திய வச்சிரப் படையைத் தன் அழகிய கையில் ஏந்தி, அதட்டுதலுடன் அயிரவதம் ஏறித் தேவருலகம் நீங்கிப் பூவுலகில் அறிவில் சிறந்த கேள்வியன் ஆகிய சிவனர் வளர்க்கும் வேள்விச் சாலையைத் தன்படை வீரர்கள் போர்முரசு முழக்க வந்து இந்திரன் சேர்ந்தான். - 259 -

47. *திமில நான்மறை முற்றிய சிவனனை நோக்கி*
*அமரர் நாயகன் அங்கி கால் விழியொடும் அறைவான்*
*நிமல நாயகன் உவப்புற நிகரிலா வேள்வி*
*விமல மாகநீ புரிவதை விலக்கிலேம் கண்டாய்*

முழங்கும் நான்மறைகளில் முதிர் அறிவுடைய சிவனரை நோக்கி, தேவேந்திரன் தீப்பொறி பறக்கும் விழிகளுடன், "மரணமே இல்லா தலைவனாகிய சிவன் மகிழ, ஒப்பற்ற வேள்வி நீ செய்வதை நான் தடுக்கவில்லை" - 260 -

48. *அண்ட வாணர்தம் மனைதொறும் நித்தலும் அலைந்து*
*கொண்(டு)எம் ஏவலின் வயித்தியம் குறித்திடும் அமரர்க்(கு)*
*உண்டல் ஆம்அவி உதவுதல்ஒட் டேன்எனத் தடுத்து*
*விண்டி டாதமா தவர்தமை நோக்கினன் விளம்பும்.*

"தேவர்களின் வீடுகள் தோறும் அலைந்து அவர்கள் ஏவ, மருத்துவம் செய்யும் அசுவினி தேவர்கட்கு வேள்வியில் சோம பானம் நிறுவ ஒப்பேன்" என்று தடுத்து மேலும், - 261 -

49. *ஆற்று வேள்வியின் அந்தணீர் அசுவினி தேவர்*
*சாற்று வானவர் தம்வழி ஒழுகும்அவ் விழிவை*
*ஏற்ற தேயலால் இருநிலத் திலும் சரித்(து) ஈங்குத்*
*தோற்று மானிடர்க்கு ஒப்புறும் துரிசினர் கண்டீர்*

"வேள்வி செய்யும் அறவோரே, அசுவினி தேவர்கள், தேவர்கள் கூறும் வழி நடப்பவர்கள். இந்த இழிவை ஏற்ற இவர்கள், நிலம் முழுதும் சஞ்சரிக்கும் மானிடர் போன்ற குற்ற முடையவர்களே" - 262 -

50. *நீவிர் அன்னவர் தமக்(கு) அவி நியமித்துக் கொடுத்தல்*
*ஆயி னீர்நுமக்(கு) அடா(து) உல(கு) அனைத்திலும் இறைமை*
*மேயி னோற்(கு) அலால் வேள்வியில் விதிப்படி பாகம்*
*ஈய லேவிலக்குதல்என இயம்பு அதிகாரம்*

"நீங்கள் அவர்கட்கு அவிநியமித்துக் கொடுப்பது அடாதது. உலகம் முழுவதற்கும் ஆட்சி செலுத்தும் உரிமை பொருந்திய எனக்கே அவிப்பாகம் உரியது. எனவே விதிப்படி அவர்கட்கு அவிப்பாகம் தராது தடுத்தலே என் அதிகாரம்" - 263 -

51. *அவித்த ஐம்பொறி அறவர்காள் அன்றொரு காலம்*
*குவித்து வைத்தன கொடுந்துயர் கரந்து உழந் தனம்யாம்*
*கவைத்(து) எழுந்(து) ஒளிர் எழுமணி நாவுடைக் கனலோன்*
*சுவைத்த நன்மொழி தூருவிளம் பால்எடுத்துரைத்தான்*

"ஐம்பொறிகளை அவித்த அறவோரே, முன் ஒரு காலத்தில் ஒரு சேரக் குவிந்தது போன்ற பெருந்துயரினால், நான் மறைந்து வாழ்ந்தேன். அப்போது பல கிளைகளாகப் பிரிந்து எழுந்து ஒளி விடும் நாவுடைய தீக்கடவுள் பிடித்தமான நல்ல செய்திகளை ஆராய்ந்து எமக்குக் கூறினான்" - 264 -

52. *ஆதலால் அவன்உதவிசெய் தமைக்(கு) அருள் கூர்ந்திட்(டு)*
*ஓது வேள்வியின் நமக்(கு)அரு கேயிருந்(து) உண்ணக்*
*காத லால்அவிப் பாகம்நாம் கற்பித்துக் கொடுத்தாம்*
*தீ(து)இ லாத அச் செய்தியும் கேண்மின்என்(று) உரைப்பான்*

"அவன் இங்ஙனம் நமக்கு உதவியால் அவன்மீது கருணை மிகுந்து வேள்வியில் நமக்கு அருகில் இருந்து அவிப்பாகம் உண்ணப் புதிய விதியினை உண்டாக்கித் தந்தோம்". அச்செய்தியும் கூறக்கேள். - 265 -

## வேறு

53. *விருத்திரன் உயிர்க்(கு)இறுதி மேவுதல் புரிந்து*
*வருத்தம்மிகு வன்பழி மரீஇஒரு மடுக்கண்*
*திருத்தகைய தாமரையின் செவ்விமலர் நாளத்(து)*
*உருத்தக ஒளித்(து) இடர் உழந்தனம் இருந்தாம்*

"எனது மேகங்களைச் சிறைப்பிடித்த விருத்திராசுரனைக் கொன்று ஏற்பட்ட பழியால், ஒரு மடுவில் தெய்வத்தன்மையுடைய தாமரைத் தண்டின் நாளத்தில் என் உருவம் முழுவதையும் தக்கவாறு ஒளித்துக் கொண்டு துன்பபட்டோம்". - 266 -

54. *நாயகன்இ ழந்தஇள நங்கையரை ஒத்தும்*
*ஆயும்அறி வாளரைஅ டாக்கழகம் ஒத்தும்*
*மேயபனி மாமலர்வி ளிந்த கயம் ஒத்தும்*
*மாயிருவி சும்புலகம் மாய்ந்ததுவ ணப்பு*

"இதனால், தேவருலகம் கணவனை இழந்த பெண்போலவும், ஆயும் அறிவாளர் இல்லாத அவை போலவும், குளிர்ச்சி பொருந்திய தாமரை அற்றுப் போன குளம்போலவும் தன்பொலிவு இழந்தது". - 267 -

55. *ஆய்ந்(து) அமரார் கூடிஅகல் வான் உலகம் வார்தோள்*
*ஏந்தும் ஒரு வேந்தனொ(டு) இராமைஎழில் என்றும்*
*வாய்ந்திடுவ(து) இன்றுமுனம் வைகிஅர சாண்ட*
*வேந்தன்நிலை வே(று)அரையன் வேண்டும்என நாடி*

எனவே அமரர் கூடி ஆராய்ந்து, அகன்ற வானுலகம் பெருந்தோள் கொண்டு ஏந்தி ஆளும் வேந்தன் இல்லாமையால் அழகிழந்தது. முன் அரசாண்ட அரசன் நிலை காரணமாக வேறு அரசன் வேண்டும். - 268 -

56. *வாம்புரவி வேள்விபல வாய்மையொடு செய்தான்*
*தேம்பயிலும் ஐந்தரு செறிந்தஉல கெல்லாம்*
*ஓம்பிஅர(சு) ஆள்உரிமை உற்றுளன் இவற்கே*
*ஆம்பரிசுஅ(து)என்று நகுடற்(கு) அர(சு)உறுத்தார்.*

தேன்பெருகும் ஐவகை மரங்களும் நிறைந்த வான் உலகை ஆள் உரிமைக்கும் பொருந்தமானவன், தாவிச் செல்லும் புரவி வேள்வி (அசுவமேத வேள்வி) பல செய்த வலிமையுடையவன் நகுடனே என்று அரசை அவனிடம் ஒப்படைத்தனர். - 269 -

57. *அன்னவன் இருந்துவிசும்(பு) ஆண்டுவரு நாளில்*
*தன்னிகர்இ லாதசசி மாதுதனை வேட்டுஅப்*
*பொன்இழை சுமந்(து)ஒளிர் புலோமசையை நண்ணி*
*நின்னலம் விழைந்தனன் நெடுங்கண் அருள் என்றான்*

தேவருலகை நகுடன் ஆளுங்கால், தன் நிகரிலாத இந்திராணியை விரும்பி, "அவளிடம், நெடுங்கண்ணுடையவளே! உன் நலம் துய்க்க விரும்பினேன் அருள்க" என்றான். - 270 -

## வேறு

58. *பொருவறு வனப்புச் சான்ற புலோமசை கேட்டு மன்னர்*
*கருதிய(து) இதுவால் என்று கருத்திடைக் குய்யம் வைத்துப்*
*பருவரல் ஒழிஇன் சொல்லால் பகருவாள் அரசர்ஏறே*
*இருவிசும்பு ஆள்கின்றார் யார் அவர் எனக்கு இறைவன் கண்டாய்*

ஒப்பற்ற அழகுடைய அவள், அதுகேட்டு, இவன் கருத்து இதுவோ என்று மனத்தில் வஞ்சனை மறைத்து, இனிய சொற்களால் "அரசர் தலைவனே துன்பம் ஒழிக, அகல்வானம் ஆள்வார் யாரோ அவர்க்கே உரியவள் யான்". - 271 -

59. *ஆயினும் அர(சு)உ வாஎன்(று) அறைஅயி ராவதத்து*
*மாயிரும் தவங்கள் சான்ற மாதவர் எழுவர் காவப்*
*பாயிருள் பகுக்கும்சோதிப் பன்மணிச் சிவிகை மீது*
*சேயிலை வேலாய் என்பால் சேருதல் முறைமை யாகும்*

ஆயினும் குருதிதோய்ந்த சிவந்த வேல் உடையவளே, பட்டத்துயானையாகிய அயிரா வதத்துடன், தவத்தோர் எழுவர் சுமக்க, செறிந்த இருள்ஓட்டும் ஒளி பொருந்திய பன்மணிகள் இழைத்த சிவிகைமீது ஏறி என்பால் வருதலே முறைமை. - 272 -

60. *அல்லதூஉம் விரதம் ஒன்றை - அகத்(து) உற நாடிக் கொண்டேன்*
*வல்லவா(று) அதனை ஆற்றி வரையறை வைகல் எல்லாம்*
*செல்லவே வேண்டும் என்று சிலபகல் இடைநீட் டிப்ப*
*நல்லவே மெல்லஓதி நகுடனைப் போக்கிப் பின்னர்*

அதுமட்டுமின்றி, விரதம் ஒன்றினை உள்ளத்தில் விரும்பி ஏற்றுள்ளேன். நன்முறையில் அதனை உரிய நாள் வரை மேற்கொள்ள வேண்டும் என்று சிலநாட்கள் நீட்டிக்குமாறு இதமாகக் கூறி நகுடனை அனுப்பினாள். - 273 -

61. *குரவனை அடுத்துத் தாழ்ந்து கும்பிட்டுச் செய்தி எல்லாம்*
*விரிவுற உரைத்துநின்றாள் வியாழம் அங்(கு) அதனைக்கேட்டு*
*வெருவரேல் முனிவர்சாபம் விளைவினால் நகுடன் வீழும்*
*அரவுஅகல் அல்கு லாய்என்(று) அகற்றிஆர் அழலைக்கூவி*

பின்னர் வியாழ பகவானை அடைந்து வணங்கிச் செய்தியை விரிவாகச் கூறினாள். அதுகேட்டு, "அஞ்சாதே, முனிவர் சாபம் காரணமாக நகுடன் தன்நிலை கெடுவான்". என்று கூறித் தீக்கடவுளை அழைத்து - 274 -

62. *இந்திரன் இருக்கும் தேயம் இலைப்புரை கிளைத்துக் கொண்டு*
*வந்திடு கென்(று) அங்(கு)ஏவ வயங்கழல் அமரன்நாடி*
*நந்தமை அரிதில்கண்டு நகுடன்அங்(கு) உளக்குமாறும்*
*அந்தணர் பெருமான் சொன்ன ஆர்வமும் அனைத்தும் விண்டான்*

நீ எங்கும் தேடி இந்திரன் இருப்பைக் கண்டுபிடி என்று கூறி அனுப்பினான். பின்னர் தீக்கடவுள் என்னை அரிதில் கண்டுபிடித்து நகுடன் நினைப்பின் வகையையும், வியாழ பகவான் மனக்கருத்தும் எல்லாம் கூறினன். - 275 -

63. *அம்மொழி கேட்டுத் துன்பத்(து) ஆழ்ந்தநாம் உவகை வெள்ளம்*
*விம்முற வெளிக்கொள் காலை வேந்தனாம் நகுடன் ஐயர்*
*தம்அடி வணங்கிப் போற்றித் தம்குறை உரைப்பத் தென்சொல்*
*செம்மல் முன்ஆன ஐயர் சிவிகையைக் காவிச் சென்றார்*

துன்பத்தில் ஆழ்ந்திருந்த நாம் அதுகேட்டு, மகிழ்ச்சி வெள்ளம் பொங்கிப் பெருக இருந்த போது, இந்திர பதவி ஏற்றிருந்த நகுடன் முனிவர்களின் அடி வணங்கிப் போற்றித் தமது குறையைக் கூறிவேண்ட தமிழ்தந்த அகத்தியர் முதலியார் சிவிகை சுமந்து சென்றனர். - 276 -

64. *புற்புதப் போகம் வேட்டுப் புங்கவர் தம்மை ஏவும்*
*அற்பஉள் ளத்தன் அன்னார் செயலினை அருள்என்(று) எண்ணான்*
*சற்பஎன்(று) இருகால் சொன்னான் தழல்விழி விழித்துச் சாபம்*
*வெற்பொடு கடலை வென்றான் விளைத்தனன் நகுடன் வீழ்ந்தான்*

நீர்க்குமிழி போன்ற அற்பக்காம இன்பம் விரும்பி, முனிவர்களை ஏவும் கருத்தனாய், அவர்கள் செயலைக் கருணை என்று கருதாமல் சர்ப்ப- விரைந்து செல்க - என்று இருமுறை ஏவ, அதுகேட்ட விந்தியமலை, கடல் ஆகியவற்றின் செருக்கடக்கிய அகத்தியர் நெருப்பென விழித்துச் சாபமிட்டார். - 277 -

65. *குறு முனி வெகுளித் தீயால் கொற்றவேல் நகுடன் வீழ்ந்து*
*மறுகிய செய்தி கண்டோர் வழியிடை உரைப்பக் கேட்டு*
*நறுவிரைக் கற்ப நாட்டை நண்ணினம் செங்கோல்ஆட்சி*
*உறும்அழல் தனக்கும் பாகம் உதவினம் ஆதலாலே.*

"அகத்தியரின் சினத்தீயால், இந்திர பதவி யிலிருந்த நகுடன் நிலைமாறினான்'' என்ற செய்தியை வழியில் கூறக்கேட்டுத் தேவருலகை அடைந்து செங்கோல் செலுத்தினேன். நமக்கு உதவிய தீக்கடவுளுக்கு அவிப்பாகம் உதவினேன். - 278 -

66. *அவ்விய கவ்வி யங்கள் அனைத்திற்கும் முதல்வன் யாமே*
*செவ்விய முனிவர் காள்நம் திருக்கவர் நகுடன் ஐயர்*
*கவ்விய வெகுளித்தீயால் வீழ்ந்தனன் எமக்கு மாறா*
*இவ்விடைப் பாகம் ஈயின் இடர்உழப் பீர்கள் என்றான்*

"செம்மையான முனிவர்களே, தேவர் பொருட்டும் பிதிரர் பொருட்டும் வேள்வியில் இடும் பொருள்களுக்கு முதல்வன் நான். நம் பதவி கவர்ந்த நகுடன் அகத்தியரின் உளம் கவ்விய சினத் தீயால் வீழ்ந்தான். என் கருத்துக்கு மாறாக இப்பொழுது அவிப் பாகம் அசுவினி தேவர்கட்குத் தரின் துன்பப்படுவீர்கள்'' என்றான். - 279 -

## வேறு

67. *தருக்கி னால்இது சாற்றலும் இந்திரன்*
*வெருக்கொள் சிந்தையர் ஆயினர் மெய்த்தவர்*
*பொருக்கெ னச்சிவ னப்பெயர் பூண்டவன்*
*திருக்கொள் சிந்தையி னால்இது செப்புமால்*

இந்திரன் செருக்கினால் கூற, பிற தவத்தோர் அஞ்சினர். மாறுபட்ட எண்ணத்தால் சிவன முனிவர் விரைந்து எழுந்து பின்வருமாறு கூறினார். - 280 -

68. *புகழ்செய் அந்தணர் பொங்கிய வெப்பினால்*
*நகுடன் வீழ்ந்தனன் என்றுந விற்றினை*
*புகர்இல் இம்மொழி பொள்என இங்ஙனே*
*இகவ தாக இயம்பினை புத்தியை*

புகழுக்குரிய அறவோரால் நகுடன் வீழ்ந்தது கூறினாய்; அறிவற்றவனே; குற்றமற்ற முனிவர் சொல் மீறக் கூடாதது என்று கூறினாய். - 281 -

69. *எங்க ளுக்(கு)அதி காரங்கள் இல்எனப்*
*பொங்கிப் பொங்கிப் புகன்றனை வேதியர்*
*துங்க வாக்கின் துயர்நகு டற்குநீ*
*தங்கு நற்றுணை ஆவது சத்தியம்*

எங்கட்கு ஏதும் அதிகாரம் இல்லை என்று சினந்து கூறினாய். எமது வெற்றி வாக்கினால் "நகுடற்குத்தக்க துணையாய் - நீயும் வீழ்வாய் இது சத்தியம்". - 282 -

70. *இரவி தன் கிர ணத்(து)எரிக் கும்தழல்*
*விரிசு வாலையி னால்விளிக் கும்அர(சு)*
*உரிய கண்டத்து உலைக்கும் நல் அந்தணர்*
*சரத வாக்கில் தகிப்பர்கள் காண்டியால்*

பூமிக்கு வந்து எரிக்கும் ஞாயிற்றின் சூட்டினால், விரிந்த பெருந்தீ அழிக்கும் - விழுங்கும். அரசு உரிய தண்டனையால் சீரழிக்கும். ஆனால் முனிவர்கள் தம் மெய்ம்மொழியால் உரிய வரை அழிப்பர். - 283 -

71. *காள கூடம் கலந்த உயிர்கொலும்*
*வாளும் நேர்ந்த ஒருத்தன் வலிதெறும்*
*ஆளும் மாமறை அந்தணர் கோபத்தீ*
*மூளின் யாவும் ஒருங்கு முடிக்குமே*

"கரு நஞ்சு, தான் கலந்த உடம்பைக் கொல்லும். வாள், வாய்த்த ஒருவனின் வலிமையை அழிக்கும். மாமறையை ஆளும் அந்தணர் சினத் தீமூளின் யாவற்றையும் ஒரு சேர அழிக்கும்". - 284 -

72. *தருமம் மூலத்த(து) ஆகித் தழைக்குமால்*
*பெருமை வையகம் பேணும்அத் தன்மமும்*
*பொருவில் வேதம் புகன்ற(து)அவ் வேதமும்*
*இருமை அந்தணர் தம்வயத்த(து) என்பவே* - 285 -

"அறம், அதற்குரிய காரணத்தின் வழிப் பட்டுச் செழிக்கும். உலகம் பெருமையுடன் பேணுகிற அந்த அறமும் ஒப்பற்ற வேதத்தால் கூறப்பட்டதாகும். வேதமும் பெருமை பொருந்திய அறவோர் வயப்பட்டது என்பர்" - 285 -

73. *அனைய தன்மையம் ஆதலின் வச்சிரா*
*வினையின் விண்டு விளங்கிய அந்தணர்*
*நினையும் நெஞ்சினும் நித்தலும் யாவரும்*
*புனையும் நன்மைகொள் பொற்(பு) உறுதேவரே*

"வச்சிராயுதனே, அத்தகைய தன்மை யுடையவர்கள் நாங்கள். எனவே வினையின் நீங்கி விளங்கும் அந்தணர்களால் நாடோறும் தமது நெஞ்சினால் நினைக்கப்பெறும் யாவரும் பெறும் நன்மையை, அழகிய தேவரும் பெறுவர்". - 286 -

74. *தேவர் காவல செல்வச் செருக்கினால்*
*மேவு மாறு மதிக்க விளம்பிலை*
*யாவ(து) என்னை நின் ஆற்றலின் நூ(று)இவண்*
*பாவி நீபின் படுவது காண்டியால்*

"தேவேந்திரனே செல்வச் செருக்கினால் உனக்கு நன்மை பொருந்த நீ கூறவில்லை. என்னை நின் ஆற்றலால் சிதைக்க முயன்று பார். என்ன நேரும்? பாவியாகிய நீ பின்னர் படும்பாட்டினைப் பார்" - 287 -

75. *ஆற்றும் நன்றி அசுவினித் தேவர்க்குச்*
*சாற்றி னாம்தழல் வேள்வியின் பாகம்நீர்*
*ஏற்று வைகுதிர் என்றிதை யார்கொலோ*
*மாற்ற வல்லவர் வழங்குதல் திண்ணமே*

"நன்மை செய்த அசுவினித் தேவர்க்கு வேள்வியில் பாகம் தருவதை ஏற்று வாழுங்கள் என்றதை யார் மாற்றுவர்? அவர்கட்கு வழங்குதல் உறுதி" - 288 -

76. *காமம் ஆதி கடந்தவன் இன்னணம்*
*சேம வான்மொழி செப்பி இருவர்க்கும்*
*சோம பானம் துலங்க நிறீஇ னான்*
*ஈமம் நேர்முகத்து இந்திரன் காணவே.*

காமம் முதலியன கடந்த சிவன முனிவர், இவ்வாறு அவனுக்குப் பாதுகாப்பான சொற்களைக் கூறி; அசுவினி தேவர் இருவர்க்கும் சோம பானத்தை முறைமை விளங்க நிறுவினான். அதனைப்பிணம்போல் முகம் வெளுத்த இந்திரன் கண்டான். - 289 -

## வேறு

77. *பாழி நற்றவ வல்ல வன்பகர் பாகம் மன்ற நிறுத்தலும்*
*ஊழி அங்கி னக்கிளர்ந்(து) உ ரும் ஏறுஉ யர்த்தவன் வேள்வியைப்*
*பூழி செய்துஇவன் ஆவி உ ண்டுபின் போவதன்றிவி டேன்எனச்*
*சூழி வெண்களிறு உந்திவச் சிரம் சுற்றி ஒச்சினன் ஆர்த்(து) அரோ*

பெருமை பொருந்திய தவத்தோன் தான் கூறியபடி அவிப்பாகம் நிறுவ, இடி ஏற்றுக் கொடியுடைய இந்திரன் ஊழித்தீப்போல் கிளர்ந்து எழுந்து, வேள்வியை அழித்து இவனது உயிரையும் உண்டபின் போவேனேயன்றி விடமாட்டேன் என்று முகபடாம் அணிந்த வெள்ளை யானையாகிய அயிராவதத்தை முன் செலுத்தி, வச்சிரப் படையைச் சுழற்றி வீசினான். - 290 -

78. *கண்டு மாதவர் அஞ்சி ஆசிக ரைந்த னர்சிவன் நற்கழல்*
*மண்டு வேள்வியின் முன்இருந்திடும் மாற்றலர்க்(கு) உரும் ஏறனான்*
*மண்டி மேல்விழும் வச்சி ரத்தினை வெய்து நோக்கினன் அப்படை*
*அண்டம் நின்றது கற்பி னார்விழிக்(கு) அஞ்சும் காமுகர் நெஞ்(சு) என*

இது கண்டு மாதவர் பலரும் அவனைப் பழித்தனர். சிவபெருமானின் திருவருள் மண்டிய வேள்வி முன் இருந்தவனாகிய பகைவர்க்கு இடி ஏறு போன்ற சிவன முனிவர் அவ்வச்சிரப் படையைச் சினந்து நோக்கினார். அது கற்புடைய மங்கையர் விழிக்கு அஞ்சிய காமுகர் நெஞ்சு போல் அண்ட வெளியிலேயே நின்றது. - 291 -

79. *புவனம் யாவும் நடுங்கும் வென்றி புணர்ந்த வச்சிரம் விண்படக்*
*கவள மால்களிற்(று) ஊர்ந்(து) உடன்றவின் காவல் மன்னவன் நோக்கிஉள்*
*உவகை ஆண்மைநல் வீரம் ஆதிஒ ருங்(கு) அவிந்(து) அற நாணினான்*
*சிவனன் ஆனவன் தீவிழித்தவன் தீமைநோக்கி உரைப்பனால்*

உலகம் அனைத்தும் நடுங்குமாறு வெற்றி பெற்று வந்த அப்படை விண்ணிலேயே நிற்க, சோற்றுண்டை விழுங்கும் பெரிய அயிராவதம் ஊர்ந்து வந்த தேவேந்திரன் கண்டு; மனமகிழ்ச்சி, ஆண்மை, நல்ல வீரம் முதலியன ஒரு சேர அழிய முற்றும் வெட்கினான். முன்பு தீவிழி விழித்த இந்திரனை நோக்கிச் சிவன முனிவன் சில கூறினான். - 292 -

80. *மாகர் சூழ்தர விண்ணின் மேல்இறை மாட்சி பூண்(டு) அமர் வண்மையும்*
*போகம் ஆரநு கர்ந்தி டப்புணர் செல்வ மும்புகல் பேதைநீ*
*ஏக ஆணையின் ஈசர் பாதம் இறைஞ்சு வேற்(கு)இகல் செய்தனை*
*வேக மாகஅ வற்றின் விண்டிடுக என்று சாபம்வி ளைத்தனன்*

"தேவர் சூழத் தேவருலகில் ஆட்சி புரிந்த வளமும், இன்பம் மிக நுகருமாறு பெற்ற பெருஞ் செல்வமும், பெரிது என்று கூறிய பேதை நீ. ஒப்பற்ற வெற்றியுடைய இறைவன் திருவடியை இறைஞ்சும் எனக்குப் பகைமை செய்தாய். அச்சிறப்புகளை விரைவில் இழப்பாயாக" என்று சபித்தான். - 293 -

## வேறு

81. *திருவும் வலியும் ஒருங்கிழந்து திவள்பே ரணியும் பொன்னுடையும்*
*உருவின் ஒளியும் மிகக்கருகி உளைந்தான் இவ்வா(று) உலகனைத்தும்*
*குருவெண் குடையின் நிழல்பரப்பும் கோமான் இழியும் எனில் ஏனோர்*
*பொருளும் வலியும் அழியாத பெற்றி உளவோ புகலுங்கால்*

இந்திரன் செல்வம், வலிமை இரண்டும் ஒருசேர இழந்து, திகழும் பேரழகும் பொன்னுடையும் உருவ ஒளியும் மிகக் கருகி நொந்தான். இங்ஙனம் உலகனைத்தும் ஒளி பொருந்திய வெண்கொற்றக் குடைக்கீழ் நிழல் தரும் இந்திரனே தன் நிலையில் தாழ்ந்தான் என்றால் பிறரது பொருளும் வலிமையும் அழியாத தன்மை எது? - 294 -

82. *அந்தோ கொடுப்ப(து) அழுக்கறுப்பான் அனைத்தும் ஒழிய இலம்பாட்டில்*
*சிந்தா குலம்உற்(று) இழிகின்ற செய்தி சிலநாள் கழிந்தன்றே*
*கொந்(து)ஆர் அழல்முன் அசுவினிக்குக் கொடுப்ப(து) அழுக்கற்(று) இந்திரனார்*
*நந்தா வலியும் பெருந்திருவும் அன்றே நழுவ நலிந்தமையால்*

பிறர்க்குக் கொடுப்பதன்கண் பொறாமை கொள்பவன், தன் சிறப்பனைத்தும் அழிய, வறுமையுற்றுத் தாழ்வான் என்பது சில நாட்கழித்தே அறியக் கூடியது ஆகும். ஆனால் வேள்வித் தீ முன் அசுவினி தேவர்க்குக் கொடுப்பதில் பொறாமை கொண்ட இந்திரனின் குறையாத வலிமையும் பெருஞ்செல்வமும் அழிந்தது அந்தோ அப்பொழுதே யன்றோ. - 295 -

83. *வீடாச் சாபத் தொடக்குண்ட விண்ணோர்க்கு அரையன் விரைந்தேகி*
*வாடாச் சீர்த்திக் குரவன்இரு மலர்த்தாள் வணங்கி எறுழ்வலியும்*
*நாடாப் போகப் பெருந்திருவும் நழுவ உருவம் வேறாகி*
*கூடார்க்(கு) ஆண்மை பெருக்கினேன் குழையா(து) என்னைக்*
*காஎன்றான்*

தன்பயனில் கெடாத சாபம் பெற்ற தேவேந்திரன், விரைந்து சென்று வாடாத சிறப்புடைய தன்குருவின் மலர் போன்ற இரு திருவடிகளை வணங்கி, "நான் எனது தூண் போன்ற வலிமையும், பிறரை நாடாத இன்ப அனுபவச் செல்வமும் நழுவ உருவம் வேறாகுமாறு செல்லா இடத்தில் செருக்குக் குறையாது சினத்துடன் செயற்பட்டேன். நான்மேலும் நொந்து அழியாது என்னைக் காத்தருள்க" என்று வேண்டினான். - 296 -

84. *விளைந்த சாபத் தொடக்கினையும் வேந்தன் உரைத்த மொழியினையும்*
*அளந்து குரவன் மொழிகுவான் அமரர்க்(கு) அரசே சாபத்தால்*
*உளைந்து பெரிதும் தளராதி உருற்று கருமப் பயன்வந்து*
*வளைந்து விடின்மற்(று)இது நுகர்ந்தே மாற்றல் வேண்டும் வையகத்தே.*

சாபத்தின் விளைவையும், இந்திரன் கூறியதையும் அளந்து பார்த்த குரு, அவனை நோக்கித் "தேவேந்திரனே சாபத்தால் பெரிதும் மனம் நொந்து தளராதே. நீ செய்த கருமம் பயன் வந்து சூழ்ந்து விடுமானால் உலகில் அதனை அனுபவித்தே மாற்ற வேண்டும்". - 297 -

85. *மூண்ட இணைய பெருந்துயர்க்கு முன்பே வினைநீ முடித்திட்டாய்*
*வேண்டி எவர்கள் எக்கருமம் விளைத்தார் அவர்க்கே அதுபயனாய்*
*ஈண்டும் அதன்பின் இரங்குதலால் என்வந்(து) உதவும் முன்புரிந்த*
*மாண்ட வினையும் இதுதீரும் வழியும் கேள்என்(று) உரைசெய்வான்*

"மூண்ட இப்பெரிய துயரடைய நீ முன்பே வினை செய்துள்ளாய். விரும்பி எவர் எச்செயலைச் செய்தாரோ அவர்க்கு அது பயனாய்த் திரளும். அதன்பின் அது குறித்து வருந்துவதால் பயன் என்ன? முன்பு நீ செய்த மாட்சிமைப்பட்ட உயர் செயலையும் (இது வஞ்சப் புகழ்ச்சியாகக் கூறியது) அதன்பயன் தீரும் வழியும் கூறக்கேள்". - 298 -

## வேறு

86. *இதங்க ளேபுரிந்(து) இன்புறு கின்றவன்*
*மதங்க ளேபுரி வான்பொறி வென்றவன்*
*கதங்கள் ஆதிக டந்தக ருத்தினன்*
*உதங்கன் என்(று)ஒரு மாமுனி உத்தமன்.*

பிறர்க்கு நன்மையே செய்து இன்புறுகின்ற வனும், விரும்பின செய்யும் ஆற்றலுடைய புலன்களை வென்றவனும், காமம் வெகுளி முதலியன கடந்தவனும் ஆகிய உதங்கன் என்ற உத்தமன். - 299 -

87. *பரந்த நீழல் பனச வனம்குலாய்*
*வரம்த ழைத்தொளிர் வான்தலத்(து) ஊடுபுக்(கு)*
*அவந்தை தீர்க்கும் அமிழ்தம் பெறக்குறித்(து)*
*உரம்த வாத அருந்தவம் ஊக்கினான்.*

பரந்துபட்ட நிழல்கொண்ட வெண்சாமரக் குடையே வானுலகில் தழைத்து ஒளிரும் அமராவதி புகுந்து, துன்பம் தீர்க்கும் அமுதம் பெற்றுண்ணல் குறித்து வலிமைகெடாத அருந்தவம் மேற்கொண்டான். - 300 -

88. *அரிய மாதவ அங்கி எழுங்(து) உலாய்*
*விரியும் மாகத்தும் வெய்து கனற்றலால்*
*பெரிதும் ஆற்றலர் நின்னொடும்பே(து) உரீஇ*
*உரிய தேவர் கயிலையை உற்றனர்.*

அரிய மாதவத்துத்தீ எழுந்து உலாவி அகன்ற வானத்தும் வெப்பம் கனற்றியதால் பெரிதும் ஆற்றாத தேவர்கள், துன்புற்ற உன்னுடன் கயிலை சென்றனர். - 301 -

89. *ஆலம் உண்(டு)அருள் செய்த அமுதனே*
*கால காலனே காம தகனனே*
*ஓலம் ஓலம் ஒருமுனி மாதவச்*
*சீல அங்கி தெறுவதற்(கு) ஆற்றிலேம்*

அங்குச் சிவபெருமானைக் கண்டு "விடமுண்டு அருள் புரிந்த அமுதனே காலனுக்கும் காலனே, காமனை எரித்தவனே அடைக்கலம் என்று அடைக்கலம் புகுந்து" ஒரு முனிவரின் தவத் தீ வெப்பம் பொறுத்தற்கு இயலவில்லை. - 302 -

90. *என்று கூறி இறைஞ்சினர் எம்பிரான்*
*நன்று நோக்கி நடுங்கலிர் நும்பதி*
*சென்று சேர்மின்என் றான்அவர் சென்றபின்*
*நன்று நின்னை அருட்கணின் நோக்கினான்*

என்று கூறி வணங்கினர். சிவபெருமான் அவர்களை நம்மையுண்டாக நோக்கி, "நடுங்காதீர், நும் பதியைச் சென்றடையுங்கள்" என்று போக்கி, நின்னை அருட்கண்ணால் நோக்கி - 303 -

91. *மாத வத்தின் வதிந்தமு னிக்குநீ*
*சாத லைத்தவிர்க் கும்தனி வான்மருந்(து)*
*ஈதல் செய்மதி என்(று)அருள் செய்(து)உனைப்*
*போத விட்டனன் புங்கவர் வேந்தனே*

"தேவர்க்கு அரசனே மாதவத்தில் நிலை நிற்கும் உதங்க முனிவர்க்கு நீ சாவினைத் தவிர்க்கும் ஒப்பற்ற அமுதம் தருக" என்று அருளி உன்னை அனுப்பினான். - 304 -

92. போந்த பின்அருள் போற்றிஅவ் வாறுநீ
ஈந்தி டாமல்இ கந்(து) ஒரு வஞ்சனை
வாய்ந்த நெஞ்சின் மதித்(து)அத ளில்பொதிந்(து)
ஏந்தி வான் அமிழ்(து) ஏகினை நீசனாய்

வந்தநீ சிவபெருமானின் அருளைப் போற்றி அவ்வாறு செய்யாமல் ஒதுக்கி, ஒரு வஞ்சனையை மனத்தில் எண்ணி, அமுதத்தைத்தோல் பாத்திரத்தில் எடுத்துச் சென்றாய். - 305 -

93. தூரம் நின்றுது லங்கிய மாதவ
வீர நின்றவிண் ணோர்க்கும் கிடைத்திடா
வாரம் நின்றதண் வான்அமிழ் தம்இதோச்
சார நின்றனை தாங்கினன் கொள் என்றாய்

சென்ற நீ எட்ட நின்று, "ஒளியோடு விளங்கும் மாதவ வீரனே, திரளாய் நின்ற தேவர்கட்கும் கிட்டாத தண்ணிய மேலான அமுதம் இதோ உன்னிடம் வந்து சேர நீ இதனைப் பெற்றுக் கொள்" என்றாய். - 306 -

94. வெள்ளை நீற்று விரதியன் ஈங்(கு) இவன்
கள்ளை உண்ட களிப்பின் மொழிந்தனன்
தள்ளும் நீசன் தனக்(கு) அமிழ்(து) எங்ஙனம்
நள்ளும் என்(று)அ(து) நாடி உணர்ந்தவன்

வெண்ணீறு பூசிய விரதியாகிய உதங்கர், இப்போது இவன் பொய் உட்கொண்ட களிப்பால் கூறுகிறான். விலக்கத்தக்க கீழ் மகனால் நமக்கு அமுதம் எவ்வாறு கிடைக்கும் என்று ஆராய்ந்து உணர்ந்து - 307 -

95. செஞ்சொல் விண்டிலன் சேயிடை நீங்(கு) எனக்
கஞ்ச மென்கரம் காட்டி முடுக்கினான்
வஞ்சம் முற்றிய(து) என்றும தித்துநீ
அஞ்சும் நெஞ்சினை போன்(று) அகன்(று) ஓடினாய்

வெளிப்படையாக ஒன்றும் பேசாமல் "தூர நீங்குக" என்று தாமரை ஒத்த மென் கையால் காட்டித் துரத்தினான். நீ நம் வஞ்சனை முடிந்தது என்று முடிவு செய்து அஞ்சியவன்போல் அங்கிருந்து ஓடினாய். - 308 -

96. வேதம் யாவும் விளங்க உணர்ந்தவன்
ஓதி யால்உணர்ந் தான்உறு கைதவம்
பேதை பேதைநம் பிஞ்ஞகன் ஆணையின்
நீதி நின்றிலன் நீள்வினைக் கோட்பட்டான்

வேதம் அனைத்தும் விளக்கமுற உணர்ந்த உதங்கன் ஞானத்தால் உன் வஞ்சனை உணர்ந்தான். அறிவற்றவனே; நம் சிவபெருமான் ஆணையாகிய நீதிமுறையைப் பின்பற்றி நில்லாமல் தீவினை வயப்பட்டான். *- 309 -*

*97. அந்த இந்திரன் அந்தணர் சாபத்தால்*
*வெந்து வெந்து விழுத்தகு செல்வமும்*
*மைந்தும் நீங்குக வச்சிர மும்வலி*
*சிந்துகென்றுசெ யிர்த்துரைத் தான்அரோ*

அந்த இந்திரன், "மனம் வெந்து வெந்து மேலான செல்வமும், வலிமையும் நீங்குக, என்றும் வச்சிராயுதமும் தன் வலிமை இழக்க" என்றும் உதங்கன் சாபமிட்டான். *- 310 -*

*98. உருந்(து)உ ரைத்தஉ தங்கநன் மாதவன்*
*பெருத்த சாபம்பின் சென்று பிடித்தலும்*
*அருத்தம் ஆதி அனைத்தையும் நீங்கிநீ*
*வருத்தம் உற்றனை வானவர் வேந்தனே*

சினந்து கூறிய உதங்க மாமுனிவரின் பெருத்த சாபம் பற்ற, தேவர்க்கு அரசனே செல்வம் முதலிய அனைத்தும் உன்னை நீங்க நீ வருத்த முற்றனை. *- 311 -*

*99. தவ(று)இல் வேதியர்தம்மைஅ வமதித்(து)*
*உவகை நீக்கி ஒழுகுகின் றான்எவன்*
*அவனை அப்பொழு தேஅரும் கேடெலாம்*
*துவர வந்(து) உறச் சுற்றிடும் என்பவே.*

குற்றமற்ற வேதியரை அவமதித்து, மகிழ்ச்சியை நீக்கி எவன் ஒழுகுகின்றானோ அவனை அப்போதே பெருங்கேடுகள் எல்லாம் மிக வந்து வளைத்துக் கொள்ளும். *- 312 -*

*100. மறைவல் லாளன் மறலி வெகுளினும்*
*நிறைய வையினும் நீ(டு) உறத் தாக்கினும்*
*இறுதி செய்யினும் ஏங்கச் சபிக்கினும்*
*அறிவி னார்வழி பட்டே அகலுவர்*

மறைவல்லார் ஒருவர் எமனைப் போல் சினந்தாலும், மிகுதியும் வைதாலும், பெரிதும் தாக்கினாலும், கேடு செய்தாலும், மனம் ஏங்கச் சபித்தாலும் அறிவு உடையோர் அவர்களை வழிபட்டே நீங்குவர். *- 313 -*

101. *மலங்கச் சீறலும் வைதலும் தாக்கலும்*
*கலங்கச் சாபம் கரைதலும் கோறலும்*
*இலங்கு வேதியர் என்றும் ஒருவரால்*
*துலங்க வெய்(து)உறுத் தப்படுவார் அலர்*

எங்காலத்தும் இலங்கும் வேதியர் ஒருவர்; நிலை கலங்கச் சினந்தாலும், வைதாலும், தாக்கினாலும், மனம் கலங்கச் சாபமிட்டாலும், கொல்வது போல் கேடு செய்தாலும் பிறர் ஒருவரால் வெளிப்படையாக அறியுமாறு அங்ஙனம் அவரை ஆக்கமாட்டார். *- 314 -*

**வேறு**

102. *ஆத லால்மறை ஆய்ந்த அந்தணர்*
*ஓது வாய்மொழி ஒன்றி னால்இதோ*
*ஏதம் எய்தினை ஏதம் நீங்குமாறு*
*ஓது மகம் அ(து) உவந்து செய்ம்மதி*

ஆதலால் மறை ஆய்ந்த அறவோனின் வாய்மொழியால் இத்தகு துன்பப்பட்டாய், இத்துன்பம் நீங்கும் வகையில் சிறந்த வேள்வி ஒன்று உவந்து செய்க. *- 315 -*

103. *துஞ்சல் நீக்குவான் அமிழ்தம் தொல்லைநாள்*
*விஞ்சக் கொண்(டு) அவண் மேவி வைகினார்*
*கஞ்சம் மேவிய கடவுள் நாரணன்*
*அஞ்சம் பன்றியாய் அன்று தேடினார்*

அன்னப் பறவையாகவும், பன்றியாகவும் சிவபெருமானைத் தேடிய தாமரை மலரில் வீற்றிருக்கும் நான்முகனும், திருமாலும் தம் இறப்பை நீக்கும் பொருட்டு மேலான அமுதம் மிக உண்டு இறப்பு நீங்கினர். *- 316 -*

104. *அனைய காரணம் அதனை உன்னியே*
*இனிய வான்அமிழ்து எய்த லாம்என*
*நினது வஞ்சனை நிகழ்ந்த பின்னரும்*
*முனிவன் அவ்வழி மொய்ம்பின் வைகினான்*

இக்காரணம் கருதியே இனிய மேலான அமுதினை நினது வஞ்சனை நிகழ்ந்த பின்னரும் தவவழியில் அடையலாம் என்று தவவழிப்பட்ட வலிமையுடன் உதங்கன் வாழ்கிறான். *- 317 -*

105. *நீரி னால்மிக நிகழ்ந்த சேற்றினை*
*நீரில் அல்லது கழுவல் நேருமோ*
*ஓரும் வேதியர் சாபம் ஒன்றினால்*
*தீரு மோ.அவர் தீர்க்கின் அல்லதே*

நீரால் உண்டான சேற்றுக் களங்கத்தை நீரால் தான் நீக்க முடியும். ஆராயுங்கால் வேதியர் ஒருவரது சாபத்தால் பெற்ற துன்பத்தை அந்த வேதியரே தீர்த்தாலல்லது தீராது. *- 318 -*

106. *உதங்கன் என்னும்அவ் உறுஅ ரன்தனக்(கு)*
*இதம் கொள்வான் அமிழ்(து) ஏந்திச் சென்று நீ*
*கதம்கொ ளாவகை கனிந்த மென்மொழி*
*விதங்க ளால்மகிழ் வித்து நல்குதி.*

உதங்க முனிவர் என்ற அரனுக்கு இதமான மேலான அமுதத்தை நீ எடுத்துச் சென்று, அவர் சினம் கொள்ளாதவாறு கனிந்த மொழிபேசிப் பலவிதங்களில் மகிழ்வித்துக் கொடு. *- 319 -*

## வேறு

107. *மலர்ந்தகம லத்தவிசின் மங்கைஅங்கன் வீற்றிருந்த*
*அலர்ந்தகடுக் கைத்தொடை யார் அடிமலர்ப்பூ சனைபுரிந்து*
*நலம்திகழ்மா யவன்மார்பம் நண்ணினன்ஆ தலின்அந்தத்*
*தலம்தனையா வரும்மொழிவர் தகும்திருமாங் கலம் என்றே*

தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள், கொன்றை மலர் மாலை அணிந்த சிவபெருமான் திருவடிகளைப் பூசித்து நலம் திகழும் திருமால் மார்பை இடமாகப் பெற்றான். அத்தகைய சிறப்புடைய தலத்தை அனைவரும் திருமங்கலம் என்பர். *- 320 -*

108. *மங்கலேச் சுரர்அமுதேச் சுரர்என்ன வளர்நாமத்(து)*
*அங்ஙனே வீற்றிருந்தார் அவர்தம்மை இனிமேலே*
*தங்குசீர்த் துவாபரத்தின் அந்தத்தில் சைமினிசீர்*
*பொங்கும்ஆ தரவோடும் பூசித்து வரம்பெற்று*

மங்கலேச்சுரர், அமுதேச்சுரர் என்ற வளர் புகழ் வாய்ந்த திருப்பெயருடன் அவர் அங்கு வீற்றிருந்தார். அவர் தம்மை மேலான சீர் பொருந்திய துவாபர யுகத்தின் முடிவில் சைமினி முனிவர் சிறப்பு மிக்க அன்புடன் பூசித்து வரம் பெற்றார். *- 321 -*

## வேறு

109. *ஏக மாக இருந்(து)இசைக்கும் இனிய சாம வேதத்தைச்*
*சாகை ஓராயிரமாக்கித் தக்க கரும காண்டமும் நன்று*
*ஆக மீமாங் கிசத்தால்நிச் சயிக்கப் பட்ட தாப்பண்ணிப்*
*போகம் வீடு வேட்டவர்தம் பொருட்டு விளக்கு வான்அதனால்*

அனைவரும் ஒத்த குரலில் பாடும் சாம வேதத்தை ஓராயிரம் சாகைகள் - பிரிவுகள் - ஆக்கி, தக்க கரும காண்டப் பகுதியும் மீமாங்கி சத்தால் நன்றாக உறுதி செய்து இவ்வுலக இன்பமும் வீட்டின்பமும் விரும்புகின்றவர் பொருட்டு சைமினி விளக்கினார். அதனால் : - 322 -

110. *தக்க பனச வனத்தாற்குச் சாமவேதீச் சுரன்எனவும்*
*தக்க திருமங்க கலம் தனக்குச் சாம வேத புரம் எனவும்*
*பொக்கம் அகன்றோர் எடுத்துரைப்பப் புலவர்க் கரசே அத்தலத்து*
*முக்கண்வர் பூசனைஅம் முனிவன் அருளால் புரிந்(து)ஏகி*

தக்கபலாமரக் காட்டிற்குச் சாம வேதீச்சரம் என்றும், தக்க திருமங்கலத்திற்குச் சாமவேதபுரம் என்றும் சான்றோர் எடுத்துரைக்க, அறிஞர்க்கு அரசே அத்தலத்து ஒப்பற்றவராகிய சிவபெருமான் பூசனையைச் சைமினி அருளால் புரிந்து, - 323 -

111. *திருமங் கலத்தின் கிழக்கெல்லை சிறந்த வில்வ வனம்சால*
*மருவி விளங்கும் பூவாளூர் வரைப்பில் துலங்க எடு(த்) ஒளிரும்*
*உருவில் விளங்கும் கல்யாண சிகரத் திடையே உறைந்தருளும்*
*பொருவில் கருணைத்திருமூல நாதர் தமையும் பூசித்து*

திருமங்கலத்தின் கிழக்கு எல்லையில் உள்ள சிறந்த வில்வ வனத்தில் மிகப் பொருந்தி விளங்கும் பூவாளூர் எல்லைக்குள் விளக்கமுற எழுந்தருளி ஒளி வீசும் திருவுருவுடன் விளங்கும் கல்யாண சிகரத்தில் உறைந்தருளும் ஒப்பற்ற கருணை யுடைய திருமூலநாதரையும் பூசித்து, - 324

112. *ஒறுக்கும் பெரிய சாபத்தின் ஒழிந்து வலியும் பெருந்திருவும்*
*சிறக்க இனிய திருமூல நாதர் அருளால் சேர்ந்(து) அல்லல்*
*கறுக்கும் அனைய நகர்மேற்பால் கவ்வி யூதி இரண்டென்ன*
*அறுக்கும் வரைப்பின் அருச்சுனநல் வனத்தின்*
*அடைந்திட்(டு) அனகையர்கோன்*

வருத்தம் செய்யும் பெருஞ் சாபம் ஒழிந்து, ஆற்றல், பெருந் திரு முதலியன சிறக்கச் செய்ய இனிய திருமூல நாதரருளால் மட்டுமே இயலும் என்றதால், துன்பத்தைக் கறுக்கச் செய்யும் அந்நகரைடைந்து அதன்மேற்குத் திசையில் காட்டு முல்லையைப் பசுமந்தை இரண்டு படக்கடிக்கும் இடமாகிய அருச்சுன வனத்தைத் தேவேந்திரன் அடைந்து - 325 -

113. *மாறா வெறுக்கைக்(கு) இறைமையினை மருவ மதித்துச் சிவலிங்கத்(து)*
*ஆறா டியசெஞ் சடைப்பெருமான் அடித்தா மரைகள் வழிபட்டான்*
*கூறா நின்ற அத்தலத்தும்குறுகி வழிபா(டு) இனி(து) ஆற்றி*
*வீ(று)ஆர் துறக்க நா(டு) எய்தி விசும்(பு)ஆண்(டு)இருத்தி எனவிடுத்தான்*

என்றும் மாறாத பெருஞ் செல்வத்தை ஆளும் இந்திர பதவியை எண்ணி, அங்குச் சிவலிங்கமாக எழுந்தருளியுள்ள கங்கைத் ததும்பும் சடைப் பெருமானின் திருவடிகளை வழிபட்டான். முன்கூறிய அத்தலத்தில் வழிபாடாற்றி, வீறுடைய தேவலோகமடைந்து விண்ணுலகை ஆண்டிருப் பாயாக என்று அனுப்பினான். - 326 -

114. *அருளின் உரைத்த குரவன்மொழி அனைத்தும் கேட்ட புருகூதன்*
*பெருகும் உழுவல் உளம்தேக்கிப் பெயர்ந்து சுதையும் கரத்(து) ஏந்தி*
*வெருவ வினைகள் முழு(து)இரித்து விளங்கும் திருமங் கலம்சார்ந்து*
*பொருவில் முனிவன் மகிழ்கொள்ளப் புகழ்சேர் முகம*
*னொடும் கொடுத்தான்*

தன்பால் கருணையுடன் கூறிய அனைத்தையும் கேட்ட இந்திரன், இடைவிடாது பெருகும் பேரன்பை மனத்தில் தேக்கிப் புறப் பட்டு, அமுதத்தைக் கையில் ஏந்திக் கொண்டு, அஞ்சத்தக்க வினைகள் முழுவதையும் ஓட்டி விளங்கும் திருமங்கலம் சார்ந்து, ஒப்பற்ற சிவன முனிவர் மகிழப்புகழ் கொண்ட முகமன்கூறி அமுதம் தந்தான். - 327 -

### வேறு

115. *அடுத்திடும் அமரர் வேந்தர்க்(கு) அருக்கியம்ஆதி நல்கி*
*கொடுத்திடும் அமுதம் வாங்கிக் கொண்டபின் உதங்கன் சொல்வான்*
*கடுத்தவழ் குலிசவேலோய் கமலன்ஆ தியர்கள் பூசை*
*கொடுத்திடும் சாமவேதீச் சுரர்இதோ விளங்கா நின்றார்*

உதங்க முனிவர் படையலிடல் முதலியன செய்து, அவன் கொடுத்த அமுதத்தைப்பெற்ற பின், கூர்மை விளங்கும் குலிசவேலனே, நான்முகன் முதலியோர் பூசைமேற் கொண்ட சாமவேதீச்சுரர் இதோ எதிரே தோன்றுகின்றார். - 328 -

116. *இத்தகு சிவலிங் கத்தின் இறைவரைப் பூசித்(து) ஏகி*
*உத்தம வில்வ கானத்(து) ஒழுகுபற் குனிநீ ரத்தில்*
*பொத்(து)ஒளி மணிப்பொற் கோயில் புட்பலிங் கரைப்பே ரன்பு*
*மெத்திய உளத்தால் பூசை விதியுளி ஆற்றிப் போற்றி*

இத்தகைய சிவலிங்கத்தில் எழுந்தருளியுள்ள இறைவனைப் பூசித்துப் பின், உத்தமமான வில்வ வனத்தில் நீர் இடையறாது ஓடும் பற்குனியாற்றங் கரையில், ஒளியுண்டாக்கும் அழகிய பொற் கோவிலில் உள்ள புட்பலிங்கரைப் பேரன்போடு விதிமுறைப்படி பூசனை புரிந்து, போற்றி. - 329 -

117. *அண்ணலார் அருளிச்செய்த அருளினைக் குய்யம் தன்னால்*
*எண்ணுறா(து) இகந்த பாவம் யான்இடும் சாபம் தீமை*
*நண்ணுறாச் சிவனின் சாபம் யாவையும் நழுவ நீக்கி*
*வண்ணவான் செல்வம் எய்தி முன்புபோல் வாழி என்றான்*

சிவபெருமான் கூறியதை, வஞ்சனை காரணமாக முறைப்படி நினையாமல் ஒதுக்கிய பாவம், நான் இட்ட சாபம், சிவன முனிவனின் சாபம் அனைத்தும் உன்னைவிட்டு நழுவ, இந்திரச் செல்வம் பெற்று முன்போல் வாழ்க என்றான். - 330 -

118. *மெய்த்தவ உதங்கன் உள்ள விருப்பொடு மகிழ்ந்து கூறப்*
*பொய்த்தலை நின்றுவஞ்சம் புணர்த்திரேனான் உவகை பொங்கிக்*
*கைத்தலக் கனிபோல் ஆங்குக் காட்சிதந்(து) அருளா நின்ற*
*பைத்தலை ஆரம்பூண்ட பரமனைப் பூசை செய்தான்.*

மெய்த்தவம் சிறந்த உதங்க முனிவர் விருப்புடன் மகிழ்ந்து கூற, முன்பு பொய்யினை மேற்கொண்டு வஞ்சனை செய்த இந்திரன், உவகை மிக அங்கையின் நெல்லிக்கனியாக எதிரே காட்சி தந்தருளிய படம் கொண்ட பாம்பினை ஆரமாகப் பூண்ட பரம்பொருளைப் பூசித்தான். - 331 -

119. *ஆங்(கு)அருள் பெற்று நீங்கி அழகிய பூவா ளூரைத்*
*தீங்கெலாம் அகலச் சார்ந்து தெளிந்தபற் குனிநீ ராடி*
*ஓங்குகல் யாண நாதர் உவந்(து)அருள் சிகரம் தாழ்ந்து*
*பாங்(கு)உறு கோயில் புக்குப் படிமிசை வீழ்ந்தெழுந்தான்.*

அங்கு அப்பெருமான் அருள் பெற்று, அழகிய பூவாளூரைத் தமது தீங்குகள் அனைத்தும் அகலுமாறு அடைந்து. தெளிந்த பற்குனியில் நீராடி, அருள் ஓங்கு கல்யாணநாதர் உவந்து எழுந்தருளியுள்ள கல்யாண சிகரத்தைப் பணிந்து, பாங்குறு திருக்கோயிலுட் புகுந்து நிலத்தில் வீழ்ந்து வணங்கி எழுந்தான். - 332 -

120. *உழுவல் அன்(பு) ஈர்ப்ப உள்புக்(கு) ஒளிர்திரு மூலநாதர்*
*செழுமலர்ப் பாதம் சாலத் தெரிசித்துச் சிறியேன் ஆங்கு*
*முழுவதும் பிழைத்தேன் ஈங்கு முழுவதும் பிழைக்கும் வண்ணம்*
*விழுமிய கடைக்கண் நல்க வேண்டும் என்(று)இரந்து போற்றி*

இடைவிடாது பெருகும் அன்பு ஈர்க்க, உள்ளே புகுந்து, திருமூலநாதரின் செழுமலர் ஒத்த திருவடிகளைக் கண்ணாரக் கண்டு வணங்கி, 'அற்பனான நான் அன்று பெரும்பிழை செய்தேன்; இப்போது நான் அப்பிழை முழுதும் தீர்ந்து ஈடேறும் வண்ணம், மேலான கடைக்கண் அருள வேண்டும்' என்று வேண்டிக் கொண்டு வணங்கி, - 333 -

121. *திரவியம் அனைத்தும் கொண்டு திகழ்மறை விதியின் ஆற்றால்*
*வரம்மலி புட்ப லிங்க வள்ளலை அருச்சித்(து) ஏத்திப்*
*பிரணவத் தோடும் கூட்டிப் பிழையறும் சாந்தம் யாந்தம்*
*விரவுமந் திரத்தை வேண்டும் அளவும்கண் மணியால் எண்ணி*

உரிய திரவியங்கள் அனைத்தும் கொண்டு, விளங்கும் வேதவிதிப்படி மேன்மை மலிந்த புட்ப லிங்க வள்ளலை அருச்சித்து ஏத்தி, பிரணவத்தோடு கூடிய திருவைந்தெழுத்தை உரிய விதிப்படி ஓதி, உருத்திராக்கம் கொண்டு எண்ணி, - 334 -

122. *கோடி செங் கதிர்கள் ஒன்றாய்க் குழுமி நின் றனைய தேசும்*
*கோடி வெண் திங்கள் ஒன்றாய்க் குழுமுசீ தளமும் நன்றாக்*
*கூடிநின்(று) ஓங்கும் கோல மேனியும் வாம பாகம்*
*கூடிய உமையும் காளம் குடி கொள்கண் டமும்முக் கண்ணும்*

கோடிக்கணக்கான செஞ்ஞாயிறுகள் ஒன்றாகக் கூடி நின்ற ஒளியும், கோடிக் கணக்கான வெண்திங்கள்கள் ஒன்றாய்க் கூடிநின்ற குளிர்ச்சியும் ஒன்றாக அமைந்து ஒளிவீசும் பெருமானின் அழகிய திருமேனியும், இடப்பாகம் இடம் பெற்றுள்ள உமையம்மையும் முக்கண்களும் - 335 -

123. *தத்துவ வலியை வென்ற சனகரா தியர்கள் சூழ்ந்து*
*கைத்தலம் கூப்பிஏத்தும் காட் சியு மாக எண்தோள்*
*அத்தனை வில்வமூலத்(து) அமலனை யாதும் தோயா*
*முத்தனை அனைத்தும் ஆகும் முதல்வனைத் தியானம் செய்தான்*

96 தத்துவங்களின் ஆற்றலை எல்லாம் வென்ற சனகர் முதலியோர் சூழ்ந்து கைகூப்பி வழிபடும் காட்சி கொண்ட எண்தோள் தலைவனை, வில்வ மர நிழலில் எழுந்தருளிய இயல்பாகவே மலங்களின் நீங்கியவனை, பற்றற்ற முத்தனை, எல்லாமாக விளங்கும் முதல்வனைத் தியானித்தான் - 336 -

124. *இந்திரன் இவ்வா(று) ஆற்றி இருந்திடும் நாளில் ஓர்நாள்*
*சந்திரன் முடியில் வேய்ந்த சங்கரன் எதிரே தோன்றி*
*அந்தரத்(து) அரசே சாபம் அகன்றது திருவும் தேசும்*
*தந்தனம் கொண்டு முன்போல் தமனிய உல(கு) ஆள் என்றார்.* - 337 -

இந்திரன் இவ்வாறு வழிபாடு செய்து கொண்டிருந்த நாளில், ஒருநாள், பிறையணி சங்கரன், அவன் எதிரே எழுந்தருளித் தேவலோகத்து "அரசனே, சாபம் நீங்கியது; செல்வமும் ஒளியும் தந்தோம், அவற்றுடன் முன்புபோல் பொன்னுல காள்க" என்றார். - 337 -

125. *உய்ந்தனன் உய்ந்தேன் நான்என்(று) உருமுஉயர் கொடியோன் பல்கால்*
*வந்தனை புரிந்து சால வலம்வந்து கூத்தும் ஆடிச்*
*சிந்தையில் உவகை பொங்கத் தெண்புனல் உறைப்பக் கண்கள்*
*பந்தவல் வினைவிட்(டு)ஓடப் பரமனை நோக்கிச் சொல்வான்*

"நான் கடைத்தேறினேன் நான்கடைத் தேறினேன்" என்று இடிக்கொடியுடைய இந்திரன் வணங்கி, ஆசைதீர வலம் வந்து, மகிழ்ச்சியில் கூத்தாடி, மனதில் பெருமகிழ்ச்சி பொங்க, கண்களில் மகிழ்ச்சிக் கண்ணீர் பெருகி ஒழுக, தன்னைக் கட்டியுள்ள கொடிய வினை விட்டோட, இறைவனை நோக்கி - 338 -

126. *கங்கையைச் சடையில் வைத்த கடவுளே சரணம் தெய்வக்*
*கொங்(கு)உயிர் கடுக்கை மாலைக் குழகனே சரணம் பச்சை*
*மங்கைஓர் பாகம் வைத்த வள்ளலே சரணம் நாயேன்*
*இங்(கு)உனைச் சரணம் சார்ந்தேன் என்பிழை பொறுத்தல்*
*வேண்டும்.*

"கங்கையைச் சடையில் வைத்த கடவுளே அடைக்கலம்; தேன் துளிக்கும் கொன்றைமாலை சூடிய அழகனே அடைக்கலம்; பசிய நிறத்து அருள்தரு குங்கும சுந்தரியம்மையை இடப்பாகம் வைத்த வள்ளலே அடைக்கலம்; நாய் ஒத்த நான் இன்று உன்னை அடைக்கலமாகச் சார்ந்தேன்; என் பிழைகளை எல்லாம் பொறுத்தருள வேண்டும்". - 339 -

127. *பண்(டு)எனாம் அடியே னாலும் பங்கயக் கடவு ளாலும்*
*விண்டுவி னாலும் ஏனை விண்ணவ ராலும் கண்டு*
*கொண்டிடப் படாத சீலக் கோலம்நேர் காட்டு நீல*
*கண்டற்குத் தமியேன் செய்யும் கைம்மாறு காணி லேனால்*

"முன்நாளில் என்னாலும் தாமரை இருக்கையனாகிய நான்முகனாலும், திருமாலாலும் பிற விண்ணவராலும் கண்டு கொள்ளப் படாத பெருங்குழத்து அனகனே, எதிரே தோன்றிய நீலகண்டனாகிய உனக்கு எவ்வகைக் கைம்மாறும் செய்ய இயலாது" - 340 -

128. *வரம்கெழு ஞானத் தாலும் வரம்மலி யோகத் தாலும்*
*விளங்கிய கருமத் தாலும் மெய்த்தவர் ஆதி யோர்கள்*
*உளம்கெழு வழிபா டாற்றும் ஒருபெருங் கடவுள் நின்பால்*
*துளங்கல்இல் லாத அன்(பு) உந்துறுத்துதல் வேண்டும் என்றான்*

மேன்மை நிறைந்த ஞானத்தால், மேன்மை மலிந்த யோகத்தால் செய்யும் சரியை கிரியைக் கருமத்தால் மெய்யான தவத்தோர் முதலியவர்கள் உளம் பொருந்த வழிபாடு செய்யும் ஒப்பற்ற பெருங் கடவுளே, நின்பால் நிலை சிறிதும் கலங்காத அன்பு என்பால் வெளிப்பட்டு மிக வேண்டும் என்றான். - 341 -

129. *இரந்தபல் வரமும்நல்கு எம்பிரான் மறையும் எல்லை*
*வரந்தரும் அருளால் ஆங்கே வானிடை இருந்து நன்மை*
*சுரந்திடும் வியாழப் புத்தேள் சுரர்குடை கவரிவேழம்*
*அரம்பையர் ஆதி சார அமரர்கோன் அனைத்தும் கண்டான்*

இந்திரன் வேண்டிக்கொண்ட பலவகை வரங்களும் அருளி, இறைவன் மறையும்போது வரம் தந்த அவனருளால், வானத்தில் நன்மை தரும் வியாழ குரு, தேவர்கள், வெண்குடை, வெண் சாமரை, அயிராவதம், அரம்பையர் முதலியன வர இந்திரன் அனைத்தையும் கண்டான். - 342 -

130. *கண்டவன் மகிழ்ந்து தெய்வக் களிற்றினை நோக்கிச் சொல்வான்*
*தெண்டிரை சுருட்டும்தீம்பால் சிந்துவில் பிறந்த யானாய்*
*அண்டம் நாம் சார்ந்து வைகும்அத்தகு சபைக்குச் சீர்மை*
*கொண்டிடா(து) அழகு வாய்ந்த உருப்பசி குறுக ளாயின்*

கண்ட இந்திரன் மிகமகிழ்ந்து அயிராவதத்தை நோக்கி "தெளிந்த அலை சுருளும் இனிய பாற்கடல் பிறந்த யானையே, நாம் வானுலகடைந்து வாழுங்காலத்தில் இந்திர சபைக்கு அழகு வாய்ந்த ஊர்வசி வராவிட்டால் பொலிவிருக்காது" - 343 -

## வேறு

131. உரைசேர் மறைதெள் ளியநாவின் ஒருமா திருக்க இடம் கொடுத்தோன்
புரைதீர் சபையின் நடம்ஆடும் பொழுது புரூர வசுஎன்னும்
தரைஆள் ஒருமானிட வேந்தன் தன்னை வியந்த காரணத்தால்
விரைஆர் கமலத் தொடை மார்பன் விளைத்தான் சாபம் அதனாலே

'குற்றமற்ற தேவசபையில் ஊர்வசி நடனமாடும் பொழுது, புரூரவசு என்ற பூவுலக அரசனைச் சேர அவள் விழைந்ததால், புகழ் வாய்ந்த மறை ஓதும் தனது நாவில் கலைவாணிக்கு இடம் கொடுத்தவனும் தாமரை மலர் மாலை அணிந்தவனும் ஆகிய நான்முகன் இட்ட சாபத்தால்" - 344 -

132. தெண்ணீர் வழக்கம் ஒருநாளும் தீராப் பொன்னித் தென்கரையில்
பண்நீர் மையின்வண்(டு) இசைமுரலும் பாரி சாத வனத்(து) எய்தி
உண்நீர் மையினால் அரியதவம் உருன்றா நின்ற உருப்பசியை
நண்ணீர் மையினால் அழைத்திங்கு நணுகாய் என்று விடை கொடுத்தான்

"தெளிந்த நீரோட்டம் ஒருநாளும் தீராத காவிரிக்கரையில், பண்முறைப்படி வண்டுகள் முரலும் பாரிசாதவனம் சென்று அரிய தவத்தை மகிழ்வுடன் செய்து கொண்டிருக்கும் ஊர்வசியை இங்கு அழைத்து வருக" என்று அனுப்பினான். - 345 -

133. அயிரா வதம்அங்கு எழுந்துபோய் அரிய தவத்தின் மனம்வைத்துப்
பெயரா திருந்த உருப்பசியைப் பெயர்ப்பக் கருதி விளித்(து) ஆர்த்து
உயிரா உடல்மேல் வளிபரப்பி ஒழுகித் திரண்டு - துளைவாய்ந்து
மயிரார் கரத்தால் வளைத்து அலைத்து மலைத்துப் பிடித்து ஈர்த்ததை யன்றே

அயிராவதம் புறப்பட்டு, அரிய தவம் மேற்கொண்ட தன் காரணமாக மனம் பெயராதிருந்த ஊர்வசியின் மனத்தைக் கலைக்கக் கருதிப் பிளிறி, ஆரவாரித்து, மூச்செறியாத அவள் உடலில் துதிக்கையால் காற்றினை மூச்செறிந்து, திரண்டு, நீண்டு, துளையுடையதாய் மயிருடன் கூடிய துதிக்கையால் வளைத்து அசைத்தும் இயலாமையால் மலைத்து, அவளைப் பிடித்து இழுத்தது.

134. அசைவற்(று) இருப்ப அருந்தவத்தின் ஆற்றல் இதுஎன்(று) அறியாது
விசையுற்(று) இழுத்து வழீஇத்தூரச் சென்று விழுந்து மூர்ச்சித்தது
இசையுற்(று) ஒளிரும் மணிஅதன்மேல் இருந்(து) இடையே
கழிந்(து) உலகப்
பசையற் றவர்கள் ஐம்பொறிபோல் பாரில் விழுந்து சிதர்ந்ததே

ஊர்வசி அசையாமை நோக்கி, இது அரிய தவத்தின் ஆற்றல் என்று அறியாது வேகமாக இழுக்க, கை நழுவித் தூரத்தில் சென்று விழுந்து மூர்ச்சையானது. அதன்மேல் பொருத்தப் பட்டிருந்த மணி, பற்றற்றவர்களின் ஐம்பொறிகள் தம் வழியில் இயங்காதது போல் நிலத்தில் விழுந்து சிதறியது. - 347 -

135. *தகர்ந்து விழுந்த மணிஆங்கே சகல உருவும்தன் உருவாய்த்*
*திகழ்ந்த இறைவன் சிவலிங்க உருவாய்த் திவழ்கின் றதுமுழம்எழ்*
*உகந்த ஒருத்தல் உருப்பசியோ(டு) உறும்என்(று) இருந்த புருகூதன்*
*நிகழ்ந்தது அறியான் நீட்டித்த(து) என்னே என்று நினைந்(து) எழுந்தான்*

சிதறி விழுந்த மணி அங்கே சகல உருவும் தனது அருளுருவாய்த் திகழும் இறைவனது சிவலிங்க உருவில் திகழ்கின்றது. ஏழு முழு உயரம் கொண்ட அந்த அயிராவதமாகிய ஆண்யானை ஊர்வசியோடு வரும் என்று நினைத்திருந்த இந்திரன், இங்கு நிகழ்ந்ததை அறியாது, காலம் நீட்டித்தது என்ன? என்று நினைத்துக் காணப் புறப்பட்டான். - 348 -

136. *பனிவான் விசும்பு முழு(து) அளக்கும் பாரி சாத வனத்(து) ஏகி*
*நனி வீழ்ந்(து) அயர்ந்த வெண்களிற்றின் நலிவு நோக்கி ஆங்கிருந்த*
*துனிதீர் கருணைப் பெருமானார் துணைத்தாள் மலர்ப்பூ சனைஆற்றி*
*இனிதாம் அயிரா வதேச்சுரர் என்(று) இட்டான் அவர்க்குத் திருநாமம்*

மேலான குளிர்ந்த வானை முழுதும் அளப்பது போல் உயர்ந்த பாரிசாத வனம் சென்றடைந்து, கீழே விழுந்து மூர்ச்சித்துள்ள அயிராவதத்தின் நலிவைக் கண்டு, அங்கு எழுந்தருளி இருந்த, துன்பம் நீக்கும் பெருமானின் இரு திருவடிகளையும் மலர்களால் பூசனை புரிந்து அவருக்கு இனிமை அருளும் அயிராவதேச்சுரர் என்று திருப்பெயரிட்டான். - 349 -

137. *கந்தம் கமழும் அவ்வனத்துக் கலந்த பாரி சாதேசர்*
*முந்தும் அருளால் வெண்களிற்றின் மூர்ச்சை தீர்த்து மிகஎழுப்பி*
*வந்த பிரம சாபத்தை மாற்றித் தவம்செய் உருப்பசியும்*
*சிந்தை மகிழ உடன்கொண்டு திகழ்ந்த மணிலிங் கமும் வணங்கி*

மணக்கும் அப்பாரிசாத வனத்துப் பாரிசாதேசுரரின் முற்பட்ட அருளால், அயிராவதத்தின் மூர்ச்சை தீர்த்து எழுப்பி, தவம் செய்து கொண்டிருந்த ஊர்வசி மனம் மகிழ அவளுக்கு ஏற்பட்ட பிரம சாபத்தை மாற்றி மணிலிங்கத்தை வணங்கி - 350 -

138. *மீட்டும் அருளுக்(கு) ஆகரமாய் விளங்கா நின்ற பூவாளூர்*
*கோட்டம் அகன்ற பேரன்பில் குறுகிப் பூசை புரிந்து நுதல்*
*நாட்டம் திகழ்ந்த திருமூல நாதர் அருளால் பரிசனத்தின்*
*ஈட்டம் உடன்கொண்(டு) எழுந்து போய் எழிலார் மருதவனம் சார்ந்தான்*

மீண்டும் அருளுக்கு உறைவிடமாய் விளங்கும் பூவாளூர்த் திருக்கோயிலுக்கு மிகப் பெரிய அன்புடன் சென்று பூசனை புரிந்து, நெற்றிக் கண்ணராகிய பெருமான் அருளால் பரிவாரக் கூட்டத்துடன் புறப்பட்டு மருதவனம் அடைந்தான். - 351 -

139. *அளகை நகரின் வீற்றிருக்கும் அரசன் பூசைக்(கு) அருள்புரிந்த*
*வளம்மிக்(கு)உயர்ந்த கயிலாய நாதர் தமையும் வந்தனை செய்(து)*
*உளம்மிக்(கு) எழுந்த பெருங்களிப்போ(டு) ஒளிர்பொன் உலகம் புகுந்(து) இன்பப்*
*புளகம் அரும்பு முலைச்சியைப் புணர்ந்(து) அங்(கு) இறைமை புரிந்திருந்தான்*

அளகாபுரி வேந்தனாகிய இந்திரன் தனக்கு அருளிய அருள்வளம் மிக்க கயிலாய நாதரையும் வணங்கி, உள்ளத்தில் மேம்பட்டெழுந்த பெருங்களிப்புடன், ஒளிவீசும் தனது பொன்னுலகம் புகுந்து, இன்பவேட்கை காரணமாக விம்மிய முலைகளையுடைய ஊர்வசியைக் கூடி ஆட்சி புரிந்திருந்தான். - 352 -

140. *மகவான் பூசை நேர்ந்தபடி வழுத்தி னாம்மற்(று) இனிஇரதி*
*தகவேள் எரிந்து விழுந்தஉருத் தன்னைப் பெறுமா வழிபட்ட(து)*
*இகவச வண்ணம் எடுத்துரைப்பாம் என்று சூத மாதவத்தோன்*
*முகவா ரிசமென் மலர்அலர முனிவர் தமக்(கு)ஓ துவன்மாதோ*

தேவேந்திரன் பூசனை புரிந்ததைக் கூறினோம். இனி, மன்மதனின் எரிந்து விழுந்த உருவத்தைப் பெற, இரதிதேவி வழிபட்டதை நெறிகடவாது உரைப்போம் என்று சூத முனிவர் தமது முகத்தாமரை மலரப் பிற முனிவர்கட்குக் கூறினார். - 353 -

**இந்திரன் அருச்சனைச் சருக்கம் முற்றிற்று.**
ஆகத்திருவிருத்தம் - 353.

## 9. இரதி அருச்சனைச் சருக்கம்

1. *முக்கண்நா யகத்தமை முனிந்து செய்திடும்*
*தக்கனார் வேள்வியில் சார்ந்த வானவர்*
*மிக்கபா தகம்தனை வீரன் சாடினான்*
*பக்கிடா(து)இருந்தது பாவ எச்சமே.*

முக்கண் தலைவனைச்சினந்து வேள்வி செய்த தக்கனைச் சார்ந்திருந்த தேவர்களின் பெரும் பாதகத்தை வீரபத்திரக்கடவுள் அழித்தார். ஆயினும் பாவக்குறை வெடித்துச் சிதறாது இருந்தது. - 354 -

2. *ஆனஅப் பாவமும் அகற்ற எம்பிரான்*
*ஊனம்இல் கருணையால் உவப்பில் ஆற்றலில்*
*தானவர் குலம்எலாம் தழைப்பத் தாரகன்*
*வானவர் பகைவனாய் வந்து தோன்றினான்*

அக்குறையையும் அகற்ற, சிவபிரானின் குறைவற்ற கருணையால், அழியாத தனது ஆற்றலால் அசுரர் குலம் தழைக்குமாறு தேவர்க்குப் பகைவனாகத் தாரகாசுரன் தோன்றினான். - 355 -

3. *மறம்தலை நின்(று)எதிர் மாயன் ஆதியோர்*
*பிறந்தலை முதுகிடப் படையின் வென்றுபின்*
*சிறந்தவா னவர்தமைச் சேரக் கொண்டுபோய்*
*அறம்தகா தனஇழி தொழிலர் ஆக்கினான்*

தமது வீரம் மேம்பட எதிர்த்துநின்று போரிட்ட சிறந்த திருமால் முதலியோர் போர்க் களத்தில் புறமுதுகு காட்டி ஓட அவர்களை வென்றபின், தேவர்களை ஒருசேரக் கொண்டு போய் அவர்களது தகுதிக்குப் பொருந்தாத அறமற்ற இழி தொழிலில் ஈடுபடுத்தினான். - 356 -

4. *ஆணையைக் கடந்திடும் ஆற்றல் இன்மையின்*
*நாண்உறு தொழிலையும் நாளும் ஆற்றினார்*
*ஏண் அழிந்(து) இனிஇருந்(து) ஆற்றி லேம்எனக்*
*காணுதல் உறாவகை கரந்(து)இ ரிந்தனர்*

அவனது ஆணையை மீறும் ஆற்றலின்மையால் தம் தகுதிக்குச் செய்தலாகாத நாணத்தக்க செயலையும் அவர்கள் நாளும் செய்தனர். பின்னர் வலிமை இழந்து இனி அங்கு இருந்து ஏவல் செய்ய ஆற்றோம் என்று யாரும் காணதவாறு ஒளிந்து திரிந்தனர். - 357 -

5. *இரிந்தவர் திசைமுகத்(து) இறையை எய்தினார்*
*சொரிந்தனர் மலர்பதம் தொழுது தாழ்ந்தனர்*
*பிரிந்திடல் அரிய எம் பீழை நீக்(கு)என*
*விரிந்திடும் புகழ்பல விளம்பி நின்றனர்.*

திரிந்தவர், நான்முகனை அடைந்து அவன் திருவடிகளில் மலர் சொரிந்து தொழுது பணிந்தனர். எம்மால் பிரிதற்கு அரிய எமது துன்பத்தை நீக்கு என்று தாரகனின் புகழைப் பலவாறு கூறினார். *- 358 -*

6. *அந்தரர் தம் மொடும் அடுத்துப் போற்றிய*
*இந்திரன் மொழிகுவான் இறைவ னேமிகு*
*மைந்(து)உறு தாரகன் வயத்த ராய்எறும்*
*சிந்தினம் ஏவலே செய்(து)இ ளைத்தனம்*

தேவர்களுடன் வந்து வணங்கிய இந்திரன், "இறைவனே மிக்க வலிமையுடைய தாரகனின் ஆணை வயப்பட்டு எம் ஆற்றலை இழந்தோம் அவனது ஏவலைச் செய்து உடலும் இளைத்தோம்" *- 359 -*

7. *வன்னியந் தேவனே மடையன் ஆயினான்*
*நன்னர்நீர் எடுப்பவன் அரலை வேந்தனே*
*துன்னிடும் வளியினான் துகளை முன்றில் வாய்*
*வென் எலும்பு உளைதர விலக்கல் மேயினான்*

"அவனது ஆணையால் தீக்கடவுள் சமையற்காரனாயினான். நன்னீர் எடுத்து வருபவனாயினான் வருணன். அவன் அரண்மனை முற்றத்தில் குவியும் குப்பைத் துகள்களைத் தனது முதுகு எலும்புநோக விலக்குகிறவன் காற்றுக் கடவுள்" *- 360 -*

8. *சந்திரன் மனைதொறும் தய்ங்கு தீபங்கள்*
*நுந்திஎத் திடும்தொழில் நோன்மை சான்றனன்*
*பந்தம் விட்(டு) அகலப்பஞ் சாங்கம் ஓதிடும்*
*அந்தணன் ஆயினன் அமர ரேம்குரு*

"வீடுகள் தோறும் விளக்குகளைத் தூண்டி எரிய விடும் செயலைத் தனது தவமாகக் கொண்டான் சந்திரன், துன்பக்கட்டு நீங்கப் பஞ்சாங்கம் ஓதும் அந்தணனானான் தேவர்களாகிய எம் குரு வியாழன்" *- 361 -*

9. *நாவ றந்(து) உளம்தடு மாற நாகநா(டு)*
*ஆவகை புரந்தநான் அவுணர் கோன்அவன்*
*மேவுழி மேவுழிப் பின்னர் மேவியே*
*சேவகம் சேனையோ(டு) ஆற்றும் சேவகன்*

தேவருலகை முறைப்படி காத்துநாள் நாக்குவறள, அசுரர் தலைவனாகிய அவன் செல்லுமிடங்கள் தோறும் பின்சென்று, சேவகம் செய்யும் சேவகனாயினேன். *- 362 -*

### வேறு

10. *எல்லார் தமக்கும் இடும் தொழிலை எடுத்துக்கூறி விழிநீர் விட்(டு)*
*எல்லா நமக்கும் கொடுங்கன்மம் ஈண்டி நலிவது என்செய்கேம்*
*எல்லா நமையும் உய்ந்நெறியின் இயங்காய் என்ன நான்முகத்தோன்*
*எல்லார் தமக்கும் ஆதர(வு) அங்(கு) இயம்பிப் போக்கி இது செய்தான்.*

என்று எல்லாருக்கும் அவன் விதிக்கும் தொழிலை எடுத்துக் கூறிக் கண்ணீர் விட்டு, "நம் எல்லாரையும் கொடிய ஊழ்வினை மூண்டு துன்புறுத்துகிறது. என்ன செய்வோம். எல்லாரும் உய்யும் நெறியில் எமைச் செலுத்து'' என்று வேண்ட, நான்முகன் எல்லார்க்கும் ஆதரவாக அப்போது கூறி அனுப்பிவிட்டு பின்வருமாறு செய்தான். *- 363 -*

11. *மார னுடனே உவளகத்தை மருவிப் பிரமன் மொழிகுவான்*
*ஈரம்வறந்த சரு(கு) அருந்தி இனிய யோகத்(து) இடையறா*
*வீரம் மிகுந்த முனிவரர்தம் விழும உளர்த்துத் தவவலியின்*
*தீரம் அகற்றி மடவாரில் சேர்க்கும் ஆண்மை உடையாய் கேள்.*

மன்மதனுடன் அந்தப்புரம் சென்று, அவனிடம் "உலர்ந்த சருகுகளை உண்டு இனிய யோகத்தில் இடையறாது ஈடுபடும் வீரம் மிகுந்த முனிவர்களின் மேலான தவவலிமையால் உண்டான மனவலிமையை அகற்றி, அவர்களைப் பெண்டிர்பால் இச்சை கொள்ளச் செய்யும் ஆண்மையுடையவனே கேள்'' *- 364 -*

12. *ஆற்றல் மிகுந்த தாரகனை அழிக்கும் ஆற்றல் உடையார்கள்*
*தோற்றி ஒழிந்தோர் தொகையுள்ளும் தோற்றி இருக்கின் றாருள்ளும்*
*தோற்றி வருவோர் தொகையுள்ளும் இல்லை சுடர்வெண் திங்கள்முடி*
*ஏற்றி இருந்த தலைவன்அருள் எறிவேல் இளவ லேயல்லால்*

"ஆற்றல் மிக்க தாரகனை அழிக்கும் ஆற்றல் உடையவர்கள் பிறந்து இறந்தோர், பிறந்துள்ளோர், இனிப் பிறக்க உள்ளோர் கூட்டத்தில் யாரும் இல்லை; ஒளிரும் பிறை சூடிய தலைவன் அருளும் எறிவேல் இளவல் ஒருவனுக்கே உண்டு'' *- 365 -*

13. *குமரக் கடவுள் அவதரிக்கும் கொள்கைக்(கு) ஏ(து)இலை தொடையின்*
*பமரம் முரலும் குழல்உமையாள் பனிமால் வரையின் வளர்கின்றாள்*
*சமர மழுஏந் தியகரத்துத் தலைவன் யோகத்(து) இருக்கின்றார்*
*அமரர் வெருக்கின் வாய்க்கிளிபோல் அவுணர் அலையால் அழிகின்றார்.*

"முருகப் பெருமான் தோன்றுவான் என்ற கோட்பாட்டுக்குக் காரணம் ஏதும் இல்லை. வண்டுகள் முரலும் மாலை சூடிய உமையவள் இமயமலையில் வளர்கின்றாள். போர்வல்ல மழு ஏந்திய தலைவன் யோகநிலையில் உள்ளார். தேவர்கள் காட்டுப்பூனை வாய்ப்பட்ட கிளி போல அசுரர்களால் அலைக்கப்பட்டு அழிகின்றனர்". - 366 -

14. *தேவர் இடுக்கண் தீர்த்தருளும் செவ்வேள் முருகன் அவ்வேளை*
*மூவர் தலைவன் உமையாளை முயங்கி அருளும் அவர் முயக்கம்*
*யாவர் நிகழ்வித் திட வல்லார்நீயே வல்லை இணைவிழைச்சுப்*
*பூவர் கணையால் யாவர்க்கும் புணர்த்தும் இறைபூண் டனைஅதனால்*

"அயன் அரி அரன் மூவர்க்கும் தலைவனான சிவபெருமான் உமையம்மையைக் கூடியருளும் கூட்டத்தால், தேவர்களின் இடுக்கண்ணைத் தீர்க்கும் செவ்வேள் முருகன் தோன்றி இடுக்கண் தீர்ப்பான். அம்மை அப்பன் முயக்கத்தை யாரால் நிகழ்த்த முடியும்? மென்மையான மலரம்புகளால் யாவர்க்கும் புணர்ச்சி யுண்டாக்கும் கடமை பூண்டவன் நீயாதலால் நீயே இருவரையும் கூட்ட வல்லாய்" - 367 -

15. *ஆர்த்துப் பெருகிக் கரைகிழிய அலைத்துப் படரும் பெருகுநதி*
*ஈர்த்துச் செருத்தல் புனிற்(று)ஆவை இளங்கன்(று) அலற ஏகுங்கால்*
*பார்த்துக் கரையின் இருந்தவர்கள் பலர்க்கும் பாவம் உறா(து) அதனில்*
*தீர்த்துக் கரையின் விடவல்லான் செய்யா திருப்பின் அவற்(கு) உறுமே.*

"ஆரவாரித்துக் கரை உடைத்து அலை எழுப்பியோடும் வெள்ளம் பெருகும் ஆறு, மடி கனத்த ஈன்றணிமை வாய்ந்த இளங்கன்றுப் பசுவைக் கன்று கதறக் கதற இழுத்துச் செல்லும் போது அதைப் பார்த்துக் கொண்டு கரையில் நின்ற அனைவர்க்கும் பாவம் சேராது. அவருள் பசுவின் துயர்துடைத்துக் கரையேற்ற வல்லான் அங்ஙனம் செய்யாதிருப்பின் அவனையே பாவம் சேரும்". - 368 -

16. *பணைத்துத் திரண்டு புடைபரந்து பனிவெண் தரள வடம்தாங்கி*
*இணைத்துக் குவிந்த முலையாரும் எழுவில் திரள்தோள் ஆடவரும்*
*அணைத்துப் புரியும் கலவிநின(து) ஆணை வழிய(து) ஆதலினால்*
*கணைத்திண் கருப்புச் சிலைக் கரத்தோய் கரிசு நினக்காம் புரியாயே.*

"பருத்துத் திரண்டு பக்கம் பரந்து குளிர்ந்த வெண்முத்து மாலை தாங்கி தம்முள் நெருங்கிக் குவிந்த முலையுடைய மகளிரும், திரண்ட தோள்கள் பெற்ற ஆடவரும் தம்முள் அணைத்துப் புரியும் கலவி, உன் ஆணை வழிபட்டது. ஆதலால் மலரம்புகளையும் வலிய கரும்பு வில்லும் கையில் தாங்கியவனே, பாரம் தீர்த்தல் உனக்கே உரியது" - 369 -

17. *பண்ணைப் பணைத்த பெரும்தவம்தான் படிவம் எடுத்த பயன் அறிவார்க்(கு)*
*எண்அற்(று) ஒருவர் அழித்துயரம் எறியும் உதவி யேயன்றே*
*விண்ணத்(து) அமரார்க்(கு) ஓர்உதவி விளைத்தல் எவர்க்குக் கிடைக்கும் ஒளி*
*வண்ணக் கலைவெண் மதிகவித்த மாறா நினக்குக் கிடைத்ததே.*

"பிறந்த பயனை அறிகின்றவர்களுக்கு, மிகப் பெரும் தவமாவது தன் நினைவு அழிய ஒருவர் படும் துயரத்தைப் போக்கும் உதவியே யாகும். வானுலகத் தேவர்களுக்கு உதவி செய்தல் யாருக்கும் கிடைக்காது. ஒளியுடைய அழகிய கலை நிரம்பிய வெண்திங்கள் ஆகிய குடைகவித்த மன்மதனே உனக்கு அது கிடைத்துள்ளது" - 370 -

18. *விரைய எழுந்(து)உன் அங்கமெலாம் மேவக் கொடுபோய் உமைமாதை*
*வரைய அரிய தவத்திருந்த வரதர் உருவின் ஐங்கணையும்*
*உரைசெய் கரும்புச் சிலைகோட்டி உகைத்து வருதி எனவிடுப்பத்*
*திரைசெய்கடல் வார் முரசு ஆர்ப்பச் சென்றான் தென்றல் தேரினான்*

விரைந்து உன் படைகளை எல்லாம் அழைத்துக் கொண்டு போய், உமையம்மையை மணக்குமாறு அரிய தவத்தில் உள்ள மேலான சிவபெருமான் உருவின் மீது, உனது ஐந்துவகை அம்புகளையும் புகழ் வாய்ந்த கரும்பு வில் வளைத்துச் செலுத்திப் புணர்ச்சியில் ஈடுபடுத்தியவா, என்று அனுப்ப, கடல் அலையாகிய தனது முரசு ஆரவாரிக்கத் தென்றல் தேருடைய அவன் அவர்பால் சென்றான். - 371 -

## வேறு

19. *எம்பிரான் யோகிடை இருந்த சூழலை*
*உம்பரார் மகிழ்கொள ஊக்கத்(து) எய்திய*
*சம்பரா ரியின்அருள் தாங்கி முந்துற*
*வம்(பு)அறா வசந்தமென் பருவம் வாய்ந்ததே*

சிவபெருமான் யோகத்தில் இருந்த இடத்தைத் தேவர்கள் மகிழ, ஊக்கத்துடன் அடைந்த மன்மதனின் அருள்தாங்கி மலர் மணம் அறாத இளவேனில் பருவம் முந்தி வந்தது. - 372 -

20. *தருஎலாம் கொடிஎலாம் சருகு வீழ்த்(து) இளம்*
*பருவமென் தளிர்பப் பரப்பிப் பல்வகை*
*உருவளர் முகைமுகைத்து உகுபைந் தேன்மலர்*
*மருஎழ மலர்ந்தன மருங்கர் எங்கணும்*

மரங்கள் கொடிகள் எல்லாம் தம் சருகுகளை உதிர்த்து, இளம்பருவத்து மென்மையான பலதளிர் பரப்பி, பலவகை உருவங்களில் வளரும் மொட்டுகளை அரும்பச் செய்து, தேன் துளிக்கும் மலர்களின் மணம் எழ பக்கம் எங்கும் மலர்ந்தன. - 373 -

21. *மந்தமா ருதம்சுனை மலிந்த நீர்படிந்(து)*
*உந்துசீ தளத்ததாய் ஊழ்த்த பன்மலர்*
*சிந்துபூந் தா(து) அளாய்ச் சிறந்து மென்மெல*
*அந்திவான் நிறத்தினர் அருகு சார்ந்ததே*

தென்றல், சுனைகளில் நிறைந்திருந்த தண்ணிய நீரில் படிந்து குளிர்ந்து, மலர்ந்த பலவகை மலர்களின் மகரந்தத்து மணத்துடன் சிறந்து, மாலைச் செவ்வானன்ன மேனியனாகிய சிவபெருமான் அருகில் மிகமெல்ல அடைந்தது. - 374 -

22. மலர்தொறும் வண்டுதேன் மாந்திப் பேட்டொடும்
கலவிசெய்து இசைமுரல் காட்சி மிக்கன
இலைமலி கொம்பிடை இருந்து கோகிலக்
குலம்இசை படமிகக் கூவி ஆர்த்தன

மலர்கள்தோறும் ஆண் வண்டுகள் தேன் பருகிப் பெண் வண்டுகளுடன் கலவி செய் இசை முரலும் காட்சி எங்கும் மிகுந்தது. இலை மலிந்த மரக்கொம்புகளில் குயில் இனம் இருந்து இசையுண்டாகக் கூவி ஆரவாரம் செய்தன. - 375 -

## வேறு

23. *படைஎனப் பட்ட மாதர் பலர்தொடிக் கரத்தில் ஏந்தும்*
*தொடைஅமை வீணை நல்யாழ் தொடங்கிய இசையும் கண்டத்(து)*
*அடையுறும் இசையும் ஒன்றே ஆம்எனப் பாடி னார்கள்*
*இடை மிகத் துளங்கப் பல்லோர் இங்கிதத்து ஆட்டி னார்கள்.*

மன்மதனின் படையாகக் கூறப்பெறும் மாதர் பலர், தமது வளையல் அணிந்த கரத்தில் ஏந்தி இசைக்கும் நரம்புடைய வீணை, யாழ் ஆகியன உண்டாக்கிய இசையும், குரல் இசையும் ஒன்றே ஆகும் என்று கூறுமாறு பாடினர். பலர் தம் இடுப்பு மிக அசைய சூடி தம்மனத்துக் காமக் குறிப்புக் காட்டினர். - 376 -

24. *மலர்க்கணை ஐந்தும் வாங்கி வாய்த்தது. வென்றி என்னாக்*
*கலக்கம்இல் அறிவான் அந்தக் கண்ணுதல் சாமி மெய்யே*
*இலக்கமாய்ச் சிருங்கா ரத்தின் துறைஎலாம் இனிது தோற்றி*
*விலக்கரு மதுகை மாரன் வில்வினைத் தொடுத்து விட்டான்*

மலர்க்கணைகள் ஐந்திணையும் எடுத்து, வெற்றி கிட்டியது என்று கலங்காத அறிவுடன், அந்த நுதற்கண் பெருமானின் திருமேனியே இலக்காகக் கொண்டு புணர்ச்சித் துறைகள் அனைத்தும் தோன்றச் செய்து யாராலும் விலக்குதற்கு அரிய வெற்றியுடைய மன்மதன் வில்வளைத்து அம்பு எய்தான். - 377 -

25. *மதுஉமிழ் துன்ப மாலை மலர்அயன் முதலானோரைக்*
*கதும்எனக் கவற்றி வாட்டும் கடுந் தொழில் காமவாளி*
*விதுஅணி சடில மோலி வித்தகன் மேல்செல் காலைப்*
*பதுமம்முன் ஆன ஏனைப் பனிமல ராயே நின்ற*

தேன்பெருகும் துளசி மாலை யணிந்த திருமாலை, நான்முகன் முதலானோரை விரைந்து காம உணர்வு கொள்ளச் செய்து வாட்டும் கடுந் தொழிலுடைய அம்புகள், சடையில் பிறையணி ஞானிபால் சென்ற போது, பதுமை முன்னே எய்த குளிர்மலர்போல காமம் மூட்டாது நின்றன. - 378 -

26. *விகாரம் ஒன்றானும் வாளி விளைத்திடா(து) அழிவதேனும்*
*அகாரமே என்ன எங்கும் அமர்ந்தருள் அமலர் தம்மைத்*
*தகாமனச் செருக்கால் வெல்லச் சார்தலால் நெற்றிக் கண்ணான்*
*மகாரமே குறுகி நின்ற வார்கொடி யானைப் பார்த்தான்*

எவ்வகை விகாரமும் சிவபெருமானிடம் அவ்வம்புகள் விளைவிக்காது அழிந்தாலும், எழுத்துகள் தோறும் விளங்கும் அகரம்போல அண்டமெங்கும் அமர்ந்துள்ள சிவபிரானைத் தகாத மனச் செருக்கால் சார்ந்ததால், நுதற்கண் பிரான், தன் நுதற் கண்ணால் மீன் கொடியுடைய மன்மதனைப் பார்த்தான். - 379 -

27. *அண்ட கோ டிகளை எல்லாம் அரைக்கணத் தளவில் ஈற்றில்*
*உண்டுதேக் கிடும்பா லத்தின் ஒளிவிழிப் பார்வைக்கு ஆற்றல்*
*கொண்டுநேர் நிற்பார் யாரே கொழுந்(து) எழும்அங்கி தன்மேல்*
*மண்டி வீழ் துய்யே என்ன வெந்தனன் காம வேந்தன்*

முற்றழிப்புக் காலத்தில் கோடிக் கணக்கான அண்டங்களை எல்லாம் அரைநொடியில் உண்டு ஏப்பம் விடும் நெற்றிக் கண்ணின் ஒளிப்பார்வைக்கு ஆற்றலுடன் எதிர்நிற்பார் யார்? மண்டிக் கொழுந்து விட்டுக் கிளம்பும் பெருஞ் தீயின்மேல் விழுந்த பஞ்சுத்துய்யாக மன்மதன் வெந்தான். - 380 -

28. *பெண்ணினைப் புணர்ந்தான் என்றும் பிள்ளையை உயிர்த்தான் என்றும்*
*தண்ணிய கங்கை மாதைச் சடையிடைக் கரந்தான் என்றும்*
*எண்ணுறா(து) இகந்தோர்க்(கு) எல்லாம் இரும்பொடி வாயி னட்டி*
*அண்ணலாம் காமன் வெந்த(து) அறிந்தனர் சேனை மாதர்*

சிவபெருமான் பெண்ணைப் புணர்ந்தான், பிள்ளை பெற்றான், குளிர்ந்த கங்கையாளைச் சடையிடை மறைத்து வைத்தான் என்று சற்றும் ஆலோசிக்காமல் பழித்துக் கூறியவர்கள் வாயில் மண் அள்ளிப் போட்டுத் தலைமை சான்ற காமன் வெந்தான் என்பதை அவனது படை மகளிர் அறிந்தனர். - 381 -

29. *குழலொடு வீணை சோரக் கொம்என இரிந்தார் சில்லோர்*
*அழகிய நுதல்வேர் ஆட ஐயவோ என்றார் சில்லோர்*
*மழலைமென் கிளவி சோர மண்ணிடை விழுந்தார் சில்லோர்*
*தழல்விழி வேங்கை கண்ட தகர்என அயர்ந்தார் சில்லோர்*

புல்லாங்குழலுடன் வீணையும் கைநழுவ விரைந்து ஓடினர் சிலர்; அழகிய நெற்றியில் வியர்வை துளிக்க ஐயோ என்று கூக்குரல் இட்டனர் சிலர்; மழலை ஒத்தமென்மையான சொற்கள் சோர நிலத்தில் விழுந்தனர் சிலர்; சினமிக்க கண்களையுடைய வேங்கையைக் கண்ட ஆடு என்று கூறுமாறு நடுங்கிச் சோர்ந்தனர் சிலர். - 382 -

30. *அடர்மல மூலம்ஆய அடுத்திடும் கன்மம் ஆதித்*
*தொடர்பெலாம் செயலின் நீங்கித் துண் என இரிந்தால் என்ன*
*உடல்சினச் சிலைக்கை மாரன் உடல் முழு(து) அவிதலோடும்*
*படர்தரும் வசந்தம் ஆதி பாறின செயலின் நீங்கி*

செறிந்த நுட்பமான மூலமலமாகிய ஆணவம், அதனையடுத்து வந்த கருமம் மாயை முதலியன தம் வலிமை இழந்து விரைந்து ஓடினாற்போல, பகை கொண்டு எழுந்த சினமிக்க மன்மதன் உடல் முழுதும் அவிய, அதுவரை படர்ந்து வந்த இளவேனில் முதலியன அனைத்தும் தம் செயலற்றுச் சிதைந்தன. - 383 -

31. *சித்தசன் ஒருவ னேயோ சிவபிரான் நுதகண் தீயால்*
*உத்தம உடலம் வெந்தான் உம்பரார் தாமும் எல்லாம்*
*அத்தகு மதவேள் வெந்த(து) அறிந்தஅப் பொழுதே சாலப்*
*புத்தியும் உயிரும் வெந்தார் புகல் இனி என் கொல் என்றார்*

மன்மதன் மட்டுமா சிவபெருமான் நுதன் கண் தீயால் வெந்தான்? எல்லாத் தேவர்களும் தம் அறிவும் உயிரும் வெந்து நமக்கு இனி அடைக்கலம் ஏது? ஏதுமில்லை என்றனர். - 384 -

32. *இரதி அங்(கு) அறிந்தாள் அந்தோ என்உயிர்த் தலைவா வென்(று)*
*அரதன மணிப்பூண் ஆரம் மருப்(பு)இள முலையின் நீங்க*
*விரவிய மலர்ப்பூந் தொங்கல் மென்குழ லோடும் சோரக்*
*கரதலத் தொடிகள் சிந்தக் கவிழ்இணர்க் கொம்பின் வீழ்ந்தாள்*

இரதி, மன்மதன் நீறானதை அறிந்தாள். ஓ! என் உயிர்த் தலைவா என்று புலம்பினாள். இரத்தினம் பதித்த அழகிய மாலை யானைத் தந்தம் ஒத்த அவளது இளமுலையின் நீங்க, மலர் விரவித் தொடுத்த பூமாலை மென்மையான கூந்தலுடன் தொங்க, தன் கைவளையல்கள் சிந்த வாடியதால் கவிழ்ந்த பூங்கொம்பு போல் தரையில் வீழ்ந்தாள். - 385 -

33. *எறிந்தனள் கடகச் செங்கை இருநிலம் குழியப் பல்கால்*
*மறிந்தனள் புரண்டு வாய்விட்டு அலறினள் திரிவீழ் நெய்போல்*
*செறிந்(து)உகு கண்ணீர் மார்பில் செறிதுகள் கழுவாநிற்பப்*
*பறிந்தநெட் டுயிர்ப்பு வீங்கப் பதைத்(து) உளம் ஒடுங்கிச் சோர்ந்தாள்*

கடகமணிந்த செங்கையால் மார்பில் அடித்துக் கொண்டாள்; பெருநிலம் குழியுமாறு பலமுறை வீழ்ந்து புரண்டு வாய்விட்டு அலறினாள்; எரியும் விளக்குத் திரியிலிருந்து வீழும் வெப்பம் மிக்க எண்ணெய்போல் வெப்பக் கண்ணீர் பெருக, அது மார்பில் செறியப் பூசிய சந்தனக் குழம்பைக் கழுவ, வெளிப்பட்ட பெருமூச்சு மிக, உளம் பதைத்து ஒடுங்கிச் சோர்ந்தாள். - 386 -

34. *எற்றினள் முலைக்கண்சேப்ப எறிந்தனள் வயிறு வீங்கப்*
*பற்றினள் பிசைந்து செங்கை பன்முறை நெறித்து வைகிச்*
*கற்றைமென் குழலும் கையும் கண் இழி புனலும் மண்ணின்*
*முற்(று)உறத் துழாவி நிற்ப முகம் புலர்ந்(து) அவலித்தாளால்*

தனது முலைக்கண் சிவப்ப அறைந்து கொண்டாள், வயிறு வீங்குமாறு கைகளால் பற்றிப் பிசைந்தாள்; செங்கையைப் பலமுறை நெறித்துக் கொண்டாள்; கற்றையான மென்கூந்தலும் கையும், கண்ணீரும் நிலம் முழுதும் தடவ முகம் காய்ந்து துன்புற்றாள்.- 387 -

35. *என்ஆ ருயிரே என்கண் மணியே எனக்கோர் அருந்துணையே*
*நின்ஆ தரவால் உயிர்வாழ் வன்றி நிலையொன்(று) அறியேனே*
*ஒன்னார் எனவே கைவிட் டாயோ உருவம் காட்டாதே*
*அன்னா அன்னா யாங்குப் போந்தாய் அவலத்(து) எனைவிட்டே*

"என் ஆருயிரே, என்கண் மணியே, எனக்கு ஒப்பற்ற அரிய துணையே, உன் ஆதரவால் உயிர் வாழ்ந்ததன்றி வேறறியேன். உன் உருவம் காட்டாது பகைவரைப்போல் என்னைக் கைவிட்டாயோ! எனக்கு ஒத்தவனே! என்னைத் துன்பத்தில் விட்டு விட்டு எங்குச் சென்றாய்?" - 388 -

36. *ஓரா யிரங்கண் மகவான் உறுமாறு உடலும் பெருவலியும்*
*நீரார் கமலத்(து) அ:.னார் மகளான் நிறைசோர் தரச் செய்யும்*
*பேராண் மையுமால் சுடுகா(டு) அலையப் பித்தேற் றியதிறமும்*
*வாரார் முலைபங் கினருக்(கு) அறுமோ மாயம் புரிதியோ*

"ஆயிரங்கண்ணனான இந்திரன் நம்மை யுறுமாறு சினந்த பெரிய ஆற்றலும், நீர் நிறை குளத்துத் தாமரையில் உள்ள நான்முகன் மகளின் கற்புச் சோருமாறு செய்யும் பேராண்மையும், திருமால் சுடுகாட்டில் அலையப் பித்தேற்றிய திறமையும் ஆகிய உனது மாயம் கச்சணிந்த உமை பங்கினராகிய சிவனிடத்துப் பொருந்துமோ. மாயம் புரிகின்றாயா?" - 389 -

37. *பஞ்(சு)ஆர் தருமெல் அணையில் கலவி பயிலும் விளையாட்டின்*
*நெஞ்(சு)ஆர் மகிழ்வால் நிறைபூஞ் செண்டால் நிறத்தில் எறியேனே*
*அஞ்சா(து) அணிமென் தொடை கொண்(டு) ஓச்சும் அதுவும் அறியேனே*
*எஞ்சா(து) அரைஞாண் வாங்கிக் கரங்கள் யாத்தும் அறியேனே*

"இனி, பஞ்சு நிறைந்த மெல்லிய மெத்தையில் பயிலும் கலவி விளையாட்டில் மனம் நிறைந்த மகிழ்வால் மலர் நிறைந்த பூச்செண்டினால் உன் மார்பில் எறியமாட்டேன். உனக்கு அஞ்சாது அழகிய மெல்லிய மாலை கொண்டு உன்மீது எறிய ஓங்கும் அதுவும் அறியேன்; குறைவின்றி உன் அரைஞாணை அகற்றி என் கைகளால் உன்னைத் தழுவியும் அறியேன்". - 390 -

38. *ஊடற் கனலால் உளம்வெந்(து) அழிவுற்(று) உளையும் பருவத்தும்*
*வீடற்(கு) அரிய நின(து)இன் மொழியால் மேவுற் றிடுதூதும்*
*வாடிக் கழியச் சினவிக் கொடுஞ்சொல் வழங்கி அறியேனே*
*நீடற்(கு) அரிய விழிசேந்(து) அடுத்த நினையும் பாரேனே.*

"ஊடல் தீயால் மனம் வெந்து அழிந்து வருந்தும் காலத்தும், விடுதற்கு அரிய உனது இன்சொல் காரணமாக என்பால் வரும் தூதுவர் வாடிச் செல்லுமாறு கொடுஞ்சொல் சொல்லியும் அறியேன்; ஊடல் நீட்டித் தலைப்பொறாது விழிகள் சிவந்து வந்து தழுவிய உன்னையும் பாரேன்". - 391 -

39. *உள்ளக் குறிப்(பு) அங்கு இலதேல் கலவி உஞற்றும் காலத்தும்*
*கிள்ளிக் கடித்துப் புடைத்திட்(டு) இறுக்கும் கிளர்நல் விளையாட்டும்*
*கொள்ளப் புரியேன் குறை உண்(டு) எனினும் பொறுத்துக் கொள்ளாமே*
*தள்ளிக் கரந்து தளர்வேற்(கு) இரங்காய் தருமோ இதுதகுமோ*

"கலவிக் குறிப்பு உன்பால் இல்லையாயின் கலவி நிகழ்த்தும் காலத்தில் உன்னை கிள்ளியும், கடித்தும் புடைத்தும் இறுகத் தழுவிக் கலவிக் கிளர்ச்சியூட்டும் விளையாட்டுப் புரியேன். என்பால் குறையுண்டு என்றாலும் உன் செயலைப் பொறுத்துக் கொள்ளாமல் தள்ளிவிட்டு மறைந்து திரியும் என்பொருட்டு நீ இரங்கமாட்டாயோ. இப்பொழுதைய நிலை உனக்கு அடுக்குமோ?" - 392 -

40. *கலவித் தொழிலில் கலைநல் அணியும் கையால்நனிதிருத்திக்*
*குலவிக் கணமும் பிரிதற்(கு) இசையாக் கோமற்(கு) இதுபொழுது*
*சுலவித் தரையில் குழல்மாசடையச் சுடர்மெய் அணி அழிய*
*நிலவித் துயரத்(து) அழிவேற்(கு) அருளா நிலைவந் தமை என்னே*

கலவித் தொழிலால் கலைந்த எனது நல்ல அணிகளை நீ உன் கைகளால் மிகவும் திருத்திக் குலவி, ஒரு கணமும் பிரியாத தலைவனாகிய உனக்கு, இப்பொழுது என் குழல் தரையில் படிந்து மாசடைய, ஒளி பொருந்திய என் உடம்பு அழகு அழிய துயரத்தில் நிலவி மனம் அழிகின்ற எனக்கு நீ அருளாத நிலை வந்ததே. என்ன கொடுமை - 393 -

## வேறு

41. *மெலிந்(து) உயிர் முழுதும் சாம்பி மேதகும் இரதி மெய்ச்சீர்*
*நலிந்(து) அழிந்(து) இரங்கும் எல்லை நாரத முனிவன் போந்தான்*
*பொலிந்தவல் இடும்பைச் சேற்றுள் புதையுண்டு கிடந்த நெஞ்சம்*
*வலிந்து கொண்(டு) எழுந்து மெல்ல வணங்கினள் மாரன்தேவி*

என்று உடல் மெலிந்து, உயிர் முழுதும் ஒடுங்கி, மேன்மை பொருந்திய இரதி உடல் அழகு நலிந்து அழிந்து இரங்கும் போது நாரத முனிவர் அங்கு வந்தார். தன்னிடம் பட்டாரை விழுங்கும் மிகுதியான வலிமையான துன்பச் சேற்றுள் புதையுண்டு கிடந்த நெஞ்சினை வலிந்து மீட்டு மெல்ல எழுந்து அவனை இரதி வணங்கினாள். *- 394 -*

42. *பெருகிய துன்பத்(து) ஆழ்ந்து பெண்கொடி அரற்ற லோடும்*
*உருகிநீ ராகிஓடல் உற்றன மரங்கள் எல்லாம்*
*குருகினம் கண்ணீர்வாரக் குலைந்தன கறித்த பைம்புல்*
*மருவிய வாய ஆகி மானினம் மயங்கி நின்ற*

மேன்மேல் பெருகும் துன்பத்தில் இரதி அரற்ற, மரங்கள் எல்லாம் தம் உடல் உருகி நீராகி ஓடத் தொடங்கின. பறவையினங்கள் கண்ணீர் பெருக நிலை குலைந்தன. தம்பற்களால் கறித்த பசிய புல்லை மான்கூட்டம் மேற்கொண்டு தின்னாமல் அப்படியே மனம் மயங்கி நின்றன. *- 395 -*

43. *நெட்(டு)உயிர்ப்(பு) உலைவாய்இட்ட நெடுங்குரு(கு) உயிர்க்கும் காற்றின்*
*விட்டனள் கண்டம் விம்ம விம்மினள் கொழுகொம்பு இல்லா*
*மட்(டு)இளம் கொடியின் ஒல்கி மருங்(கு)ஒரு மதலை பற்றி*
*மொட்(டு)இள முலையில் கண்ணீர் முகில்எனப் பொழிந்துநின்றாள்*

கொல்லனது உலைக் களத்துப் பெரிய துருத்தி ஒப்பப் பெருமூச்சு விட்டாள்; குரல் விம்ம விம்மினாள்; பற்றுக் கோடில்லாத மணம் மிக்க இளங்கொடி போன்று தளர்ந்து, அருகில் இருந்த ஒரு பற்றுக்கோட்டினைப் பற்றிக் கொண்டு, மொட்டுப் போன்ற தனது இளமுலைமேல் மழை போல் கண்ணீர் பொழிந்து நின்றாள். *- 396 -*

44. *நின்றவள் முகத்தை நோக்கி நிரம்பிய கருணைகூர*
*நன்(று)இசை நிரப்பும் வீணை நாரத முனிவன் வேய்த்தோள்*
*மன்றல்அம் கூந்தல் செவ்வாய் வனமுலை இரதி துன்பத்(து)*
*ஒன்றுதல் வேண்டா என்று தேற்றினன் உரைக்க லுற்றான்*

இரதிமுகம் நோக்கி, நிரம்பிய கருணை மிக நல்லிசை பரப்பும் வீணை ஏந்திய நாரத முனிவர், "மூங்கில் ஒத்த தோள்களும், மணம் கமழும் அழகிய கூந்தலும், செவ்வாயும், அழகிய முலையும் கொண்ட இரதியே துன்பத்தில் நீ கலந்து விட வேண்டாம்" என்று தேற்றிப் பின்வருமாறு கூறினான். - 397 -

45. *செய்வினை நுகர்ந்தா லன்றித் தீர்வகை இல்லை கண்டாய்*
*நைவினை அதனால் பின்னும் நலிவதே யன்றி வே(று) இங்(கு)*
*உய்வினை உறுவ(து) உண்டோ உய்வகை உரைப்பக் கேளாய்*
*கைவினைச் சிலையின்வல்ல காமற்குப் பிறவி மூன்று*

"ஒருவர் செய்த வினைப்பயன் அனுபவித்தா லன்றித் தீராது. எனவே அதற்கு வருந்துவதால் மேலும் நலிவு உண்டாகுமே தவிரத் துன்பத்தி லிருந்து கரை ஏறுவது இல்லை. துன்பத்திலிருந்து கரை ஏறும் வகை சொல்கிறேன் கேள். கரும்பு வில்லால் மலரம்பு எய்யும் தொழில் வல்ல காமனுக்குப் பிறவிகள் மூன்று". - 398 -

46. *தள(வு)உறழ் நகையாள் பாகம் சார்ந்தவ ரிடத்தில் ஒன்று*
*துளவமா லிகையான் பாங்கர்த் தோன்றிய பிறவி ஒன்று*
*வளர்இளம் கொம்பர் அன்னாய் மாலிடைப் பிறந்த யாக்கை*
*அளவிடற்(கு) அரிய பெம்மான் அழித்தஇவ் வுருவம் ஆகும்.*

"வளரும் இளம் கொம்பு போன்றவளே முல்லையரும்பு போன்ற பற்களையுடைய அம்மையின் பாகம் கொண்டவரிடத்தில் ஒன்று; துளசி மாலையணிந்த திருமாலிடம் தோன்றிய பிறவி ஒன்று. இவற்றுள் திருமாலிடம் பிறந்த உடம்பே யாராலும் அளவிடமுடியாத சிவபெருமான் அழித்த இவ்வுடம்பு". - 399 -

47. *ஏதம்இல் லாத ஏனைப் பிறவியும் இயம்பக் கேளாய்*
*யாதவர் குலத்தில் கண்ணன் எனவரும்மாயன் புல்கி*
*ஓதுருக் குமணி தன்பால் உயிர்த்திடப்பட்(டு)உன் கேள்வன்*
*பேதமில் குணங்கள் சான்ற பிரத்தியு மனன் என்(று) அல்கும்*

"குற்றமற்ற மற்றொரு பிறவியும் சொல்லக் கேள். உன் கணவனுக்கு ஆயர் குலக் கண்ணனாக வரும் திருமால், ருக்குமணியைக் கூடி வந்த பிறவி வேறுபாடில்லாத உயர் குணம் நிறைந்த பிரத்தியும்னன் என்பதாகும்". - 400 -

48. *சங்(கு) அணி கரத்தாய் நீயும் சம்பரன் மனையில் தெய்வப்*
*பங்கயன் சாபம் தாங்கிப் பயில்வுற வதிவை கண்டாய்*
*அங்(கு)இரு வீர்க்கும் கூட்டம் ஆகும்இவ் வாறுதோற்றம்*
*வெங்கணை மாரற்(கு) எய்தும் வினையையும் விரிப்பக்கேளாய்.*

"சங்கு வளையல் அணிந்தவளே; மாரனுடன், சம்பராசுரன் அரண்மனையில் பிரமனது சாபத்தால் நீயும் தங்கிப் பழகியபோது உங்கள் இருவர்க்கும் கூட்டம் நிகழ்ந்தது. மன்மதனுக்கு ஊழால் உண்டான வினையையும் விரிவாகக் கூறக் கேள்" - 401 -

## வேறு

49. *பண்டுவரு கற்பத்தில் பரந்துபல மணிவரன்றி*
*மண்டிஎழு காவிரிக்கு வட கரையின் நீர்முகந்து*
*கொண்டல்படி வராக வரைக் குலவியசா ரலின்நகர் ஒன்(று)*
*உண்(டு)அதனைக் கேமபுரம் என உரைப்பர் உலகத்தோர்.*

முன்னைக் கற்பத்தில் நீர் பரந்து மணிகளை ஒதுக்கி மண்டி எழும் காவிரியின்வட கரையில் கடல் நீரை முகந்து வந்து மேகம் படியும் வராக மலைச்சாரலில் கேமபுரம் என்று ஒரு நகர் இருந்தது. - 402 -

50. *அப்பதியின் இருந்(து)உலகம் ஆள்கின்ற முடி வேந்தன்*
*ஒப்பரிய பெருவலியான் ஓங்கிபே ரழகினான்*
*எப்பொருளும் இரவலர்க்(கு) இல்லைஎன்னா தேகொடுக்கும்*
*துப்புறுவள் ளன்மையினான் சுந்தரன் என்(று) இயற்பெயரான்*

அந்நகராண்ட முடி வேந்தன், ஒப்பற்ற பெருவலிமை, ஓங்கிய பேரழகுடன் எவ்வகைப் பொருளையும் யாசிப்போர்க்கு இல்லைஎன்று மறுக்காது கொடுக்கும் மனவலிமையுடையனான கொடைக் குணத்துச் சுந்தரன் என்பது அவன் பெயர். - 403 -

51. *ஆங்(கு)அவன்தன் பேரழகுக்(கு) அமைந்த பெரு வனப்பினளாய்*
*நீங்கரிய பெருங்காதல் நிறைந்தஉ ளத் தினளாகி*
*ஓங்கியநன் மானை வாழ்க்கைக்(கு) உகந்தபெருங் கற்புடையாள்*
*ஈங்(கு)அவற்கே மனையான இரதிஎனும் நீஆனாய்*

அவனுடைய பேரழக்குப் பொருத்தமான அழகுடையவளாய், சிறிதும் நீங்காத பேரன்பு நிறைந்த உள்ளத்தினளாய், உயர்ந்த நல்ல இல்லறத்துக்கு ஏற்ற பெருங்கற்புடைய மனைவியாக இரதி என்ற நீ ஆனாய். - 404 -

52. *இருதலைசேர் ஒருபுள்ளின் ஏகஉயி ராய்நீவிர்*
*மருவிஇடர் அறியாமே வாழும்நாள் இளவேனில்*
*பருவம்அடுத் ததும்கலவி பண்பினொடும் புரிவதற்கு*
*முரு(கு)உயிர்க்கும் கருங்குழலாய் முன்னினன்நின் னொடும்பொழிலின்*

இருவரும் இருதலைகளையுடைய ஒரு பறவையாக ஒருயிராகப் பொருந்தி எவ்வகைத் துன்பமும் அறியாமல் வாழும் நாளில், இளவேனிற் பருவம் வர, முறைப்படி கலவிபுரிய மணக்கும் கரிய கூந்தலுடையவளே உன்னோடு ஒரு சோலையை அடைந்தான். - 405 -

53. *காவிரியின் மணல்பரந்து கவின்மிகும்உள் இடமெல்லாம்*
*பூவிருந்த மதுத்துளியும் பூந்தாதும் இளந்தளிரும்*
*மாவிரவும் இதழ்க்குலமும் மகிழ்ந்துமது கரத்(து) இசையும்*
*பூஇரதக் குயில் குரலும் குலாயபொழி லாட் யர்ந்தான்*

காவிரி மணல் பரவி, அழகுடைய உள்ளிட மெல்லாம் மலர்களின் தேன்துளியும் மென்மையான மகரந்தமும் இளந்தளிரும் வண்டுகள் மொய்க்கும் பூவிதழ்களும், மகிழ்ச்சியுடன் கூடிய வண்டுகளின் இசையும், மெல்லிசை பாடும் குயிலின் குரலும் கலந்த பொழில் விளையாட்டை அனுபவித்தான். - 406 -

54. *விரைந்துவரும் காவிரியின்மென் மணல்சேர் கரையூடே*
*வரைந்தகொடுங் கருணையினொடு வார்சிலைசெங் கரத்(து)ஏந்திக்*
*கரைந்(து)உகுபே ரன்(பு) உளத்துக் காதலின் நின் உடன் செல்வான்*
*நிரந்(து)இரியும் விலங்கினமும் எதிர்கண்ட(து) இனி(து) எய்தான்*

விரைந்து ஓடிவரும் காவிரியாற்றின் மென்மையான மணல் கொண்ட கரையில், தேர்ந்தெடுத்த கொடுங்கணையுடன் இழுத்துக் கட்டப்பெற்ற வில்லும் ஏந்தி, தன்மீது கரைந்து பெருகும் அன்புடைய காதலியாகிய உன்னுடன் செல்கின்றவன், நிறைந்து ஓடும் விலங்குகளில் எதிர்ப்பட்டதைக் கொன்றான். - 407 -

## வேறு

55. *கண்(டு) என்(று)ஒரு மாதவன் காதலி னால்வளர்*
*அண்டரும் வியக்கத்தக்க அழகுடை மான்களும்*
*தண்டலைக் குளிர்நீழலின் மேய்ந்தன தம்மை நேர்*
*கண்ட னன்சரம் வாங்கிவிடு கத்தனன் காவலன்*

மிருகண்டு என்று ஒரு முனிவர், அன்போடு வளர்த்த தேவர்களும் வியக்கத்தக்க அழகுடைய மான்களும் சோலைக்குளிர் நிழலில் மேய்ந்ததை நேரில் கண்டு, அம்பெடுத்து எய்தான். - 408 -

56. *கலைவி ழுந்தது பெண்அது கண்டு கலங்கிநெஞ்சு*
*உலைய ஓடி உறுதவன் தாளில் உறப்பணிந்து*
*அலையும் நீள்விழி வார்புனல் சோர அழுதுமெய்*
*குலைய நீங்கரி தானபெ ருந்துயர் கொண்டதே*

அந்த ஆண் மான் விழுந்தது. அதுகண்ட பெண் மான் மனம் கலங்கி நெஞ்சு அஞ்ச ஓடி, பெருந்தவத்தோன் காலில் விழுந்து வணங்கி, மிரளும் நீண்ட விழிகளில் கண்ணீர் பெருக அழுது, உடல் நடுங்க நீங்காத பெருந்துயர் கொண்டது. - 409 -

57. *இணைஇ லாதபெ ருந்தவன் இன்னல் உழக்குறும்*
*பிணையை நோக்கிப் பெருந்துயர் தானும்உ ழந்தனன்*
*துணைநெ டுஞ்செவி மூடிக்கண்ணீரைத் துடைத்(து) உயிர்ப்பு*
*அணைய மெல்ல உடலந்தை வந்(து) அறைகிற்பனால்*

ஒப்பற்ற தவத்தோன் துன்புறும் பெண் மானைப் பார்த்துத் தானும் துன்புற்றான். நீண்ட அதன் இரு செவிகளை மூடி, கண்ணீர் துடைத்து உயிர்ப்பு வருமாறு மெல்ல அதன் உடலைத் தடவித் தந்து கூறினான். - 410 -

58. *பிள்ளை போலப் பெருகிய காதலி னால்வளர்*
*துள்ளு மான்கள் இரண்டினுள் ஒன்றைத்தொ லைத்(து) இவண்*
*நள்ளி ஒன்றுந டுங்கஇவ் வாறு நவைபுரி*
*தொள்ளை நெஞ்சினன் துண்என நீறாய்த் தொலைகவே*

"என் பிள்ளைபோல மிக்க அன்புடன் வளர்த்துள்ள மான்கள் இரண்டில் ஒன்றைக் கொல்லவும் உறவு கொண்ட ஒருமான் நடுங்கவும் இங்ஙனம் குற்றம் புரிந்த அன்பாம் உள்ளீடில்லாதவன் விரைந்து சாம்பலாய் அழிக". - 411 -

59. *அன்ன வன்மனை வாழ்க்கைக்(கு) அருந்துணை யானவள்*
*இன்ன மான்பிணை எய்திய எல்லைஇல் லாத்துயர்*
*தன்னை எய்தித் தளர்க எனச்சபித் தான்அது*
*பன்ன மன்னவன் கேட்டுப் பருவரல் உற்றனன்*

"அவனது இல்லறத்துணையானவள், இப்பெண் மான் எய்திய எல்லையற்ற துன்பத்தை அடைந்து தளர்க'' என்று சபித்தான். தழை மாலை அணிந்த மன்னன் அதுகேட்டுத் துன்புற்றான். - 412 -

## வேறு

60. அடுத்தனன் விரைந்(து)அரும் தவனைப் பத்திமை
தொடுத்தநெஞ் சொடும்அடி தொழுது போற்றினான்
கெடுத்தஐம் பொறியினோய் கெழுவு மான்கலை
படுத்தனன் இன(து)எனப் பகுத்த றிந்திலேன்

முனிவரை விரைந்து வந்தடைந்து அவனைப் பத்திமை தொடுத்த நெஞ்சுடன் அடிவணங்கிப் போற்றி, "ஐம்பொறிகளை அவற்றின் வழிச் செல்லாது கெடுத்தவனே. இது இன்னது என்று பகுத்தறியாததால் அன்பு கெழுமிய ஆண்மானை நான் கொன்று விட்டேன்" - 413

61. மடமையால் சிறியனேன் புரிந்த வன்பிழைக்(கு)
அடலைஆகு என எனை அழன்(று)உ ரைத்தனை
அடியனேன் உனைச்சரண் அடைந்து ளேன்இனிக்
கடித ரா(து) அருள் வதுஉன் கடமை என்றனன்

"என் அறியாமையால் நான் செய்த கொடும் பிழைக்குச் சாம்பல்ஆகு என்று சினந்து கூறினாய். இப்போது நான் உனது திருவடிக்கு அடைக்கலம் அடைந்துள்ளேன். இனியும் சினம் கொள்ளாது அருள்புரிவதே உன் கடமை" என்று வேண்ட, - 414 -

62. பத்திசெய் மன்னவன் பணிவு நோக்கிய
உத்தம முனிவரன் உவந்து கூறுவான்
கைத்தவெம் சாபமும் கழித ரா(து) அஃ(து)
இத்தனு இடத்(து) உறா(து) இருப்பக் காத்துமேல்

தான் சபித்தும் கூட பணிவு காட்டும் மன்னவனை உத்தமனாகிய முனிவர் மனம் உவந்து, "கொடிய எம் சாபம் நீங்காது. ஆயினும் அது இப்பிறப்பிடத்து உன்னைவந்து பொருந்தாது காத்துக்கொள்ள நினைத்தால்" - 415 -

63. *திருமகள் வயிற்றினில் செங்கண் மாயனுக்(கு)*
*உருகெழு காமனாய் உதிப்பை ஈங்(கு) உடன்*
*மருவிய மனைவியும் வயங்கு இரதியாம்*
*இருதிறத் திரும் இன்(பு) இயற்றி வாழுநாள்*

"திருமகள் வயிற்றில் கருணைக் கண்ணுடைய திருமால் மூலம் அழகுமிக்க காமனாக நீ பிறப்பாய். உன்மனைவியாக உன்னை மருவிய இவள் இரதியாகப் பிறப்பாள். இருவரும் மனைவியாகஇன்பம் இயற்றி வாழும் நாளில்" - 416 -

64. *பங்கயன் சூழ்ச்சியால் பரம னார் மிசை*
*கொங்(கு)உயிர் ஐங்கணை குறித்து விட்டுநீ*
*அங்(கு)அவர் விழியினால் அழிந்து நீறுவை*
*பொங்(கு)எழில் இரதியும் புலம்பின் ஆழ்ந்(து)பின்*

'நான்முகன் ஆலோசனைப்படி சிவபெருமான் மீது தேன் துளிக்கும் உன் ஐவகைக் கணைகளையும் எய்து, அப்போது நீ அவர் பார்வையால் அழிந்து நீறாவாய், எழில் பொங்கு இரதி புலம்புதலில் ஆழ்ந்து பிறகு" - 417 -

65. *ஒழுகிய பற்குனி உந்தி சேர்ந்துநீர்*
*முழுகி அங்(கு) உயர்திரு மூல நாதர்தம்*
*விழுமிய பூசனை விளைத்து மீட் (டு)உனைத்*
*தழுவுவள் போகெனச் சாற்றி விட்டனன்*

இடையறாது நீர் ஓடும் பற்குனி ஆறடைந்து நீரில் மூழ்கி அங்கு எழுந்தருளியுள்ள திருமூல நாதரை மேலான பூசனை புரிந்து மீண்டும் உன்னைத் தழுவுவாள் என்று கூறிப் போகவிட்டான். - 418 -

66. *மாதவன் இவ்வகை வகுத்(து) அன்(று) ஓதவின்*
*நீதுயர் ஒழிந்தனை நீறு பட்டநின்*
*நாதனைப் பெறுவது நாடின் எம்பிரான்*
*தீதறு பூசனை செய்தல் வேண்டுமால்*

"மிருகண்டு முனிவர் இவ்வாறு அன்று கூறியதால் நீ உன் துயர் ஒழிந்தாய். இப்போது நீறான உன் கணவனைப் பெற விரும்பினால் திருமூலநாதரை உன் தீது அறும்பொருட்டுப் பூசனை செய்ய வேண்டும்" - 419 -

67. *மாதர்நல் லாய்வழி பாடு கொண்டுநின்*
*ஏதம்மிக்(கு) ஒழிதர இன்பம் நல்குவார்*
*மூதறி(வு) அருள்திரு மூல நாதரே*
*ஓதிய உலகில் வே(று) ஒருவர் இல்லையே*

"பெண்களுள் சிறந்தவளே, உன் வழிபாட்டை ஏற்றுக் கொண்டு, உனது பெருந் துன்பம் முற்றும் தீர இன்பம் தருகின்றவர் ஞான வடிவான அருளாளராகிய திருமூல நாதரே தவிர, உலகில் பிறர் இல்லை" - 420 -

68. *எத்தலத்(து) அவர்மகிழ்ந்(து) இருக்கி றார்எனில்*
*பைத்(து)எழு திரைப்புனல் பரக்கும் பற்குனி*
*உத்தம நதிக்கரை உலகெ லாம்தொழ*
*மெத்திய விரைகமழ் வில்வ கானனம்*

"எத்தலத்தில் அவர் மகிழ்ந்து எழுந்தருளி யுள்ளார் என்றால், அது வளமாக எழுந்த அலையுடைய நீர் பரந்து பாயும் பற்குனி என்னும் உத்தமமாகிய நதியின் கரையில் உலகம் தொழும் புகழ் வாய்ந்த வில்வவனம் ஆகும்" - 421 -

## வேறு

69. *வரம்மல் கியபற் குனிக்கரையின் வயங்கு திருமங் கலதலமும்*
*பிரமன் அமர்ந்து மகம்ஆற்றிப் பிணங்கி இருந்த கலைமாது*
*பரவு புனலாய் வரமகிழ்ந்து படிந்து காயத் திரிநதிப்பால்*
*விரவும் அன்பில் எனும் தலமும் வில்வ வனமும் மிகச் சிறந்த*

"மேன்மை பெருகிய பற்குனியாற்றின் கரையில் விளங்கும் திருமங்கலம் ஆகிய தலமும், நான்முகன் தங்கி வேள்வி செய்து, பிணங்கி யிருந்த கலைமகள் ஊடு தீர்ந்து காயத்திரி நதி புனலாய்வர மகிழ்ந்து நீராடி அன்பில் தோய்ந்த அன்பில் எனும் தலமும், வில்வ வனமும் மிகச் சிறந்தனவாகும்". - 422 -

70. *திருமங் கலத்தில் திருமாது சேர்ந்து திருமா லினையடுத்தாள்*
*அருள்மிக்(கு) உடையார் மகிழ்அன்பில் ஆலந் துறையில் வாணிதுனி*
*ஒருவி மலரோன் தனைஅன்பின் உற்றாள் நீயும் அவற்றிடையே*
*மருவி வளங்கூ விளநகரின் மதனை அடைதற்(கு) ஐயமில்லை.*

திருமங்கலத்தில் திருமகள் வழிபட்டுத் திருமாலை அடைந்தாள்; அருளாளர் ஆகிய சிவபெருமான் மகிழும் அன்பில் ஆலந்துறையில் கலைமகள் தன் ஊடல் நீங்கி நான்முகனை மீண்டும் அடைந்தாள். அவற்றிடையே பொருந்தி விளங்கும் கூவிள நகராகிய வில்வனநகரில் நீ மன்மதனை மீண்டும் அடையலாம். இதற்கு ஐயமில்லை. - 423 -

71. *கொன்றை நறுங்கூ விளம்இலிங்கம் குருவே சிவயோ கியரிவர்பால்*
*மன்ற விளங்கிச் சிவபெருமான் வதியும் எனும்மா மறை அந்த*
*நன்றி வளர்வில் வமும் சிவயோ கியரும் நாதன் அருட்குறியும்*
*ஒன்றி விளங்கும் கல்யாண புரத்தின் பெருமை உரைப்பரிதால்*

"கொன்றை, மணமிக்க வில்வம், இலிங்கம், குருமூர்த்தி, சிவயோகியர் ஆகிய இவரிடம் சிவபெருமான் உறைந்து சிறப்பாக விளங்குகிறான் என்ற மாமறைப்படி, நன்மை வளர்க்கும் வில்வம், சிவயோகியர், அருட்குறியாகிய சிவலிங்கம் ஆகிய மூன்றும் ஒரு சேர விளங்கும் கல்யாணபுரத்தின் பெருமை சொல்லுதற்கரியது" - 424 -

72. *கயிலை நெடுமந் தரம் முதல்தென் கடல் ஈறான இடைஞாலம்*
*பயிலும் சுயம்புச் சிவலிங்கம் பலவும் பூசை செய்துபயன்*
*செயிரில் நறுங்கூ விளவனத்தில் திகழ முளைத்த சுயம்புலிங்கத்(து)*
*எயில்கள் பொடித்தார் தமைப்பூசை இயற்றி னார்க்கு வருமன்றே. -*

"உயரமான மலையாகிய கயிலை முதல் கன்னியாகுமரிக்கடல் ஈறான இடைப்பட்ட நிலப் பரப்பில் மிகுந்துள்ள தானேயான சிவபெருமான் உறையும் சிவலிங்கம் பலவும் பூசை செய்த பயன், குற்றமற்ற மணக்கும் வில்வ வனத்தில் ஒளி விளங்கத் தோன்றிய சுயம்புவின் இலிங்கத்தில் முப்புரம் எரித்தவரை வழிபட்டவர்க்கு வாய்க்கும்" - 425 -

73. *அதிபா தகம்மா பாதகமே அறையும் முப்பா தகம் என்னும்*
*கதிதீர் வினைக்கும் வெவ்வேறு கழுவாய் புரிய வேண்டாதண்*
*நதிசேர் முடியார் திருமூல நாதர் பூசை ஆற்றிஅவர்*
*துதிசேர் பணியுள் ஒருபணியைத் துலங்கப் புரித லேஅமையும்.*

"அதிபாதகம், மாபாதம், முப்பாதகம் என்ற நற்கதி விலக்கும் பாவங்களைத் தீர்க்க வேறுவேறு கழுவாய் செய்ய வேண்டா. குளிர்ந்த கங்கைச் சடையாராகிய திருமூல நாதரை வழிபாடு செய்து அவரைத் துதிக்கும் பணிகளுள் ஒன்றினை விளக்கமுறப் புரிதலே போதுமானது". - 426 -

74. *வேதம் முழங்கும் பூவாளூர் விளங்க விளங்கும் திருமூல*
*நாதர் பெருமை மறையாலும் நவிற்றற்(கு) அரிதா யினும்அந்த*
*ஆதி பகவன் அருள்எளிதில் அடை தற்(கு) உரிய செந்நெறியாய்*
*ஓது நிலைமைத்(து) ஒருமனுஉண்ட தன்சீர் உரைப்பக்*
*கேள் அணங்கே*

"பெண்ணே வேதம் முழங்குகின்ற பூவாளூர் விளக்கமுற விளங்கும் திருமூலநாதர் பெருமை, மறைகளாலும் கூறுவதற்கு அரிது. ஆயினும் அப்பெருமான் அருள் எளிதில் அடைய உரிய செம்மை வாய்ந்த நெறியாகக் கூறும் நிலைமையுடைய ஒரு மந்திரம் உண்டு. அதன் சிறப்பைக் கூறக்கேள்" - 427

75. *பாவம் அகற்றும் பிணியறுக்கும் படர்பேய் துரக்கும் இராக்கதமும்*
*நீவும் அரட்டம் புரிதெய்வ நிலைமை அனைத்தும் மிகக் கெடுக்கும்*
*ஓவில் வெறுக்கை அனைத்தினையும் உதவும் தேவர் கதிவழங்கும்*
*மேவும் அருளில் படிவிக்கும் வீடும் புகுத்தும் மனு அதுவே.*

"பாவத்தை நீக்கி, நோய் அறுத்து, படரும் பேய் ஓட்டி, இராக்கதமும் போக்கி, வெருட்டும் தெய்வக்குற்றம் அனைத்தையும் முழுதும் கெடுத்து வாழ்விக்கும், இடைவிடாது செல்வம் அனைத்தையும் உதவும், தேவர் பிறப்பை வழங்கும், பொருந்திய திருவருளில் தோய்விக்கும், வீடு பேறும் புக அருளும் மந்திரம் அது ஒன்றே" - 428 -

76. *மறையின் முடிவாம் உபநிடத வகுப்பின் வடித்த சாரமாய்*
*நிறைப் பிறவி தொறும்தவங்கள் நிரப்பி னோர்க்கே உபதேசம்*
*முறையின் அருளப் படுவதாய் மொய்த்த சித்தி அனைத்தினையும்*
*உறுவித்திடுவ தாய்விளங்கும் உரைத்த அந்த மந்திரமே*

"மறைமுடிவாக விளங்கும் உபநிடதப் பிரிவின் வடித்த சாரமாய், பற்பல பிறவிதோறும் தவம் நிரப்பினோர்க்கே முறைப்படி உபதேசம் அருளப் படுவதாய், மிக நிறைந்த சித்திகள் அனைத்தினையும் அடையச் செய்வதாய் விளங்குவது நான் கூறிய அம்மந்திரம்". - 429 -

## வேறு

77. *அந்தரர் எவர்க்கும் மேலாம் அமரர்நா யகரே போல*
*மந்திரம் எவைக்கும் மேலாய் வகுத்திடும் மந்திரம்தான்*
*ஐந்தெழுத்(து) அவற்றின் முன்னே பிரணவம் கூட்டி ஆறு*
*மந்தண மாகக் கொள்வர் மறையவர் ஆதி மூவர்.*

"தேவர்கள் அனைவர்க்கும் மேலான சிவபெருமானைப் போல மந்திரம் எவற்றுக்கும் மேலானதாய்க் கூறப் பெறும் மந்திரம் திருவைந் தெழுந்து. அவற்றின் முன்னே பிரணவம் கூட்டி முறைப்படி மந்தணமாக - தத்தம் மனத்தில் நிறுத்தி - கொள்வர் முத்திறத்தாரும்". - 430 -

78. சூத்திரர் மழலைத் தீஞ்சொல் தோகையர் இருவர் மாட்டும்
ஏத்தும்அஞ் செழுத்தே ஆகும் இத்தகு மந்தி ரத்தைச்
சாற்றுதும் தூயை ஆகிச் சார்மதி என்றான் கேட்ட
கோல்தொடி இரதி வல்லே குளிர்புனல் ஆடிப் போந்தாள்

"சூத்திரர், மழலை மொழிபேசும் மகளிர் ஆகிய இருவர்க்கும் பொருந்துவது ஏத்துதற்குரிய அம்மந்திரமே ஆகும். இதனை உபதேசிக்கிறேன். எனவே தூயவளாய் வருக" என்றான். அதுகேட்ட திரண்ட வளையல் அணிந்த இரதி, விரைந்து போய்க் குளிர் நீரில் நீராடி வந்தாள். - 431 -

79. புண்ணியம் வளர்க்கும் நீறும் புனிதகண் டிகையும் நல்கி
உள்நெகிழ் கருணை வீணை உறுவரன் தீக்கை ஆற்றி
எண்ணும்அஞ் செழுத்தும் காதின் இயம்பிஅவ் வெழுத்(து)ஓர் ஐந்தும்
நண்ணுறு பேதம் எல்லாம் நவையறத் தெருட்டி னானே

புண்ணியம் வளர்க்கின்ற திருநீறும், புனிதமான உருத்திராட்ச கண்டிகையும் அளித்து, உள்ளம் நெகிழ்ந்த நாரதர் தீக்கை அருளி எண்ணுதற்குரிய திருவைந்தெழுந்தை அவள் செவியில் கூறி, அவ்வெழுத்து ஐந்தின் மூலம் அமையும் பேதங்களையும் குற்றமறத் தெளிவித்தான். - 432 -

80. தெருட்டிய மனுவால் ஓகை சிறந்தவண் முனிவன் செய்த
அருள்திறம் நோக்கி என்னே அருந்துணை இழந்து சால
வெருள் திறத்(து) அழுந்தி னேனை மேதக எடுத்திட் டாய்நின்
பொருட்டுயான் செய்கைம்மாறு புவனத்(து)இன் றெனமுன் தாழ்ந்தாள்

தெளிவித்த மந்திரத்தினால் மகிழ்ச்சி சிறந்த இரதி, முனிவன் செய்த அருளிப்பாட்டினை நோக்கி, "என் அரிய துணைவனை இழந்து மிகவும் அஞ்சிக் கிடந்த என்னை, என்பால் மேன்மை பொருந்த எடுத்தருளினாய். நின் பொருட்டு நான் செய்தற்குரிய கைம்மாறு இவ்வுலகத்தில் ஏதும் இல்லை. என்னே உன் கருணை" என்று கூறி வணங்கினாள். - 433 -

81. வணங்கிய இரதிதன்னை மாதவன் நோக்கி மாதே
இணங்கிய வசந்த னோடும் எய்துக பூவாளுரை
அணங்கினோ(டு) ஆங்கேவைகும் அமலனார் பூசை செய்து
குணம்கெழு கணவன் தன்னைக் கூடுக என்று தீர்ந்தான்

தன்னை வணங்கிய இரதியை மாதவன் பார்த்து, "பெண்ணே! உனக்கு இணக்கமான வசந்தனுடன் பூவாளூரடைந்து, அம்மையுடன் அங்கு எழுந்தருளியுள்ள அப்பனைப் பூசனை செய்து நற்குணம் பொருந்திய கணவனைக் கூடுக என்று கூறி முடித்தார்". - 434 -

82. *இரதியும் ஆங்கு நீங்கு இம்என வான்ஆறு ஆக*
*விரவிய அன்பி னோடும் மேயினாள்பூவா ளூரைப்*
*பரவுபற் குனிநீர் தோய்ந்தாள் பால்நிறத் தூசு சூழ்ந்தாள்*
*கரவில்கண் டிகையும் நீறும் காதலில் தரித்துக் கொண்டாள்.*

இரதி அங்கிருந்து வான்வழியே விரைந்து புறப்பட்டு அன்புடன் பூவாளூரடைந்து போற்றப் பெறும் பற்குனி நீரில் மூழ்கி, பால்போன்று வெள்ளிய ஆடை உடுத்து, கண்டிகையும் திருநீறும் குறையாத பேரன்புடன் தரித்துக் கொண்டாள். - 435 -

83. *துதிப்பரும் பூவா ளூரில் சுந்தரன் எழுத்(து)ஓர் ஐந்தும்*
*விதிப்படி செய்ய நாவின் விரவுறத் துய்ய நெஞ்சின்*
*மதிப்பரும் குழகனார்தம் மலரடி மதித்துப் பைய்ய*
*நதிப்பெருங் கரையின்நீங்கி நண்ணினாள் கோயில்சார*

போற்றுதற்கு அரிய பூவாளூரில் பெருமான் எழுத்து ஐந்தினையும் விதிப்படி செந்நாவில் விரவச் செய்து கூறி, தூய மனத்தால் மதிப்பிடற் கரிய அழகனின் திருவடிகளை மனத்தில் மதித்து - நிறுத்தி; மெள்ள பற்குனியின் பெருங்கரை விடுத்து ஏறித் திருக்கோயிலை அடைந்தாள். -436-

84. *பிறைதொட மணியில் செய்த பிறங்குகோ புரமுன் தாழ்ந்து*
*நிறைதரு வளத்தில் சான்ற நிகரில்ஆ லயத்துப் புக்கு*
*முறையுளி வலமாய்ப் போந்து முச்சகம் பழிச்சா நிற்கும்*
*இறைவனைக் கண்கள் பெற்ற இரும்பயன் எய்தக் கண்டாள்*

பிறையைத் தொடுமாறு அழகுற எழுப்பப் பெற்று விளங்கும் திருக்கோபுரம் வணங்கி, நிறைந்த அருள் வளம் பொலியும் ஒப்பற்ற ஆலயத்தில் புகுந்து முறைப்படி வலம் வந்து, மூவுலகும் வணங்கும் இறைவனைக் கண்கள் பெற்ற பயன் அடையுமாறு வணங்கினாள். - 437 -

85. *கசிந்(து)உளம் உருக முத்தம் கண்இணை உறைப்ப நின்று*
*பசந்தமெய் பாதியாரைப் பரிந்துபோற் றிசைத்த பின்னர்*
*வசந்தன்எப் பொருளும் ஈட்ட மரபுளி பூசை ஆற்றி*
*அசைந்தளன் தியானத்தோடும் அஞ்செழுத்(து) எண்ணி ஓர் சார்*

மனம் கசிந்து உருக, கண்ணீர் முத்தாகக் கண்களில் துளிக்க, அம்மைகாரணமாகப் பாதி மெய் பசந்த இறைவனைப் போற்றிக் கூறி வணங்கிய பிறகு, வசந்தன் வழிபாட்டுக்குரிய அனைத்துப் பொருள்களையும் கொண்டு வந்து தர, முறைப்படி பூசனை செய்து திருவைந்தெழுத்தை எண்ணித் தியானித்து ஒருபுறம் இருந்தாள். - 438 -

86. *கங்குலை நிகர்த்த கூந்தல் கருவிளை நிகர்த்த வாட்கண்*
*திங்களை நிகர்த்த கோலத் திருமுகம் கடகச் செங்கை*
*குங்குமம் குலவு கொங்கை கொடியிடை தளிர்மென்பாதம்*
*தங்கிய இமயப் பாவை தன்னையும் பூசை செய்தாள்*

இருள் ஒத்த கூந்தல், கருவிளை மலர் ஒத்த ஒளி பொருந்திய கண்கள், முழுநிலவு ஒத்த அழகிய திருமுகம், கடகம் தரித்த செங்கை, குங்குமம் குலவும் திருமார்பு, கொடி ஒத்த இடை, தளிர் ஒத்த மென்மையான திருவடி தங்கிய அருள்தரு குங்கும சுந்தரி அம்மையையும் பூசித்தாள். - 439 -

87. *நித்தலும் பூசை ஆற்றி நின்மல எழுத்தை எண்ணிக்*
*கொத்(து)அழல் இடையே வெப்பம் கூர்தரு பருவத்தானும்*
*மைத்ததண் புனலின் ஏனைப் பருவத்தும் பரிந்து நோற்றிட்டு*
*உத்தம குணத்தில் சீர்த்த ஒழுக்கத்தில் ஒழுகா நின்றாள்*

நாடோறும் பூசனை நிகழ்த்தி, மலம் தீர்க்கும் திருவைந்தெழுத்தை எண்ணி, கடுங்கோடையில் மிக்க தீயிடை இருந்தும், குளிர்ப்பருவத்தில் தண்ணிய புனலிடை இருந்தும் தவம் செய்து உத்தம குணத்தில், சீரிய ஒழுக்கத்தில் ஒழுகினாள். - 440 -

88. *மேக்குற உயர்த்திக் கையை நிராலம்ப மாகமேவி*
*நீக்கிய வினையி னாளாய் நிகரிலாத் தமது பாதத்(து)*
*ஆக்கிய மனத்தின் நோற்கும் அணங்கினை மாரனின் வேவ*
*நோக்கிய பாலச் செந்தீ நோக்கினார் குளிர்ப்ப நோக்கி.*

தனது இருகைகளையும் மேல்வான் நோக்கி உயர்த்தி, பிற வினை நீக்கியவளாய், ஒப்பற்ற தனது திருவடிக் கண் ஆக்கிய மனத்தினளாய் நோற்கும் இரதிதேவியை, மன்மதன் வேவ நோக்கிய நுதற்கண்ணர், குளிர்ச்சியுடன் நோக்கினார். - 441 -

89. திருவுளக் கருணை பொங்கத் தேவர்கள் பொழிபூ மாரி
இருநிலம் மறையப் போர்ப்ப இமயமா(து)ஒரு பாலாகப்
பொருவிடை மீது தோன்றிப் பூதம் எத்திசையும் சூழக்
கருதிய உருவத் தோடு காட்சி தந்(து) அருளி னாரால்

பெருமானின் திருவருட்கருணை பெருக் கெடுக்க, தேவர்கள் பொழிந்த மலர்மாரி நிலத்தை மறைப்ப, பூதகணம் எத்திசையும் சூழ, ஒருபால் பார்வதிதேவி இருக்க, போர்வல்லவிடை ஏறி, இரதி நினைத்த வடிவில் காட்சி தந்தருளினார். - 442 -

### வேறு

90. *பவளச் சடையும் செஞ்டிவப் பவளக் கொடிக்குப் பாய்த்தியதோர்*
*தவழ்தண் புனலும் அப்புனலைத் தாவிக் குடித்து நுதல் செந்தீத்*
*துவள வளர்க்கும் பெருந்தாகம் துரக்க விழைந்த உழைக்கன்றும்*
*திவளும் நுதல்தீக் கொழுந்(து) ஒழுக்கில் திகழ்மை அனைய திலகமுமாய்*

பவளம் போல் சிவந்த சடையும், சடையாகிய பவளக் கொடிக்குப் பாய்ச்சிய தண்ணியதாய் தவழும் கங்கைப் புனலும், நுதல் செந்தீ வளர்த்த தாகத்தை ஓட்ட அக்கங்கைப் புனலைத் தாவிக் குடிக்கும் மான்கன்றும், விளங்கும் நுதல்கண் தீ வெளிச்சத்தில் திகழும் மை போலும் கரிய திகலமும் - 443 -

91. *கந்தம் கமழும் கத்தூரி கதிர்ப்ப அணிந்தால் எனஆழி*
*வந்து அங்(கு)உடற்றும் பெருநஞ்சம் வயங்கு மிடறும் விடம் தரித்தார்*
*நந்தம் கிளையே ஆவர் என நாடி அடுத்து வாழ்வன போல்*
*உந்தும் கவைநாப் பொறிமணிப்பை உரகம் செறிந்த மணிமார்பும்*

மணக்கும் கத்தூரியை மிகுதியாக அணிந்தது போல பாற்கடல் வெளிப்படுத்திய கடு நஞ்சு விளங்கும் கழுத்தும், விடம் தரித்த இவர் நம் கிளைஞரே ஆவர் என்று விரும்பி வந்து வாழ்வன போல், உந்தும் பிளந்த நாவும் பொறியும் அழகிய படமும் கொண்ட பாம்பு செறிந்த அழகிய மார்பும் - 444 -

92. *விண்ணோர்க்(கு) அழகும் பெருஞ்சிறப்பும் வெறுக்கை திரளும் திருமேனி*
*கண்ணாற் காணின் பெரி(து) அருளும் கருணை உடைய ராய் ஒருபால்*
*பெண்ணோ(டு) இருந்தார் ஆயிடினும் பெரிதே வேடம் எனத் தெரிப்பார்*
*நண்ணா நின்ற சடைநீற்றின் நலத்தோடியைந்த தோலுடையும்*

தேவர்களுக்கு அழகும், பெருஞ்சிறப்பும் செல்வமுமாகத் திரண்ட அத்திருமேனியைக் கண்ணால் கண்டாலே பெரிதும் அருள்புரியும் கருணை உடையவராய்ப் பெண்ணோடு இருந்தாலும் கூட போட்டிருக்கும் இவர் வேடம் மிகப்பெரிது என்று தெரிவிப்பார் போலப் பொருந்திய சடை, திருநீற்றின் நலம் இவற்றுடன் கூடிய தோலுடையும், - 445 -

93. *பல்வேறான தேவரையும் பல்வேறான நல்வினையும்*
*சொல்வோம் எனினும் அவைஎல்லாம் சூழும் திறத்த அல உய்வோர்*
*கொல்வே லையின்நஞ்(சு) அயின்றார்தம் குரை பூங் கழல்பொற் சேவடியே*
*நல்வீ(டு) எமைப்போல் சூழ்க என நண்ணி அரற்றும் மறைச்சிலம்பும்*

சிவனைச் சூழ்வது பற்றி பல்வேறான தேவர்கலளயும் பல்வேறான புண்ணியங்களையும் இவருக்குக் கூறுவோம், என்றாலும் அவை எல்லாம் இவரைச் சூழ்ந்திருப்பன வல்ல; கடலில் தோன்றிக் கொல்லும் தன்மையுடைய நஞ்சுண்ட வரது ஒலிக்கின்ற வீரக்கழல் அணிந்த சேவடியே நல்வீடாகும். ஆதலால் எமைப்போல் சூழ்க என்று உய்வோர்க்குக் கூறும் திருவடியினைச் சூழ்ந்த மறைச் சிலம்பும். - 446 -

94. *இவ்வா றான எம்பெருமான் எழிலார் வனப்புத் தோன்றுதலும்*
*செவ்வாய் இரதி விரைந்(து) எழுந்து சிந்தை மகிழ்ந்து கரம் கூப்பி*
*மைவாள் விழியின் உறைசிந்த மண்மேல் வணங்கி வலம்வந்து*
*தெவ்ஆ ணவத்தின் வலிஇரியத் தெளிந்த உணர்வால் போற்றினாள்*

இங்ஙனம் பெருமானது எழுச்சி மிக்க வனப்புத் தோன்றிய உடன், செவ்விதழுடைய இரதி விரைந்து எழுந்து மனம் மகிழ்ந்து கைகூப்பி மை எழுதிய ஒளி பொருந்திய விழிகள் மகிழ்ச்சிக் கண்ணீர் சிந்த, தரையில் வீழ்ந்து வணங்கி, வலம் வந்து, ஈடேற்றத்துக்குப் பகையான ஆணவ வலி கெடத் தெளிந்த உணர்வுடன் போற்றினாள். - 447 -

95. *கருமம் யாகம் யோகமே கரி(சு)இல் ஞானம் எனும் இவற்றால்*
*மருவி வழிபாடு ஆற்றுநர்க்கு வயங்கும் இவற்றின் பயன்அருளும்*
*ஒருவ சரணம் வளர் அகில முதல்வா சரணம்அருள்*
*திருவ சரணம் சரணம் எனச் சிந்தை மகிழ ஏத்துதலும்*

சரியை கிரியை ஆகிய கருமம், வேள்வி, யோகம், குற்றமற்ற ஞானம் எனும் இவற்றால் பொருந்தி வழிபாடு செய்கின்றவர்களுக்கு விளங்கும் பயனை அருளும் ஒப்பற்றவனே அடைக்கலம்; வளரும் அகில உலக முதல்வனே அடைக்கலம்; அருள்புரியும் திருவுடையவனே அடைக்கலம் அடைக்கலம் என்று மனம் மகிழ்ந்து ஏத்தியதும் - 448 -

96. *நீலக் கருங்கண் உமைமாது நேரே நோக்கி எழில் இரதி*
*சாலக் கனிந்த பேரன்பில் சாற்றும் துதிக்கு மிக இரங்கிப்*
*பாலக் கனல்கண் இறைவா இப் பாவை தனக்கு வல்விரைந்து*
*சீலக் கடைக்கண் அருள்வழங்கிச் செறிக்க வேண்டும் வரம் என்றாள்*

நீல நிறம் பொருந்திய திருமேனியும் கரிய கண்ணும் கொண்ட உமையம்மை இரதியை நேரே நோக்கி மிக்க கனிவுடன் கூடிய பேரன்பில் துதிக்கும் துதிக்கு மிக இரங்கி, "நுதற்கண் இறைவா! இப்பாவைக்கு - இரதிக்கு - மிக விரைந்து அழகிய கடைக்கண் அருள் வழங்கி வரத்தால் பாதுகாக்க வேண்டும்" என்றாள். - 449 -

97. *மாறாய் நின்ற புரமூன்றும் வாழ்க்கை யுவுணர் சூழாத்தோடு*
*நீறாய்அவியப் புன்மூரனிகழ்த்தும் பெருமா னெதிரில்லாப்*
*பெறா தரிக்குங் குளிர்மூரல் பெட்ப வயக்கி யருள் வழங்கி*
*யிறா தரிக்குங் கொடிமருங்கு லிரதிக் கிதனை விளம்புமால்*

பகைத்து நின்ற முப்புர அசுரர்களை அவர்கள் கூட்டத்தோடு நீறாக்கப் புன்முறுவல் பூத்த பெருமான், ஒப்பற்ற நற்பேறுகளை வழங்கும் குளிர் புன்முறுவலை விரும்பத்தக்க வகையில் புலப்படுத்தி, அருள் வழங்கி, ஒடியும் கொடி போன்ற இடையுடைய இரதிக்கு இவ்வாறு கூறினார். - 450 -

98. *கொண்டல் மறுத்த பருவத்துக் குழைந்த கலவ மயிலனையாய்*
*தொண்டு புரியு மன்பினுக்குந் தூய வெழுத்தைந் தாலெம்மைக்*
*கண்டு வணங்குந் திறத்தினுக்குங் காட்சி வெளியே கொடுத்திட்டா*
*மண்டு வரமுங் கோடியென வாசக்கமலை வாய் மலர்ந்தார்.*

"மழையில்லாக் காலத்து வருந்தும் மயில் போன்றவளே; நீ எனக்குப் பணிவிடை புரியும் அன்புக்கும் திருவைந்தெழுத்தை கூறி எம்மைக் கண்டு வணங்கும் உனது திறத்துக்கும் எதிரே காட்சியருளினோம். நிறைந்த வரங்களும் கேட்டுப் பெறுக" என்று மணக்கும் தாமரை போன்ற திருவாய் மலர்ந்தார். - 451 -

99. *இறைவர் மொழிந்த வருள்கேட்ட விரதி வணங்கி மொழிகுவாள்*
*பிறையும்அரவும் வான்கங்கைப் பெருக்கு மணிந்த பெருமானே*
*மறைக ளனைத்து மறியாநின் மலர்த்தாள் வணங்கப் பெற்றேற்குக்*
*குறையு மூளதோ வின்றேனுங் குழகா விளம்ப வொன்றுளதால்*

இறைவனது அருள்மொழி கேட்ட இரதி தேவி வணங்கி, "பிறை, அரவு மேலான கங்கைப் பெருக்கு ஆகியன அணிந்த பெருமானே; மறைகளும் அறியா நின்மலர்த்தாள் வணங்கப் பெற்ற எனக்குக் குறை இல்லை. எனினும் ஒன்று கூற வேண்டியுள்ளது". -452 -

**வேறு**

*100.* *தந்திட யில் வாத வீணை சக்கர மில்லாப் பொற்றேர்*
*வெந்தழற் கதிரோ னில்லா வேரியங் கமலம் போல*
*மைந்துறு கணவ ரில்லா மாதரார்க் கின்ப மென்னே*
*யந்தண வடி யேன் வேட் கையறிதரா யல்லை நீயே.*

"மீட்டும் தந்தியில்லாத வீணை, ஓடும் சக்கரம் இல்லாத அழகிய தேர், வெப்பம் மிக்க கதிரவன் இல்லாத தேன் துளிக்கும் அழகிய தாமரை ஆகியன பயனற்றனபோல; வலிமையுறு கணவர் இல்லாத மகளிர்க்கு இன்பம் ஏது? அறவோனே எனது வேட்கையை நீ அறியாத வனல்லன்" - 453 -

*101.* *அடியவ ரிழைத்த குற்ற மனைத்தையும் பொறுத்துக் காக்கும்*
*படியிலாக் கருணைத் தேவே பண் டென்னை மணந்த கேள்வன்*
*கடிமலர்ப் பகழி தூண்டுங் கடும்பிழை பொறுத்தன் னான்மெய்*
*வடி வினை யெழுப்பல் வேண்டும் வரமிது தருக வென்றாள்*

"அடியார் குற்றம் அனைத்தையும் பொறுத்துக் காக்கின்ற ஒப்பற்ற கருணையுடைய தெய்வமே; முன்நாளில் என்னை மணந்த கணவன் மணம் மிக்க மலரம்புகளை எய்த கடுமையான பிழையைப் பொறுத்து, அவனுடம்பை எழுப்பித்தர வேண்டும். இவ்வரம் தந்தருள்க" என்றாள். - 454 -

*102.* *கருணையங் கடலா யுள்ள கண்ணுதற் பெருமானோக்கி*
*மருமலர்க் குழலாய் வேட்ட வரத்தினைத் தந்தோ மென்றார்*
*பெருகிய மகிழ்ச்சி பொங்கப் பேரருட் டிறத்தை நோக்கி*
*யுருகின ள்இரதி மீட்டு ஒண்கழ விறைஞ்சி நின்றாள்.*

அழகிய கருணைக்கடலான நுதற்கண் பெருமான் இரதியை நோக்கி "தேன் பொருந்திய மலர் சூடிய கூந்தலுடையவளே நீ விரும்பிய வரம் தந்தோம்" என்றார். இரதி பெருகும் மகிழ்ச்சி பொங்க அவனது பேரருள் திறத்தை நோக்கி மனம் உருகி மீண்டும் ஒளி பொருந்திய வீரக்கழலணி திருவடியை வணங்கி நின்றாள். - 455 -

103. தேமொழி யிரதி பூசை செய்தமை யுரைத்தா மிப்பால்
காமனை யெழுப்பி யன்னான் காமுறு வரங்கள்நல்கி
ஏமுறு மிரதிக் கீந்த வியல்பையுங் கேண்மி னென்று
தோமறு முனிவர்க் கோதுஞ் சூத னென் றுரைக்கு மேலோன்

தேன்போன்ற இன்மொழி கூறும் இரதிதேவி பூசனை புரிந்தது கூறினோம். இனி, காமனை எழுப்பி அவன் விரும்பிய வரங்கள் தந்து, களிப்புற்ற இரதிக்கு அவனைத்தந்த இயல்பையும் கேளுங்கள் என்று குற்றமற்ற முனிவர்களுக்குச் சூதனாகிய மேலோன் கூறினான். - 456 -

இரதியருச்சனைச் சருக்கம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - 456 -

## 10. மன்மதன் வழிபடுசருக்கம்

காரணிந்த நறுகூந்தல் இரதிதனக் (கு)இமிலேற்றிந் காட்சி தந்த
வாரணிந்த முலையுமையாள் மணாளருள் பொழிக்கடைக்கண்
வழங்க லோடும்
ஏரணிந்து வளர்மேலைக் கோபுரவாய் தலிற்களங்க ம்இரியல்போகச்,
சீரணிந்த அகளங்க னாய்மதவேள் பெருவனப்புத் திகழத் தோன்றி

கருமையுடன் மணக்கும் கூந்தலுடைய இரதிக்குத் திமில் கொண்ட விடையேறிக் காட்சி அருளிய கச்சணிந்த திருமார்புகளுடைய உமையவள் கணவர், திருவருள் பொழியும் கடைக் கண் நோக்கு அருளிய உடனே, அழகு பெற்று உயர்ந்த மேன்மை பொருந்திய கோபுர வாயிலில் தன் களங்கம் எல்லாம் கெட்டுப்போகச் சிறப்புடைய குற்றமற்றவளாய் மன்மதன் பேரழகு விளங்குமாறு தோன்றி - 457 -

2. திருக்கோயில் வலமாகச் செல்கின்றான் அவ்வெல்லைச் சிவபி ரான்மற்(று)
இருக்கோது மணிவாயா லிரதிமுகம் பார்த்திதனை யியம்பல் செய்தான்
முருக்கோடு பொருவாயாய் நினக்குருவாய் மூதுலகுக் கநங்கனாக
மருக்கோல்ஐந் துடையானை வரப்பணித்தா ம்அவனெழுந்து
மதில்சூழ் கின்றான்.

திருக்கோயில் வலம் சூழ்ந்து சென்று கொண்டிருந்த அப்போது; இருக்கு மறை ஓதும் தனது அழகிய திருவாய் திறந்து இரதியின் முகம் நோக்கி, ''முருக்குமலர் ஒத்த சிவந்த வாயுடையவளே, நீ பார்ப்பதற்கு உருவமுடைய வனாகவும், மூவுலகும் காண அருவனாகவும் மணமிக்க ஐந்து மலர்க்கணை உடைய மன்மதனை எழுப்பித் தந்தோம். அவன் எழுந்து திருக்கோயில் மதிலைச் சுற்றி வருகிறான்'' - 458 -

3. *ஆங்கவனைக் கீழ்த்திசையி னணிமணிக்கோ புரவாய்த ல்ஆறாச் சென்று*
*பாங்குபெறக் காணுதியென் றருள் புரிய அருள்தலைமேற் பரித்துத் தாழ்ந்து*
*நீங்கி விரைந் துவ்வாறு சென்றேகி வலமாக நேரே போந்த*
*தேங்கமழு மலர்க்கணையான் திகழ்தருபுத் தெழிலுருவந் திளைப்பக் கண்டாள்.*

"அங்கே அவனைக் கீழ்த்திசையில் உள்ள அழகுமிக்க கோபுர வாயில் வழியே போய்ப் பாங்குறக் காண்க" என்று அருள, இரதி அதனைத் தலைமேல் தாங்கி, வணங்கி, அங்கிருந்து நீங்கி விரைந்து அவ்வாறு சென்றுபோய், திருமதியை வலம் சூழ்கின்ற மலர் அம்புகளையுடைய மன்மதன் விளங்கும் புதிய பேரழகு உருவுடன் திளைத்து எதிர்வந்ததைக் கண்டாள். - 459 -

**வேறு**

4. *கதிர்மணி முடியும் திலகவா ள்நுதலுங் கமலநேர் விழியும் வார்மூக்கும்*
*மதிநிகர் முகமும் பவளநேர்வாயும் மகரகுண் டலந்திகழ் காதும்*
*பொதியவிழ் மலர்த்திண் கணைநெடுங் கழைவிற் பொலிந்தகைத் துணையுஞ்சே வடியும்*
*முதிரழ (கு)எறிப்பக் கண்டவளோடி முயங்கினள் புன்னைமென் நிழலின்.*

ஒளி வீசும் மணி முடியும், திலகமிட்ட ஒளி பொருந்திய நெற்றியும், தாமரை ஒத்த விழியும், நீண்ட அழகிய மூக்கும், முழு நிலவு ஒத்த முகமும், பவளச் செவ்வாயும், மகர குண்டலம் அணிந்த செவியும், மலர்ந்த மலராகிய தன் நோக்கம் நிறைவேற்று வலிய கணையுடன் நீண்ட கரும்பு வில் பொலியும் இரு கைகளும் கொண்டு முதிர்ந்த அழகு ஒளிவீச மன்மதனைப் புன்னை மர நிழலில் கண்ட இரதி, ஓடிப்போய்த் தழுவினாள். - 460 -

5. கணவனைத் தணந்த காரணம் தானுங் கடுந்தவ மிழைந்தமை யானும்
வணர்நெடுங் கூந்தற் குணங்கிய வுடல மலிந்தது வீங்கின முலைகள்
இணர்தரு மரைஞா ணிற்றது மார னிறமெலா நெங்கணீர் கழுவிற்
றணவுகெட் டுயிர்ப்பு நீடிய தின்பத் தவசமாய் நின்றதா ருயிரே.

கணவனைப் பிரிந்த காரணத்தாலும் கடுமையான தவம் புரிந்தமையாலும் வளைந்து சுருண்ட கூந்தலுடைய இரதியின் மெலிந்து வளைந்த உடம்பு நிமிர்ந்து விம்மியது; முலைகள் பருத்தன ; உடலை நெருங்கிச் செறிந்திருந்த அரைஞாண் உடல் விம்மியதால் அறுந்தது; மன்மதன் மார்பு முழுவதும் மிக்க கண்ணீர் கழுவியது. இவற்றுடன் பெருமூச்சும் நீண்டது. பேரின்ப நிலையால் உயிர், அவன் வசப்பட்டது. - 461 -

6. விழுமிய வுருவம் விமலனா ரருளான் மேவிய வைங்கணை மதனுந்
தழுவிய மனையாள் முலைமுக னெழுங்கத் தட நெடு
மார்பினான் மயங்கிக்
கெழுவிய கேண்மை அன்புமீக் கூரக் கிளரந்;தபே ரின்ப வெள்ளத்துள்
முழுகியொன் றானா னிருவருந் தம்மு ளொத்தனர்
முடிவிலாக் குணத்தால்.

அழகிய மேலான உருவத்தைச் சிவபிரான் அருளால் பெற்ற மலர்க்கணை ஐந்துடைய மன்மதன், தன்னைத் தழுவிய மனைவியின் முலைமுகம் தன் மார்பில் அழுந்தத் தன் மார்பால் இறுகத் தழுவி, நிறைந்த உறவினாலான அன்பு மிக, கிளர்ந்த பேரின்ப வெள்ளத்துள் மூழ்கி ஒன்றினான்; இருவரும் முடிவிலா அன்பால் தம்முள் ஒத்து விளங்கினர். - 462 -

7. நெடிதுபோ திவ்வா றிருவரும் புன்னை நீழலில் முயங்கிய பின்னர்க்
கொடிகளா ல்நிரைத்த மணி நெடும் புரிசைக் கோயிலுட்
புகுந்திமி லேற்றி
அடிகள்வார் கழலிற் பணிந்தன ர்இரதி யன்புட னொருபுடை நின்றாள்
கடிவிரா வியன்றுங் கணையினா அமையாக் காதலிற்
பழிச்சன்மே யினனான்-

நெடுநேரம் இவ்வாறு புன்னை மர நிழலில் தழுவி இருந்த பின், இருவரும் புன்னை மர நிழல் நீங்கி, விடைக் கொடிகள் வரிசையாகக் கட்டப் பெற்ற உயரமான மதிலுடைய திருக்கோயிலினுட் புகுந்து, திமில் கொண்ட விடைஏறும்

பெருமானின் நீண்ட வீரக் கழல் அணிந்த திருவடியில் விழுந்து வணங்கினர்; இரதி அன்புடன் ஒரு பக்கம் நின்றாள். மணம் விரவிய ஐம்மலர்க்கணை கொண்ட மன்மதன் பெருகும் அன்புடன் பெருமானைத் துதிக்கத் தொடங்கினான். - 463 -

8. *மட வர்க ளேனுந் தன்வேறு காணின்எண் வடிவின் மாட்டு*
*நட நவில் கின்ற நின்றன் லத்தகு மியல்பைத் தேற்று*
*மிட விய பூவா ளூரின்இருந்தரு ள்இலிங்கத் தென்றுங்*
*கட வுளர் போற்ற வைகுங் கட வுளே போற்றி போற்றி.*

"அறிவற்றவர்களாயினும் உன்னைக் காணின் எண்வகை வடிவின்கண்ணும் இயங்குகின்ற உனது நலம் சால் இயல்பைத் தெளிவுபடுத்தும் ஆற்றல் வாய்ந்த பூவாளூர் அருட்குறியான சிவலிங்கத்தில் இருந்து கடவுளர் அனைவரும் போற்ற விளங்கும் கடவுளே வணக்கம்" - 464 -

9. *சகலதத் துவத்தின் மாட் டுஞ் சார்ந்தசைக் கின்றான் யாவன்*
*சகலதத் துவத்தி னானுஞ் சகலமும் படைப்போன் யாவன்*
*சகலதத் துவத்தி னானுஞ் சார்தராத் தலைவன் யாவன்*
*சகலமும் யாவ ன்அ அந்தத் தாணுநின் சரணம் போற்றி.*

"தொண்ணூற்றாறு தத்துவங்களிடத்தும் சார்ந்து நின்று அவற்றை இயக்குகின்றவன் யாரோ, அனைத்துத் தத்துவங்களாலும் அனைத்தையும் படைக்கின்றவன் யாரோ, அனைத்துத் தத்துவங்களாலும் சார்தற்கு இயலாத தலைவன் யாரோ, அனைத்துமாய் விளங்குகின்றவன் யாரோ அவனாக விளங்கும் சிவமே உன் திருவடிக்கு வணக்கம்" - 465 -

10. *மறைமுடி தனக்கும் எட்டா வாய்மையை ஆதலால் நின்*
*நிறை அருள் இயல்பை யாரும் நினைந்துரை (வு) அல்லா ரேனும்*
*குறைவில் அன்(பு) உடையார்க் காகக் கொண்டனை உருவம் அற்றால்*

உபநிடதங்களுக்கும் எட்டாத ஆற்றல் வாய்ந்தவன் நீ ஆதலால்ன உனது நிறைவான் திருவருள் இயல்பை எத்தகையவரும் நினைத்துக் கூற முடியாதவர்கள். எனினும் உன்மீது குறையாத அன்புடையவர் பொருட்டு நீ உருவம் கொண்டாய் அவ்வளவே, எனவே இறைவனே, உனது திருவடிகளை யானும் ஏத்துதற்கு உரியன் ஆயினேன். - 466 -

11. *திருமனு மார்பனோடு திசைமுகத் துமர னோடுஅவ்*
*இருவருங் காண ஒண்ணா வெம்பிரா னிரங்கி யீங்குப்*
*பொருவருங் காட்சி தந்தா யாதலிற் புன்மை யேனும்*
*மருமலர்ப் பாதம் போற்றி வரங்கொளற் குரியனானேன்.*

"திருமகள் விளங்கும் மார்புடைய திருமால், நான்முகன் ஆகியோரும் காணவியலாத எம்பிரானே, என்மீது இரக்கம் கொண்டு இப்போது ஒப்பற்ற அரிய காட்சியளித்தாய் ஆதலால் அற்பனாகிய யானும் உனது மணக்கும் மலர் ஒத்த திருவடிகளைப் போற்றி, வரம் கொள்ளும் தன்மையுடையனாயினேன்" - 467 -

12. *கொடிமரம் திரணம்ஆதி குலைதர அலைக்கு மெனகா*
*னெடியபொன் வரையைமுட்டி மறித்திட நேர்ந்த தேபோற்*
*கடவுளர் முனிவர் நெஞ்சங் கலக்கு ம்என் வலிமை காட்டி*
*யடிகள்பாற் பிழைத்த குற்ற மனைத்தையும் பொறுத்தல் வேண்டும்*

"கொடிகட்டிய மரம், புல் முதலியன வளையுமாறு சலனப்படுத்தும் மெல்லிய காற்று உயரமான ஒரு மலையை முட்டி அதனைப் புரட்டித் தள்ள முற்பட்டது போலக் கடவுளர், முனிவர் முதலியோர் மனத்தைக் கலக்கும் என் வலிமையால் யாவர்க்கும் தலைவனாகிய உம்மிடம் பிழைத்த குற்றம் அனைத்தையும் நீ பொறுத்தருள வேண்டும்" - 468 -

## வேறு

13. *மணமாரு நறுங்கடுக்கை வானவநா யேற்குனதாள் மலரிற் பத்தி*
*தணவாமை வேண்டு ம்உருகத் தமியேனுக் களித்தலினாற் றலத்திற் றக்கோர்*
*கணநாளுந் தொழுமிந்தக் கடி நகர்க்குப் புட்பதன்வ புரமதென்றுங்*
*குணமோரெட் டுடையாய்க்குப் புட்பதன் வேச்சுரனென்றுங்*
*கூறல் வேண்டும்.*

"மணம் நிறைந்த நறுங்கொன்றை சூடிய தேவனே, நாயேனுக்கு உனது திருவடி மலரில் பத்தி நீங்காமை வேண்டும்; எனக்கு உன் சார்புருக் காட்டியதால் தலத்தில் தக்கவர் கூட்டம் நாளும் வணங்கும் இத்தலத்தைப் புட்பதன் வபுரம் என்றும், எண்குணத்தனாகிய உன்னைப் புட்பதன் வேச்சுரன் என்றும் அனைவரும் அழைத்தல் வேண்டும்" - 469 -

14. *கலியாண ம்எமக்களித்த காரணத்தாற் கலியாண புரமென் றூர்க்குங்*
*கலியாண சிகரமெனக் காமர்சி கரத்தினுக்குங் கட வு ளேறே,*
*கலியாண நாதனென நினக்குமிரும் பெயருறுக கண்டோ ரெல்லாங்*
*கலியாணந் தனைப்பெறுக எனத்துதித்து வரமிரந்து கசிந்து நின்றான்.*

"எனக்குக் கலியாணம் அளித்த காரணத்தால் கலியாணபுரம் என்று ஊருக்கும், கலியாண சிகரம் என்று அழகிய திருக்கோபுரத்துக்கும், கடவுளருள் ஆண் சிங்கமே! கலியாணநாதன் என்று உனக்கும் பெரும் பெயர் அமையவும், உன்னைக் கண்டு வணங்கினோர்க்கு எல்லாம் மங்கலம் அமையவும் அருள்க" என்று வணங்கி வரம் கேட்டு உருகினான். - 470 -

117. *காமவே ள்இரந்தவரங் கண்ணுதலார் கொடுத்தருளிக் கரந்தாராக*
*வாமமே கலையிரதி மறுவலுந்தன் கணவனொடு மறைக ளொட்டாச்*
*சோமசே கரர் பூசை தூயசிவ லிங்கத்தி லிலங்க ஆற்றி*
*ஏமமார்தம திருக்கைக் கேகியள வளாயின்ப மெய்தி வாழ்ந்தாள்*

மன்மதன் கேட்ட வரங்களை எல்லாம் நுதற் கண்ணரான சிவபெருமான் கொடுத்தருளி மறைய, அழகிய மேகலை அணிந்த இரதி மீண்டும் தன் கணவனோடு மறைகளுக்கு எட்டாத பிறைசூடிப் பெம்மான் பூசனையைத் தூய சிவலிங்கத்தில், தான் விளக்கமுறச் செய்து, பாதுகாவலுடைய தமது இருப்பிடம் சென்று கணவனுடன் அளவளாவி இன்புற்று வாழ்ந்தாள். - 471 -

16. *களங்முழு வதும்அகலக் காமவேட் குஅகளங்கங் கலந்த சூழல்*
*வளங்குலவு ம்அகளங்க புரமாகு ம்அதுதிருமங் கலத்தின் வாழும்*
*இளங்கதிர்வெண் மதிமிலைந்தார் சன்னிதியின் வீற்றிருக்கு*
*மியல்பி னாலுந்*
*துளங்கலிலா வரம்பலவுங் கொடுக்கும் அதன் பெருமையெவர்*
*சொல்ல வல்லார்.*

களங்கம் முழுவதும் நீங்க, மன்மதன் களங்கம் மற்ற நிலை பெற்ற சூழல் வளம் விளங்கும் அகளங்கபுரம் ஆகும். அது திருமங்கலத்தில் வாழும் இளம்பிறை சூடிய பெருமான் திருமுன்பு உள்ளதால் அசையாத வளம் பலவும் கொடுக்கும் அதன்பெருமை எவராலும் சொல்லுதற்கரியது. - 472 -

17. *நன்னாக ம்இணிந்தவர்தந் திருவருளாற் சென்றுஇரதி நறும்பூ வாளி*
*மன்னாக ம்மணிமுலைகள் கலந்துழக்கத் தழுவியுள மகிழ்ந்து நின்ற*
*புன்னாக மரச்சூழல்த னையெவரும் புன்னாக புரமென் பார்கள்*
*தன்னாம முரைத்தவரு ம்இடரகல மங்கலங்க ள்தழைக்க நிற்பார்.*

நல்ல பாம்பினை அணிந்தவர் திருவருளால், இரதி சென்று மணமிக்க மலரம்புகளை யுடைய மன்மதன் உடம்பாகிய நிலத்தைத் தனது முலைகளாகிய ஏரால் உழ, தழுவி உள்ளம் கலந்து நின்ற இடம் ஆகிய புன்னாக மரச் சூழல் கொண்ட இடத்தை யாரும் புன்னாகபுரம் என்பர். அதன் பெயர் சொன்னவரும் துன்பங்கள் தீர மங்கலங்கள் தழைக்க வாழ்வார்கள். - 473 -

*18. இவ்வாறு சூதமுனி மதன்வழிபாட் டினைப்புகல இயல்பின்நோற்குஞ்*
*செவ்வாய்மை முனிவரர்கள் கேட் டொன்று வினாவுவார் சிவபி ரான்முன்*
*அவ்வாலி னிருந்துதவ மாற்றுதற்குக் காரணமு ம்அறைகவென்றார்க்ம்அ*
*ஒவ்வாரு மில்லாத சூதமுனி வரன் முறையே யுரைக்க லுற்றான்.*

இவ்வாறு சூத முனிவர் மன்மதன் வழிபாட்டினைக் கூற, இயல்பில் தவம் புரியும் செம்மையான வாய்மையுடைய முனிவர்கள், "முன்பு சிவபெருமான் ஆலமரத்தடியிலிருந்து தவம் ஆற்றக் காரணமும் கூறுங்கள்" என்று வேண்ட, ஒப்புமை யாருமில்லாச் சூத முனிவர் அதனை முறைப்படி கூறத் தொடங்கினார். - 474 -

### வேறு

*19. முதிர்தவ முறைமுறை முயன்ற பேற்றினால்*
*கதிதரும் பரையெனுங் கருணை நாயகி*
*சதியெனும் பெயரொடு தக்க ன்இல்வயின்*
*மதியென வளர்ந்தனள் வையம் போற்றவே.*

- முதிர்ந்த தவத்தை முறைப்படிப் பல முறை நோற்ற நற்பேற்றால், உயிர்கட்கு நற்கதி அருளும் பரையாகிய - சிவசக்தியாகிய - கருணைத் தலைவி, சதி - தாட்சாயிணி என்ற பெயருடன் தக்கனின் அரண்மனையில் வளர்மதிபோல் உலகம் போற்ற வளர்ந்தாள். - 475 -

*20. சிறுவிதி வளர்தரு செல்வப் புத்திரிக்(கு)*
*உறுபரு வத்தினை யுணர்ந்து கொன்றையின்*
*றறுவிரைக் கண்ணியா ன்நயந்து மன்றலாற்*
*பெறுமுறை மகிழ்வொடும் பேணி நல்கினான்.*

தக்கன் தன் செல்வமகள் மணப்பருவம் அடைந்ததை உணர்ந்து கொன்றை மலரின் மணக்கும் மாலையணிந்த சிவபெருமானை விரும்பி, மணமுடித்துப் பேணினான். - 476 -

21. *கவுரியைக் மணந்(து) உயர் கயிலை மால்வரைச்*
*சிவபிரான்இ ருந்தனன் சிறந்த தக்கன்முப்*
*புவனமும் பொதுமையி ன்நீக்கி யாண்டனன்*
*பவனையே மருகனாப் படைத்த பான்மையால்*

அம்மையை மணந்தவன் உயர்ந்த பெருங்கயிலை மலையில் இருந்தாள். சிறந்த தக்கன் சிவபிரானையே மருகனாகப் பெற்றதால், மூவுலகங்களையும் பொதுநீக்கித்தானே ஆண்டான். - 477 -

22. *இவ்வகை அரசுசெய் திருக்கு நாளையில்*
*செவ்விதி ன்வுருமகஞ் செய்ய வுன்னினான்*
*எவ்வெவர் தமக்கும் நன் றெழுதி விட்டன்*
*நவ்வியங் கரத்தர்பா ல்நவிற்ற நண்ணினான்.*

இவ்வாறு அரசுபுரி நாளில் தக்கன் ஒரு வேள்வியைச் சிறந்த முறையில் செய்ய நினைத்தான். எத்தகைய உயர்ந்தவர்களுக்கும் வேள்வி அழைப்பு எழுதி அனுப்பினான். மான்கன்றினைக் கரத்து ஏந்திய சிவபிரானைத் தானே நேரில் கூறி அழைக்க நினைத்தான். - 478 -

23. *ஆதனத் திருந்தவா றுமல நாயகன்*
*மாதொடு ம் இம்ருந்தமை கண்டு வையக*
*நீதியி ன்அரசுசெய் நிலைமைத் தக்கனும்*
*பேதைமை யாலுளம் பிழைத்து இதுண்ணினான்.*

சென்ற தக்கனைத் தனது ஆசனத்திலிருந்து எழுந்து மரியாதை காட்டாமல் சிவன் மனைவியோடிருந்தது கண்டு அறநெறி ஆளும் தக்கன், தனது அறியாமையால் மனத்தில் பிழையாக நினைத்துப்பின் வருமாறு எண்ணினான். - 479 -

24. *இறையவன் சேவகற் கெழுதல்இல்லைட்கு*
*அறைகாழ கணவன்மா ண்ஆக்கற் (கு) ஆரியன்*
*முறையல மாமற்கு மருகன் மூப்பினும்*
*அறைதரு நெறியினால் வணங்கல் வேண்டுமே.*

"இறைவன், வணக்கம் செலுத்த எழுவில்லை. என் மகளுக்குக் கணவன் - எனக்குமருகன்; மாண்பினை ஆக்கிக் கொள்ள உரியவன். மாமனாருக்கு மருமகன் மூத்தவனாய் இருப்பினும், ஐயனாகிய சிவபெருமான் மாமனாரை அற நெறிப்படி வணங்க வேண்டும்" - 480 -

25. கொழுந்திள மதிமுடி கொண்ட முக்கணன்
எழுந்திலன் வணங்கில னின்சொற் சொல்லிலன்
உழுந்தள வாயினு மு றவு)என்று எண்ணிலன்
விழுந்த(து)இன் றிவன்உற வென்று வெம்பினான்.

"பிறையணிந்த முக்கண்ணன் எழவில்லை; வணங்கவும் இல்லை, வரவேற்று இன்சொல் கூறவும் இல்லை. மாமனார் என்ற உறவு முறையை உழுந்தளவு கூட எண்ணவில்லை. எனவே இன்றுடன் இவன் உறவு முடிந்தது" என்று மனம் வெம்பினான். - 481 -

26. மாலுமற் மரரு மறையு நாடொணாச்
சீலமெய் உருவினைத் தெரித ராமையால்
தோலுடை யாதியே சொரூப மென்றுளம்
சாலவு மிகலிச்சாற் றாது மீண்டனன்.

திருமாலும் தேவர்களும் மறைகளும் நெருங்கவும் இயலாத சீலமுடைய சிவபெரு மானின் ஞானத்திருவுருவைத் தெரிந்து கொள்ளாமையால், அவனது தோலுடை முதலியனவே அவனது உண்மையுரு என்று மிகப் பகைத்து ஒன்றும் கூறாது மீண்டான். - 482 -

27. அழித்தனன் சிவபிராற் (கு)அன்ற அன்பினைக்
கழித்தனன் மகளையும் கட்செ விக்குலஞ்
செழித்ததோ லாதியுஞ் செப்பு நாதனை
இழித்தனன் பழித்தன ன்எவருங் கேட்பவே.

சிவபிரான் மீது கொண்டிருந்த நிறைந்த அன்பை அழித்தான். மகளையும் ஒதுக்கினான்; பாம்பணிகலன், தோலாடை முதலியன கூறிச் சிவபிரானைப் பிறர்க்குக் கேட்குமாறு இழிவு படுத்தினான். - 485 -

28. மாயனா தியர்தமை வருவித் (து)உய்யெனத்
தூயதோர் வேள்வியைத் தொடங்கி நின்றனன்
ஆயதோர் செவ்வியி ல்அகில மீன்றவள்
நாயனார் திருவடி நயந்து தாழ்ந்தனன்.

திருமால் முதலியோரை வருவித்து விரைந்து தூய ஒரு வேள்வியைத் தொடங்கினான். அப்போது அகிலமெல்லாம் ஈன்ற அருமை, சிவபெருமான் திருவருளை வேண்டினாள். - 484 -

*29. எம்பிரான் வேள்வியொன் றெந்தை யூக்கினான்*
*னும்பரா ரனைவரு மொருங்கு போந்தன*
*ரிம்பர்நா னீயுமே யிருந்து ளாமினி*
*யம்பர்நா மும்புக வருளல் வேண்டுமே*

"எம்பிரானே, என்தந்தை ஒரு வேள்வி செய்ய முயன்றுள்ளான். அதற்குத் தேவர்கள் அனைவரும் வந்து சேர்ந்தனர். இங்கு நானும் நீயும் மட்டும் உள்ளோம். அங்கு நாமும் செய்ய அருள வேண்டும்" என்றாள். - 485 -

*132. சிறுமையன் சிறுவிதி யென்று செம்மல்ஆங்(கு)*
*உறுவது தகாதென வுன்னி நிற்பினும்*
*நறுவிரைக் கடுக்கையாய் நானங் கேபுகப்*
*பெறுவது வேண்டும்இப் பெற்றி நல்கென்றாள்*

தக்கனை அற்ப அறிவினன் என்று நினைத்த சிவபெருமான், "அங்குச் செல்வது தமக்குத் தக்கதன்று" என்று நினைத்த போதிலும் அதை உணராத அம்மை, "மணக்கும் கொன்றை சூடியவனே நான் மட்டுமாவது அங்குச் செல்ல வேண்டும். அருள்க" என்றாள். - 486 -

*31. மாறுபட் டவன்மகம் வளர்க்கின் றான்அது*
*நீறுபட் டொழிவது நீயு மங்குஉறின்*
*வேறுபட் டுஉடலமும் வெறுப்பை யென்றுதன்*
*கூறுபட் டவட்(கு)உ)து குழக னோதினான்*

"அவன் நம்மைப் பகைத்து மகம் வளர்க்கின்றான். அது அழியும். நீ அங்குச் சென்றால் மனம் வேறுபட்டு உன் பிறப்பையே வெறுப்பாய்" என்று சிவபிரான் தன் கூறுடைய அம்மைக்குக் கூறினான். - 487 -

*32. பெண்மையி னறிவுதான் பேசற பாலதோ*
*எண்மையி ன்உலகெலா ம்ஈன்ற நாயகி*
*உண்மையை நாயக னுரைத்தும் வேள்வியின்*
*வண்மையைக் காண்டலே மதியி ன்ஊக்கினாள்.*

பெண்மையின் அறிவு போற்றத்தக்க தன்று. மிக எளிதில் உலகமெல்லாம் ஈன்ற தலைவி, தன் கணவன் உண்மையைக் கூறியும் வேள்வியின் சிறப்பைக் காண அங்குச் செல்லவேண்டும் என்ற எண்ணத்தின்படி நடந்து கொண்டாள். - 488 -

33. *தணந்(து)இடத் (து)இருந்தவ ள்தமியள் செல்லுமுன்*
*உணர்ந்தவ ருணர்வினா லுழைச் செல்நந்தியைக்*
*கணந்தரு பரிசனங் காமர் கன்னிபாற்*
*புணர்ந்துடன் செல்லுமா புகல்என் றேவினான்.*

பிணங்கி அவள் அங்கிருந்து புறப்படுமுன், நடக்க இருப்பதை உணர்ந்த பெருமாள், எச்சரிக்கை உணர்வுடன் தன்பால் நெருங்கிச் சென்று நின்ற நந்தியம்பெருமானை நோக்கி, "கூட்டமாகச் சூழ்ந்து செல்லும் ஏவலர், அவளுடன் செல்லுமாறு கூறுக" என்று ஏவினான். - 489 -

34. *அடிகளார்அருடலைக் கொண்டு நந்தியும்*
*இடிகளா மெனமுர சியம்பும் வாய்தலிற்*
*கொடிகளார் படைக்கணத்தவர்க்குக் கூறினான்*
*தொடிகளார் கரத்தவள் சூழ்ந்து செல்கென.*

சிவபெருமானின் அருளாணையைத் தலைமேல் கொண்டு நந்தி, இடிகள் என்று சொல்லத்தக்க முரசு முழங்கும் வாயிலில் நின்று, கொடிகள் உயர்த்திய படைக்கூட்டத்தினர்க்கு, வளையலணிந்த அம்மையைச் சூழ்ந்து செல்லக் கூறினான். - 490 -

35. *ஈண்டின கணம்கண நாதர்ஈண்டினார்*
*வேண்டின பரிசனம் வேறு தொக்கன*
*நீண்டவ னறிகலா னெஞ்சு போன்மென*
*மாண்டநற் பாங்கிற் மருங்கு சூழ்ந்தனர்.*

பூதகணமும், கணத்தலைவர்களும் கூடினர். தேவையான பரிசனங்களும் கூடின. சிவபெருமான் "இவள் நடக்க இருப்பதை அறியவில்லை; மனம் போல் நடக்கட்டும்'' என்று எண்ண, மாட்சிமை மிக்க பாங்கியரும் பக்கம் சூழ்ந்தனர். - 491 -

36. *பெய்வளைத் தோளினாள் பெயர்ந்து சென்றனள்*
*கையணி வேள்வியஞ் சாலை கண்டனள்*
*ஐயனை யடுத்தன ள்அவன்ம கிழ்ச்சியைச்*
*செய்யிலன் மூங்கைமைத் திறத்தை மேவினான்*

வளையலணிந்த கையுடைய அம்மை, புறப்பட்டுச் சென்றாள். வஞ்சனையால் அழகு பெற்ற வேள்விச் சாலையைக் கண்டாள்; தந்தையை நெருங்கினாள்; அவன் முகத்தால் மகிழ்ச்சி காட்டவில்லை; ஊமைபோல் இருந்தான் - 492 -

37. *அன்னையை யடுத்தன ள்அவளு மூங்கையின்*
*மன்னினா ள்ஏனையோர் வாயு மன்னதே*
*இன் னணம் யாவரு ம்இசுந்த பெற்றியைத்*
*தன்னையே தான்பொருந்தலைவி நோக்கினாள்*

தாயை அடைந்தாள். அவளும் ஊமையாகவே நிலைத்து இருந்தாள். பிறரும் ஒன்றும் கூறவில்லை. இவ்வாறு எல்லாரும் தன்னை ஒதுக்கிய தன்மையைத் தன்னைத்தானே ஒத்த தலைவி கண்டாள். - 493 -

38. *அவமதித் திருந்திடு ம்மரர் தங்களைக்*
*கவலையின் முனிவரர் கணத்தை யாரையும்*
*உவமையி லாதவ ள்உருத்து நோக்குபு*
*சிவமலி சிலமொழி செப்பல் மேயினாள்.*

தன்னை அவமதித்து இருந்த தேவர்களையும், அதுபற்றிக் கவலையின்றி இருந்த முனிவர் கூட்டத்தையும், தன் ஒப்பில்லாதவள் சினந்து நோக்கி, நன்மை மலிந்த சில சொல் கூறத் தொடங்கினாள். - 494 -

### வேறு

39. *எல்லாம் வல்ல ஈச்சுரனா யெவர்க்கு மேலா யிருப்பவனாய்ச்*
*சொல்லா ர்உலக மனைத்தினையுந் தோற்று நிமித்த காரணனாய்*
*நல்லார் வணங்கு ம்உருத்திரற்கே யல்லால் வேறு நண்ணுவதோ*
*வில்லா ரழல்வேள் வியின்நீயிர் விதியாற் பகுக்கு மவிப்பாகம்.*

"எல்லாம் வல்ல ஈசுவரனாகவும், எத்தகையவர்க்கும் மேலானவனாகவும், புகழ் வாய்ந்த உலகம் முழுவதையும் உண்டாக்கும் நிமித்த காரணன் ஆகவும், நல்லவரால் வணங்கப் பெறுகின்றவனாகவும், உள்ள உருத்திரக்கு அல்லாமல், ஒளி பொருந்திய அழலுடைய வேள்வியில் நீவிர் முறைப்படி பகுத்துக் கொடுக்கும் அவிப்பாகம் பிறர்க்குப் பொருந்தாது" - 495 -

### வேறு

40. *எச்சமு மவரே மனுக்களு மவரே யிருத்துவிக்களும்இய மானும்*
*வச்சமுத் தழலும் பசுக்களும் அவரே மயங்கிய வவிசுமாச் சியமும்*
*பொச்சமில் புரோடா சமும்அவ ரெச்சப் பொருளெலா மவதன் பயனுங்*
*கச்சமில் கன்மப் பயனுமற் றவரே அவை யருள் கருத்தனு மவரே.*

"வேள்வி, வேள்வி மந்திரம், வேள்வி செய்வோர், வேள்வி செய்விப்போன், வேள்வி முத்தீயும், உயிரினங்களும், தேவர் உணவும், வேள்வியில் சொரியும் நெய்யும், குற்றமற்ற வேள்வியிலிடும் மாவுப் பொருள்களும், வேள்விப் பயனும், அளவற்ற பிற கன்மப் பயனும் பிறவும் அவரே ஆவர். அவற்றை அருளும் கருத்தாவும் அவரே". - 495 -

## வேறு

41. *இகலி ல்அப்பய னனைத்தையு மேற்பவ ரவரே*
*சகல வித்தைக்குஞ் சகலபூ தத்துக்கும் நறுந்தேன்*
*நகும லர்ப்பிர மற்கும்நல் லீச்சுர ரவரே*
*அகம றுத்திடும் பிரணவப் பொருளுமன் னவரே.*

"மாறுபாடில்லாத பிற அனைத்துப் பயன்களையும் ஏற்பவர் அவரே ஆவார். சகல கலைகளுக்கும், சகல பூதங்களுக்கும், நறுமணமிக்க தேன் பிலிற்றும் தாமரையில் எழுந்தருளியுள்ள நான்முகனுக்கும் நல்ல ஈசுவர் அவரே. ஆணவம் அறுக்கும் பிரணவம் பொருளும் அவரே ஆவார்" - 496 -

144. *சிட்டர் தங்களைக் காத்தும்துட் டரைச்சினந்திறுத்தும்*
*முட்டி லாத்தரு மத்தினை நிறுத்தியு முறைசெ*
*அட்ட மூர்த்தியுந் தத்துவா தீதரு மவரே*
*சுட்டொ ணாப்பரஞ் சோதியாம் பராபர ரவ.*

"நல்லவர்களைக் காத்தும், துட்டரைச் சினந்து அழித்தும்; குறைபாடில்லாத அறத்தினை நிலைநாட்டியும் முறை செய்யும் எண்வகை மூர்த்திகளும், தத்துவங்களைக் கடந்தவரும், சுட்டிக் கூறவியலாத மேலான ஒளிவடிவான மேலானவற்றுக் கெல்லாம் மேலானவரும் அவரே" - 498 -

43. *அகில காரண ராயரு மறைகளின் முடிவிற்*
*றிகழ்சொ ரூபராய்த் திரிபுர தகனரா யிருக்கும்*
*பகவனானஅவ் வீச்சுரன் பக்கமே யல்லால்*
*புகரில் பாகம்வே றொருவர்பாற் பொருந்தவ திலையே*

"உலகங்களுக்குக் காரணமானவரும், உபநிடதங்களில் விளங்கும் ஞானவடிவரான முப்புரம் எரித்தவராய் இருக்கும் பகவனும் ஆன ஈசுவரனுக்கல்லாமல் குற்றமற்ற வேள்விப்பாகம் பிறர்க்குப் பொருந்தாது" - 499 -

44. *சுத்த தத்துவன் சச்சிதா னந்தன்அத் துவிதன்*
*முத்தன் முத்தியை யளிப்பவ னெனமறை முழங்கும்*
*மத்த கும்பெரு மாற்(கு)அவி யளித்திடா தெவ்வாறு*
*றுத்த மப்பெரு வேள்வியுங் களுக்குற முடியும்*

சுத்த தத்துவன், சச்சிதானந்தன், அத்துவிதன், முத்தன், முத்தியளிப்பவன் என்று மறைகள் முழங்கும் அத்தகைய பெருமானுக்கு அவியுணவு அளிக்காது உத்தமமான பெருவேள்வி உங்களுக்கு எப்படி முடியும். - 500 -

45. *மத்த கப்பெரு வேழம்வாய் மடுத்திடு கவளக்*
*கொத்தி னின்றுஉகும் பிதிரினைக் கொண்டெ(டு)எம் பரிக்கும்*
*பித்த னுக்கென வேவளர் வேள்வியிற் பிறர்க்கும்*
*வைத்த தாம்அவிப் பாகம்வே றாகவைத் திலதே.*

மத்தகமுடைய பெருயானை தின்னும் கவள உருண்டையிலிருந்து உதிர்ந்து சிதறும் சோற்றினை எறும்பு அரித்துத் தின்று வாழும். அதுபோல் பித்தனாகிய சிவபெருமானுக்கு என்று வளர்த்த வேள்வியில் சிவபெருமானுக்கு வைக்கும் அவி தவிரப் பிறர்க்கு அவிப்பாகம் வேறாக வைப்பதில்லை. - 501 -

46. *நுமக்கு வேறுநூல் உவன்றதுண் டாமெனி ன்நுனித்திட்*
*எமக்கிங் கொப்புற வியம்புமி ன்(று)ன்றிறை யவனார்*
*தமக்குத் தீர்கலாத் தன்மையைச் சபை யுளோர் கேட்ப*
*அமர்க்கும் வாள்விழிச் சதியெனு ம்அன்னைகூ றினளால்.*

'மாறுபட்டு நடத்தும் இவ்வேள்வி பற்றிக் கூறும் நூல் உண்டெனில் கூறுங்கள், நுட்பமாக நாம் ஏற்கும் வண்ணம் கூறுங்கள்' என்று இறைவனுக்கன்றி அவிப்பாகம் வைக்காத தன்மையை அவையில் உள்ள அனைவரும் கேட்க, பொலிவு பொருந்திய ஒளிவிழிச்சதி கூறினாள். - 502 -

47. *வரித்த தொய்யின்மென் முலையினாள் வாய்மையைக் கூறச்*
*சிரித்த னன்பக வோன்முகந் திரிக்கினன் சோமன்*
*தரித்த னன்முக மென்மயிர் செங்கையாற் பிருகு*
*சுரித்த னன்விழி பகன்கரந் (து)ஊக்கினன் கனலோன்.*

சந்தனக் குழம்பினால் சித்திரம் தீட்டப்பெற்ற மார்புகளையுடைய அம்மை கூறிய வாய்மை கேட்ட, சூரியன் சிரித்தான், சந்திரன் முகம் மாறுபட்டான், பிருகு முனிவர் தன் முகத்து மயிரைத் (மீசை) திருகினான், விழி சுருங்கினான் பகன்; மறைந்து ஓடினான் அக்கினி. - 503 -

*48. சிரந்து ளங்கினர் சிலர்சிலர் பிதிக்கின ர்ஓட்டங்*
*கரந்து ளக்கினர் சிலர்சிலர் கதத்தொடு பார்த்தார்*
*உரந்து ளக்கினர் சிலர்சில ருருவநா வசைத்தார்*
*வரந்து ளக்குவா ரனைவரு ம்அவமதித் தனரால்*

சிலர் தலையாட்டி அம்மை கூறியதற்கு மறுப்புத் தெரிவித்தனர்; அவ்வழியில் சிலர் உதடு பிதுக்கினர், சிலர் கையசைத்தனர்; சிலர் சினத்துடன் நோக்கினர், சிலர் மார்பு குலுக்கினர், சிலர் மறுத்துக் கூறினர். இங்ஙனம் தேவர்கள் அனைவரும் அம்மையை அவமதித்தனர். - 504 -

*49. கருத்த னார்தமை யாவரு ம்இகந்தமை காணாப்*
*பெருத்த வாள்விழி செந்தன பெயர்ந்துவார் புருவந்*
*திருத்த ம்ஆர்நுத லேறின சேயிதழ் துடித்த*
*உருத்தி ராணிமிக்கு கோங்கிய சினத்தின்ன துரைத்தாள்.*

சிவபெருமானை யாவரும் ஒதுக்கியமை நோக்கி, அகன்ற ஒளிசேர் கண்கள் சிவக்க, நீள் புருவங்கள் தன் இடம் விட்டுப் பெயர்ந்து அழகிய நெற்றிமேல் ஏறத உருத்திரனின் மனைவியாகிய அம்மை மிக்க சினத்துள் இது சொன்னாள். - 505 -

*50. நடுநி லைபிழைத் (து)அல்லது நாடி ன்மற் றவர்தாங்*
*கெடுவ தற்கது காரண மாதல்கேட் டிலிர்கொல்*
*கடுக நுங்களைப் பிளப்பர்முப் புரங்கனற் படுத்தோர்*
*அடரும் வையக ம்அனைத்திற்கு மவரன்றே சாத்தா.*

"நடுவுநிலை தவறித் தவறானதை நாடினால் கெடுவதற்கு அதுவே காரணம் ஆகும் என்பதைக் கேட்டதில்லையா? முப்புரம் எரித்தவர் விரைந்து உங்களை அழிப்பார்; வருத்தும் உலகம் அனைத்தையும் அவரே தண்டிப்பவராவார்". - 506 -

*51. காவி நின்றொளிர் கண்டனார்க் (கு)இனியிந்த வுடலம்*
*மேவி நிற்பதற் குரியதன் தனைவல் விரைந்து*
*பாவி தக்கனுக் கொருமக ளெனும்பழி பாற*
*நீவிநிற்பதே நிலையெனத் துணிபொருள்நிறுத்தாள்*

"உண்ட நஞ்சினால் கருங்குவளை மலர் ஒத்த கழுத்துடையவர்க்கு இவ்வுடல் - இப்பிறப்பு - பொருந்தி நிற்பதன்று; எனவே பாவியாகிய தக்கனுக்கு ஒப்பற்ற மகள் என்ற பழி கெட, விரைந்து இவ்வுயிரைப் போக்கி நிற்பதே தக்கது" என்று துணிந்ததை மனத்தில் நிறுத்தினாள். - 507 -

*52. உரிய யோகத்தி ன்அங்கியை யொளிர்தரு வேள்வி,*
*எரியி னோடுற வியைத்துஅதி லிம்மென விறங்கிப்*
*பிரிவு செய்துதன் னுடலினைப் பெயர்ந்துபோ ய்இமைய*
*வரைய ன்இல்வயி னொருமக ளெனஅவ தரித்தகள்.*

யோகத்தால் உயிரைப் போக்கும் தீயை, ஒளிரும் வேள்வித்தீயுடன் பொருந்தச் செய்து, அதில் விரைந்து இறங்கித்தன் உயிரைப் பிரித்து, இமயமலையில் மகளாகத் தோன்றினாள். - 508 -

*53. மணங்கொள் கோதையாள் வளர்அழன் முழுகுதநோக்கி*
*உணங்கி னார்சில ஆஅவென் றுரைத்தனர் சில்லோர்*
*பிணங்கள் போலிருந் தார்சிலர் சிலர்பெயர்ந் திரிந்தார்*
*அணங்கு ம்உள்ளின ராயின ரனைவருமாங்கே.*

மணக்கும் மாலை அணிந்த அம்மை, பெருகும் தீயில் முழுகுதல் நோக்கி, துக்கப்பட்டனர் சிலர், ஆஎன்று அலறினார் சிலர் பிணம் போல் உணர்வற்றனர் சிலர், சிலர் வேறிடம் ஓடினர்; இங்ஙனம் அனைவரும் வருந்தும் உள்ளத்தர் ஆயினர். - 509 -

*54. உலக நாயகி யொண்டழல் குளித்தமை யோடிப்*
*பலருங் கூறினர் பரம்பொரு ளாகிய கயிலைத்*
*தலைவர் வெய்துற வாங்கியோர் சடையினைத்தரைமேல்*
*இலக மோதின ர்எழுந்தனன் வீரபத்திரனே.*

உலகத் தலைவி தீ மூழ்கியதை ஓடிப் போய்ப் பலரும் கூறக்கேட்ட பரம்பொருள் ஆகிய கயிலைத் தலைவர், சினந்து, அப்போது தனது ஒரு சடையை எடுத்துத் தரைமேல் விளங்க அறைந்தார்; வீரபத்திரர் எழுந்தார். - 510 -

*55. உருத்திரப்பெயர்ச் செம்மலார் சினமெலா மொருங்கே*
*உருத்தி ரண்டென வெழுந்தொளிர் ஒரு தனி வீரன்*
*னுருத்த திண்படைக் கரத்தினன் வெருச்செயு முருவ*
*உருத்த கண்ணினன் தந்தையொண் மலரடி பணிந்தான்.*

உருத்திரப்பெயர் பூண்ட சிவபெருமானின் சினாமலாம் ஒருசேரத் திரண்டதுபோல் ஒளிரும் ஒப்பற்ற வீரன் ஒருவன் வீரபத்திரர் - அச்சமூட்டும் படைக்கருவி ஏந்தி, அச்சுறுத்தும் உருவுடன், சினம் கொண்ட கண்களுடன் தன் தந்தையின் - சிவபெருமானின் மலரடி பணிந்தான். - 511 -

56. *வணங்கி நின்றமா வீரனை வள்ளலார் விடுப்பார்*
*பிணங்கி யாற்றுறுந் தக்கன்வேள் வியைப்பெரி தழித்(து) அக்,*
*கணங்கொ ள்தேவரைக் கண்ட துண் டம்புரி இடப்பால்*
*அணங்கு மாய்வுற வவமதித் தாரெமை யென்றார்.*

"நம்முடன் மாறுபட்டுச் செய்யும் தக்கன் வேள்வியை முழுதும் அழித்து, கூடியுள்ள தேவர்களைக் கண்ட துண்ட மாக்குக. என் இடப்பால் கொண்ட மனைவி தீப்புக, எம்மையும் அவமதித்தார்" என்று கூறினான். - 512 -

57. *அருளச் செய்யுமு ன்அருந்தழல் கொழுந்துவிட் டாங்கு*
*வெருளிச் செய்யுரு வீரன் வெஞ்சினந்தலை மீக்கொண்(டு)*
*இருளிற் செய்யுட லெறும்க்கணத்சபட்ட மோ டேகி*
*மருளிச் செய்ம்மனத் தவர்அழற் சாலையை வளைந்தான்.*

கூறு முன் பெருந்திரளான தீ, கொழுந்து விட்டு எரிவதுபோல் அச்சமூட்டும் வீரன், கொடும் சினம் தலைமேல் தாங்கி, இருளால் ஆனது போன்ற உடம்பினையுடைய வலிமை வாய்ந்த பூதகணத்துக் கூட்டத்துடன் சென்று மதி மயங்கியவர் செய்யும் வேள்விச் சாலையைச் சூழ்ந்து கொண்டான். - 513 -

58. *எட்டுத் திக்கிலுஞ் சாரதத் தலைவரை யேவி*
*முட்டுச் செய்தனன் வானமுங் காவலா முடித்தான்*
*ஓட்டிப் பல்பிலம் பாதளத் துறாவகை தடுத்தான்*
*கட்டிக் கொண்டனன் முந்துறக் காவலி னனைத்தும்*

எட்டுத் திசைகளிலும் பூதகணத் தலைவர்களை ஏவி, யாரும் வெளியேறாதபடி தடை செய்து, வானுலகத்தையும் காக்க அனுப்பினான். மேலும் பல்வகைச் சுரங்கப் பாதைகள் மூலம் பாதளத்தை யாரும் அடையாதவாறு தன் வசப்படுத்தினான். - 514 -

### வேறு

59. *வீர னென்ற பெயரை விளக்குவான்*
*பார வில்லினை வாங்கிப் படர்ந்தனன்*
*கோர வெங்கணை கொம்மெனத் தூண்டினான்*
*சார தப்படை யுஞ்சம ரேற்றதே.*

வீரன் என்ற பெயரை நிலைநாட்ட பாரமான ஒருவில்லை எடுத்துக் கொண்டு புறப்பட்டான். அஞ்சத்தக்க கொடிய அம்புகளை விரைந்து எய்தான்; பூதகணப் படையும் போரில் இறங்கியது. - 515 -

60. *குமுறும் வேழக் குழாம்அரிப் போத்துற*
*நிமிர்பெ ருந்திற நீங்கிக் குழைந்தெனச்*
*சமர வன்படை தாங்கிய தேவர்க*
*அமர ரென்னும் பெயருமற்றார்அரோ.*

பிளிறிக் குமுறும் யானைக் கூட்டம் ஆண் சிங்கம் வர, தமது நிமிர்ந்த ஆற்றல் குழைந்தாற் போல, போரிடும் கொடும்படை ஏந்திய தேவர்கள் தமது அமரர் - அழியாதவர் என்ற பெயரும் அற்றனர் - அழிந்தனர். - 516 -

61. *தக்கன் சென்னியும் எச்சன் றலையையும்*
*ஒக்க வீசி ஒலியழ லிட்டனன்*
*பக்க அங்கியின் பல்கையும் வீசினான்*
*செக்க ராதவன் பற்களைச் சிந்தினான்.*

தக்கனது தலையையும் எச்சனுடைய தலையையும் ஒருசேர வெட்டி முழங்கும் தீயில் இட்டான்; தீக்கடவுளின் பக்கங்கள் தோறும் உள்ள பலகைகளையும் வெட்டினான். சிவந்த சூரியனின் பற்களை உடைத்தான். - 517 -

62. *பகனி ருங்கண் பறித்தனன் சோமனை*
*முகன்அ ழுங்க முழுவதுந் தேய்த்தனன்*
*நிகரி லாத பிருகுவை நீள்மயிர்*
*இகலின் மேலத ரத்தை யிறுத்தனன்.*

பகனின் கரிய கண்களைத் தோண்டிப் பறித்தான், சந்திரன் முக ஒளி முழங்க அவன் முகத்தைத் தேய்த்தான், ஒப்பற்ற பிருகு முனிவரின் நீண்ட மீசையது மேல் உதட்டினை வெட்டினான். - 518 -

63. அவம திந்த வவரவர்க் குத்தக
எவரு மஞ்சளுஞ் சாமை யுறுமுறை
உவமை யில்படை யான்மிக் குஉளுற்றினான்
தவலி லாத சயப்பெரு வீரனே.

குற்றமற்ற வெற்றி வீரன்; அவமதித்த அவரவர்க்கு ஏற்றவாறு எவரும் தண்டனையில் விடுபடாதவாறு தண்டனை பெற, ஒப்பற்ற தனது படை கொண்டு செயற்பட்டான்; - 519 -

64. சிரங்க ளற்றன ரற்றனர் செய்யநாக்
கரங்க ளற்றன ரற்றனர் காதுமூக்(கு)
உரங்க ளற்றன ரற்றன ரொண்கழல்
வரங்க ளற்றனர் வானவர் யாவரும்.

சிரங்கள், சிவந்த நாக்கு, கரங்கள், காது மூக்கு மார்பு வீரக் கழலணிந்த கால்கள் தமது மேன்மை ஆகியன வானவர் யாவரும் அற்றனர். - 520 -

65. நிலத்தி லேமறைந் தார்சிலர் நீர்நிறை
கலத்தி லேமறைந் தார் சிலர் காமர்வான்
தலத்தி லேமறைந் தார்சிலர் கார்முகிற்
குலத்தி லேமறைந் தார்சிலர் கூடியே

சிலர் நிலத்திலும், சிலர் நீர் நிறைந்த பாத்திரத்திலும், சிலர் அழகிய வானத்தும், சிலர் கரிய மேகக் கூட்டத்திடையும் கூடி மறைந்தனர். - 521 -

66. பிணத்தை யேநிகர்த் தார்சிலர் பீடறப்
பிணத்தி லேகரந் தார்சிலர் பிலக்கிய
நிணத்தி லேகரந் தார்சிலர் நீள்குடற்
கணத்தி லேகரந் தார்சில ரென்செய்வார்.

சிலர் பிணம் போலாயினர்; சிலர் தம் பெருமை ஒழிய, பிணக் குவியலில் ஒளிந்து கொண்டனர்; வெட்டுப் பட்டதால் துண்டுகளாக - திவலைகளாக ஆன நிணத்தில் ஒளிந்து கொண்டனர். மேலும் சிலர் துண்டு பட்டுக் குவிந்த நீள்குடலில் மறைந்தனர். இதுவன்றி வேறு என்ன செய்ய இயலும். - 522 -

67. நான்முக கத்தனை நண்ணின ரோர்சிலர்
மால்ம ருங்கு மரீயினை ரோர்சிலர்
கூன்மு கச்சிலை கொண்டகை வீரனைப்
பான்மை யாற்பணிந் தாரிரு வோருமே.

நான்முகனை அடைக்கலம் புகுந்தனர் ஒரு சிலர். திருமாலை அடைக்கலம் புகுந்தனர் ஒரு சிலர். வளைந்த வில் ஏந்திய வீரபத்திரக் கடவுளை நான்முகனும் திருமாலும் பணிந்தனர். - 523 -

## வேறு

68. *இன்னவா றொருவீரன் றனைக்கொண்டே அமரர் வலி யிறுத்த பின்னர்த்*
*தென்னரா வணிமார்பரிமவரைப் பில்தவம்புரியுந் தேவராத*
*னென்னுமோ ரரைசனுக்குப் படைகடப்பக் கொடுஞ்*
*சிலையை யீந்தா ரிப்பா:*
*லன்னர்நான் முகனேவத் தேவரெலாமரியதவ நண்ணி னாரால்*

இவ்வாறு ஒரு வீரனைக் கொண்டே தேவர்களின் ஆணவத்தைக் கெடுத்த பிறகு, அழகிய பாம்பணி அணிந்த மார்பராகிய சிவபெருமான் இமயமலையில் தவம் புரியும் தேவராதன் என்ற அரசனுக்குப் படைகளை வெல்ல ஒரு கொடுஞ்சிலை தந்தார். பின்னர் நான்முகன் ஏவத் தேவர்கள் அனைவரும் நன்மை பொருந்திய அரிய தவம் மேற்கொண்டனர். - 524 -

69. *அரிதான தவநெடுநா ளாற்றும்அம ரருக்கிரங்கிஅ மல னார்தாம்.*
*பெரிதான வரமளித்துத் தக்கனுக்குத் தகர்த்தலையைப் பிழைப்பக்கூட்டி*
*உரிதான கங்கைநதி தீரத்தில் வானொட்டி யுயர்புன்னாக*
*விரிநீழன் மரத்தடியில் யோகிருந்தா ருயிர்களெலாம் வீடு சேர.*

அரிய தவத்தை நெடுநாள் ஆற்றும் தேவர்களுக்கு மனமிரங்கி, சிவபெருமான் பெரிய வரங்கள் அருளி, தக்கனுக்கு ஆட்டுத்தலையை அவன் பிழைக்கும் வண்ணம் அருளி, கங்கை நதிக் கரையில் வான்தொட்டு உயர்ந்த புன்னாக மரத்து அகன்ற நிழலில் உயிரிகள் வீடு பேறு பெற யோகத்தில் வீற்றிருந்தார். - 525 -

70. *எம்பெருமான் யோகிருந்த காரணத்தை யெடுத்துரைத்தாம்*
*இமையோர்க் கெல்லாம்*
*நம்பியதோர் முகமான வழற்கடவுள் கொடுஞ்சாப நண்ணிப் பின்ன*
*உம்பர்பிரான் றிருவருளால் வில்வவனத் தொழித்துய்ந்த வாறு கேண்மின்*
*பம்பியசீர் முனிவரர்கா ளெனச்சூத மாதவத்தோன் பகர்த லுற்றான்.*

எம் பெருமான் யோகநிலை மேற்கொண்டதைக் கூறினோம். தேவர்கட்கு நம்பிக்கையுடைய முகமாக விளங்கும் தீக்கடவுள் கொடிய சாபம் பெற்றுப் பின்னர், வில்வ வனத்துத்

தேவர்பிரான் திருவருளால் சாபம் தீர்ந்து உய்தி பெற்றதைச், செறிந்த சிறப்புடைய முனிவர்களே கூறுகிறேன் கேளுங்கள் என்று சூதமாதவன் கூறத் தொடங்கினான். - 526 -

மன்மதன் வழிபடுசருக்கம் முற்றிற்று
*ஆகத்திருவிருத்தம். - 526 -*

## அக்கினிசாபந்தீர்த்தசருக்கம்

*1. மலைக்கு மன்னவ னாகிய மதிதவ ழ்இமையச்*
*சிலைக்கு நன்மக ளாகிய தேவிதுன் (பு)அனைத்துந்*
*தொலைக்க வும்சுக மனைத்தையு மாக்கவுந் தொன்றே;*
*நிலைக்கு ம்அன்பனை யடைகுவா னெடுந்தவ ம்உழந்தாள்.*

மலைகளுக்கெல்லாம் மன்னனாக விளங்கும் இமயமலை அரசனின் - இமவானின் - குழந்தையாய்த் தோன்றிய பராசத்தி, தன் துன்பம் அனைத்தையும் தொலைக்கவும், நலம் அனைத்தையும் ஆக்கிக் கொள்ளவும், அநாதியாகவே நிலைத்த அன்பனாகிய சிவபெருமானை அடைய நெடுந்தவம் புரிந்தாள். - 527

*2. அரவு நாண்மதிக் கண்ணியு ம்அணிந்துபுன் னாகம்*
*விரவு நீழலில் யோகிருந் தவர்விளை யாட்டாற்*
*பிரம சாரியாய் பேரழ கெறிக்கும்வேற் றுருவின்*
*வரன்நி லாவிய தவம்புரி சாலையின் வந்தார்.*

அரவும் பிறையாகிய தலைமாலையும் அணிந்து புன்னாக மரநிழலில் யோகநிலை மேற்கொண்ட சிவபிரான், விளையாட்டாக, பேரழகு ஒளிவிடும் பிரமசாரியின் வேறு ஒரு வடிவில் மேன்மை நிலாவிய அம்மையின் தவச்சாலையை அடைந்தார். - 528 -

*3. முஞ்சி நாண்மிசை விளங்கவோர் கலையிடை முயங்க*
*துஞ்சு நூலின்முப் புரியின்மான் தோலுமார் பிலங்கச்*
*செஞ்ச வேறிமிர் பலாசுசெய் தண்டுகை யேந்தும்*
*விஞ்சு நீறுசா தனம்அணி விரதியைக் கண்டாள்.*

அவர் முஞ்சிக் கயிறு விளங்க, ஓர் ஆடையை இடையில் இறுக்க கட்டி, நிலையாகத் தங்கிய முப்புரி நூலில் முடியப்பெற்ற மான்தோல் மார்பில் விளங்க, பலாசு மரத்தண்டு ஒன்றைச் செக்கச் சிவந்த கையில் ஏந்தி, மேலான திருநீறு ஆகிய அடையாளம் அணிந்த நோன்பியாய் வர அம்மை கண்டாள். - 529 -

4. *அன்ப ருக்(கு)இவ ரன்பரென் றகமதித் தெழுந்து*
*மின்பி றங்கிய தாள்மிசை விரைமலர் தூவித்*
*தன்ப சுந்தொடிக் கரங்களைக் கூப்பிமுன் தாழ்ந்திங்(கு)*
*என்படர்ந்தவா றென்றவட் கெம்பிரா னியம்பும்.*

அடியார்க்கு அடியாரிவர் என்று மனதில் மதித்து, எழுந்து, ஒளிவீசும் திருவடியில் மணமலர்த் தூவித் தனது வளையல் அணிந்த கரங்களைக் கூப்பி வணங்கி, திருவடியில் வீழ்ந்து வணங்கி, "எம்பிரானே இங்கு வரக் காரணம் என்ன கூறுங்கள்" என்றாள். *- 530 -*

5. *காரி கைக்கெலாம் ஆமாகர மாய்க்கதி ரெறிக்குஞ்*
*சீரி யைந்தநின் றிருவுரு முழுவதும் வாடத்*
*தாரி யைந்தபூங் குழலினாய் தவம்புரி குவதோ*
*நாரி யைந்தநா யகன்புய நண்ணுவ தொழிந்தே.*

"மாலை சூடிய மென்மையான கூந்தலுடையவளே, மகளிர்க்கு எல்லாம் மேலானவளாய் ஒளிவிடும் சிறப்புப் பொருந்திய உனது அழகிய உருவம் முழுதும் வாடத் தவம் புரிவது ஏன்? அன்பு பொருந்திய கணவன் தோள்களையல்லவா பொருந்தவேண்டும்?" *- 530 -*

6. *அரிய மாதவ மாற்றுவ தறிந்தனங் கயிலைக்*
*கிரியில் வாழ்தருஞ் சூலியைக் கெழுவுதல் வேட்டாய்*
*உரியனோவுன தழகினுக் குஉரகமு மெலும்பும்*
*பெரிய தோலுமிக் கணிந்துபிச் சையில்திரி பித்தன்.*

நீ அரிய பெருந்தவம் செய்வது அறிந்தேன். கயிலை மலையில் வாழும் சூலம் ஏந்தியவனைச் சேர விரும்பினாய், உன் அழகுக்கு நாமே உரியம். பாம்பும் எலும்பும் பெரியயானைத் தோலும் மிக அணிந்து பிச்சை எடுத்துத் திரியும் பித்தனை விரும்பினாய் *- 532 -*

7. *என்று தான்பல பொருளையுந் தொழிலையு ம்இழித்து*
*நின்று கூறியே நிருமல னாகிய விரதி*
*மன்ற யாமுனை யொத்த ம்இளமையால் வளத்தால்*
*ஒன்று மாண்டெழி லாதியா லெமையுறு கென்றான்.*

என்று தனது பல பொருளையும் தொழிலையும் கீழ்ப்படுத்திக் கூறி "அவன் மலமற்றவன் ஆகிய விரதி" என்றபின், "நான் உன்னை இளமையால், வளத்தால், பொருந்திய மாண்பு மிக்க அழகு முதலியவற்றால் ஒத்தவன். எம்மை அடைக" என்றான். *- 533 -*

8. தீயில் வைத்தநெட் டூசிகள் செருகிய தென்ன
நாய கன்கரந் (து)அசதியா டியநறு மொழிகள்
பாயச்செஞ்செவி புதைத்தனள் பதைத்தனள் சிவவென்று
ஆயு மந்திரம் பன்முறை கிளந்துருத் துஅறைவாள்.

சிவபிரான் பரிகாசமாகப் பேசிய சொற்கள், தீயில் காய்ச்சிய நெடிய ஊசிகளைச் செவியில் செருகியது போன்று பாய, தனது அழகிய செவி புதைத்து, பதைத்து, 'சிவ சிவ' என்ற மந்திரத்தைப் பலமுறை கூறிச்சினந்து கூறத் தொடங்கினாள். - 534 -

## வேறு

9. யாவ னொருவன் விளையாட்டா லெல்லா வுயிர்க்கு மைந்தொழிலும்
மேவ வினிது புரிகின்றான் வேதன் முதலோ ரெவனருளாற்
தாவி லதிகா ரம்புரிந்து தக்க ஞான மடைகின்றார்
ஏவ வவனை யென் பொருட்டிங் கிழித்துக் கிளந்தாய் போவென்று.

"யார் ஒருவர் மிக எளிதாக எல்லா உயிர்களிடத்தும் ஐந்தொழிலும் பொருந்த இனிது புரிகின்றாரோ, பிரமன் முதலியோரும் எவன் அருளால் குறைவற்ற அதிகாரம் புரிந்தும் தக்க ஞானம் அடைந்தும் உள்ளனரோ அவனை, நீ என்னை விரும்பி இங்கு இழித்துக் கூறினாய், வெளியேறு" என்று கூறி - 535 -

10. வேற்றோ ரிடத்தை மேவுவாள் விரைந்து நடந்தா ளதுகண்டு
தோற்றா வுருவின் வந்தவர்தாஞ் சிவனா முருவ மிகத்தோற்றி,
மாற்றா முலைமேலுத்தரியம் மருங்கு போந்து பிடித்தீர்த்தார்
ஆற்றா வெகுளி யொடுந் திரும்பிப் பார்த்தாளகில காரணியே.

வேறு ஓர் இடத்தைச் சென்று அடைகின்றவள் போல் விரைந்து நடந்தாள். அதுகண்டு தன் உருவம் மறைத்து வந்த சிவனாகிய பிரமசாரி, தனது உண்மை வடிவான சிவபெருமான் உருவத்துடன் தோன்றி, மேலாடையாக திருமார்பு மறைத்து இருந்த ஆடையை அருகில் வந்து பிடித்து இழுத்தார். அதனால் பொறுக்க முடியாத சினத்துடன் அண்டங்களுக்கெல்லாம் காரணியான அம்மை திரும்பிப் பார்த்தாள். - 536 -

11. செய்ய சடையும் வெண்ணீறுஞ் சிறந்த நுதலுங் கண்மூன்றுங்
கையி லணிந்த மழுமானுங் காகோ தரப்பூண் மணிமார்பும்
வெய்ய புலித்தோலுடையரையும் வேத மணிநூ புரத்தாளும்
ஐயனழகுக் கழகான வங்கமுழுது மெதிர்கண்டாள்.

செஞ்சடை, வெண்ணீற்று அழகிய நெற்றி, முக்கண், கையில் பிடித்த மழுமான், பாம்பாகிய மார்பு அணி, கொடிய சூழும் புலித்தோலாடை உடுத்த இடை, வேதம்சூழும் சிலம்பணிந்த திருவடி. இவற்றுடன் திகழும் ஐயனின் அழகுக்கு அழகான உறுப்பு முழுவதையும் எதிரே கண்டாள். - 537 -

*12. கண்ட பொழுதே பெருங்கோபங் கைவிட் டகலவுள்ளத்துப்*
*பண்டு பயின்ற பெருங்கிழமை படர்ந்து வளர்ந்து கொழுந்துவிடக்*
*கொண்டு வளர்நாண் மடமச்சம் பயிர்ப்பு நான்குங் குடி போக*
*மண்டி யெழுந்த நெடுங்காதன் மருங்கு தெரியா, வகை கரந்தாள்*

கண்ட பொழுதே பெருங்கோபம் முழுதும் நீங்க, உள்ளத்தில் அப்பனின் இடதுபாகம் குடிகொண்டிருந்த பண்டை உரிமை படர்ந்து வளர்ந்து சுடர்விட்டதால், அதுவரை வளர்ந்த நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு நான்கும் வெளியேற, மிக்கு எழுந்த பெருங்காதலை அருகில் உள்ளவர்குத் தெரிதவாறு மறைத்தாள். - 538 -

*13. முழுவதும் உணர்ந்த பேரறிவின் முதல்வன் பாதம் முடிசாய்த்துத்*
*தொழுது விழிநுண் துளிஅரும்பதி துளங்க விடை நாத் தழுதழுப்ப*
*விழும உடலின் மயிர்ப்புளகம் விரவ மிடறறை மகிழ்தூரப்பக்*
*கெழுவும் இனிய குளிர்மொழியால் கிழமை தோன்ற மொழிகுவாள்*

முழுவதும் உணர்ந்த முதல்வன் திருவடிகளில் தலைவைத்து வணங்கி, விழிகளில் மகிழ்ச்சிக் கண்ணீர்த்துளி ஒளிர, விடைகூற வேண்டிய நாத் தழுதழுப்ப, மேலான உடல் மயிர்க்கூச்செறிய, மகிழ்ச்சி, தொண்டையை அடைக்க, பொருந்திய இனிய சொற்களால் உரிமை தோன்றக் கூறினாள். - 539 -

**வேறு**

*14. உறுமுறை யறியார் போல வுத்தர் யத்தைப் பற்றி*
*முறுவலோ (கு)ஈர்த்த நின்றாய் முக்கணா முறைமை யெல்லா*
*நிறுவிய நினக்கு யானு நிகழ்த்துவ துளிதே யீங்கு*
*மிறைவினை புரிதல் வேண்டா விடு விடு மிளிர்பூந் தானை.*

“நடந்து கொள்ளும் முறைமை அறியாதவர் போல், எனது மேலாடையைப் பற்றிப் புன்முறுவலுடன் ஈர்த்த முக்கண்ணனே, நடந்து கொள்ள வேண்டிய முறைகளை நிறுவிய உனக்கு, நான் சொல்ல வேண்டுவன உள. இங்குக் குற்றச் செயல் புரிய வேண்டா. என் மேலாடையை விடு”. - 540 -

15. *மாதரார் வதுவை காறும் வளர்ந்திடுங் குரவர் பாலர்*
*தீதறு வதுவை முற்றின்றிறுத்தகு கணவர் பாலர்*
*காதலர் தமக்குனுப் பின்னர்க் கான்முளைப் பாலரென்றால்*
*னாதனே யெக்கா லத்து முதன்மைநன்மட வார்க் கின்றே.*

“நாதனே, ஒரு பெண் திருமணம் வரை அவளை வளர்க்கும் பெற்றோர்களையும், குற்றமற்ற திருமணம் முடிந்தபின் தெய்வம் ஒத்த கணவனையும், கணவனுக்குப் பின் பிள்ளைகளையும் சார்ந்து வாழ வேண்டியவள். எக்காலத்தும் முதன்மை மகளிர்க்கு இல்லை". - 541 -

16. *கொளற்குரி மரபி னோருங் குரவராற் பெறுவதன்றி*
*வெளிற்றறி வுடையார் போல மிறைசெயல்வழக்க தன்றே*
*பிளிற்(று)இபத் துரிவை போர்த்துப் பிரமனோர் சிரத்தைக் கொய்து*
*களித்தெழு காலனாவி காற்றிய கட வுளேறே.*

“பிளிறும் யானைத்தோல் போர்த்து, பிரமனின் ஒரு தலையைக் கொய்து, உரிய காலம் கணித்து வரும் எமன் உயிரைப் பிரித்த கடவுளே; மணத்தற்குரிய உரிமையுடைய பிள்ளை வீட்டார் பெண்ணின் பெற்றோர் மூலம் பெண் பெறுவரே தவிர, அறிவற்றவர்போல் குற்றச் செயல் புரிவது வழக்கமன்று" - 542 -

17. *அருளிய வடிகள்ஏவகுறுவ ரகிலத் தில்லை*
*பெருமநிற் பெறுதல் வேட் டே பெருந்தவ முழக்கின்றேன்யான்*
*கருணைகைக் கொள்ள வேட் டே காதலித் திருந்தா னெந்தை*
*யிருநில மிழித்துக் கூறுமிதுசெய வெற்றுக் கென்றாள்.*

“அடிகள் அருளும் ஏவலை ஒதுக்குவார் அகிலத்தில் யாரும் இல்லை. பெருமானே உன்னைக் கணவனாகப் பெறவே பெருந்தவம் மேற்கொண்டு துன்புறுகின்றேன் நான். உன் கருணையைப் பெற விரும்பியே என் தந்தையும் அன்புடன் உள்ளான். எனவே பேருலகம் பழித்துக் கூறும் இச்செயல் எதற்கு? வேண்டா" என்றாள். - 543 -

18. *நகைமுகத் திணைய கூறி நறுந்தளிர்க் கரத்தாற் கொங்கை*
*முகைபொதி தானை தன்னை முதல்வனார் கையினீங்கத்*
*தகைபெறப் பற்றி மெல்ல வீர்த்தன ள்தலைவர் தாமும்*
*புகுதக வென்று மெல்ல விட்டனர் கயிலை புக்கார்.*

புன்முறுவல் முகத்துடன் இவ்வாறு கூறி, மணக்கும் தளிர் போன்ற ஒரு கையால் திருமார்பு முகையினைப் பொதிந்து கொண்டு மற்றொரு கையால் சிவபெருமான் கையில் உள்ள ஆடைப் பகுதி நீங்குமாறு தக்கவாறு பற்றி மெல்ல இழுத்தாள். தலைவனும் தக்கவாறு அமைக என்று ஆடையைவிட்டுக் கயிலை அடைந்தார். - 542 -

19. *மேதகு வசிட்ட னாதி விரதிய ரெழுவர் தம்மைக்*
*காதலி ன்நினைத்தா ரையர் கருத்தறிந் தாங்கு வல்லே*
*மாதவர் எழுவர் தாமும் வந்தடி பணிந்து நின்றார்*
*நாதரங் கவரை நோக்கி நகைமுகத் திதனைச் சொன்னார்.*

மேதகு வசிட்டர் முதலிய ஏழு முனிவர்களும் வர அன்புடன் நினைத்தார் தலைவனாகிய சிவபெருமான். அவர் கருத்தறிந்து அவர்கள் விரைந்து வந்து அடிபணிந்து நின்றனர். சிவபெருமான் அங்கு அவர்களை நோக்கிப் புன்முறுவலுடன் பின்வருமாறு கூறினான். - 545 -

20. *பகைக்குடை யாத ஆற்றற் பனிவரைக் (கு)அரையனம்பான்*
*மகட் கொடை நேரும் வண்ண மரபினாற் பேசி நீயிர்*
*தகச்செயும் வதுவை நாளுந் தந்திரத் தாய்ந்து செப்பி*
*அகத்துறுமட வா ரோடு ம்அடுத்(து)இ வண் வருக வென்றார்.*

"நீங்கள், பகைக்குப்பின்னிடாத ஆற்றல் வாய்ந்த இமவானிடம், நமக்கு அவன் தன்மைகளை மணம் செய்து கொடுக்க இசையும் வண்ணம் மரபுப்படி பேசி, தக்கவாறு மணம் செய்யும் நாள் நூல்முறைப்படி ஆய்ந்து கூறி வர, இங்கு அந்தப்புரத்துள்ள மங்கல மகளிருடன் சென்று வாருங்கள்" என்று கூறினார். - 546 -

21. *எம்பிரா னருளிச் செய்ய எத்தவஞ் செய்தாமென்று*
*நம்பிய முனிவர் தாமு நலத்தகு மடவாரோடும்*
*உம்பர்நா டளந்து நிற்கு முயர்வரை யிமையஞ் சார்ந்து*
*வம்பென அடுத்த தங்கள் வரவினைச் செப்பி விட்டார்.* -

"எம்பிரான் அருள எத்தகைய தவம் செய்தோம்" என்று நம்பிய முனிவர்கள் மங்கல மடவாருடன், தேவலோகத்தளவு உயரமான இமயமலை அடைந்து, புதிதாக வந்த தமது வரவைக் கூறியனுப்பினர். - 547 -

22. *செல்லுறு தூத வார்த்தை செவித்துணை நிரம்பலோடு*
*நல்வர வெய்த எந்த நற்றவஞ் செய்தாமென்று*
*கல்வரைக் கரையன் சுற்றக் கணத்தொடுங் களிப்புத் துள்ள*
*வில்வரை யகன்று வல்லெ யெதிர்கொண்டு போயினானே.*

செய்தி கூறச் சென்ற தூதனின் வார்த்தை இரு செவிகளையும் நிரப்ப, இம் முனிவர்களின் நல்வரவு பெற எத்தகைய நற்றவம் செய்தோம் என்று இமவான் மகிழ்ந்து, கூட்டமான சுற்றத்துடன் களிப்புத்துள்ள ஒளியுடைய இமயமலை விட்டு விரைந்து வந்து எதிர் கொண்டு அழைத்துச் சென்றான். - 548 -

23. *பாத்திய மாதி நல்கிப் பயின்மனைக் கொண்டு புக்குத்*
*தூத்தகு பிரசி யிட்டுத் துளக்கற விருத்திச்சால*
*ஏத்தரும் பூசை யாற்றி யிறைஞ்சிமா தவரை நோக்கித்,*
*தேத்தடை சுமந்த கோட்டுச் சிலம் பினுக் கரையன் சொல்வான்.*

கைகால் கழுவ நீர் முதலியன தந்து உபசரித்து, தான் வாழும் அரண்மனைக்குள் அழைத்துக் கொண்டு போய் தூய இருக்கையிட்டு அமரச் செய்து, ஏத்துதற்கு அரிய பூசனைகள் மிகச் செய்து வணங்கி மாதவரைப் பார்த்துத் தேனடை சுமந்த கிளைகளையுடைய மலைக்கு அரசனாகிய இமவான் கூறத் தொடங்கினான். - 549 -

### வேறு

24. *கற்றை வார்சடை யந்தணிர் கண்ணுறு செயலால்*
*விற்றை நாளலா லில்லையா னிரும்பயன் பெறுநால்*
*பெற்ற வான்பொரு ளனைத்தையும் பொருந்தினேன்இன்றே*
*பற்று தூய்மையும் பெற்றுளேன் படர்வினை தவிர்ந்தேன்.*

"கற்றையான நீள்சடையுடைய முனிவர்களே, உம்மைக் கண்டதால் இன்றுபோல் நான் பெரும் பயன் பெற்றநாள் வேறு இல்லை. இன்றே நான் பெற்ற மேலான பொருள் அனைத்தாலும் அடைய வேண்டிய பயனை அடைந்தேன். தூய்மையும் பற்றப் பெற்றுள்ளேன் என்பால் படர் ஊழ் வினை அனைத்தும் நீங்கினேன்" - 550 -

25. *மங்க லத்தன அனைத்திற்கு ஏதுவாய் மலிந்தது*
*உங்க ணல்வர வுறுதவத் தீரும தருளாற்*
*தங்கு கின்றனர் சஇலகா மத்துட னெவரும்*
*இங்கு நுங்களுக் (கு)எய்தவேண் டுவதிலை யேனும்.*

மங்கலங்கள் அனைத்திற்கும் காரணமாக உங்கள் நல் வரவு அமைந்தது. மிக்க தவத்தோரே, உமது அருளால் இங்கு அனைவரும் விரும்பிய பொருளுடன் வாழ்கின்றோம். இங்கு நீங்கள் அடைய வேண்டுவது எதுவும் இல்லை என்றாலும் கூட - 551 -

26. *ஈண்டு நீயிர்வந் தருளிய காரண ம்இயம்ப*
*வேண்டு மால்என விரந்தனன் வெற்பினுக் கரசன்*
*மூண்ட காதலை நோக்கினர் முப்புரம் பொடித்தார்*
*தூண்ட ஏகிய தூதராந் துறவர்அங் குரைப்பார்.*

'நீங்கள் இங்கு வந்தருளிய காரணம் கூற வேண்டுகிறேன்' என்று இமவான் வேண்டினான். அவன் உள்ளத்தில் மூண்டிருந்த பேரன்பை நோக்கி, முப்புரம் பொடி செய்த அச்சிவன் தூண்ட வந்த தூதராகிய துறவியர் கூறலானார். - 552 -

27. *வரைக்கெ லாமொரு மன்னவ மாசறு தவத்தின்*
*நிரைக்கெ லாமொரு பிறப்பிட மாய்நிகழ் பவநின்*
*உரைக்கு வேறெதி ருரைப்பவர் யாவரெம் வரவு*
*தரைக்குள் யாவர்க்கு மங்கலந் தருவதே யாகும்.*

"மலைகளுக்கு எல்லாம் ஒப்பற்ற மன்னவனே, குற்றமற்ற தவத்தின் கூட்டத்திற்கு எல்லாம் பிறப்பிடமாய் விளங்குகின்றவனே; உன் சொல்லுக்கு எதிர் உரைப்பவர் யாருமில்லை. எங்கள் வரவு, உலகில் யாவர்க்கும் மங்கலமே தருவதாகும்". - 553 -

28. *தக்கன் மாமக ளெனப்படுஞ் சதியெனுந் தலைவி*
*தக்கன் வேள்வியி லுட லினைத் தணந்துவந் துனக்குத்*
*தக்க மாமக ளாயவ தரித்தன ள்தவத்திற்*
*தக்கன் வேள்வியை யழித்தபின் றலைவனு மிருந்தான்.*

"தக்கனது சிறந்த மகளாகிய சிவபெருமானின் சதி என்ற மனைவி, தக்கனின் வேள்வியில் தனது உடலை வெறுத்து (தீக்குளித்து) வந்து உனக்குத் தக்க மகளாய்த் தோன்றியுள்ளாள். தக்கன் வேள்வியை அழித்த பிறகு தலைவன் தவம் மேற்கொண்டான்" - 554 -

29. *மலைக்கெ லாமொரு மன்னநின் மகள்அவண் மேருச்*
*சிலைக்கை நாதருக் கேதிரு மனைவியாங் கிழமை*
*நிலைக்க நோற்றனள் பிறவிக தொறுநிகழ் தவத்தால்*
*நலக்க ஈசனே மருகனா நற்பயன் பெற்றாய்*

"மலைகட்கு எல்லாம் ஒப்பற்ற மன்னவனே, நின்மகட்கு அங்கு மேருமலையை வில்லாக ஏந்தியவருக்கே மனைவியாகும் உரிமை நிலைக்க பிறவிகள் தோறும் நிகழ்ந்த தவப்பயனால் நோன்பு இயற்றினாள். இதனால் நல்லன எல்லாம் எய்த நீ ஈசனை மருமகனாகப் பெறும் பேறு பெற்றாய்" - 555 -

30. என்று மாதவர் கூறலு ம்இமவரைக் கிழவன்
நன்று கூறுவான் நான்மறை முனிவிரென் மகளைக்
கொன்றைமாலையார்க் குஉரியளாம் படிக்கூறித் தமையான்
மன்ற லோதியின் மாதவப் பயனுமுற் றியதே

என்று மாதவத்தோர் கூற இமவான் "நான்மறை வல்ல முனிவர்களே, என்மகளைக் கொன்றை மாலை சூடியவர்க்கு உரிய மனைவியாகும்படி நீவிர் கூறியதால், மணம் மிக்க கூந்தலுடைய அவளது மாதவப் பயனும் நிறைவு பெற்றது" - 556 -

31. காளி யோடுவா தாடினார் கடல் நெடும் பாயல்
வாளி தூண்டினார் தமக்கியான் மகட் கொடை நேர்ந்தேன்
ஆளு நாயகர் வரைந்திட வருகவென் றறைந்தான்
கோளி லாவெழு முனிவருங் கொண்டனர் மகிழ்ச்சி

"காளியுடன் சபதம் செய்து வாதாடியவரும், திருப்பாற்கடலில் பள்ளி கொண்டவரை அம்பாகக் கொண்டு செலுத்தியவரும் ஆகிய சிவனுக்கு நான் மகளைக் கொடுக்க இசைந்தேன். எம்மை ஆளும் அந்த நாயகர் மணந்திட வருக" என்று இமவான் கூற, தீமையில்லாத ஏழு முனிவரும் மகிழ்ச்சி கொண்டனர். - 557 -

32. ஆய செவ்வியி னருந்ததி யாதியோர் மலைக்கு
நாய கன்தனி மடித்தலத் திருத்து நாணெய்தித்
தூய தன் முகங் கவிழ்ந்துகைத் தொடிகளை யெண்ணும்
தாயை யன்பினாற் கொண்டுதம் மடித்தலத் திருத்தி.

இமவான் மடியில் அமர்ந்திருந்து, முனிவர்களும் தன்தந்தையும் கூறியன கேட்டு மகிழ்ந்து நாணமடைந்து, தூய தனது திருமுகம் கவிழ்த்துத் தன் கைவளையல்களை எண்ணிய அண்டத்துத்தாயை, அருந்ததி முதலியோர் அப்போது அன்புடன் அழைத்துச் சென்று தமது மடியில் இருத்தி, - 558 -

32. சந்த னங்கமழ் குங்குமம் கனிகள்தாம் பூலம்,
கொந்த லர்த்தொடை மங்கல வாழ்தொடுங் கொடுத்தார்
மந்தி ரத்(து)அரி யிட்டு மாதவர்மறை மொழிந்து
சுந்த ரத்தநீ ராஞ்சனம் சுழற்றுவித் தனரால்.

அவருக்குக் கமழும் சந்தனம், குங்குமம், கனிகள், தாம்பூலம், கொத்தாக மலர்ந்த மலர் மாலை முதலியனவற்றை மங்கல வாழ்த்துடன் தர, மாதவர்கள் மறைஓதி மந்திரம் கூறி நெல் தூவிய பின் தூய இரத்தம்போல் சிவந்த நீராரத்தி சுழற்றச் செய்தனர். - 559 -

*34. சுற்ற நாப்பண்இவ் வாறுபூந் தோகைஅன் னவளைப்*
*பற்ற லார்புரம் பொடித்தவர் பாலள்என் றுரிமை*
*முற்ற ஆக்கிய முனிவரர் கையுறை முகந்(து)அங்(கு)*
*உற்ற சீர்இம வான்விடை கொண்டுடன் பெயர்ந்தார்.*

சுற்றத்தார் நடுவில் இவ்வாறு மென்மையான மயில் ஒத்தவளை, பகைவரின் முப்புரம் பொடி செய்தவர்க்கு உரியவள் என்று முழு உரிமையுடையவளாக்கிய முனிவர்கள் இமவான் தந்த கையுறை மிகக் கொண்டு இமவானிடம் விடை பெற்றுப் புறப்பட்டனர். - 560 -

*35. வெள்ளிமால் வரை யடுத்தனர் விமலனே உமையாள்*
*கள்ளு லாமர்க் கூந்தலிற் கடுக்கைவான் தொடையன்*
*நள்ளு நீர்மைசெய் திடுவதே யினிநடப் பஃதென்(று)*
*உள்ள நீர்மையை யுரைத்தன ரொருபுடை நின்றார்.*

கயிலையை அடைந்தனர் "விமலனே, உமையவளின் தேன் பொருந்திய மலர் சூடிய கூந்தலில் மேலான கொன்றை மாலையணிந்தவர் கணவனாகும் திருமண உறவினைச் செய்வதே இனி நடப்பதாகும்" என்று எஞ்சிய நிலைமையைக் கூறி ஒருபால் நின்றனர். - 561 -

*36. கருணை நோக்கமும் வரங்களுங் காசறு முனிவர்க்(கு)*
*அருளி நாயகன் திருமுக ம்அனைவரும் வருமா*
*பொருளில் பூதர்கைக் கொடுத்தனர் போக்கின ரேற்று*
*மருவு மோகையின் வணங்கியா வரும்வழிக் கொண்டார்.*

தலைவன், தனது கருணைப் பார்வையையும் வரங்களையும் முனிவர்கட்கு அருளினான். தலைவனது திருமணத் திருமுகத்தை அனைவரும் வருமாறு கொடுக்க, ஒப்பற்ற பூதர் கையில் கொடுத்து அனுப்பினர். அதனை வணங்கி ஏற்று உவகையுடன் அனைவரும் புறப்பட்டனர். - 562 -

*37. அண்ட மீமிசை அமர்தரு வீரபத் திரனும்*
*பண்டு நாரணன் வெரிந்எலும் பெடுத்தபண் ணவனுங்*
*கொண்டல் மேனியனன் குவிமுலை மாதொனப் போதக்*
*கண்டு காதலித் தஇறையவ னுயிர்த்தகா தலனும்.*

தலை ஓடுகளின் மேல் அமர்ந்த வீரபத்திரக் கடவுளும், முன்பு திருமாலின் முதுகெலும் பெடுந்தவனும், திருமால் குவிமுலை மோகினியாக வந்தபோது கண்டு காதலித்துப் பெற்ற அரிகரபுத்திரரும், - 563 -

38. பாத லத்தமர் காலவங் கிப்பெயர்ப் பரம
நாத ன்நாட கேச் சுரன்நவைய றுக்குங் கூர் மாண்டார்
ஓது ருத்திரர் பதினொரு வரும்உ லப் பில்லாப்
பூத ரோடுசென் றிறுத்தனர் புண்ணியன் கயிலை.

பாதாளத்து அமர்ந்த கால அங்கிப் பெயர் பெற்ற பரமநாதன், நாடகேச்சுரன், குற்றம் தீர்க்கும் கூர்மாண்டர், கூறப்பெறும் பதினோரு உருத்திரர்கள் முதலியோர் அளவற்ற பூதப் படைகளுடன் சென்று புண்ணியனின் கைலையில் தங்கினர். - 564 -

39. தேவர் முப்பத்து மூவரே திகழ்கணம் மூவா(று)
ஓவி னாற்பத்தெண்ணாயிர முனிவர்வுாண் சுமலன்
பூவை நேர்நிறத் தவன்முத ல்அனைவரும் போந்தார்
சேவின் மேலெழுந் தருளினார் திரிபுர தகனர்.

தேவர் முப்பத்து மூவகையினர், விளங்கும் பதினெண்கணம், கவலையில்லாத நாற்பத் தெண்ணாயிரம் முனிவர்கள், ஒளி பொருந்திய சுமலன் ஆன நான்முகன், குயிலின் கருநிறம் கொண்ட திருமால் முதலிய அனைவரும் வந்தனர். விடைமேல் முப்புரம் எரித்தவர் எழுந்தருளினார். - 565 -

40. முரசம்ஆர்த்தன வால்வளை நரன்றன முகிலின்
பிரசன மாமலர் வானவர் சொரிந்தனர் பெயர்ந்தார்
விரைசெய் சாமரை யாதிகள் மிடைந்தன விலங்கற்(கு)
அரச னாகிய இமவரை யடுத்தன ர்அமலர்.

முரசுகள் முழங்கின, தூய வெள்ளிய சங்குகள் முழங்கின. மழைபோல் தேவர்கள் மணம்மிகு தேன் துளிக்கும் மலர்களைச் சொரிந்து வந்தனர். வெண்சாமரை முதலியன நெருங்கின. அனைவரும் மலைகட்கு எல்லாம் அரசனாகிய இமயமலையை அடைந்தனர். - 566 -

41. கயிலை நாயக ர்அடுத்தமை யறிந்துகல் அடுக்கம்
பயிலு ம்ஓங்கன்மன் னவன்பல வரிசைக ளோடும்
எயில்கொள் மாநகர் கடந்துபோ யெதிர்கொண்டு வணங்க
அயில்கொள் சூலத்த ரருள்புரிந் தேற்றினின் (று)இழிந்தார்.

சிவபெருமான் எழுந்தருளியதை அறிந்து, இமயமலைவாழ் இமவான், பல சீர்வரிசைகளுடன் மதில் கொண்ட மாநகர் கடந்து வந்து எதிர் கொண்டு வணங்க, கூர்மையான முத்தலைச்சூலம் ஏந்தியவர் அருள்புரிந்து விடையூர்தியிலிருந்து இறங்கினார். - 567 -

42. *அரிய மாதவம் பேணிய வடுக்கலுக் கிறைவன்*
*உரிமை யாக்கரம் நீட்டினன் உலகெலா முயிர்த்த*
*பெரிய நாயகர் தம்கையா லவன்கரம் பிடித்துத்*
*தெரியு மாமறைப் பாதுகை சேவடி தொடுத்தார்.*

அரிய மாதவம் செய்த இமவான் உரிமையோடு கைநீட்ட, உலகெலாம் பெற்ற பெருந்தலைவர் தம்கையால் அவர்கரம் பிடித்து, மாமறைகள் ஆராய்ந்து கொண்டிருக்கும் தமது சிவந்த திருவடிகளில் பாதுகை அணிந்தார். - 568 -

43. *கள்ள ள்அம் புதார்க் கொன்றைவார் சடைமிசைக் கதிர்ப்ப*
*மெள்ள அங்கெழுந் தருளிவிண் தொடர் வரைக் கிறைவன்*
*னுள்ள ம்வுத்தபொன் மனையகத்(து)உ வப்பொடு சேர்ந்தார்*
*கொள்ளு நீர்மையிற் பூசனை குயிற்றின இமவான்.*

தேன் ததும்பும் கொன்றை மலர்மாலை சடைமேல் ஒளிவிட, மெள்ள அங்கிருந்து புறப்பட்டு விண்தொடும் இமயமலை அரசனாகிய இமவானது உள்ளம்போல் அழகிய மனையை மகிழ்வுடன் அடைந்தார். அவரை ஏற்றுக் கொள்ளும் இயல்பில் இமவான் அவர்க்குப் பூசனை புரிந்தான். - 569 -

44. *புதிது கோடித்த வதுவைமண் டபத்திடைப் போந்து*
*மதிநி லாவிய முடி யினார் மணித்தவி சிருந்தார்*
*விதியி னால்இம வான் வெறி கமழ்புன லோடும்*
*உதவினா ன்உல கனைத்தையு ம்ஈன்றகன் னியையே.*

புதிதாக அணி செய்யப் பெற்ற மண்டபத்திற்கு வந்து, பிறை சூடியவர் அழகிய இருக்கையில் இருந்தார். இமவான் விதிப்படி மணக்கும் நீர் அட்டிவார்த்து உலகனைத்தையும் ஈன்ற கன்னியாகிய அம்மையைத் தந்தான். - 570 -

45. *ஏற்று வார்கொடி நாயக ர்ஏற்றுமா முனிவர்*
*தோற்று தீயிடை முடித்திடும் வினையெலாந் துலங்க*
*ஆற்றி வானவ ராதியோர்க் கருள்விடை கொடுத்துப்*
*போற்று மா(து)உ மை யாளுடன் புணர்ந்துவீற்றிருந்தார்*

விடைக் கொடித் தலைவர் அம்மையை ஏற்று சிறந்த முனிவர்கள் ஆக்கிய தீயின்கண் செய்ய வேண்டியன அனைத்தையும் முடித்து, தேவர் முதலியோர்க்கு விடையளித்து, போற்றப் பெறும் உமையாளுடன் கூடி வீற்றிருந்தார். - 571 -

46. துன்ப முற்றிய வுலகிலிற் றொல்லுயி ரனைத்தும்
இன்ப முற்றுற இமயவரைக் கோயிலின்இருந்தே
அன்பு முற்றிய அம்மையோ டருகுஅபெருங் கலவி
முன்பு துய்த்தறி யாதவர் போல் முயக் கமர்ந்தார்.

துன்பம் மிக்க உலகில் தொன்மையான அனைத்து உயிர்களும் முழுமையான இன்பம் பெற, இமயமலை அரண்மனையில் இருந்தே அன்பு முற்றிய அருளுடைய அம்மையோடு, முன்பு கலவிக்கு நெருங்கி யறியாதவர்போல், அருட் பெரும் கலவி முயக்குக் கொண்டார். - 572 -

47. தேவ ராண்டினு ளோராயிரங் கலவியாற் சென்றும்
காவி நேர்விழி யாளிடைக் கருத்தரித் திலதால்,
பூவின் மாதர்க்குக் கணவனார் புணர்ச்சியாற் கருத்தால்
நோவு றாவர முறாதமுற் காலமா தலினால்.

பூவுலக மாதர்க்குக் கணவனின் புணர்ச்சியாலும், உறுதியான கருத்தாலும் கருத்தரித்தலும் நோவும் உறாதவரம் பெறாத முற்காலமாதலால், தேவர்களின் ஆண்டுகளில் ஓராயிரம் ஆண்டு சென்றும் கருங்குவளை மலர் ஒத்த அம்மைபால் கருத்தரிக்கவில்லை. - 573 -

48. கடவு ளாரஃ தறிந்தனர் கண்ணுதற் பெருமான்
விடல்இ லாமுயக் கமர்தலின் மென்கொடி யவள்பால்
இடரெலாந்தபுங் கருத்தரித் திலதுஎவன் செய்வாம்
உடலுந் தானவர்க் கழிந்தயா மெனவுயங் கினரால்.

நான்முகன் திருமால் முதலிய பிற கடவுளர் அதனை அறிந்தனர்; நுதற்கண்ணார் இடைவிடாத முயக்கு மேற்கொண்டிருத்தலால் அம்மைபால் நம் துன்பங்களை ஒழிக்கும் கருத்தரித்திலது; பகைத்த அசுரர்களால் அழியும் நாம் என்ன செய்வோம் என்று வருந்தினர். - 574 -

49. நீறு துன்றிய மேனியார் நிகழ்த்திடுங் கலவிக்(கு)
ஊறு செய்யினல் லால்உமை யாள்கருத் தரியாள்
வேறு மந்திர மின்றென விண்ணவர்க் கரசன்
கூற லுற்றனன் றேவர்கள் குழாத்தினை நோக்கி.

வெண்ணீறு செறியப் பூசியவர் நிகழ்த்தும் நீங்காக் கலவிக்கு இடையூறு செய்தாலல்லாமல் உமையவள் கருத்தரியாள். இதனைத்தவிர வேறு மந்திரம் இல்லை என்று தேவேந்திரன், தேவர் கூட்டத்தை நோக்கிக் கூறத் தொடங்கினான். - 575 -

50. *இமைய மால்வரைக் கோயிலி னெம்பிரான் கலவி*
*உமையொ (டு) ஆட்டயர் தொழிலினை யொழிப்பயான்உ றுவ*
*அமைவ தேயல தென்(று)எனை யகற்றினீ ரமரீர்*
*நுமைய லால்இனி யாரெனத் தனித்தனி நுவல்வான்.*

"இமயமலை அரண்மனையில் உமையாளுடன் எம்பிரான் நிகழ்த்தும் கலவி விளையாட்டுச் செயலை ஒழிக்க நான் செல்வது கூடாது என்று என்னை அகற்றினீர்கள். தேவர்களே இனி நும்மையல்லால் இதற்கு உரியவர் யார்" என்று கூறித் தனித்தனியே ஒவ்வொருவரையும் கேட்டான். - 576 -

## வேறு

51. *தருமனைக் கூவினன் சார்ந்து போற்றினான்*
*இருநிலத் (து)எங்கணு மியங்கு ம்ஆற்றலை*
*கருவினுள் உயிரையும் பிரிக்குங் காட்சியை*
*நிருமலன் கலவியை நீக்கு கென்றனன்.*

எமதருமனை அழைத்தான். அவன் வந்து வணங்கினான். "பேருலகில் நீ எங்கும் இயங்கும் ஆற்றலுடையவன்; கருவில் இருக்கும் உருவையும் பிரிக்கும் அறிவு உடையவன்; சிவபெருமானின் கலவியை நீக்குக" என்றான். - 577 -

52. *காலன் நான்உ னுயிர்க்கெலாங் காதி என்னையுங்*
*காலகா லப்பெயர் கலந்து ளான்அவன்*
*கோலமார் அடியெதிர் குறுக வல்லனோ*
*மாளுவேன் யானென மறலி நீங்கினான்*

காலன், "நான் உயிர்களை எல்லாம் கொல்கின்றவன்; என்னையும் கொன்று சிவபெருமான் காலகாலன் என்று பெயர் பெற்றவன். அத்தகு அழகிய அவனை நான் நெருங்கும் வல்லமையுடையவனோ. எனவே கண்டதுமே மயங்கிவிடுவேன்" என்று கூறி நகர்ந்தான். - 578 -

53. *வருணனைக் கூவினன் வந்து தாழ்ந்தனன்*
*இருநிலத் (து)அருநெறியிடத்துஞ் செல்லுறும்*
*பெருவலி யினைபெயர்ந் (து)அமலன் பேணிய*
*திருவிளை யாடலைச் சிதைக்க என்றனன்.*

வருணனை அழைத்தான். அவன் வந்து வணங்கினான். "பேருலகில் அரிய வழியிலும் கூடச் செல்லும் பெரிய ஆற்றலுடையவன் நீ; நீ சென்று அமலனின் திருவிளையாடலை - புணர்ச்சியைச் சிதைப்பாயாக" என்றான். - 579 -

*54. கீழுறு நடை எனக் கன்றிக் கேடி லாய்*
*மேலுறு நடையிலை விலங்கல் மேலுளான்*
*வாழிஅன் னவனடி மருவு மோர்முனிக்*
*கேலுந் வடங்கினே னென்செய் வேனென்றான்.*

'கேடில்லாதவனே; கீழ்நோக்கிப் பாயும் ஓட்டமன்றி மேல்நோக்கி ஏறும் ஓடும் நிலை எனக்கில்லை. சிவபெருமானோ மலைமேல் உள்ளான். அவன் திருவடி பொருந்தும் அகத்திய முனிவர் என்னைப் பருகியதால் அவருக்குப் பொருத்தமுற அடங்கியவன்நான்; என் செய்வேன்;' என்று புறப்பட்டான். - 580 -

*55. வளிமுகம் நோக்கினன் வணங்கி நிற்றலுங்*
*களிசெய்யுந் தெர் அன்னலாய்க் கலவி யாளர்உம்*
*அளிசெயத் தவழுறு மாற்றல் வல்லைநீ*
*ஒளிவிழிச் சிவனிடை யுறுக வென்றனன்.*

காற்றுக் கடவுளை நோக்கினான். அவன் வணங்கி நிற்க, "களிப்பூட்டும் தென்றலானவனே; கலவி செய்வோர்க்கு நீ கருணை செய்யும் வகையில் பையத் தவழ்ந்து செல்லும் ஆற்றலில் வல்லவன் ஒளிபொருந்திய விழிகள் கொண்ட சிவனிடம் நீ செல்க" என்றான்.- 581 -

*56. விலங்கிய கதியெனக் கலது விண்டொடும்*
*விலங்கலி ன்ஏறுதன் மேவு மோவவன்*
*அலங்கலென் றணிந்திடு ம்அராவொன் றுண்ணுமே*
*கலங்குமென் அறிவெனக் காற்று நீங்கிற்றே*

எந்த ஒரு பொருளையும் விலகிச் செல்லும் இயக்கமே உடையவன் நான். என்னால் வானளாவிய மலைமேல் ஏறுதல் பொருந்துமோ. அந்தச் சிவன் தோள் மாலை என்று கூறுமாறு அணிந்துள்ள அரவு ஒன்றே என்னை உட்கொண்டுவிடும். அதனால் என் அறிவு கலங்குகிறது என்று காற்றுக்கடவுள் நீங்கினான். - 582 -

*57. வடதிசைத் தலைவனை யழைத்து மானவ*
*உடலினு முயிரினுக் குவப்புச் செய்பவன்*
*கடனறி தோழன்அக் கடமை பூண்டுளை*
*விடம்நுகர் தலைவனை மேவு கென்றனன்.*

குபேரனை அழைத்துப்,பெருமை யுடையவனே; உடலுக்கு மகிழ்ச்சி யூட்டுகின்றவரை விட, உயிர்க்கு மகிழ்ச்சியூட்டு கின்றவனே தமது கடமையறிந்த நண்பன். அத்தகு கடமை பூண்டவன் நீ. நஞ்சுண்ட தலைவனிடம் சென்று வருக என்றான். - 583 -

*58. நல்லைமன் முன்னர்அண ங்கை மெய்யுறப்*
*புல்லுதல் கண்டொரு பூங்க ண்அற்றதே*
*எல்லுறு விழியையு ம்இழப்பச் சூழ்ந்தனை*
*ல்லுவ தன்றெனக் குபேர ன்ஓதினாள்*

"நல்லது. முன்பு அவன் உமையவளை இறுகத் தழுவியதைக் கண்டதால் எனது ஒரு பொலிவு உடைய கண் ஒளி போனது. ஒளி பொருந்தியுள்ள மற்றொரு கண்ணையும் நான்இழக்குமாறு சூழ்ந்தாய். நீ கூறியபடி நடக்க இயலாது"என்று குபேரன் மறுத்தான். - 589 -

*59. பருதியை யழைத்தனன் பயிலுங் கண்ணென*
*மருவினை அரற்கொரு வடிவு மாயினை*
*கருமநற் (கு)அரியைவீழ் கரும் முற்றுறப்*
*பொருவிலி கலவியைப் போக்கு கென்றனன்.*

ஞாயிற்றை அழைத்தான்; "நீ சிவனுக்குப் பயில்கின்ற வலது கண்ணாக ஆகி அவனது வடிவில் ஒரு உறுப்பும் ஆனவன். செயற்படுவதில் நன்கு செயற்படும் அரியன் நீ. நாம் விரும்பும் காரியம் முடிய ஒப்பற்றவன் கலவியைப் போக்கு" என்றான். - 585 -

*60. கபோத ஞாயமே கடுப்பப் பல்லெலாஞ்*
*சபாஅலலங் காரமின் றாகத் தாக்கினான்*
*அபாயமுற் றதையறி யென்று வாய்திறந்து*
*உபாய மோடொழிந்தன னொற்றை யாழியான்.*

"கபோத நியாயம் போல, தக்கன் வேள்விக்குச் சென்றதால் பிறர்பட்ட துன்பம்போல என்பற்கள் எலாம் தகர்க்கப் பெற்று, ஒரு சபைக்கு அலங்காரமின்றிச் செல்லுமாறு தாக்கினான். நான் துன்புற்றதைக் காண்க" என்று தனது வாய்திறந்து காட்டித் தந்திரமாக அங்கிருந்து சென்றான். ஒற்றைச் சக்கரத்தேருடைய பகவலன். - 586 -

*61. திங்களைவிளித்தனன் சிரத்தி ன்நாயகன்*
*மங்கையைப் புணர்த்திடு மகிழ்ச்சி வேலையும்*
*தங்குதற் குரியைஅத் தையல் பாலுறும்*
*அங்கணன் கலவியை யகற்றென் றேவினான்.*

சந்திரனை அழைத்தான். "மறைகளின் உச்சியான உபநிடதத் தலைவன் உமையம்மையைப் புணர்கின்ற மகிழ்ச்சிப் பொழுதிலும் அவனைப் பிரியாது தங்குதற்கு உரியவன் நீ. உமையவளோடு அவன் கொண்டுள்ள கலவி அகற்று" என்று ஏவினான். - 587 -

62. சாய்ந்தவேள் வியில்அவன் காலி னால்முகந்
தேய்ந்துளே ன்நினைதொறுஞ் சிந்தை மாழ்குமே
வாய்ந்தவோர் கலைமுடி வாங்கி வீழ்க்குமேல்
வீந்ததே பெயருமென் றுஇந்து விண்டதே.

"சிவன் சினந்த தக்கன்வேள்வியில், வீரபத்திரனது கால்களால் என்முகம் தேய்ந்து உள்ளேன். இதனை நினைக்குந்தோறும் என் சிந்தை மயங்கும். எஞ்சியிருக்கும் ஒற்றைக் கலையோடு கூடிய என்னைத் தனது தலையிலிருந்து அவன் எடுத்து வீசி எறிந்தால் என் பெயரும் அழிந்தது" என்று சந்திரன் கூறினான். - 588 -

63. எண்மராம் வசுக்களு ள்ஈற்றி னின்றவன்
அண்முசா வித்திர னென்று மாண்டகை
வண்மையோ டாங்கெதிர் மருவி னான்றனைப்
பெண்மையா ல்இறைவனைப் பிரியென் றேவினான்

வசுக்கள் எட்டுப்பேரில் இறுதியில் நெருங்கி நின்றவனாய் வன்மையுடன் எதிர் வந்த சாவித்திரன் என்ற சிறந்தவனை, "உமையவளிடம் கொண்ட முயக்கிலிருந்து இறைவனைப் பிரி" என்று ஏவினான். - 589 -

64. அற்றன அதரமோ டாங்கு வார்மயிர்
மற்றவை முளைத்தில மான மந்நீத்தமை
சற்றுநீ புணர்ந்திலை யென்று தன்மையோ(டு)
உற்றா வித்திர ன்உரைத்து நீங்கினான்.

"தக்கன் வேள்வியில் இழந்த என் உதடும் அங்கு முளைத்திருந்த நீண்ட முடியும் இன்னும் முளைக்கவில்லை. நான் மானமழிந்ததைச் சற்றும் நீ நினைத்திலை" என்று தன்மையுடன் கூறி எதிர் வந்த சாவித்திரன் நீங்கினான். - 590 -

64. விண்ணுளார் தமையெலாம் வேறுஇல் வாறுகூ
அண்ணலார் கலவியை யகற்றென் றேவினான்
ஒண்ணுறா தெனஅவர் ஓழிவு சொற்றபின்
வண்ணவான் றழவினை வருவித் தோதுவான்.

தேவர்கள் அனைவரையும் வேறுவேறாக அழைத்துத் தலைமை சான்ற பெருமான் கலவியை அகற்றுக என்று ஏவினான். "எம்மால் இயலாது" என்று அவர்கள் தம் இயலாமை சொன்னபிறகு, அழகிய மேலான தீக்கடவுளை அழைத்துப்பின் வருமாறு கூறினான். - 588 -

## வேறு

66. *செவ்விய தேவர்க் கெல்லாந் திருமுக மாகி என்று*
*அவ்விய கவ்வி யங்க ள்அமரர்கள் பிதிரர்க் கெல்லாந்*
*துவ்வென வுதவு ம்ஆண்மைத் தோன்றற்குச் செல்லா ணாமை*
*எவ்விட முளது மன்ற வெளிதன்றே யாங்குஞ் சேறல்.*

“செம்மையான தேவர்களுக்கு எல்லாம் திருமுகம் ஆகி, எக்காலத்தும் தேவர்க்கு இடும் அவிப் பலியையும், பிதிரர்க்கிடும் பிண்டம் அனைத்தையும் அவரவர்களுக்கு உதவும் ஆண்மையுடைய ஆண்களில் சிறந்த நீ செல்ல இயலாத இடம் ஏதுமில்லை. நீ எங்கும் எளிதில் செல்லத் தக்கவன் என்பது உறுதி”. - 591 -

67. *வடவையா ய்உதரத் தீயாய் மண்ணிடைப் பாகஞ் செய்யுஞ்*
*சுடர்விடு மெரியாய்த் தோலா வேதியர் நிச்ச மோம்புங்*
*கடவுளந் தழலாய் வேள்விக் காமரு கனலா யார்க்கும்*
*அடைவுற வுதவி செய்த னீயலா ல்அகிலத் தியாரே.*

“வடவைத்தீயாய், பசித்தீயாய், இவ்வுலகில் பொருட்களைப் பக்குவப்படுத்தும் தீயாய், தோல்வியறியா வேதியர்கள் நாடோறும் பேணும் கடவுள் தழலாய், விரும்பத்தக்க வேள்வித் தீயாய் அனைவர்க்கும் முறைப்படி உதவுவதில் உன்னைத் தவிர இவ்வுலகில் வேறு யாருளர்?” - 593 -

68. *சூரனால் வருந்தா நின்ற துன்பம்நா மொழியும் வண்ணம்*
*ஊரரா வணியான் மைந்த னொருவனைத் தருதல் வேண்டுங்*
*காரளாங்குழஉ லோ டோவாக் கலவி செய்கின்றதீராற்*
*சீரளாங் கருவின் றாயே சென்றன திங்க ளெல்லாம்.*

“அசுரனால் வருந்துகின்ற நம் துன்பம் ஒழிய, ஊர்ந்து செல்லும் அரவினை அணிகலனாகக் கொண்டவன் மகன் ஒருவனை அருள வேண்டும். அவன் மேகம் பொருந்தியது போன்ற கரிய கூந்தலுடைய உமையவளுடன் இடைவிடாத கலவி செய்வதால் சிறப்புப் பொருந்திய கரு அமையாமலேயே திங்கள் எல்லாம் கழிந்தன” - 594 -

69. *தேக்கிய நறுந்தேன் கோட்டுச் சிலம்பிடைச் செல்லுமாற்றல்*
*மேக்குறு கதியை வல்ல விளங்கழல்நினக் கேயல்லான்*
*மாக்கட ல்அமுத முண்ணவாது செய்அமரர்க் குண்டோ*
*பாக்கிய மனையா ஆங்குப் படர்மதி படர்த லோடும்.*

மணம் மிக்க தேனைப் தேக்கிய அடைகள் கொண்ட சிகரங்களையுடைய மலையில் ஏறிச் செல்லும் ஆற்றல் மேல்நோக்கி எரியும் வழியறிந்த உனக்குத்தான் உண்டே தவிரப் பாற்கடல் அமுதுண்ண வாது செய்த தேவர்களுக்கு இல்லை. நற்பேறாக விளங்குகின்றவனே, சிவபெருமான் பால் செய்க; சென்றது. - 595 -

*70. உம்பரார்க்குதவிசெய்ய உற்றனை யென்று தேர்ந்தே*
*எம்பிரான் கலவி நீங் கும்இம்மென வவனைச் சார்ந்து*
*தம்பிரான் சொரூபா நந்த தத்துவ ம்அருளென் றேத்து*
*நம்பிரா னதனையுண்டே நாள்பல கழிக்கு மன்றே.*

"தேவர்களுக்கு உதவவே நீ வந்துள்ளாய் என்று தெளிந்து எம்பிரான் கலவி நீங்குவான். நொடிப்பொழுதில் விரைந்து அவனை நெருங்கிச் சென்று தனக்குத்தானே பிரான் ஆனவனே - ஞானியே - நீ உனது, உண்மையுருவாகிய ஆனந்த தத்துவ நிலையை அடைந்தருள்க என்று ஏத்துக. நம் தலைவன் உன் வேண்டுகோளை மனத்தில் கொண்டு அந்நிலையில் நாள் பல கழிப்பானல்லவா?" - 596 -

*71. காலம் நீட்டிப்ப ஆங்கே கவுரிபால் கருப்பம் நீடிச்*
*சாலநாம் உய்யும் வண்ணம் தனிஇளங் குமரன் தோன்றும்*
*ஞாலம்மேல் இடர்இன்றாகும் நன்மையும் உண்டாம் இந்தச்*
*சீலமார் உதவிசெய்யச் செல்மதி என்றான் வேந்தன்.*

"காலம் நீட்டித்தலால், அப்போது உமையவள்பால் கருப்பம் நிலை பெற்று நாம் அனைவரும் உய்யும் வண்ணம் ஒப்பற்ற இளங்குமரன் தோன்றுவான் உலகில் துன்பங்கள் ஒழியும்; நன்மையுண்டாகும், இந்த அறநெறிபொருந்திய உதவி செய்யச் செல்க" என்றான் இந்திரன். - 597 -

*72. செந்தழற் பெருமான் கேட்டுத் தேவர் கோன்முகத்தை நோக்கி*
*உய்ந்தன ருளரோ முக்க ண்ணுருவனுக் குறாத நாற்றி*
*ஐந்தல ரேவி வீந்த அவனுக்குந் துணைமையானே*
*சிந்தனை வேறொன் றில்லையென் றுபின் தெளிந்து சொல்வான்.*

'செந்தீக்கடவுள் இதனைக் கேட்டு இந்திரன் முகத்தைப் பார்த்து, ஒப்பற்ற முக்கண்ணனுக்குப் பொருந்தாதது செய்து பிழைத்தனர் உளரோ? இல்லை. ஐவகை மலர்களை எய்து அழிந்த மன்மதனுக்கு நான் துணையாவேன். வேறு நான் எண்ணவில்லை" என்று கூறிப் பிறகு தெளிந்து - 598 -

73. *பொருளொலாம்அழித்தே யானும் புந்திவாக்(கு)உடம்பு மூன்றுங்*
*கருவியாய்வருந்தி யானுங் காயத்தை யழித்தே யானும்*
*ஒருவருக் குதவி செய்த லுயிர்க்கித ம்அதனால்நீவிர்*
*தெருமர லொழிக வீது செய்குவல் செத்து மென்றான்.*

"செல்வம் அனைத்தும் அழிந்தாவது, மனம் வாக்கு உடம்பு மூன்றினையும் கருவியாகக் கொண்டு, உடம்பை அழித்தாவது ஒருவருக்கு உதவி செய்தலே உயிர்க்கு நன்மை தரும். அதனால் நீவிர் நம்பிக்கையின்மையை ஒழியுங்கள். நான் செத்தாலும் கூட இதனைச் செய்வேன்" என்றான். - 599 -

74. *ஆவயி னிருந்த தேவர்அகனோடு முகஞ்செம் மாப்பப்*
*போவலென் றெழுந்து வல்லே போதுவான் புறாவே யாகிக்*
*காவலு மிடரும் நீந்திக் கண்ணுதல் கலவி யாற்றுந்*
*தூவிமெல் லணையின் பாங்கர்ச் கூஃறென விறங்கி னானே.*

அதுகேட்டு அங்கிருந்த தேவர்கள் அகமும் முகமும் மிகக் களிப்ப "செல்கிறேன்" என்று எழுந்து விரைந்து செல்கின்றவன், ஒரு புறா வடிவு தாங்கி வழியில் உள்ள காவல், ஏற்பட்ட இடர்கள் ஆகியன கடந்து நுதற்கண்ணர் கலவி புரியும் அன்னத்தூவி தூவிய மெத்தையின் பக்கம் மிக மிக மெல்லொலி எழுப்பி இறங்கினான். - 600 -

75. *அங்கையு நுதலுஞ் செந்தீக் களித்தவர்அங்கித் தேவே*
*யிங்குவந் தடைந்ததா ம்என் றிம்மெனக் கலவி நீத்தார்*
*மங்கைமற் றதனை நோக்கி வரம்பறு நாண்முன் னிட்டுப்*
*பொங்கிய வெகுளி துள்ளப் பொருக்கென இதனைச் செய்தாள்.*

தனது உள்ளங்கையையும் நெற்றியையும் செந்தீக்கு அளித்த இறைவன், தீக்கடவுள் இங்கு வந்தது என்று உணர்ந்து நொடியில் கலவி நீத்தார். உமையவள் அதனைக் கண்டு எல்லையற்ற நாணம் முற்பட, பொங்கும் சினம் துள்ள விரைந்து பின்வருமாறு செய்தாள். - 601 -

76. *கலையெடுத் துடுத்துச் செல்வக் கலவியாற் சிறிது சோந்த*
*கொலைமுக வேல்கண் சாலக் கொவ்வையங்கனிபோற் சேப்ப*
*அலைசிகை யங்கிக் கள்ளா வணங்கொடு பிறவார் போலச்*
*சிலையுறழ் நெஞ்சங் கொண்டு புறவெனச் சேர்ந்தா யிங்கு*

இன்பக் கலவி காரணமாக நெகிழ்ந்த ஆடையை எடுத்து உடுத்து, கொல்லும் வேல் போன்ற கண்கள் சினத்தால் கொவ்வைக்கனி போல் மிகச் சிவக்க, கலைந்த கருமணல் போன்ற தலை முடியுடன், "தீ ஆகிய திருடனே, நீ பெண்ணோடு பிறக்காதவரைப்போல் கல் நெஞ்சுடன் இங்குப் புறாவாக வந்தாய்". - 602 -

*76. இப்புற (வு) ருவே யாகி ஏந்தனின் சகோத ரத்தைத்*
*தும்புறப் புணர்ந்து நாளுந் தூதுண்டு வருந்து கென்றாள்*
*வெப்புறு ம்அழலோன் கேட்டு வெய்துயிர்த் துடல்கம் பிப்பத்*
*தப்புவந் தடுத்த தென்று தளர்ந்தனன் சரணஞ் சார்ந்தான்.*

"இந்தப் புறாவின் உருவமே கொண்டு, சிறந்தஉனது உடன் பிறப்புக்களை வலிமையுறச் சேர்ந்து, நாடோறும் பிறர் பொருட்டுத் தூது சென்று வருந்துக" என்று சாபமிட்டாள். அதனால் மனம் வெதும்பிய தீக்கடவுள், வெப்பப் பெருமூச்சு விட்டு உடல் நடுங்கி மனம் தளர்ந்து சிவபெருமானைச் சரணடைந்து வணங்கினான். - 603 -

*78. அடியனே னடிகள் செய்ய அடியைவந் தடுத்தே னுலம்*
*கடவுள ருய்ய அன்று கடலினஞ் சயின்றா ஓலம்*
*முடிவதாய் முடிப்ப தாகி முடிபய னாகியந்தத்*
*தொடர்பய னளிப்ப தாகித் துலங்கிய பொருளே யோலம்.*

"அடியேன், அடிகளின் செம்மையான திருவடிகளை அடைக்கலம் அடைந்தேன். பிற கடவுளர் உய்ய அன்று பாற்கடல் நஞ்சை உண்டவனே அடைக்கலம். முடிவாக, முடிப்பதாக, முடிவதன் பயனாக ஆகி அதன் தொடர் பயனையும் தரவல்ல பொருளாக விளங்கும் பரம்பொருளே அடைக்கலம்". - 604 -

*79. வீரனாற் தேவர் தம்மோ டென்னையும் வீட்டும் வீறு*
*மாரனா ர்உடல நீற்று மானமு ம்உறாத செய் தோர்*
*கோலமா ர்இடும்பைச் சேற்றுள் குரங்கிய செயலுமற்றுந்*
*தீரநானறியா துஈங்குச் சேர்ந்திலேன் றேவர் தேவே.*

"வீறுடைய வீரபத்திரக் கடவுளால் என்னையும் நீக்க, மன்மதன் உடலை நீறாக்கி குற்றம் விளையாது செய்து, காலக் கொடுமையால் வந்த துன்பச் சேற்றுள் தங்கி நாங்கள் துன்புறும் செயலும் நான் அறியாது இங்கு வரவில்லை. தேவர்தேவே அறிந்துள்ளேன்" - 605 -

*80. வெள்ளைவா ரணத்தோ ன்ஆதி விண்ணவர் குழுமி யென்னைத்*
*தொள்ளையே மிடைந்த நெஞ்சச் சூரனைச் சவட்டு ம்ஆண்மைப்*
*பிள்ளையா ரொருவ ர்ஓங்கற் பெண்ணணங் ககட்டிற்றோன்ற*
*விள்ளிடாக் கல விக் கூறு விளையென ஏவி னாரே.*

"வெள்ளையானையாகிய அயிராவத முடைய இந்திரன் முதலிய தேவர்கள் கூடி, என்னை வஞ்சனை மிக்க நெஞ்சுடைய அசுரனை வெல்லும் ஆற்றலுடைய பிள்ளை ஒருவர், பார்வதி தேவி வயிற்றில் தோன்றும் பொருட்டு, பிரியாத கலவிக்கு ஊறுவிளைத்துப் பிரி என்று ஏவினர்" - 606 -

81. *தத்துவ வுபதே ங்க ள்தம்பிரா னருளிச் செய்யுங்*
*கொத்துறு மலங்க ளைந்துங் கூட் டொடு ம்இரியல் போகப்*
*பத்தியி னவையுங் கேட் கும் பாக்கிய நினக்கு வாய்க்கும்*
*முத்தியு முறுவ தாமென் றிதனையு மொழிந்திட் டாரே.*

"கொத்தாக உள்ள ஐந்து மலங்களும் ஒரு சேர ஓடிப் போகுமாறு, தத்துவ உபதேசங்களையும் தம்பிரான் அருளுவான், பத்தியுடன் அவற்றையும் கேட்கும் நற்பேறு உனக்கு வாய்க்கும்; அதனால் முத்தியும் உன்னையடையும் என்றும் கூறினர்" *- 607 -*

82. *ஆதலா ல்அமரர்க் காக அவுணர்தந் தூதர்க் கஞ்சிப்*
*பேதுறு புறவா யிங்குப் பெருமநா ன்அடுத்தேனற்றால்*
*மாதுமை சாப ம்ஊடே வந்தது நினைச்சார்ந்தேற்குத்*
*தீதுற ல்உ றதோ இந்தச் செயிரினைத் தவிர்த்தல் வேண்டும்.*

"எனவே தேவர்பொருட்டு அசுரருடைய ஒற்றர்க்கு அஞ்சி மதி மயங்கும் புறா உருவுடன் இங்கு வந்தேன். பெருமானே அவ்வளவே. இப்போது உமையவள் சாபம் வந்து சேர்ந்தது; உன்னை அடைக்கலம் புகுந்த எனக்குத் தீது இல்லை. என் இக்குற்றம் பொறுத்து நீக்கியருளுதல் வேண்டும்". *- 608 -*

83. *வேண்டிய வடியார்க் காக விருப்பொடு வெறுப்புச் செய்து*
*பூண்டனை அன்றி நின்னை புணர்பவோ அவைதா மெந்தாய்*
*யீண்டிய வமரர் வேட்ட பயனையு மீக வென்னாத்*
*தாண்டவம் புரியும் பாதந் தழீஇக்கிடந் தரற்றி னானே.*

"தன்னை வேண்டிய அடியவர் பொருட்டு விருப்பு, விருப்பு நீ பூண்டாயே தவிர, அவை உன்னைச் சார்வனவல்ல. என் தந்தையே அமரர் கூட்டம் வேண்டிய பயனையும் தந்தருள்க" என்று கூத்தாடும் திருவடியைத் தழுவிக் கிடந்து அரற்றினான். *- 609 -*

82. *சரணமென் றுஅடுத்து நின்ற தழலினைக் காக்கவேண்டி*
*அரண்ஒரு மூன்று ம்அட்ட வடிகளா ர்உமையை நோக்கித்*
*திரணமுண் டுழலுந் தீநின் சினத்தினுக் (கு)இலக்க மோசொன்*
*முரணினைத் தவிர்க வென்று முகமலர்ந் (து)அழற்குச் சொல்வார்.*

அடைக்கலம் புகுந்த தீக்கடவுளைக் காக்க வேண்டி, முப்புரம் எரித்த அடிகளார், உமையம்மையை நோக்கி, "அற்பமானவற்றை உண்டு துன்புறும் இத்தீக்கடவுள் உனது சினத்துக்கு இலக்கு அல்ல. உன் கொடுமை தவிர்க" என்று கூறி, தீக்கடவுளை நோக்கி, *- 610 -*

85. இமையவர் இடுக்கண் டீர்ப்ப எய்திய அழலோ யிங்கு
நமதுவீ ரியத்தை வாங்கி நண்புறப் பருகு கண்டாய்
கமையுற விதனைத் தாங்கி யிருந்திடுங் காறுங் காய்ந்த
உமையவள் சாபஞ் சாரா தொழிந்தபின் றுருவ தாகும்.

"தேவர்களின் துன்பம் தீர்க்க வந்த அழலோனே, இங்கு நமது வீரியத்தை வாங்கிப் பருகு. பொறுமையுடன் இவ்வீரியத்தைத் தாங்கி இருக்கும்வரை சினம் கொண்ட உமையவள் சாபம் உன்னைச் சாராது. இவ்வீரியம் உன்னைப் பிரிந்த உடன் சாபம் உன்னை வந்து சேரும்". - 611 -

86. வீட்டருஞ் சாபந் தன்னை வில்வகா னகத்தை நண்ணிச்
சேட்டொளி மயமே யான திருமூல நாத ரேமைக்
கூட்டுகுங் குமப்பூங் கொங்கைக் கொற்றொடி யிவள்தன் னோடு
நாட்டிய முறையாற் பூசை நடத்திவீட் டிடுதி கண்டாய்.

வீழ்த்துதற்கு - போக்குதற்க அரிய இச்சாபத்தை, நீ வில்வவனம் அடைந்து அனைத்தையும் தொழிற்படுத்தும் ஒளிவடிவான திருமூலநாதராகிய எம்மை குங்குமம் கூட்டிய திருமார்புகள் உடைய திரண்ட வளையல் அணிந்த உமையம்மையோடு விதி முறைப்படி பூசனை செய்து போக்குக என்றான். - 612 -

87. தத்துவத் தியல்பு மாங்குச் சாற்றுது மென்றார் கேட்ட
பொத்துழல் புறவி னீங்கிக் குடங்கையேற் றெதிரே நின்றது
உத்தமன் றாரை யாக வூற்றினன் வீரியத்தை
வைத்துவாய் மடுத்துத் தாழ்ந்து விடைகொண்டு வழிகொண் டன்றே.

"தத்துவங்களின் இயல்பையும் அங்குச் சொல்வோம்" என்றார். அது கேட்ட தீக்கடவுள் புறாவின் உருவம் நீங்கி எதிரே நிற்க, உத்தமன் வீரியத்தை ஊற்ற, உள்ளங்கையில் ஏந்தி வாய் வைத்துப் பருகி, வணங்கி விடை கொண்டு புறப்பட்டான். - 613 -

**வேறு**

88. கருத்த ரித்தலிற் கண்குழிந் (து)அகடுற வீங்கி
வருத்த முற்றனன் கனலவன் வரவினை நோக்கி
இருத்தன் முற்றிய வானவர் குழாத்தினை எய்திப்
பெருத்த தன்வயி (று)அங்கையாற் றட்டினன் பேசும்.

கருத்தரித்ததால் அனலோன் கண்கள் உட்குழிய, வயிறு பருத்து வருந்தினான். அவன் வரவை எதிர்நோக்கி நெடுநேரம் காத்திருந்த தேவர் கூட்டத்தையடைந்து பெருத்ததனது வயிற்றை உள்ளங்கையில் தட்டி காட்டி, - 614 -

*89. ஈது காண்மின்நும் இடரெலா ம்இரிதர முக்க*
*நாத னாரருள் வீரிய நுகர்ந்துநை கின்றேன்*
*மாது சாபமுங் கபோதக மாய்மதி மயங்கித்*
*தூது தேரவுந் தாங்கினேன் றுயர்க்கரை காணேன்*

"இதைப்பாருங்கள்; உங்கள் துன்பங்கள் எல்லாம் உங்களைவிட்டு ஓட சிவபிரான் அருளிய வீரியத்தைப் பருகி அயர்கின்றேன். உமையவள் சாபமும், புறாவாக ஆகி அறிவு மயங்கித் தூது சொல்லவும் சாபம் தாங்கினேன்; துன்பக் கடலிலிருந்து விடுபடும் கரை காணமாட்டாதவன் ஆயினேன்" - 615 -

*90. கருப்ப ம்மற்றினித் தாங்கும்அக் கடனெனக் கரிது*
*கருப்பம் விட்டிடிற் கபோதக வுருவங்கை கலக்கும்*
*ஒருப்ப டும்புறா வுருவமு ஒழியும்பூ வாளூர்ப்*
*பொருப்(பு)இ ருஞ்சிலை யான்அடிப் பூசையி னென்றான்.*

"கருப்பத்தை, இனியும் என்னால் தாங்கும் கடமை இயலாது. கருப்பத்தைக் கைவிட்டால் புறா உருவம் வந்து சேரும். பூவாளூரில் எழுந்தருளியுள்ள மேருமலையாகிய வில்லேந்தியவனின் திருவடிப் பூசையால் புறா உருவம் ஒழியும்". - 616 -

*91. கவலை யோ(டு)அழற் கடவுள்கூ றியமொழி கேளா*
*உவகை யோடுமிக் (கு)அவலமு முறத்தழீஇ யமரர்*
*தவலு றாவகைத் தழலவன் றளர்வினைத் தவிர்ப்பப்*
*புவன மேவடி வாகிய கங்கைபாற் போந்தார்.*

என்று கவலையுடன் அனலோன் கூறியது கேட்டு மகிழ்ச்சி மிகுந்த தேவர்கள், துன்பமும் பொருந்த அழலோன் சோர்வினைத் தவிர்த்தற்காக நீர் வடிவாக விளங்கும் கங்கையிடம் வந்தனர். - 617 -

*92. கொத்த வர்ந்தர்பன் மலர்களுங் குழைத்தபூஞ் சினையு*
*நித்தி லத்தொடு வயிரமு நிறங்கிளர் பொன்னுந்*
*தத்து வெண்டி ரை அலைத்தெறி கங்கைதன் சரணம்*
*மெத்து மன்பினால் வணங்கினர் விளம்பல் மேயினரால்.*

கொத்தாக மலர்ந்த பலவகை மலர்களும் தழையச் செய்த மென்மையான கிளைகளும் முத்துடன் வயிரமும் ஒளிவிடும் பொன்னும் தாவ, வெள்ளிய அலை எறியும் கங்கையின் திருவடிகளை மிகும் அன்பினால் வணங்கிக் கூறத் தொடங்கினர். - 618 -

## வேறு

*93. அன்னாய் கற்றைச் சடைப்பெருமாற்(கு) ணியேய யுலக மனைத்தினக்கும்*
*நன்னா யகமே விமல நறும் புனலாய் னவைகள் முழுதகற்றி*
*மன்ஆ ருயிர்க்கு மிகத் தூய்மை மலிவித் திடுமந் தாகினியே*
*முன்னீ ர்அரைய னுளங்களிப்ப முயங்கு மோப் பெயரணங்கே.*

"தாயே, சடைக்கற்றையுடைய இறைவனுக்கு உரிய அணியாக விளங்கு கின்றவளே; உலக இயக்கம் முழுமைக்கும் உரிய நல்ல தலைவியே, குற்றமற்ற நறிய புனலாகிக் குற்றங்கள் முழுவதையும் அகலச் செய்து நிலைத்த உயர்க் குலத்துக்கு மிகத்தூய்மை மலியச் செய்யும் கங்கையே, ஆக்கல், அளித்தல், அழித்தல் ஆகிய முத்தொழில் புரியும் கடல் ஆகிய அரசன் உள்ளக் களிப்புக் கொள்ளுமாறு அவனுடன் கலக்கும் ஆசையுடைய தெய்வப் பெண்ணே" - 619 -

*94. கனவி வளரும் பெருஞ்சூலாய்க் கவலை யுழக்கின் றான்அவன்றான்*
*அனமிக் குவகை பெறஅதனை வாங்கித் தரித்துக் தரல் வேண்டும்*
*அனக னளித்தது வுலக மனைத்து மிடர்தீர்த்து(து)ஆதளிப்பதுகாண்*
*புனிதஉ மையு உவகையுறும் பூவாய் தரிப்பினீ யென்றார்.*

"வளரும் பெருஞ்சூல் காரணமாகக் கவலைப் படும் கனலோன் மனம் மிக மகிழ, அக்கருவை நீ வாங்கித் தரிக்க வேண்டும். சிவபெருமான் அருளிய அது அனைத்து உலகத்தின் துன்பம் தீர்ப்பது; கருணை காட்டுவது. புனிதமான உமையம்மையும் நீ அக்கருவைச் சுமக்கும் உன் செயலால் உவகை கொள்ளுவாள் என்றனர்" - 620 -

*95. இரந்த இமையார்க் குளம்விரும்பி யேற்ப வலித்தாள் கங்கையாள்*
*கரந்த வுவகை யொடுங்கனலோன் றுலங்குங் கருவைப் பெயர்த்திட்டான்*
*வரந்தங்கியக் கருவினைச்சின் மதியஞ் சுமந்தாற்றாளாகி*
*நிரந்த கரையிற் சரவணத்தி நீத்தர ன்றிகரில் கங்கையாள்.*

*தன்னை வேண்டிக் கொண்ட தேவர்கள் பொருட்டு மனம் விரும்பி, அக்கருவை ஏற்கக் கங்கையாள் உடன்பட்டாள். மிகுந்த மகிழ்வுடன் கனலோன் தன் வயிற்றில் விளங்கும் அக்கருவைப் பெயர்த்துத் தர, மேன்மை தங்கிய அக்கருவைச் சில மதியம் சுமந்தவள், அதனைச் சுமக்க இயலாதவளாய் தனது மிக நீண்ட கரையில் உள்ள நாணல் வளர்ந்த குளத்தில் விட்டாள் கங்கையாள். - 619 -*

*96. தவழும் மலையாற் சரவணங் ன்தாக்கத் தவிர்ந்த கருவொன்றே*
*அவிரு முருவம் ஆறாகி யனந்த கோடி யிளங்கதிர்கம் ஆ*
*திவ்வ தெனவெவ் வேறிமைப்பத் திசைமா முகத்தோ னதுநோக்கி*
*யுவகை யொடும்கார்த் திகைமாதர் தம்மை வளர்ப்ப வூக்கினான்.*

*சரவணப் பொய்கையில் விடப் பெற்ற அக்கருவை, தவழ்ந்து வரும் அலை காரணமாக நாணல்கள் தாக்க அந்த ஒரே கரு, விளங்கும் ஆறு உருவம் கொண்டு எண்ணற்ற கோடிக் கணக்கான இளங்கதிர்கள் சேர்ந்தது போல் வெவ்வேறாக ஒளிர, நான்முகன் அதுகண்டு, கார்த்திகை மாதரை உவகையுடன் அக்குழந்தைகளை வளர்க்குமாறு பணித்தான். - 622 -*

*97. அறுவ ரெடுத்து முலைப்பால் மிக் களித்து வளர்க்கு ம்அந்நாளிற்*
*சிறுமெல் லடிமா (து)உமையோடு சேவி ன்இவர்ந்து சீசயிலம்*
*உறுதற் கிறைவ னேகுவான் அவ்வா றடுப்ப வொளிர்கின்ற*
*மறுவி லுருவமாறனையுங் கண்டா ளிமைய மடக்கிளியே.*

*கார்த்திகை மாதர் அறுவர் அக்குழந்தைகளை எடுத்துத் தமது முலைப்பால் மிகத் தந்து, வளர்க்கும் காலத்தில், சிறிய மென்மையான திருவடிகளுடைய உமையம்மையுடன் விடையேறி, சீசயிலம் செல்லும் இறைவனுடன் சென்ற இமயக்கிளியாகிய பார்வதி குற்றமற்ற அந்த ஆறு குழந்தைகளையும் கண்டாள். - 623 -*

*98. பொன்னம் பிதிர்மேற் சிதர்ந்ததெனப் பொலிந்த திதலை முலைசுரப்பத்*
*தன்னை யறியா வகைமகிழ்ச்சி தானே யுளத்தி ல்தலைக்கொள்ள*
*வன்ன நடை மெல்லடிச் சிலம்பு ம்அணி நூபுரத்துப் பார்ப்பதியாங்*
*என்னை யுடையாயிதுவென்னே யியம்பா யென நா யகர்குரைத்தாள்.*

*பொன்னின் நுண்பொடி சிதறியது போன்ற சுணங்குடைய முலைகளில் பால் சுரக்க, தன்னையும் அறியாமல் மகிழ்ச்சி தானே வந்து தலைதூக்க, அன்னப் பறவை நடையுடைய மெல்லடிகளில் ஒலிக்கும் சிலம்பணிந்த பார்வதி, அப்போது "சிவபெருமானே, என்னை உடையவனே, இது என்ன கூறுக" என்று கேட்க, - 624 -*

*99. விளங்குங் குழலி யாவையிவை விழியிற் காண்ட லொடு மகிழ்ச்சி
உளங்கொண் டதுபால் முலைசுரந்த என்ற வுமையா ட் குள்ளபடி
களங்கையகலாக் கட வ்விடத்துக் கட வுட் பெருமான் கருணையால்
வளங்கொப் புளிக்குங் குறுமூரல் வதனத் தரும்ப உரைசெய்வான்.*

"இவற்றைக் கண்ணால் கண்டதும், என் உள்ளத்தில் மகிழ்ச்சி நிறைந்தது; முலைகள் பால் சுரந்தன, இக்குழவிகள் யாவை?" என்ற உமையவளுக்குக் கருணை வளம் மிகும் முகத்தில் புன்முறுவல் அரும்ப இறைவன் கூறத் தொடங்கினான். - 625 -

*100. சோர்ந்தார்க் கொல்லி முன்னர்நமைச் சேர்ந்து விடுத்த வீரியத்தை
ஆர்ந்தா னன்றே யது தாங்கு மாற்ற .ல்இலனாய்க் கங்கைதனைச்
சார்ந்(து)ஆங் குறுத்தா னவள்தானுந் தரிக்க மாட்டா தகன்கரையின்
வார்ந்தார் நாண விடை விடுத்தாள் வயங்கிற்றாறு மகவாகி.*

"தீக்கடவுள் நம்மைச் சார்ந்ததால், நாம் விடுத்த வீரியத்தைப் பருகினானல்லவா? அதனைத் தாங்கும் ஆற்றலின்றிக் கங்கையைச் சார்ந்து அதில் அதனைவிட, அவளும் அதனைத் தாங்க மாட்டாது, தனது அகன்ற கரையில் உள்ள நீண்டு வளர்ந்த நாணல் கொண்ட பொய்கையில் விட்டாள். அது ஆறு குழந்தைகளாக விளங்கிற்று". - 626 -

*101. இந்தக் குழவி யாறினை யு ம்இருதாள் முகமா றீராறு
அந்தப் புயங்க ளுறுமொருசேய் தான்ஆம் வண்ணந் தழீஇயெடுத்துக்
கந்தக் களப முலைசுரக்குங் கமழ்பா லூட்டா யெனவருள
அந்தப் படியே புரிந்திட்டா ளகில முயிர்த்த காரணியே.*

"இந்த ஆறு குழந்தைகளையும் இருகால், ஆறுமுகம், பன்னிரு அழகிய தோள்கள் கொண்ட ஒரு குழந்தையாகும் வண்ணம் தழுவி எடுத்து, மணக்கும் சந்தனக்கலவை பூசிய முலையின் பாலை ஊட்டுக என்று அருள, அகிலம் அனைத்தையும் ஒருங்கீன்ற அம்மை அங்ஙனமே செய்தாள்". - 627 -

*102. உடன்கொண் (டு)அடுத்துச் சீசயில மொளிருங் கயிலை சார்ந்ததற்பின்
இடங்கண் டிமையா ர்அபிடேகம்இ யற்றச் சேனா பதியாகி
விடங்கொப் புளிக்கும் படையவுணர் வேருங் களைந்திட் டவராற்றற்(கு)
அடங்கிக் கிடந்த தேவர் சிறை மீட்டா னறு முகப்பெருமான்.*

குழந்தையை எடுத்துக் கொண்டு சீசயிலம் ஒளிரும் கயிலை அடைந்த பிறகு, நல்ல நேரம் கண்டு, தேவர்கள் திருமுழுக்காட்டி, சேனாபதியாகி தீமைபொங்கும் அசுரர்களின் வேரையும் களைந்து, அதுவரை அசுரர்க்கு ஆற்றாது அடங்கிக் கிடந்த தேவர்களை ஆறுமுகப் பெருமான் சிறை மீட்டான். - 628 -

### வேறு

103. *கங்கையிற் கருவினைக் கலப்பித் திட்டலும்*
*அங்கிதூ துணம் புற வாகித் தன்மதி*
*மங்கிய (து)உம்பரார் வல்லை கொண்டு போய்ப்*
*பங்குனி நதியிடைப் படுவித் தாரரோ.*

கங்கையில் கருவைக் கலப்பித்த பிறகு, அழலோன் புறாவாகித் தன் மதி மயங்க, தேவர்கள் விரைந்து அதனைக் கொண்டு போய்ப் பற்குனி ஆற்றில் மூழ்குவித்தனர். - 629 -

104. *பண்டைய வுணர்வுவந் துதிப்பப் பாய்சிறை*
*கொண்டபுள் ளுருவமாய்க் குலவும் பாவகன்*
*மண்டிய வில்வமா வனத்து மன்னிய*
*அண்டர்நா யகனடி யடுத்துத் தாழ்ந்தனன்.*

முன்னைய உணர்வு வந்தடைய, பாய்ந்து செல்லும் சிறகுடைய புறாவாக இருந்த தீக்கடவுள், அடர்ந்த வில்வவனத்தில் நிலைத்த இறைவனை அடைந்து திருவடியில் வீழ்ந்து வணங்கினான். - 630 -

105. *சேணிடை விளங்குறுஞ் சிகரஞ் சூழ்ந்துகல்*
*உணூடன்உறக்கமு மொழிந்து சிந்தையிற்*
*தாணுவின் பதமலர் ததைவித் தன்பினாற்*
*பேணுற தியானமே பிறங்கச் செய்தனன்.*

நெடுந் தொலைவிலும் விளங்கும் கல்யாண சிகரத்தை வணங்கி, வலம் வந்து, புறாவாகிய தான் கல்லுடன் உண்ணும் உணவும் உறக்கமும் நீத்து, மனத்தில் சிவபெருமானது திருவடி மலர்களில் மனத்தை ஒன்றச் செய்து, அன்பினால் பேணும் தியானம் விளங்க செய்தான். - 631 -

106. *குங்கும தனசவுந் தரிதன் கோலமும்*
*மங்கைபங் காளனார் வடிவுங் கண்டுகொண்(டு)*
*டங்கியென் றொருபெயர்அமரன்இன்னணம்*
*பங்கமில் பூசனை பயிற்றிச் சென்றனன்.*

அருள்தரு குங்கும தன சவுந்தரியின் அழகும்; அவளைப் பாகம் கொண்ட திருமூலநாதர் வடிவமும் கண்டு கொண்டு, அங்கிக் கடவுள் குறைவற்ற பூசனை மிகுதியாகச் செய்து வாழ்ந்தான். - 632 -

107. உமையவள் சாபம்ஓள் ளொரிக்கு நீக்குவாா்
அதனைதரு பயனெலா மங்கிக் (கு)ஆகென
விமலனை நினைந்துசங் கற்பம் விண்டுடல்
அமரரும் பற்குனி யாற்றிற் றோய்ந்தனர்.

அங்கிக்கு ஏற்பட்ட உமையவள் சாபம் நீக்கும் பொருட்டு, அவனது வழிபாட்டின் பயன் எலாம் அவனைப் பொருந்துக என்று மன உறுதியுடன் நினைந்து கூறி, தேவர்கள் அனைவரும் பற்குனி ஆற்றில் நீராடினர். - 633 -

108. வாலகில் லியர்முத லோர்வ ணங்குறுஞ்
சீலமல் கியதிரு மூல நாதரை
ஆலுமன் பாலடுத் (து)ஆர ணத்தினாற்
சாலவும் பூசனை தழைய வாற்றினார்.

வாலகில்லியர் முதலியோர் வணங்கும் அறமே பெருகிய திருமூல நாதரை, களிக்கும் அன்புடன் பொருந்தி, மறைகளால் மிக்க பூசனையை மேன்மேல் மிகச் செய்தனர். - 634 -

109. பூசனைக் கிரங்கி முக்கட் புண்ணிய னெதிரே தோன்றிக்
காசணி யுமையாள் சாபங் கனலவற் (கு)அகற்றி ஞானத்
தேசவிர் முனிவர் போற்றுத் தென்றிசை முகத்த ராகி
வீசொளிமணியாற் செய்த வித்தியா பீடம் வைகி.

பூசனைக்கு மனம் இரங்கி, முக்கண் புண்ணியனாகிய இறைவன் அவர்கள் எதிரே தோன்றி, கனலவனுக்குக் காசு மாலை அணிந்த உமையவள் இட்ட சாபம் அகற்றி, ஞான ஒளிவீசும் முனிவர்கள் போற்றத் தெற்குத் திசைநோக்கி ஒளி வீசும் ஞான பீடத்தில் ஞானாசிரியராக எழுந்தருளி, - 635 -

110. தத்துவஉ பதே சங்க தக(வு)ற வருளிச் செய்து
வித்தகச் சிவலிங் கத்தின் மேதக மறைந்தார் தாழ்ந்து
பத்தியின் ஞானங் கேட்ட பாவகன் சிவலிங்கத்தி
அத்தனைப் பூசை யாற்றி யமரரோ டகன்று வாழ்ந்தான்.

தத்துவங்களைப் பற்றிய உபதேசங்களைத் தக்கவாறு உபதேசித்து, ஞான வடிவான சிவலிங்கத்தில் மேன்மை பொருந்த எழுந்தருளினார். பெருமானை வணங்கி பத்தியுடன் ஞானஉபதேசம் கேட்ட அழலோன் சிவலிங்கத்தில் பெருமானைப் பூசனை செய்து அமரரோடு தேவலோகம் அடைந்து வாழ்ந்தான். - 636 -

111. *காவியங் கண்ணி சாபங் கலந்திடு ம்அன்று தொட்டுச்*
*சேவலும் பேடு மாகத் திகழ்ந்தொரு வயிற்றி ல்தோன்றிப்*
*பாவிய பரலுண் டின்பம் துங்களுட் பயின்று துய்த்துச்*
*சாவது மொருங்காம் தன்மை சார்ந்தது புறவின் சாதி*

கருங்குவளை மலர் ஒத்த கண்களையுடைய அம்மையின் சாபம் பெற்ற அன்றுமுதல், புறாக் கூட்டம் ஒரு வயிற்றில் பிறந்த ஆணும் பெண்ணுமாகத் திகழ்ந்து, ஆங்காங்குப் பரவியுள்ள பொடிக்கற்களையும் உணவுடன் உண்டு, தம்முள் மிகுதியும் இன்பம் துய்த்து, ஒரு சேரச் சாகும் தன்மை பெற்றது. *- 637 -*

112. *இதமுறுங் கங்கை தன்பா ல்எரிகரு விடுத்த ஞான்று*
*சிதரின வீரியந்தான் திகழ்தரு ம்இரசஞ் செம்பொன்*
*முதிரொளி வெள்ளி செம்பு முதலியலோக மாகிப்*
*பதிதரு முலகிற் சென்று பயப்பட நின்ற தன்றே.*

நன்மை பொருந்திய கங்கையில் அழலோன் விடுத்த கரு சிதற, அப்படிச் சிறிய வீரியமே திகழும் இரசம், செம்பொன், முதிர்ந்த ஒளியுடைய வெள்ளி செம்பு முதலிய உலோகங்கள் ஆகி, இறைவன் அருளிய உலகில் பயன்படுமாறு விளங்கியது. *- 638 -*

113. *வருசமு சார வேலா வலையத்தின் கரையே யான*
*அருணிறற் சேர்த்த வாலே யறைவர்பா ரதப்பேர் முன்னர்*
*உரையிர சத்துக் கந்த வொள்ளியவிரசந் தன்னைப்*
*புரைதபு ம்இலிங்க மாக்கிப் பூசனை புரிக தக்கோர்.*

தொடர்ந்து வரும் உலகப்பற்று ஆகிய கடலின் கரையாக விளங்கும் திருவருளில் சேர்த்ததால் தக்க பாரதர் முன் கூறிய மணமும் ஒளியும் கொண்ட இரசத்தைக் குற்றம் கெடுக்கும் இலிங்கமாக்கிப் பூசனை புரிக.

114. *தயங்கிய மணிலிங் கங்கள் சுயம்புலிங் கங்கள் எல்லாம்*
*நயம்கொளும் இமையம் ஆதி நண்ணுதன் கடலின் காணும்*
*வயம்கொளும் தலங்கள் தோறும் வயக்கிய பூசைப் பேறாம்*
*உயங்கல் இல் இரசலிங்கபூசனை ஒன்றுக்(கு) அம்ம.*

இமயம் முதல் குமரி வரை விளங்கும் தலங்கள் தோறும், மிகுதியும் இலங்குகின்ற மணி லிங்கங்களை சுயம்பு லிங்கங்களை, வணங்கிச் செய்த பூசைப்பேறு அனைத்தும், இரசலிங்க பூசை ஒன்றுக்கு ஒத்தாகும். *- 640 -*

115. *எருமைவல் லூர்திப் பாக னிறுத்திடு ம்அந்த நாளில்*
*தருமமே உருவமான தனியிரசத்தையாவன்*
*பருகினும் பாவமெல்லாம் பறைதரச் சிவமே யாவன்*
*பெருமைமற்றதனுக் குள்ள தியாவரே பேசு நீரார்.*

எருமைக்கடா ஏறிவரும் காலன், உயிர் கொள்ளவரும்போது அறமே உருவாகக் கொண்ட ஒப்பற்ற இரசத்தையார் பருகினும் அவர் பாவம் எல்லாம் போக, அவர் சிவனே ஆவர். - 641 -

## வேறு

116. *செய்ய தழலோன் வழிபட்ட சிறப்(பு)இ தாகு மொருமுனிவன்*
*பொய்யில் வணக்கந் தனக்கிரங்கிப்பு ரைதீர் கயையும் பற்குனியும்*
*உய்ய வில்வ வனத்துமல ன்ஊங்கு வருவித் தருள்கதையு*
*மைய லகலக் கேண்மினென வகுக்குஞ் சூத மாதவனே.*

செந்நிறத்துத் தழலோன் வழிபட்ட சிறப்பு இதுவாகும். ஒரு முனிவரின் பொய்யற்ற வழிபாட்டிற்கு இரங்கி, குற்றமற்ற கயையையும் பற்குனியையும் உலகம் உய்ய வில்வவனத்துத் திருமூலநாதர் வருவித்தருளிய கதையையும் மயக்கம் தீரக் கேளுங்கள் என்று சூதமாதவன் கூறினான். - 642 -

அக்கினி சாபந்தீர்த்தச் சருக்க முற்றிற்று.
*ஆகத்திருவிருத்தம் - 642 -*

## கயாபற்குனிச்சருக்கம்

1. *பத்தி தருந்திரு மங்கல மாம்பதி மேல்பாங்கர்க்*
*கொத்த மலர்ந்துயர் மாம்பொழில் சூழ்ந்த குல சூழற்*
*சுத்த விரத்தின வீச்சுர ரைத்தொழு தேத்தன்பு*
*மெத்திர யிக்குவ னென்றொரு மெய்த்தவன் மேதக்கான்.*

பக்தியினை வழங்கும் திருமங்கலமாகிய தலத்தின் மேற்கே, கொத்தாக மலர்ந்த சிறந்த மாஞ்சோலை சூழ்ந்த சூழலில் சுயம்புவடிவான இரத்தினேச்சுரரை வணங்கும் அன்பு மிக்க இரயிக்குவன் என்ற பெயருடைய மெய்த்தவன் ஒருவன் மேன்மையுடையவனாய் வாழ்ந்தான். - 643 -

2. *பண்டை யிழைத்திடு தீவினை யாற்பவ மாம்போதே*
*கொண்(டு)இயல் கால்களி வாமுட வன்குழை யா நெஞ்சன்*
*ஒண்ட ரை மீது வழங்க வயப்பரிஒன்றார்த்த*
*மண்டில மாக வயங்கிய வையமரீ இயுள்ளான்.*

அவன் முற்பிறப்பில் செய்த தீவினையால் பிறக்கும் போதே நடக்க உதவும் கால்கள் இல்லாத முடவனாய்ப் பிறப்பினும், அஞ்சா நெஞ்சுடைய அவன், ஒளி பொருந்திய இவ்வுலகில் இயங்குவதற்கு வலிமை வாய்ந்த குதிரை ஒன்று கட்டப்பெற்ற வட்ட வடிவமான தேர் ஒன்று பெற்றிருந்தான். - 644 -

3. *சுந்தரன் மான்கலை யைத்தொலை விப்ப நெடுஞ்சாப*
*முந்தருள் கண்டுவி ன்ஆச்சிர மத்தினை மூரித்தேர்*
*உந்தினன்நண்ணுபு கேம புரத்தை யொழித்தேகி*
*அந்தில் வடாது திசைக்கண்ஆர்ஆ யத்துற்றான்.*

சுந்தரன் ஆகியவன் கலைமானைக் கொன்றதால் பெருஞ் சாபமிட்ட கண்டு முனிவரின் ஆசிரமத்தை நோக்கித் தனது பெருமை மிக்க தேவரைச் செலுத்தி, தானடைந்த கேமபுரத்தை நீங்கி, அவ்விடத்துக்கு வடக்கேயுள்ள ஓர் காட்டினை அடைந்தான். - 645 -

4. *போதிம ராவழை சண்பக மாதுளை புன்னாகம்*
*பாதிரி கூவிளம் மாபிர ஞாழல் பலாசோலை*
*சூதளம் நாக ம்அடம்பு குருந்து குராநொச்சி*
*யாதிநெருங்கிய கான நுழைந்தவ னாங்கோர்சார்.*

அரசு, மரா, வழை முதலிய மரங்கள் நெருங்கிய காட்டில் நுழைந்த அவன், அங்கு ஒரு பக்கம் - 646 -

5. *பார்த்த விழித்துணை வேம்இடு கின்ற பதம்வேம்இக்*
*ஓர்த்திடு நெஞ்சமும் வேம்உ ரை நாவு ம்உ லப்பாமென்*
*றார்த்தெவ ரும்புகு தாத வருஞ்சுர நேர் கண்டாங்*
*ஈத்தெழு வாம்பரி வையமொ டிம்மென வேகுற்றான்.*

பார்த்த இருகண்கள் வேக, அடி எடுத்து வைத்த கால்கள் வேக, வரும் துன்பம் நினையும் நெஞ்சு வேக, சொன்ன நாப்புலர, ஆரவார மகிழ்வுடன் எவரும் புகாத அரிய பாலை நிலம் ஒன்றைக் கண்டு, தேரைத் தாவி இழுத்துச் செல்லும் குதிரையும் தானும் வேவ அதில் நுழைந்தான். - 647 -

## வேறு

6. *நரகம் நாலெழு கோடியு ம்நண்ணியோ ருருவாய்*
*விரவி னாலென வேறுபல் கொடுவினை மேவிப்*
*பரவி மூடிய புகையொடு பாழ்நெடுங் கிணறு)வுன்*
*உரமெ லாந்தப விருந்தத ன்உ ழையடுத் திட்டான்.*

இருபத்தெட்டு வகை நரகங்களும் ஒன்று சேர்ந்து ஓர் உருக்கொண்டது போல், பல்வேறு கொடுஞ் செயல் பொருத்தி, பரவி மூடிய புகையுடன் உள்ள ஆழமான பாழ்ங்கிணறு ஒன்று தனது நீர் எலாம் வற்றிவறள இருந்ததன் பக்கம் சென்றான். - 648 -

7. *காக்க எம்தமைக் காக்கவென் (று)இளிவரு மொழிகள்*
*பாழ்க்கி ணற்றினின் றெழுந்தன பதைத்துளம் வெருவி*
*நோக்கி யாரிவர் பிதிரரே யெனநுனித் தறிந்து*
*தூக்க வல்லவ ன்அஞ்சலீ ரெவிச்சொலிவினாவும்*

"காத்தருள்க, எம்மைக் காத்தருள்க" என்று யாசிக்கும் சொற்கள் அக் கிணற்றிலிருந்து எழுந்ததால் மனம் பதைத்து அஞ்சிப் பார்த்து இவர்கள் யார்? நம் பிதிரரே என்று நுட்பமாக அறிந்து நான் உங்களைக் கரையேற்றுகிறேன் அஞ்சாதீர் என்று கூறி, - 649 -

8. *நீயிர் வான்கதி யமர்தரும் பிதிரரே நீயிர்*
*காய்இருகிணற் (று) அலமருங் காரண மியாதென்*
*ஆயி னல் அருளோடெதிர் வினாவின ன்அறிஞன்*
*ஏயும் வண்ணமப் பிதிரர்க ளிறைகொடுக் கின்றார்.*

நீங்கள் தேவருலகம் அடையத்தக்க பிதிரர்களே. தீயாகச் சுட்டு வருத்தும் இப்பெரிய கிணற்றில் துன்புறும் காரணம் யாது? என்று அறிஞனாகிய அவன் வினாவ, அப்பிதிரர்கள் பொருத்தமான விடை தந்தனர். - 650 -

9. *நல்ல மாதவ நின்குலப் பிதிரரே நாங்க*
*நல்ல தாய்நனி வளர்வதே நில்குல மதனி*
*எல்லு வாங்கதி ரவனென வினிதுவந் துதித்துப்*
*புல்லு யெமைநீ வான்கதி புகுத்துதல் வேண்டும்.*

"நல்ல மாதவனே! உன் குலப் பிதிரரே நாங்கள்; நின் குலம் இனி நன்கு வளரட்டும். உனது குலத்தில் ஒளி உலாவும் ஞாயிறு போல் தோன்றி, எம் நோக்கத்திற்கு இணங்கியுள்ள நீ எம்மைத் தேவருலகில் புகுத்த வேண்டும்" - 651 -

10. *உலகில் யாவரும்ஓதன மாதிக ளளித்தும்*
*அலகில்தீர்த்தங்க ளாடியும் வேள்விக ளார்த்து*
*மிலகும்ஆலையப் பணிவிடை புரிந்துமிவ் வாறு*
*குலனிலாவிய பிதிரர்தங் குறையறுக் கின்றார்.*

உலகில் உணவு முதலியன அளித்தும், அளவற்ற தீர்த்தமாடியும், வேள்விகள் மிகச் செய்தும் விளங்கும் திருக்கோயில் தொண்டுகள் செய்தும், இவ்வாறு தன்குலத்துப் பிதிரர்களின் குறைகளை யாவரும் போக்குகின்றனர். - 652 -

11. *எம்மை நீகுறித் தூஇரும்புன லாடிய துளதோ*
*செம்மை யாகிய தானங்கள் செய்தது முளதோ*
*அம்மை பாற்பிரி யார்பணி யாற்றிய துளதோ*
*விம்முநீரிறைத் திட்டது முளது கொல் விளம்பாய்*

"உலகில் பிதிரர் குறை தீர்ப்பவர் செய்வது போல் நீ எம்மை நினைந்து புனித நீர்களில் நீராடியதுண்டா? சிறந்த தானங்கள் செய்தது உண்டா? அம்மையப்பர்க்குத் தொண்டு செய்தது உண்டா. மிக்க நீர் இறைக்கும் கடன் செய்தது உண்டா" - 653 -

12. *பருதி திங்களைப் படஅராத் தொடர்தரு காலும்*
*வரும்உ வாவினும்அயனத்தும் மதிப்பிறப் பினுஞ்சீர்*
*தருமற் றேனைய காலத்துந் தானமா திகள்செய்(து)*
*இருவு பேறெலா மெளிது றுஞ் சூழ்ச்சியுள் அது கேள்.*

"கிரகண காலங்களிலும், காருவா, வெள்ளுவாவிலும், உத்தராயணம் தெட்சிணாயத்திலும், மாதப் பிறப்பிலும் சிறப்புத் தரும் பிற புனித காலங்களிலும் தானம் முதலியன செய்து நன்மைகள் எல்லாம் எளிதில் பெறும் உபாயங்கள் பல உள்ளன. அவற்றுள்" - 654 -

13. *கயையென் றொன்றுள (து)அதனைநீ கதுமென அடுத்தங்*
*கியையும் வண்ணம்நற் பிண்டமா திகள்இனி தியற்றில்*
*துயவு றுங்கிணற் றழிவுறுந் தொல்வினைகழிய*
*வியனெ டுங்கதி யடைகுது மெய்ம்மையீ(து)எனுன்றார்.*

கயை என்று ஒரு தலம் உள்ளது. விரைந்து நீ அதனை அடைந்து, அங்குப் பொருத்தமாக நல்ல பிண்டம் முதலியன இனிது இட்டால், அறிவைத் திரியச் செய்யும் இக்கிணற்றில் கிடந்து அழியும் ஊழ்வினை கழிய, அகன்ற வானுலகம் அடைவோம். உண்மை இது என்றனர் - 655 -

14. *இன்ன வாறுரை யாடுழி இருந்தவப் பேற்றால்*
*வன்ன மாதவன் விழியெதிர்ந் தார்த்தனர் அநேகர்*
*மன்னு சீர்ப்பிதிர்த் தேவர்கள் வதியவு மவருள்*
*துன்னு மேன்மைய ராய்ச்சிலர் துலங்கவுங் கண்டான்.*

இவ்வாறு உரையாடிக் கொண்டிருக்கும் பொழுது, இரக்குவனின் பெருந்தவப்பேறு காரணமாக அவன் காண அநேகர் ஆரவாரித்தனர். அவருள் நிலைபெற்ற சிறப்புடைய பிதிரர்த் தேவர்கள் வாழவும் சிலர் செறிந்த மேன்மையுடையராக விளங்கவும் கண்டான். - 656 -

15. *பிதிரர் தம்முளே மேன்மைய ராய்ச்சிலர் பிறங்கு*
*விதிமற் றுயாதெனத் தேருவான் விழுத்தவன் யோக*
*முதிர்வி ன்நோக்கினன் முன்னவர் குலத்தவர் வில்வப்*
*பதியி னாக்கிய பயந்தினா லயர்ந்தவப் பரிசு.*

பிதிரர் தம்முள்ளே சிலர் மட்டும் மேன்மையராக விளங்க உரிய முறைமைக்குக் காரணம் யாது என்று தனது அனுபவ முதிர்ச்சியால் ஆராய்ந்தவன் அவர் குலத்தவர் வில்வப் பதியில் - பூவாளூரில் செய்த தவப் பயனால் வந்தது அந்த உயர்ந்த நிலை என்று தெளிந்தான். - 657 -

16. *ஓகை மல்கிய வுளத்தின னாய்உ று வரன்றான்*
*ஏகன் வைகிய வில்வகா னகமெனும் பதியின்*
*ஆகுரு மே ன்மைய தேயிது வெனவதி சயித்துச்*
*சோகராய்த்தளர் பிதிரரை நோக்கினன் சொல்வான்.*

உவகை பெருகிய மனத்தனாய் இவர்கள் பெற்றுள்ள மேன்மை, ஒப்பற்றவனாகிய திருமூல நாதர் எழுந்தருளியுள்ள பூவாளூர்ப் பதியால் வந்த மேன்மையே என்று அதிசயித்து, சோகத்துடன் தளர்ந்துள்ள பிதிரரை நோக்கிக் கூறுவானாயினன். - 658 -

17. *தரும தானங்க ளாதிக ள்ஆற்ற நல்தனங்கள்*
*மருவி னேனலன் வரமலி தீர்த்தங்க ளாடல்*
*ஒருவுதாலினேற் (கு)உறாது நுங் களையுயர் கதியின்*
*நிருவு வேன்றவ வலியினா லெனத்தெளித் தெழுந்தான்.*

"தானதருமங்கள் முதலிய செய்ய, நான் பெருஞ்செல்வனல்லன். மேலான தீர்த்தமாட முடமான என்னால் இயலாது. ஆயினும் உங்களை உயர்கதியில் என் தவ வலிமையால் நிறுவுவேன்" என்று கூறிப் புறப்பட்டான். - 659 -

## வேறு

18. *எழுந்த முனிவன் கேமபுரத்தெல்லை யொருசார் அந்தரனை*
*விழுந்து போகக் கண்டுமுனி வெகுண்ட விழும வாச்சிரமத்(து)*
*அழுந்து மிருக தீர்த்தத்தி லாடி யாங்கு வீற்றியிருந்த*
*கொழுந்து மதியார் தம்பூசை குறித்துத் தூய்மை முன்னெய்தி -*

புறப்பட்ட சுந்தரன் கேமபுரத்து எல்லையின் ஒருபக்கம் இருந்த ஆழமான மிருக தீர்த்தத்தில் நீராடி, கண்டு முனிவரைத் தரையில் வீழ்ந்து வணங்கிப் பின் அங்கு வீற்றிருந்த பிறைசூடிய பெம்மானைப் பூசித்து - 660 -

19. *பூவாளூரை விரைந்தடுத்துப் பூனிதர் மலர்த்தாளுற வணங்கி*
*நாவார் மனுக்கள் கணி(து)வுருபால்நண்ணித் தியானித் திருந்திட்டான்*
*சேவரார் கொடியார் சேவடியின் சிலம்பு வாங்கியெறிந்திட்டார்*
*தாவாத் திருமங் கலமேல்பால்துழங்கி விழுந்ததது மாதோ.*

விரைந்து பூவாளூரை அடைந்து, இறைவனது மலர்த்தாள்களில் தன் தலை பொருந்துமாறு வணங்கி, நாவிற்கு அழகிய மந்திரங்களை உருவேற்றி ஒருபால் அமர்ந்து தியானித்து இருந்தான். விடைக் கொடியுடைய பெருமான், தனது சேவடிச் சிலம்பை எடுத்து எறிய அது, புகழ் கெடாத திருமங்கலத்தின் மேற்பால் ஒலி எழுப்பி விழுந்தது. - 661 -

20. *சிலம்பு விழுந்த இடநின்றுஞ் செழுநீர்க் கங்கை யெழுந்தொழுகிற்)(று)*
*அலம்பு மணிநீர்ப் பெருகுங்கங்கையதனோ டெழுந்து கயைதானும்*
*நலந்தந் தருளும் பூவாளூர் நண்ண வில்வ வனநாதர்*
*அலந்த பிதிரர் பொருட்டடுத்த அறவன் றனைக்கூய் அருளுவார்.*

சிலம்பு விழுந்த இடத்திலிருந்து நீர்ப் பெருக்குடைய கங்கை எழுந்து பாய, அலை எறியும தெளிந்த நீர் பெருகும் கங்கையுடன் கயை ஆறும் எழுந்து நலம் தந்தருளும். பூவாளூர் வில்வ வனநாதர், வருந்திய பிதிரர் பொருட்டுத் தன்பால் வந்தவனைக் கூவி - 662 -

21. *அடுத்து நமது மலர்த்தாளை அகத்து ஏ்றிருத்தி வழிபட்டாய்*
*மடுத்த வழிபாட்டினுக்கிரங்கி வடபாலிருந்த சுரநதியும்*
*எடுத்த கயையு மித்தலத்தினெய்துப் பணித்தாலைவந்து*
*தொடுத்த இந்தத்தலத்தினிதோ துன்னுற் றனநீ காண்டியால்*

"இங்குவந்து நமது மலர்த்தாளை உனது அகத்துள் இருத்தி வழிபட்டாய் நீ உட்கொண்ட வழிபாட்டிற்கு இரங்கி வடநாட்டில் இருக்கும் கங்கையும் மிக்க புண்ணியமுடைய கயையும் இத்தலத்தில் வஃர அருளினோம். அவை வந்து புகழ் தொடுத்த இத்தலத்தில் இதோ கலந்து பெருகின நீ காண்க" - 664 -

22. *பாவம் முழுவதுஞ் சிறிதாகப் பண்ணுந் திறந்தாற் பற்குனியென்று*
*ஓவில் பெயரு மித்தலஞ்சே றொலிநீர்க் கங்கை தனக்கெய்துந்*
*தேவர் விழையுங் கயையிந்தச் சிறந்த தலத்தோ டுடன்விரவி*
*மேவும்இனிநீ பிதிர்கடன் விழைந்து புரிதி யெனஉ ரைத்தார்.-*

பாவம் முழுதும் சிறிதாகப் பண்ணும் திறத்தால் பற்குனி என்ற ஒழியாத பெயரும், இத்தலம் அடைந்து ஒலிக்கும் நீர் பெருகும் கங்கைக்கு அமையும். தேவர்கள் விரும்பும் கயை ஆறு சிறந்த இத்தலத்தில் கங்கையுடன் கலந்து பொருந்தும். இனி நீ பிதிரர் கடனை விரும்பிச் செய்க என்று கூறினார். - 664 -

23. *இறைவருளு மொழிகேட்ட இரயிக் குவன்மிக்குள மகிழ்ந்துர்அ*
*நிறை பற்குனியினீராடி நீடும் பிதிரர் கடன் கழித்தான்*
*சிறைசெய்கிணற்றிற் கிடந்தழிதோர் தெய்வ விமான மேற்கொண்டு*
*மறைவல் லறிஞன் விழிகாண வானின் விளங்கத் தோன்றி னார்.*

இறைவன் அருளியது கேட்ட இரயிக்குவன் மிக உளம் மகிழ்ந்து, புனிதம் நிறை பங்குனி நீராடி, மிக்க பிதிரர் பொருட்டுக் கடனியற்றினான். பாழுங்கிணறு சிறை செய்யக் கிடந்து மனம் அழிந்த பிதிரர் அனைவரும் தெய்வ விமானம் ஏறி, மறைவல்ல இரயிக்குவன் காண வானில் விளக்க முறத் தோன்றினர். - 665 -

24. *கண்டு மகிழ்ந்தங் (கு)அடி வணங்கிக் கரங்கள்கூப்பி யெதிர்நின்றாப*
*அண்டர் வியக்கும் பெருந்தவத்தோன்அவனை நோக்கிப் பிதிர்த்தேவர்*
*மண்டு விருப்பினுரை செய்வார் மதலா யரிய பெருந்தவத்தாற்*
*கொண்ட வெமது வினைநீக்கிக் கோதி லாத கதிசேர்த்தாய்.*

கண்டு மகிழ்ந்து அவர்கள் கால்களில் விழுந்து வணங்கி, கைகூப்பி, எதிரே நின்றவனாகிய தேவர்களும் வியக்கும் பெருந்தவத்து இரயிக்குவனை நோக்கி "மகனே உன் அரிய பெரிய தவத்தால் நாங்கள் கொண்டிருந்த ஊழ்வினை நீக்கி எம்மைக் குற்றமற்ற தேவர் பிறப்பில் சேர்ந்தாய்" - 666 -

*25. வாழி வாழி நெடுங்காலம் மண்மே னீநின் குல வாழி*
*ஆழி யெடுத்த கரதலத்தா னறியா னுலகில்சேருமெனக்*
*கேழின் விமான முகைத்திட்டார் கிளர் பேருவகை யொடுமுனிடி வன்*
*னேழை பாகர் திருவடியின் மீட்டும் பூசை யியற்றினான்.*

"நீ மண்ணுலகில் நெடுங்காலம் வாழ்க வாழ்க. நின் குலம் வாழ்க. சக்கரம் ஏந்திய திருமாலும் அறியாத சிவன் உலகில் சேர்கின்றோம்" என்று கூறி ஒளியுடைய விமானத்தைச் செலுத்தினர். கிளர்ந்து எழுந்த பெருமகிழ்ச்சியுடன் இரயிக்குவ முனிவன் அம்மையைப் பாகம் கொண்ட இறைவன் திருவடியில் மீண்டும் பூசனை புரிந்தான். - 667 -

*26. சின்னாள் வில்வ வனத்திருந்து தேவர் பெருமானருள் பெற்றுத்*
*தன்னாச் சிரமத் (து)இனிதேகித் தழைத்த மகிழ்ச்சி யுடன் வாழ்ந்தான்*
*கொன்னா தரவிற் பற்குனி நீர் குடைந்தி யவைப்பாய்அசபிண்டம்*
*மன்னாதரவி ன்இடுவோரும் வானின் வேட்ட கதியடைவார்.*

இவ்வாறு சில நாட்கள் வில்வ வனத்திலிருந்து தேவர் பெருமானின் அருள் பெற்றுத் தனது ஆசிரமத்திற்கு இனிது சென்று செழித்த மகிழ்ச்சியுடன் வாழ்ந்தான். மிக்க அன்புடன் பற்குனி நீரில் நீராடி, பிதிர்க்கடன் இல்லாதாரும் வைப்பு நிதியாக - இடும் பிண்டமாக மிக்க அன்புடன் இடுவோரும் வானுலகில் தாம் விரும்பும் பிறப்புப் பெறுவர். - 668 -

*27. வழங்கும் புனற்பற் குனிநதியின் வரவும் வில்வ வனங்கீர்த்தி*
*துழங்கு கயையின் மேம்பட்ட தகவும விளங்க வெடுத்துரைத்தாம்*
*பழங்கணறுக்கும்ம ஞ்சுளனென் றொருவன் மகளைப் பயந்தபடி*
*ஒழுங்கு மனத்தீர் கேண்மினென வுரைக்கப் புகுந்தானுயர் சூதன்.*

புனிதப் புனல் வழங்கும் பற்குனி யாற்றின் வரவும், வில்வ வனம் புகழ் விளங்கும் கயையை விட மேம்பட்டு விளங்கும் தகுதியும் விளக்கமாக எடுத்துக் கூறினோம். துன்பம் அறுக்கும் மஞ்சுளன் என்று ஒருவன் மகளைப் பெற்ற தன்மையை ஒழுங்கான மனமுடையோரே கேளுங்கள் என்று உயர் சூதமுனிவர் கூறத் தொடங்கினார். - 669 -

கயாபற்குனிச் சருக்க முற்றிற்று

ஆகத்திருவிருத்தம். - 669 -

## 13.மஞ்சுளன் மகப்பெறு சருக்கம்

1. *அஞ்சமும் வன்றியு ம்ஆயிரு வோரு ம்ஆளந்தெட்டா*
*நஞ்சணி கண்டார்கல்யாண புரத்தி ன்நயந்துள்ளான்*
*மஞ்சுள னென்ற வியற்பெய ராண்பின் வருணத்தான்*
*எஞ்சலி லாத விரும்பொருளாக்கமியைந்துள்ளான்.*

அன்னமும் பன்றியுமாகிய நான்முகனும் திருமாலும் ஆகிய இருவரின் தேடுதலுக்கு எட்டாத நஞ்சணி கண்டரின் கல்யாண புரத்தில் விரும்பி வாழ்கின்றவன் மஞ்சுளன் என்ற இயற் பெயருடையான். அவன் வணிகன். குறைவற்ற பெருஞ் செல்வ உயர்வு பெற்றவன். - 670 -

2. *மாதொரு பாகர் மலர்க்கழ லன்றி வணங்காத*
*மேதகு பத்தியன் மெய்யுணர் சிந்தையன் வெண்ணீறுஞ்*
*சாதன மும்பொரு ளென்று தழீஇத்தள ராவேத*
*நீதியி ன்ஒ ழுக் கத்தின் வழாவகை நின்றுள்ளான்.*

இவன் அம்மையப்பன் மலர்க்கழலன்றிப் பிறரை வணங்காத பத்திமையன்; மெய்யுணந்த மனத்தன்; வெண்ணீறும் உருத்திராக்கமும் உறுதிப் பொருள்கள் என்று அணிந்து வேதநீதி தளராத ஒழுக்கத்தில் வழுவாது நிற்கின்றவன். - 671 -

3. *இத்தகு மஞ்சுள ன்இன் புறு நன்மனை வாழ்க்கையாள்*
*புத்தமிழ் தன்னவள் காந்தி மதிப்பெயர் பூண்டுள்ளாள்*
*மெத்திய கற்பினருந்ததி நாண விளங்குற்றாள்*
*கைத்தலி லாதவன் பாலிவர் வாழ்தரு காலத்து.*

இத்தகைய மஞ்சுளனின் இன்புறு இல்லற வாழ்க்கையுடையவளும், புதிய அமுதம் போன்றவளும், காந்திமதி என்ற பெயர் பெற்றவளும், பிறர் பாராட்டும் கற்புடைய அருந்ததியும் நாணுமாறு விளங்குகின்றவளும், மனக் கசப்பு இல்லாதவளும் ஆகிய இவள், அவனோடு வாழுங் காலத்தில் - 672 -

### வேறு

4. *மக்கட் பே றின்மையினால் வரும்பரிவை மஞ்சுளன்றான்*
*முக்கண்தா தையைப்பணிந்து முடித்து மெனப்பூவாளூர்*
*நக்கர்க்காம் பணிவிடை கள்நயந் தாற்றி யஞ்செழுத்தும்*
*பொக்கத்தீ வினையோடப் புகன்றிருந்து கனிக்கின்றான்.*

மக்கள்பேறு இன்மையால் வரும் வருத்தத்தை மஞ்சுளன் முக்கண் தந்தையைப் பணிந்து தீர்த்துக் கொள்வோம் என்று பூவாளூர்ச் சிவபெருமானுக்கு ஆன தொண்டுகளை விருப்பத்துடன் செய்து, தனது மிகுதியான தீவினை ஓடவேண்டித் திருவைந்தெழுத்தைச் சொல்லி மனத்தில் அதனைக் கணித்தான். - 673 -

5. *செவ்வண்ணத் திருமேனித் திருமூல நாதர்பால்*
*இவ்வண்ண மஞ்சுளன் மிக் கிரும்பணிகள் செய்திருப்பத்*
*தெவ்வண்ணப் புரம்பொடியச் சிரித்தவரைக் கயிலையிடைக்*
*கைவண்ண மலர்கூப்பிக் கழல்வணங்கி யுமைமாது.*

செவ்வானன்ன திருமேனியுடைய திருமூலநாதர் பால் மஞ்சுளன் இவ்வாறு மிக்கதான பெரும்பணிகள் செய்து கொண்டிருக்கும் நாளில், பகைவரின் அழகிய முப்புரங்களையும் எரிக்கச் சிரித்தவரை கயிலையில் உமைமாது கையாகிய அழகிய மலர்களைக் குவித்து வணங்கி, - 674 -

6. *முருகுயிர்நந் தனவனத்து மொய்யழகு காண்பதற்கு*
*மருவுமுளம் வேட்டதென வணங்கும்இடு கிடைதுவளத்*
*திருவின்மணி யோவியம்வாய் திறந்ததென வாய்மலர்த்திப்*
*பெருகுகட லமிழ்தனைய பெருஞ்சுவைச்சொல் வாவிரந்தாள்.* -

"தேன்பிலிற்றும் நந்தவனத்தில் மொய்த்துள்ள அழகினைக் காண, அதனை மருவி என் உள்ளம் விரும்புகிறது" என்று வணங்கும் நுண்ணிய இடுப்புத்துவள, தெய்வத்தன்மை வாய்ந்த அழகிய ஓவியம் வாய்திறந்து பாற்கடலில் பெருகிய அமுதம் போன்று பெருஞ் சுவையுடைய சொற்களைக் கூறினாள். - 675 -

7. *வெள்ளிவரை வீற்றிருக்கும் விமலனா ர்அதற்கிசைந்து*
*கள்ளுயிர்க்கு மலர்க்கூந்தற் கவுரியொடு விடைமேற்கொண்டு*
*அள்ளிலைவேற் கணநாத ரருகுவர வழியியங்கி*
*யுள்ள மகிழ்ச் சியின்அடுத்தா ரோங்கியநந் தனவனத்தை.*

இமயமலையில் வீற்றிருக்கும் விமலன் அதற்கு இசைந்து, தேன் பிலிற்றும் மலர்கள் சூடிய கூந்தலுடைய உமையவளுடன் விடை ஏறி, கூரிய இலை வடிவான முத்தலைச் சூலம் ஏந்திய பூதகணத் தலைவர்கள் உடன் அருகில் வரப் புறப்பட்டு உள்ள மகிழ்வுடன் உயர்ந்த நந்தவனம் சேர்ந்தார். - 676 -

## வேறு

8. *பொன்ம லர்ந்துபொன் காய்க்கு மரங்களும்*
*மின்ம லர்ந்து விளங்கிழை யாடைகள்*
*தென்ம லர்ந்த சினைதொறுங் காய்த்திடு*
*நன்ம ரங்களு நண்ணுமோர் பாலெலாம்.*

அங்கு மலர்கள் அழகுற மலர்ந்து பொன்னைக் காய்க்கும் மரங்களும், மின்னல் போல் மலர்ந்து விளங்கும் சரிகை வேலைப் பாடமைந்த ஆடைகளைக் தேனடைகள் மலர்ந்த கிளைகள் தோறும் காய்க்கும் மரங்களும் ஒருபக்கம் பொருந்தியிருந்தன. - 677-

9. *மணிகள் காய்க்கு மரங்களும் பல்வகை*
*அணிகள் காய்க்கு மரங்களு ம்அறெனுந்*
*தணிவில் வான்சுவை தாங்குநா லுண்டியும்*
*பணிவின் வீசு மரமுமோர் பாலெலாம்.*

நவமணிகள் காய்க்கும் மரங்களும், பலவகை அணிகலன்கள் காய்க்கும் மரங்களும் குறையாத ஆறு சுவை கொண்ட நால்வகை உணவைப் பணிவுடன் வழங்கும் மரங்களும் ஒருபக்க மிகுந்தன. - 678 -

10. *தேவரைத்தருந் தெய்வ மரங்களுந்*
*தேவி யர்த்தருந் தெய்வ மரங்களு*
*ஓவிலாதிரு வோரையு முய்த்திடுந்*
*தாவி வாத மரமுமோர் சாரெலாம்.*

தேவர்களைத் தரும் மரங்களும், அவர்களது மனைவியரைத் தரு மரங்களும், இடைவிடாது இவ்விரு சாராரையும் இன்ப நுகர்ச்சியில் ஈடுபடுத்தும் குறைவில்லாத மரங்களும் ஒரு பக்கம் இருந்தன. - 679 -

11. *தமனி யச்செழு வண்டினந் தாதுணத்*
*தமனி யப்புதுத் தேமலர் தாம்அவர்ந்*
*இமிழ்ம ணந்திசை யெட்டும் விராய்மது*
*உமிழ்ம ரங்களு மோங்குமோர் சாரெலாம்.*

பொன்வண்டுக் கூட்டம், பூந்தாது உண்ண, பொன் ஒத்த அழகிய தேன்கொண்ட மலர்கள் மலர்ந்து மிக்க மணத்தை எட்டுத்திசைகளிலும் கலந்து தேனை வெளியிடும் மரங்களும் ஒருபால் இருந்தன. - 680 -

*12. பஞ்ச ணையம ளிக்குலம் பள்ளியின்*
*மஞ்சர்இின் புறவைக்கு மரங்களுந்*
*துஞ்சி ன்ஆயிர் தோற்று மரங்களும்*
*எஞ்ச வின்றி யிணர்க்குமோர் சாரெலாம்.*

பஞ்சு மெத்தைகளாகிய படுக்கைகளில் மைந்தர்கள் படுத்து இன்புறத்தங்கும் மரங்களும், ஒருவர் இறப்பாராயின் அவர்க்கு ஆருயிரைத் தோற்றுவிக்கும் மரங்களும் குறைவின்றி ஒருபால் பூங்கொத்துகளைப் பூக்கும். *- 681 -*

*13. அதிச யம்பல வாக்கு மரங்களுங்*
*கதிகள் பற்பல காட்டு மரங்களும்*
*புதிய போகம் புணர்த்து மரங்களு*
*நிதிம ரங்களு நீடுமோர் சாரெலாம்.*

அதிசயங்கள் பல உண்டாக்கும் மரங்களும், நற்கதிகள் காட்டும் பல மரங்களும், புதிய இன்ப அனுபவங்களைக் கூட்டும் மரங்களும் செல்வம் தரும் மரங்களும் ஒருபால் இருந்தன. *- 682 -*

*14. காமர் வல்லி கலந்த மரங்களுந்*
*தூம ணிச்சிறை துன்றிய புட்குலம்*
*ஏம மல்க விருக்கு மரங்களுந்*
*தேம லர்த்திரள் சிந்துமோர் சாரெலாம்.*

அழகிய கொடிகள் படர்ந்தனவாய், தூய அழகிய சிறகுடைய பறவைகள் பாதுகாப்புப் பெருக வாழ்ந்த தேன் பொருந்திய மலர்சிந்தும் மரங்களும் ஒருபால் இருந்தன. *- 683 -*

*15. ஆட கப்படி யான்ற தடாகமு*
*ஆட கத்தி னவிர்மண லெக்கரும்*
*மாட கத்தினன் றாக்கிய குன்றமும்*
*பீடு மல்கிப் பிறங்குமோர் சாரெலாம்.*

பொன்னாலான படிக்கட்டுகள் அமைந்த குளங்களும், பொன்னின் துகள்போல் ஒளிரும் எக்கர் மணலும், பக்கத்தில் அதன்கண் நன்முறையில் கட்டப்பெற்ற செய்குன்றமும் பெருமை மிகுந்து ஒரு பக்கம் விளங்கும். *- 684 -*

## வேறு

16. அளவில் வளமின் ணைந்துவன்றி யாற்றுங் கருமந் தனக்கியைய
வளமிக் கெவர்க்கு மெஞ்ஞான்றும் வழங்கா நிற்கு நந்தனத்தை
விளர்வல் விடையூர்ந்(து)இனிதடுத்த விமலர் காட்ட வவ்வனத்தின்
உளவெவ் வளனு நோக்கினா ளுலக முயிர்த்த மலைமடந்தை.

இவ்வாறு அளவற்ற வளம் மிகுந்த, செய்யும் செயல் தனக்குப் பொருந்த வளம் மிகுந்த எவர்க்கும் எக்காலத்தும் அவர் விரும்புவதை வழங்கும் நந்தவனத்தை வெண்மையான வலியவிடையூர்ந்து இனிது அடைந்த விமலர் அவைகளைக் காட்ட அவ்வனத்தில் உள்ள எல்லா வளங்களையும் உலகை ஈன்ற பார்வதி கண்டாள். - 685 -

17. பெருமை வளர்நந் தனவனத்தின் பெருமை நோக்கி மகிழ்ந்தற்பின்
முருகு விரியு மலர்க்கூந்தன் முதல்வி யொருசோ தனைப்பொருட்டு
மருமென் மலர்ப்பூம் பசுஞ்சினை யோர்மரத்தை நோக்கி மற்றெனக்குப்
பொருவில் வனப்பி னொருமகளைப் பொற்ப வழங்கு வாயென்றாள்.

பெருமை வளரும் நந்தவனத்தின் சிறப்புகளைக் கண்டு மகிழ்ந்த பிறகு, மணம் பரப்பும் மலர் சூடிய கூந்தலுடைய உமையவள், ஒரு சோதனை செய்ய விரும்பி, மணக்கும் மென்மையான மலர்களையுடைய அழகிய பசிய கிளைகளையுடைய ஒரு மரத்தை நோக்கி, "எனக்கு ஒப்பற்ற அழகுடைய ஒரு மகளைப் பொலிவு பெற வழங்குக" என்றாள். - 686 -

18. பொன்னஞ் சிலம்பின் மடமாது புகன்ற மணிவாய் மொழியெழுமுன்
மன்னுந் தளிர்க்கற் பகலதைதன் மருங்கு வேறொன் றுயிர்த்தது போல்
துன் னுஞ் சினைமென் மரமதுதான் சுரமா மகளர் நறுமுறுப்ப
மின்னுங் கலங்க ளுருக்கதிர்ப்ப விளங்கோர் மகளைக் கொடுத்ததே.

பொன்மலை ஈன்ற உமையாள் கூறி முடிக்குமுன், பெருமை பொருந்திய தளிர்களையுடைய கற்பகக்கொடி வேறு ஒன்று தன் பக்கத்தில் ஈன்றதுபோல் செறிந்த கிளைகளையுடைய அந்த மென்மையான மரம், தேவமகளிரும் பொறாமைப்பட, ஒளிரும் அணிகலன்களுடன் உருவம் ஒளிவீச விளங்கும் ஒரு மகளைத் தந்தது. - 687 -

## வேறு

*19. கார்பூத்த நறுகுழலு மதிநுதலுங் கயல்விழியுங் கனிச்செவ்வாயும்*
*சீர்பூத்த பணைத்தோளுந் தளிர்க்கர முங்குவி முலையுஞ் சிறந்த கங்கை*
*நீர்பூத்த சுழியனைய வுந்தியும்பே ரல்குலுநீள் கதலி வென்ற*
*வேர்பூத்த குறங்குமலர்ச் சீறடியு ம்அழகெறிப்ப வெதிரே நின்றாள்*

அவள் மேகமே பூத்தது போன்ற கரிய கூந்தலும், பிறை நெற்றியும், கொன்றைவிழியும், கனிகள் ஒத்த சிவந்த இதழ்களும் சிறப்புடைய திரண்ட தோள்களும், தளிர் ஒத்த கைகளும், குவிந்த முலைகளும் சிறந்த கங்கை நீரில் தோன்றிய சுழியினை ஒத்த கொம்பூழும் பெரிய அல்குலும் உயரமான வாழையை வென்ற அழகுபூத்த தொடைகளும், மலர் ஒத்த சிறிய பாதங்களுமாக அழகுற எதிரே நின்றாள். - 688 -

*20. கற்பகத்தண் மரமுயிர்த்த கன்னியெதிர் நிற்றலொடுங் கதிர்த்த*
*செம்பொன்*
*வெற்புயிர்த்த மகள்நோக்கித் தனக்கொருமா மகளெனவே*
*விரும்பிச் சென்று*
*பொற்பவிரு கரத்தெடுத்துப் பாலரும்பமுலைவைத்துப் புல்கி வாயின்*
*அற்பினொடு முத்தாடி யுச்சியுமோந் தகமகிழ்ச்சி யார்ந்து பின்னர்.*

கற்பகம் ஆகிய தண்ணிய மரம் ஈன்ற கன்னி எதிரே நிற்றலும், ஒளிரும் செம்பொன்மலை பெற்ற பார்வதி கண்டு, தனக்கு வாய்த்த ஒரு மகளாக விரும்பிச் சென்று இருகரத்தாலும் அழகுற எடுத்து, தனது முலை தந்து, மார்புடன் இறுக அணைத்து, முத்தமிட்டு, உச்சி மோந்து உள்ளம் மகிழ்ச்சியடைந்த பிறகு, - 689 -

## வேறு

*21. சுந்தர மிகும்தவத் தோகைக் கோர்பெயர்*
*சந்திர வதியெனத் தரித்து நின்றனள்*
*எந்தரத் தமரருக் கிரங்கி யாலமுண்*
*கந்தரத் திறைவருங் கடைக்க ணித்தனர்.*

தவத்தால் பிறந்த அழகுமிக்க மயில் ஒத்தவளுக்குச் சந்திரமதி என்று ஒரு பெயரிட்டாள். வானுலகத் தேவர்க்கு இரங்கி நஞ்சுண்ட இறைவன் தனது கடைக்கண் சாத்தியருளினார். - 690 -

22. உமையொடு கற்பக முயிர்த்த தையலை
இமிலெறு ழ்ஏற்றின்மே லேற்றிக் கொண்டு போய்த்
தம(து)அருட் கோயிலைச் சார்ந்து வைகினார்
இமையவ ரனைவரு இறைஞ்சி யேத்தவே.

உமையவளுடன், கற்பகமரம் ஈன்ற சந்திரவதியை இனிய வலிய விடைமேல் ஏற்றிக்கொண்டு போய்த் தேவர்கள் வணங்கிப் போற்றத் தமது அருட்கோயிலை அடைந்து வாழ்ந்தார். - 691 -

23. சந்திர வதியெனுந் தைய லன்றுதொட் (டு)
அந்தமி லிருமுது குரவர்க் (கு)அன்பினாற்
கொந்தவிழ் மலர்பல கொய்து நல்குபு
வந்தனை புரிந்துடன் வதிய லுற்றள்.

அன்று முதல் சந்திரவதி இறப்பற்ற தமது பெற்றோர்க்கு அன்பினால் கொத்தாக மலர்ந்த மலர் பல கொய்து கொடுத்து வணங்கி வாழ்ந்தாள். - 692 -

24. ஒருதின முன்புபோல்உவகை மல்குற
இருமுது குரவர்க்கு மிணர்த்த பூமலர்
தருவது பொருட்டிருந் தாதுத் தேமலர்
மருவுமுய் யானநீள் வனத்தைச் சார்ந்தனள்.

ஒருநாள் முன்புபோல் மகிழ்ச்சி மிக, பெற்றோர்க்குக் கொத்தான மென்மையான மலர் தரமிக்க பூந்தாதுடைய தெய்வத்தன்மையுடைய மலர்கள் உள்ள நீண்ட உய்யான வனத்தைச் சார்ந்தாள். - 693 -

### வேறு

25. தம்பிரான் பணிவிடையில்தவறாத கணநாதன்
வம்பில்வா னவரேத்து மணிசுட னெனும்பெயரான்
னிம்பர்வாழ் மஞ்சுளன்ற னிருந்தவமுற் றிய திறத்தால்
அம்பர்நீ ளுய்யானத் (து)அவனுமடுத் தானன்றே

தமக்குத் தாமே தலைவனாகிய சிவபெருமானின் பணிவிடைகளில் தவறாத கணநாதன் ஒருவன், தீச்சொல் இல்லாத தேவர்கள் ஏத்தும் மணிசுடன் என்ற பெயருடையவன், இவ்வுலகில் வாழும் மஞ்சுளனின் பெருந்தவம் முற்றிய காரணத்தால், வானுலகில் உள்ள நீண்ட உய்யான வனத்தை அடைந்தான். - 694 -

26. *பண்டைவிதி தலைக்கூட்டப் படர்ந்(து)அடுத்த மணிகூடன்*
*கண்டனன்சந் திரவதியைக் கற்பகப்பூங் கொம்பனைய*
*தொண்டைநறுஞ் செங்கனிவாய்த் தூமுறுவற் பொற்றொடியும்*
*மண்டிஎழுங் காதல்மிக மணிகூடன் றனைக் கண்டாள்.*

முன்னாளைய ஊழ்வினை கூட்டுவிக்கச் சென்று நெருங்கிய மணிகூடன் சந்திரவதியைக் கண்டான். கற்பகம் பூங்கொம்பு ஒத்தவளும், கொவ்வைக் கனிபோல் சிவந்த வாய் இதழ்கள் கொண்டவளும், தூய புன்முறுவல் பூப்பவளும் ஆகிய பொற்கொடியாகிய சந்திரவதியிக்கு எழும் காதல் மிக மணிகூடனைக் கண்டாள். - 695 -

27. *மாரவே ளதுநோக்கி மலர்வாளி தொடுத்திட்டான்*
*வாரமார் இருவோரு மலர்வாளிக் கிலக்கமாய்ச்*
*சோர நாண் மடமாதி தொலைவெய்த அறிவாதி*
*தீராமட் டார்அரிது சிந்தையினை நிறுத்தினார்.*

இதனைக் கண்ட மன்மதன் மலரம்புகளை ஏவினான். அன்பு இணைந்த இருவரும் அவனது மலரம்புகட்கு இலக்கமாகி நாண், மடம் முதலியன தொலைய அறிவு முதலியன மட்டும் தீரா தவராய்த் தம் மனத்தை நிலைப்படுத்தினர். - 696 -

28. *அழிந்தவுளம் புறந்தோற்றா (து)ஆற்றலினாற் கரந்துபோய்ப்*
*பொழிந்துமதுப் பூங்கொன்றைப் புனிதர்திரு வடிபணிந்தார்*
*குழிந்தவிழிக் கணத்தினொடு கூத்தயரு மாத்தனார்*
*மொழிந்தனர்மற் றிவர்கருத்தின் முற்றியமை பலவோர்ந்தே.*

காதல் கொண்டது பிறர் அறியாதவாறு மறைத்துச் சென்று தேன் பொழியும் அழகிய கொன்றை சூடியவர் ஆகிய புனிதர் திருவடி பணிந்தனர் உள் குழிந்த விழிப் பூதர் கூட்டத்துடன் கூத்தாடும் நண்பராகிய சிவபெருமான், இந்த இருவர் கருத்தும் காதலில் முற்றியதை ஆய்ந்தறிந்து - 697 -

29. *நீயிர்மத வேள்கணைக்கு நிறையழிந்தீ ரிக்கயிலை*
*மாயிருமுத் திலையடுத்தோர் விதியின்ற வரைப்பாகும்*
*மேயினைவின் கதிகளின்நும் மெய்யருள்சே ராததனாற்*
*போயினிது பிறந்திடுக புரைதவிர்க்கும் பூமியின்கண்.*

"நீங்கள் இருவரும் மன்மதன் அம்புக்கு மன உறுதி தளர்ந்தீர். இக்கயிலை மாபெரும் முத்தியைப் பொருந்தியோர் வாழ்கின்ற வரையறை உடையது. பொருந்திய விண்ணுலகப் பிறப்புகளில் நம் மெய்யான அருள் பொருந்தாது எனவே இருவரும் போய், குற்றம் தவிர்க்கும் பூமியில் இனிது பிறந்திடுக" - 698 -

30. *நுங்கள்கருத் தினையாங்கு நூல்வழியே கல்யாண*
*மங்கலத்தால் முடிக்கின்றோம் மணிசூடன் பழமலையிற்*
*தங்கியநம் மருட்பத்தன் சந்திரகுத் தனுக்குரிய*
*வங்கலுழ்மே னியின்இளையென் பாளகட் டிற் றோன்றுகவே.*

உங்கள் கருத்தை அங்கு நூல்கள் கூறும் முறைப்படி கல்யாண மங்கலம் வழியே நிறைவேற்றி வைப்போம். பழமலையில் வாழும் சந்திரசூடனின் மனைவி இளை என்பவள் வயிற்றில் மணிசூடன் தோன்றுக. - 699 -

31. *விளங்கிழைச்சந் திரவதிநீ மெய்வளர்பூ வாளூரிற்*
*துளங்கலிலா மனத்தெம்மைத் தொழுதேத்து மஞ்சுளன்றன்*
*களங்கமிலாக் கற்புடைய காந்திரமதி தன் வயிற்றில்*
*வளங்குலவத் தோன்றுகவல் விரைந்திடுமி னெனவிடுத்தார்.*

அழகு விளங்கும் சந்திரவதியாகிய நீ மெய்ஞ்ஞானம் வளரும் பூவாளூரில் நிலைகுலையாத மனத்துடன் என்னைத் தொழுது ஏத்துகிற மஞ்சுளன் என்கிறவனின் களங்கமில்லாக் கற்புடைய காந்திமதியின் வயிற்றில் வளங்கள் பொருந்த தோன்றுக. மிக விரைந்து செல்லுங்கள் என்று அனுப்பினார். - 700 -

32. *ஆறொன்று சடைப்பெருமா ன்ஆணைவிலைக் கரிதெனவே*
*வேறொன்று மிரவாமை விருத்தகிரி யிடையவர்பாற்*
*பேறொன்று மணிசூடன் பிறந்தனன் சந் திரகுத்தன்*
*தேறொன்று பெயரதுசந் திரசூட னெனத் தெரித்தான்.*

கங்கையாறு சூடிய சடையுடையவனின் ஆணை விலக்குதற்கு அரிது. ஆதலின் வேறு ஒன்றும் வேண்டாமல், பழமலையில் இன்றைய விருத்தாசலம் சந்திரகுத்தன் இளை இருவர்க்கும் மணிசூடன் பிறந்தான். அவர்க்குச் சந்திரசூடன் என்னும் பெயரிடான். - 701 -

33. *பகையுறவு தெரிவிக்கும் பழமறையா திகள்பயின்று*
*வகைபெறுநல் லொழுக்கத்தின் வளர்ந்தனன்சந் திரகூடன்*
*முகைநகைச்சந் திரவதியு ம்மொய்யெழிற்பூ வாளுரிற்*
*தகைபெருமஞ் சுளன் மனைவி காந்திமதி தர வளர்ந்தாள்.*

வாழ்வுக்குப்பகை, உறவு ஆகியன கூறும் பழைய மறை முதலியன பயிற்று, வகையான நல்லொழுக்கத்துடன் சந்திரகூடன் வளர்ந்தான். முல்லை மொட்டுக்கள் போன்ற பற்களையுடைய சந்திரவதியை மஞ்சுளன் மனைவி காந்திமதி ஈன்றடுத்து வளர்த்தாள். - 702 -

34. *குமுதமல ரெனக்காந்தி கொழிந்தொளிரு முருநோக்கிக்*
*குமுதநறுஞ் செங்கனிவாய்க் கோற்றொடிக்கு மஞ்சுளன்றான்*
*குமுதையெனப் பெயரிட்டான் குழப்பருவத் தியல்பொழியக்*
*குமுதையுநல் லொழுக்கத்தின் கொழுந்துபோல் வளர்கின்றாள்.*

செங்குமுதமலர் போன்று காந்திமதி செழித்து ஒளிவீசும் உருவம் கண்டு, குமுதமலர் மணக்கும் செங்காயுடைய திரண்டவளையல் அணிந்தவளுக்குக் குமுதை என்று மஞ்சுளன் பெயரிட்டான். அவள் குழந்தைப் பருவ இயல்பு ஒழிந்து நல்லொழுக்கத்தின் கொழுந்துபோல் வளர்கின்றாள். - 703 -

35. *மாதவத்தால் மஞ்சுளன்பெண் மகப்பயந்த வாறுரைத்தாம்*
*கோதகன்ற முனிவரர்காள் குணமிகுசந்திர கூடன்*
*நீதியினால் வழிபட்ட நெறியுரைத்தும் கேண்மினென*
*ஆதரவாற் சூதமுனி யருந்தவர்க்கு மொழியுமால்.*

மாதவத்தால் மஞ்சுளன் பெண்மகளினைப் பெற்றெடுத்தவாறு கூறினோம். குற்றமற்ற முனிவர்களே, குணம்மிகுந்த சந்திரகூடன் முறைப்படி வழிபாடு செய்த முறை கூறுகிறேன் கேளுங்கள் என்று அன்புடன் அருந்தவர்க்குச் சூதமுனிவர் கூறினார். - 704 -

மஞ்சுளன் மகப்பேறு சருக்க முற்றிற்று.
*ஆகவிருத்தம் - 704-*

## 14. சந்திரகூடன் வழிபடுசருக்கம்

1. *அமுத மென்மொழி யணிநடை மயிலிளஞ் சாயற்*
*குமுதை யென்பவள் குழப்பரு வத்(து)இயல்ஒழிந்து*
*தமர்க ளிப்புறப் பேதைமை சார்ந்(து)அது தணந்திட் (டு)*
*உமிழ்ம ணச்செழுமுகைபொருஉம் பெ(டு)தும்பையுற் றனளால்*

அமுதம் போன்ற மென்மையான மொழியும்; அழகு நடையும், இளமயிலின் சாயலும் கொண்ட, குமுதை, குழவிப்பருவத்து இயல்புகள் ஒழிந்து, தம்மவர் மகிழப் பேதைப் பருவம் சார்ந்து அழகு போய் மணம் வெளிப்படுத்தும் முழுமையான மொட்டுப் பருவம் ஆகிய பதுமைப்பருவம் அடைந்தாள். - 705 -

2 *மணஞ்செய் காலந்தன் மகட்குவந் தடுத்தமை நோக்கிக்*
*குணங்க ளாதியா லொத்தநற் குமரனையிவட்குப்*
*பிணங்கு றாவகை யாங்ஙனம் பெறுகுது மென்ன*
*அணங்கி னாறுள ம்அருந்தவ மாற்றுமஞ்சுளன்றான்.*

தன்மகளுக்கு மணம் செய்யும் காலம் வந்துவிட்டதை, அருந்தவாம் செய்த மஞ்சுளன் கண்டு, குணங்கள் முதலிவற்றால் இவளுக்கு ஒத்த ஆண்மகனை இவள் பிணங்காதவாறு எங்ஙனம் பெறுவோம் என்று வருந்தினார். - 706 -

3 *பரிவினோடவ ன்இருக்குநா ளொருதினம் பரந்த*
*இரவி ன்நீள்ணைப் பள்ளியி ன்இருந்துயி லுறுங்கால்*
*விரவு சீர்க்கன வத்திடை மேவியங் குரைப்பார்*
*தெரிய வோரடி யாரெனத் திருமூல நாதர்.*

இவ்வருத்தத்துடன் அவன் இருக்கும் நாளில் ஒரு நாள் அகன்ற நீண்ட மெத்தைப்படுக்கையில் ஆழ்ந்து உறங்கும் போது சிறப்பான கனவில் திருமூலநாதர் ஓர் அடியாராக வந்து பின்வருமாறு கூறினார். - 707 -

4 *மஞ்சு ளாவெழில் வாய்ந்தநின் மகட்கு நே ரான*
*விஞ்சு பேரெழிற் குமரனை விரையவே தருதும்*
*நெஞ்சுள்மாழ்கலை நீயென உரைத்து நீங்கிச்*
*செஞ்ச வேவளர் வில்வமு லத்தினைச் சேர்ந்தார்.*

"மஞ்சுளா, நீ மனம்வருந்தாதே உன் அழகிய மகளுக்கு ஒத்த அவளை விஞ்சிய பேரழகுடைய குமரனை விரைந்து தருகிறோம்" என்று கூறி நீங்கி செம்மையான சிறப்புடைய வில்வமரத்தடியை அடைந்தார். - 708-

5 *துயிலு ணர்ந்தபின் கனவினை நனவெனத் துணிந்தே*
*அயில்கொள் சூலத்த ரருளிதோ வெனவதிசயித்துக்*
*குயிலின் மென்மொழிக் கோற்றொடி மனைவிக்குக் கூறிச்*
*செயிரி லாதவ னிருந்தனன் பணிவிடை செய்து.*

விழித்தவுடன் கனவினை நனவாகவே எண்ணிய குற்றமில்லாதவன், கூர்மையான சூலம் ஏந்தியவர் அருள் இது என்று அதிசயத்துக் குயில்போன்ற மென் மொழியுடன் திரண்ட வளையல் அணிந்த தன் மனைவிக்கு அதனைக் கூறி இறைபணி செய்து வாழ்ந்தான். - 709 -

6. வில்வ மூலத்தி லிருந்தருள் விமலனார் விளம்ப
நல்ல வாய்மொழி கேட்டி வர் நயந்தன ரிருப்பச்
செல்வ நீடிய சந்திர சூட னுஞ் செயிர் தீர்
கல்வி கேள்வியின் முதிர்ந்தனன் காளையாய் வளர்ந்தான்.

வில்வமரத்தடியில் இருந்தவராகிய விமலன் கூறிய அந்த நல்ல வாய்மொழியை விரும்பி இவர்கள் இருக்க; செல்வம் மிக்க சந்திரசூடன் குற்றமற்ற கல்வி கேள்விகளில் முதிர்ந்து காளைப் பருவமடைந்தான். - 710 -

7. விருத்த மால்வரை மேவிய வேதநா யகனே
பெருத்த வான்பொரு ளென(டு)வ பேணுமார் வத்தோ(டு)
டருத்த மீட்டுதன் குலத்தினனோ டியைந்தஆர் வமுங்கொண்
டொருத்த னேயிரு பொருளுக்கு மிட மென வுயர்ந்தான்.

பழமலையில் எழுந்தருளிய வேதநாயகன் தான் மிகப்பெரிய மேலான பொருள் என்று அவனைப் பேணும் ஆர்வமுடன், செல்வம் ஈட்டும் தன் குலத்தோடு பொருந்திய ஆர்வமும் கொண்டு, பழமலைநாதனே திருவருளுக்கும், செல்வத்திற்கும் இடமாவான் என்று வாழ்ந்து உயர்ந்தான். - 711 -

8. மாதி ரந்தொறுஞ் சென்றுவண் பொருள்பல ஈட்டிப்
போது வானொரு தினம் பொழிற் கதிர்மணிப் பவளஞ்
சீத நித்திலம் வாம்பரித் திரள் இனக்கரிகள்
ஆதிவிற்பதற் கடுத்தனன் கேமமா புரமே.

திசைதோறும் சென்று வளமான பொருள் பலவும் சம்பாதித்து வருகின்றவன் ஒருநாள் ஒளியுடைய மணிகள் பவளம், குளிர்ந்த ஒளியுடைய முத்து, தாவிச் செல்லும் குதிரைக் கூட்டம், யானைகள் முதலியன விற்பதற்குப் பொழில் சூழ்ந்த கேமாபுரம் அடைந்தான். - 712 -

9. பொருள்கள் விற்றவ ன்னஞ்சிய பொருள்விலை செயவுங்
கருணை நாயகன் காமரு சேவடி தொழவும்
மருவு பல்பரி சனத்தொடும் வழிநடைக் கொண்டு
பெருகு மிழைகையி னடுத்தனன் பிறங்குபூ வானூர்.

விற்றலைபோக எஞ்சியவற்றை விற்கவும், கருணைத் தலைவனாகிய இறைவனின் விருப்பத்தக்க திருவடியை வணங்கவும் தன்னைப் பொருந்திய பரிசனத்துடன் வழிநடந்து, பெருகும் மகிழ்ச்சியுடன் பூவாளூரடைந்தான். - 713 -

10. ஒழுகு பற்குனி யாற்றினையுற்(று)இரும் புனலின்
முழுகி நீர்க்கட னாதிகள் முறையுளி யியற்றிப்
பழுதி லாத்திருக் கோயிலைப் பண்பொடு மடுத்துத்
தொழுது தாழ்ந்துசூழ்ந் தேத்தினான் சோதிநாயகனை.

இடையறாது ஓடும் பற்குனியாற்றை அடைந்து, மிகுநீலல் நீராடி நீர்க்கடன் முதலியன முறைப்படி செய்து, குற்றமற்ற திருக்கோயிலை வலம்வந்து ஒளிவடிவானவனைக் கைகூப்பி நிலம்படிந்து வணங்கி ஏத்தினான். - 714 -

11. கண்டு ளார்வினை யறுக்குங்கல் யாணவான் சிகரத்(து)
அண்டர் நாதனைத் திருமூல நாதனை யால
முண்ட நீலமா மிடற்றனை யுணர்விறந் துயிரிற்
கொண்டு நின்றுகண் ணீருகக் குழைந்(து)உளங் கரைந்தான்.

தன்னைக் கண்டவர்களின் ஊழ்வினையை அறுக்கும் உயரமான கல்யாண சிகரத்தில் எழுந்தருளியுள்ள அண்டத்துத் தலைவனை, திருமூலநாதனை விடம் அடக்கிய சிறந்த நீல மிடற்றனைத் தனது உலகஉணர்வுகள் மாள உயிரில் எழுந்தருளச் செய்து மகிழ்ச்சிக் கண்ணீர் பெருகக் குழைந்து வணங்கி உள்ளம் கரைந்தான். -715 -

12. நெடிது நின்(று)அவ ண்அரிதுதீர்ந் தேகிநீர் சூழ்ந்து
படியி லைந்தினு மெட்டினும் பன்முறை வணங்கிச்
கடிகொள் கொன்றையான் திருவெழுத் தைந்தையுங் கணித்துப்
பிடிகொண் டானெனப் பற்றிய வுளத்தொடும் பெயர்ந்தான்.

நெடுநேரம் நின்று வணங்கி, அங்கிருந்து வெளிவர மனமின்றி அரிதின் வெளிவந்து, தரையில் எண் உறுப்புகளும் ஐந்து உறுப்புகளும் உறவணங்கி, மணமிக்க கொன்றையானின் திருவைந்தெழுத்தை முறைப்படி எண்ணியும் கணித்தும் பிடிகொண்டான் என்னுமாறு திருவடிகளை இறுகப் பற்றிய உள்ளத்துடன் வந்து - 716 -

*13. பெரிய கோபுர வாய்தல் பின்னிடப்புறத் தேகிச்*
*சுரிசங்கோலிடும் பற்குனித் தொடுகரைப் பாங்கர்*
*விரியு மாமலர்ச் சோலையின் மென்மெல மேவி*
*உரிய தாம்பொதி சோறுசூழ்ந் தாரொடும் உண்டான்.*

உயரமான திருக்கோபுர வாசலைத் தாண்டி தான் வெளிவந்து, வளைந்த சங்குகள் ஓசை எழுப்பும் பற்குனியாற்றின் கரைப்பக்கம் சென்று, மலர்ந்த மலர்களையுடைய சோலையை மெல்ல அடைந்து உண்ணுதற்குரிய பொதிசோற்றைத் தன்னுடன் வந்தவர்களோடு உண்டான். - 718 -

*14. வெள்ளை நுண்மண ல்எக்கரிற் கம்பலம் விரித்துத்*
*தெள்ளு பேரெழிற் பட்டுடை செறிந்ததவா ரணையின்*
*அள்ளி யீர்ம்புதுத் தேறன்மென் காலெடுத் திறைப்ப*
*எள்ள லேதுமி லாதவ னயாவுயிர்த் திருந்தான்.*

வெண்மையான நுண்ணிய எக்கர் மணலில் கம்பளம் விரித்து தெளிந்த பேரழகுடைய பட்டாடை போர்த்திய நீண்ட மெத்தையில் மென்மையான காற்று நெய்ப்புடைய புதுத்தேனை அள்ளி எடுத்து இறைக்க, இகழ்ச்சி ஏதும் இல்லத சந்திரசூடன் களைப்புப் பெருமூச்சுடன் இருந்தான். - 718 -

*15. பொன்னினன்னுண்டாது தூம் புன்னையங் கானில்*
*னன்னர் மென்னிழ ல்நாய்கர்தந் திலகன்வந் திருப்ப*
*அன்ன மென்னடைக் குமுதையும் பண்ணையாட் டயர்வான்*
*முன்னி முன்னினள் முன்பு போன் மொய்ம்மலர்ப் பொதும்பர்*

பொன்துகள் ஒத்த மகரந்தம் தூவும் புன்னைமரக் காட்டில், நன்மை தரும் மென்னையான நிழலில் அவன் வந்து களைப்பாற, அன்னமன் நடையுடைய குமுதை நீராடும் நோக்குடன் எண்ணி முன்போல் மலர்கள் மலர்ந்த அச்சோலை அடைந்தாள். - 719 -

## வேறு

*16. பாங்கியர் மருங்கு சூழப் பண்மணி யூச லாடித்*
*தேங்கிசைப் பாட லோடுஞ் செறிந்தஅம் மனைக ளாடி*
*வீங்குநீர் நதிபுக்காடி விரியினர் மலர்கள் கொய்வாள்*
*ளோங்கிய பொதும்ப ரூடே யுலாத்தருந் தொழிலின் மிக்காள்.*

தோழிமார் பக்கம் சூழ பலவகை மணிகள் பதிக்கப்பட்ட ஊஞ்சலில் ஆடி இசைதேங்கிய பாடல்கள் பாடி, செறிந்த அம்மானையாட்டம் ஆடி, நீர்மிக்க பற்குனியில் நீராடி, மலர்ந்த மலர்கள் கொய்ய உயரமான மரங்களையுடைய சோலையூடே உலவும் செயலை மேற்கொண்டாள். - 720 -

17. *இயல்பினான் மலர்கள் கொய்திட்(டு)இயங்குவாளெட் டிச் செம்மல்*
*பயிலிய நாகச் சூழல் படர்ந்தனள் படர்த லோடும்*
*வெயிலுமிழ் மணிப்பூண் மார்பன் மின்னிடை மாதைக் கண்டான்*
*அயிலுறழ் தடங்கண் மாதும் ஆடவன் றன்னைக் கண்டாள்.*

வழக்கப்படி மலர் கொய்து செல்கின்றவள், எட்டிப்பட்டமுடைய ஆண்களுள் சிறந்த சந்திரசூடன் இருந்த புன்னைமரச் சூழல் பக்கம் வந்தாள். வர ஒளி உமிழும் மணிகள் பதித்த அணியணிந்த மார்பினையுடையவன், மின்னல் ஒத்த இடையுடைய குமுதையைக் கண்டான். வேல்போல் அகன்ற கண்களையுடைய குமுதையும் வெற்றிமிக்க சந்திரசூடனைக் கண்டாள். - 721 -

18. *காண்டலும் பண்டைப் பாலுங் கதுமெனப் பால தாகத்*
*தூண்டினன் மாரன் வாளி துணுக்கெனவுளத்தை யீர்ப்பப்*
*பூண்டகு மார்பிற் றேன்றல் புலவர்தம் மகளோ வன்றி*
*மாண்டரு தரையின் நோற்கு மாதவர் மகளோ என்றான்.*

பார்த்த அளவிலேயே, பண்டை ஊழ்வினை விரைந்து கூட்ட மன்மதன் மலரம்புகளை எய்ய அது திடீரென்று உள்ளத்தை ஈர்க்க பூண்கள் அணிந்த அகன்ற மார்புடைய ஆண்களுள் சிறந்தவன். "இவள் தேவமகளோ அல்லது மாட்சிமைப்பட்ட உலகில் நோன்பு இயற்றும் மாதவர் மகளோ" என்று ஐயுற்றான். - 722 -

19. *வாடின குழலின் மாலை வண்டுங்கூட் டுஉண்ணா நின்ற*
*ஓடின செவியின் முட்டி உழிதரு வனவாட் கண்கள்*
*கூடின ஆடை மாசு கோலமெய் நிழற்றிற் றொள்வேர்*
*ஆடின வணங்கோ வல்ல ளணங்கு செய் நங்கை யென்றான்.*

"வாடிய கூந்தல் மாலை, வண்டுகள் கூடித் தேன் உண்ணல், செவிகளில் மோதி ஓடின அழகிய ஒளிபொருந்திய கண்கள், ஆடையில்மாசுபடிதல், அழகிய உடம்பு நிழல்பட்டது; ஒளி பொருந்திய வியர்வை வெளிப்படல் இவற்றால் தெய்வமகளல்லள்; மனத்திற்கு நோய்தரும் இவ்வுலகப் பெண்ணே" என்றான். - 723 -

20. *புகுமுகம் புரிதல் கண்டான் பொறிநுதல் வியர்த்தல் கண்டான்*
*நகுநய மறைத்தல் கண்டா ன்நன்மனச் சிதைவு கண்டான்*
*தகுகுழல் விரியக் கண்டான் தோடொன்று கழலக் கண்டான்*
*தகுவளபிறவுங் கண்டான் சரமைந்து மலைப்பக்கண்டான்.*

மன்மதனின் மலரம்புகள் ஐந்தும் வகுத்துதலினாள்; தன் விருப்பத்தைப் பார்வை மூலம் வெளிப்படுத்துதல், பொலிவான நெற்றி வியர்த்தல், தனது விருப்பம் தெரிவிக்கும் புன்னகையை மறைத்தல், சிதையாமனம் சிதைத்தல் கட்டியிருந்த கூந்தல் அவிழ்தல், ஒரு காது தோடு கழன்றுதுபோல் அதனைச் சீர் செய்தல் முதலிய காம நோய் உணர்த்தும் குறிகளை அவள்பால் கண்டான். *- 724 -*

21. *நெட்டுயிர்ப் (பு)ஏறி நாய்க னிலத்திடைச் சோர்ந்து வீழ்ந்தான்*
*மட்டுமிழ் தாரினாளும் வணிகர்தந் திலக மானான்*
*கட்டழ (கு)அலைக்கப் பட்ட காதனெஞ்சனங்கன் வாளி*
*பட்டலைந் துழிநீ துழிய விம்மிப் பாரிடையவச மானாள். - 721*

-

அதனால் சந்திரசூடன் பெருமூச்சு விட்டு நிலத்தில் சோர்ந்து விழுந்தான். தேன்துளிக்கும் மாலையணிந்த குமுதையும் வணிகர் திலகளான சந்திரசூடனால் மனஉறுதி குலைக்கப்பட்ட காதல் நெஞ்சில் மன்மதன் அம்புகள் பட்டு அவளை வருத்த நொந்து நிலத்தில் விழுந்து மயக்கமுற்றாள். *- 725 -*

22. *காரண மொன்றுந் தேறார் கந்துமெனச் சிவிகையேற்றித்*
*தாரண மார்பி னானைச் சார்ந்திடு முழையர்காவி*
*யேரணி விருத்த வோங்கற் கேகினார் குமுதை தன்னைச்*
*சீரணி பாங்கி மாருஞ் செங்கையிற் தாங்கிச் சொன்றார்.*

உடன் வந்தவர்கள் காரணம் எதுவும் புரியாமல் விரைந்து சிவிகையில் ஏற்றி, அழகிய பழமலை சென்றனர். குமுதையைச்சிறந்த பாங்கிமார் தமது செங்கைகளால் தாங்கி வீடு சென்றனர். *- 726 -*

23. *இல்லினை யடுத்த நங்கையின் சுவை யமுதம் வேண்டாள்*
*வில்லுமிழ் கலன்கள் வேண்டாள் மென்மல ரணிதல் வேண்டாள்*
*அல்லிமென் மலர்கள் பெய்த அமளியிற் றுயிலும் வேண்டாள்*
*பல்லவ ம்ளிதோய்ந் தெண்ணப் பகட் டெழில் சாம்பி நின்றாள்*

வீடடைந்த குமுதை இன்சுவை உணவும், ஒளி உமிழ் அணிகள் அணிதலும், மன்மலர் சூடுதலும், மென்மையான அல்லிமலர்ப் படுக்கையில் துயிலுதலும் விரும்பாதவளாய், கண்டார் மயங்கும் தனது அழகு ஒடுங்கித் தீப்பட்ட இளந்தளிர் போலானாள். - 723 -

24. *தந்தைகண்டிதுஎன் கெட்டேன் தையலுக் (கு) அடுதத் தென்றே*
*மந்திரம் வல்லார் தம்மை மருத்துவர் தம்மைக் கூவிச்*
*சுந்தரிக் கிடுக்கண் டீரச் சூழுமினென்றா ன் அன்னோர்*
*சிந்தையும் வருந்தி நோக்கித் தீர்த்தில ருடைந்து போனார்.*

தந்தையாகிய மஞ்சுளன் இதுகண்டு, அந்தோ கேட்டேன் என் மகளுக்கு என்ன நேர்ந்தது என்று எண்ணி மந்திரவாதிகள், மருத்துவர்கள் ஆகியோரை அழைத்து "இவ்வழகிக்கு ஏற்பட்டுள்ள துன்பம் தீர ஆராய்ந்து தக்கது செய்யுங்கள்" என்று கூறினான். அவர்கள் தீர்க்க இயலாமல் மனவருத்தத்துடன் பார்த்து மனம் உடைந்து சென்றனர். - 724 -

25. *செய்யவாய் மகளைத் தந்தார் திருமூல நாதர்ந்த*
*ஐயரே தீர்ப்ப தல்லா ல்ஆரிது தீர்ப்பா ரென்றே*
*மையறு தவத்திற் சான்ற மஞ்சுள னிருப்ப ஈன்றாள்*
*வெய்யவன் பிணியை நோக்கி வேறிது துணிந்து செய்வாள்.*

"செவ்விதழை கொண்ட இவளைத் தந்தவர் திருமூலநாதரே. அத்தலைவரே இவள் நோய் தீர்ப்பாரல்லது வேறுயாரால் இவள் நோய் தீர்க்க முடியும்?" என்று குற்றமற்ற தவம் பொருந்திய மஞ்சுளன் இருக்க, அவன் மனைவி கொடிய வலிய இந்நோயைத் தீர்க்க வேறு வகையில் முடிவு எய்தாள். - 729 -

26. *வேலனிங் குறுக வள்ளி மெவுக கட்டு விச்சி*
*ஏலுறவருக வென்றே யிவர்தமைக் கூவு வித்துச்*
*சாலமுத் திறத்தி னொர்க்குந் தரும்பொருள் பலவு ம்நீட்டிக்*
*கோலவில்லகத்தை யெல்லாங் கோகடணை புரிய லுற்றாள்.*

வெறியாடிக் குறிகூறும் வேலனும், குறி கூறும் வள்ளியும், கட்டுவிச்சியும் வருக என்று பொருந்த அழைத்து மூவகையினர்க்கும் தக்கபொருள் மிகத்தந்து, அழகிய ஒளியுடைய வீட்டை மேலும் அழகுபடுத்திக் குறிகேட்கத் தொடங்கினாள். - 730 -

27. *இந்திடத் திவர்துஞ் செய்கை யின்னண மாசுகாவி*
*யந்திடத் தேகச் சென்றா ர்அரு நெறி பலவு நீந்திச்*
*சந்திர சூடன் றன்னைச் சந்திர குத்தன் முன்இட் (டு)*
*எந்தைநின் புதல்வ னுற்ற (து) அறியென வியம்ப லுற்றார்.*

இவ்விடத்தில் இவர்கள் இவ்வாறு செய்ய சிவிகையில் தம், இடம் அழைத்துச் சென்றவர்கள், கடத்தற்கரிய வழி பல கடந்து சந்திரசூடனைச் சந்திர குத்தன் முன்னிலையில் தந்து, எம் தந்தையே உம் மகனுக்கு உற்றதை அறிக என்று கூறத் தொடங்கினர். - 730 -

28. *கேமமா புரத்தைச் சென்று கிளர்பொருள் விலைசெய் தெஞ்சுஞ்*
*சேமமா பொருளும் விற்பத் திருத்தகு பூவா ளூரை*
*யாமெலா ம்உடங்கு செல்ல ம்உய்தினான்நிறைவர்த் தாழ்ந்தான்*
*நாமநீர் நதியின் பாங்கர் நந்தனச் சோலை புக்கான்.*

“கேமமாபுரம் அடைந்து ஒளியுடைய பொருள்களை எல்லாம் விற்று, பாதுகாப்பாக வைத்த எஞ்சிய பொருள்களை விற்க, செல்வம் மிக்க பூவாளூரை நாங்கள் அனைவரும் கூடச் செல்ல அடைந்தான்; அங்கு இறைவனை வழிபட்டான்; ஆழம் வேகம் காரணமாக அச்ச மூட்டும் பற்குனியாற்றின் பக்கம் இருந்த ஒரு நந்தவனச் சோலை அடைந்தான்.” - 732 -

29. *தீஞ்சுவை யடிசி ல்ஆரச் சிறந்திருந் (து) அயின்றா னாகப் பூஞ்சினை*
*நிழலிற் றேவன் போன்மென விருந்தானாங்கே*
*யாஞ்சிறி தேனு ம்ஏத ம்ஏய்துகா ரணங்க தெற்றேங்*
*காஞ்சன மனைய மேனிகருகவீழ்ந் (து) அவச மானான்.*

“இனிய சுவையுடைய உணவைச் சிறந்த முறையில் இருந்து உண்டான்; பின்னர் மென்மையான மரநிழலில் தேவனைப் போல் இருந்தான். எனினும் இன்றைய இந்த நிலைக்கு உரிய காரணத்தை அங்கு நடத்தன் மூலம் ஒன்றும் அறியமுடியவில்லை. பொன் போன்ற உடம்பு கருகக் கீழே வீழ்ந்து மூர்ச்சிசையானான்.” - 733 -

30. *உற்றதென் னுரையென் றேமுக் குரைத்திலன் சோகம் பாவித்(கு)உ*
*அற்றமி லின்ப வெள்ளத் தழுந்துமா தவரே போவப்*
*பற்றுவே றொன்றன் மாட்டும் பணித்திலன் செய்கை யீது*
*தெற்றென வறிக வென்று செங்கரங் கூப்பிச் சொன்னார்.*

"என்ன நேர்ந்தது என்று கேட்ட எமக்கு ஒன்றும் கூறாது, சோகமாக இருந்து முடிவற்ற இன்ப வெள்ளத்தில் மூழ்கிய மாதவர்போல ஒன்றிலும் பற்றின்று எந்த ஒரு செயலிலும் எம்மை ஏவவில்லை, இதுவே நடந்தது தெளிவாக அறியுங்கள்" என்று தமது சிவந்த கைகளைக் கூப்பி வணங்கிக் கூறினார். - 734 -

31. *தாரணிந் திலங்கு மார்பிற் சந்திர குந்தன் தேர்வான்*
*போரணிந் திலங்குஞ் சூலப் புண்ணியன் பாதப் போதின்*
*சீரணிந் திலங்கு ம்உ ண்மைச் சிந்தைய னாயி ன்அச்சொ*
*வேரணிந் திலங்கு மேனி யிருந்தையி னிருப்ப தென்னோ.*

மலர்மாலை அணிந்து விளங்கும் மார்பினையுடைய சந்திரகுத்தன் ஆராய முற்பட்டு, "போர் செய்து விளங்கும் சூலம் தாங்கிய இறைவனது திருவடி மலரில் சீர் பெற விளங்கும் உண்மைச் சிந்தனை உடையவன் இவன் என்றால் வேர்வை கொண்டு விளங்கும் இவன் மேனி கரிக்கட்டையைப் போல் ஆனது ஏன்? அந்தோ" - 735 -

32. *பித்தனிற் பெயர்த்தும் வேறும் பேசுவன் பேச்சொன் றில்வான்*
*பொத்திய நோயொன் றென்னிற் பூங்கையி ன்நாடி சொல்லும்*
*மத்தவே தாளம் பூதும் மண்ணைவல் லிடர்செய் தெய்வக்*
*கொத்திவை யகற்றும் விஞ்சைக் கொள்கைய னிவற்றிற் கஞ்சான்.*

"பித்தம் பிடித்தவன் போல் கூறியதையே கூறினான்; வேறும் கூறுவான்; பேசாமலும் இருப்பான்; நோய் ஏதும் பற்றியுள்ளதாயின் மென்மையான மலர் ஒத்த கை நாடித்துடிப்பு கூறும். மற்றபடி வேதாளம், பூதம், உலகில் கொடிய துன்பம் செய்யும் தெய்வக் கூட்டம் ஆகியன இந்நோய் செய்திருத்தல் முடியாது. ஏனெனில் அவற்றை அகற்றும் மந்திரம் அறிந்தவன்; எனவே அவற்றுக்கு அஞ்சமாட்டான்." - 736 -

33. *நெட்டுயிர்ப் பெறித வானு நினைத்தது மறைத்தவானும்*
*பெட்டையுங் கலையு மேய்ந்து பெயர்வன நோக்கிப் பேய்முன்*
*முட்டிய தென்ன மாழ்கி முகம் புலர்ந் திருத்த வானும்*
*மட்டொளி யொருத்திமெ ய்யின்அவையவந் தீண்ட வானும்.*

"பெருமூச்செறிதல், கூற நினைத்ததை மறைத்தல், பெண் மானும் ஆண் மானும் மேய்ந்து திரும்புதலை நோக்கிப் போய் அறைந்தது போல் மயங்கி முகம் காய்ந்து இருத்தல், தேன்குரலும் ஒளி அழகும் கொண்ட மற்றொரு பெண்ணின் உடல் உறுப்பைத் தொட விரும்புதல்," - 737 -

34. *எழுதிசித் திரப்பொற் பாவைக் (கு)எனமலர் தொடுத்த லானும்*
*விழுமிய கலனுந் தூசு மிகுசுவைப் பொருளுங் காணிற்*
*தழுவணை யிடப்பா ல்நோக்கித் தன்னையு நோக்க லானுங்*
*கழுமிய விந்நோய் மாதர் கடைக்கண் செய் நோயென் றோர்ந்தான்*

"வரையப்பெற்ற சித்திரப் பாவைக்கு என்று மலர்மாலை தொடுத்தல், மேலான பொருள் ஆடை, மிகு சுவையான பொருள் ஆகிய கண்டால் தான் தழுவியுள்ள அணையின் இடப்பக்கம் நோக்கித் தணிந்து இருக்கும் தன் நிலையை நோக்குதல் முதலியவற்றால் இந்நோய் மகளிரது கடைக்கண் நோக்கால் வந்தது" என்று முடிவு செய்தான். - 738 -

35. *ஆருயிர்க் குயரா யுள்ள அமலனே யுள்ள வாறு*
*தேருவ (து)அன்றி ஏனோர் தெரிவதொன் றன்றேயானுங்*
*காரணி கையி னாற்குக் காரிகை யொருத்தி தன்னை*
*ஏரணி வதுவை யாற்றி ன்இயைப்பதே கரும மென்றான்.*

"அரிய உயிர்க்கெல்லாம் உயிரான இறைவனே இவன்நோயை உள்ளவாறு கண்டறிதலன்றிப் பிறர் கண்டறிவதொன்றன்று இந்நோய்" என்று முடிவெடுத்து, மேகம்போல் கொடைக்கரத்தனாகிய இவனுக்குத் தக்கவளை அழகிய திருமணம் முறைப்படி முடிப்பதே யான் செய்யத்தக்க செயல் என்று நினைத்தான். - 739 -

36. *தொன்றுதொட் டிருந்த நம்மார் சூழ்ந்தனற் வதுவை யாற்றல்*
*ஒன்றுநங் குலத்துப் பெண்மை யொருத்தியை நாடி வல்லே*
*சென்றனர் வருக வென்று சிலர் தம்மை முறையி னேவி*
*நன்றுறு வினை களெல்லா நவையுற முயலா நின்றான்.*

"நம்மவர் தொன்றுதொட்ட முறைமையை எண்ணி நம்குலத்துக்குப் பொருத்தமான பெண்மையுடையாள் ஒருத்தியை ஆராய்ந்து இவனுக்கு மணம் முடித்தலை விரைந்து செய்யச் சென்று வருக என்று சிலரை முறைப்படி அனுப்பி, நன்மை பொருந்திய அனைத்துச் செயல்களையும் குற்றமற நிறைவேற்றினான்." - 740 -

37. *வானமர் வில்வ மூல வரதனை வழிபா டாற்றுங்*
*கானமர் மலர்சூழ் குஞ்சிக் காளைதன் செய்கை சொல்லிக்*
*கூனல்வெண் டிங்கள் வேய்ந்த கோன்மகட் பேசுந் தூதன்*
*ஆணைமை கூறப் புக்கா னருந்தவச் சூத மேலோன்.*

வானளவிய வில்வமரத்தடியில் எழுந்தருளியவரதனாகிய இறைவனை வழிபாடு செய்த மணம் பொருந்திய மலர் சூடிய தலை முடியுடைய காளை ஒருத்தவன் செயலைக் கூறியபின், பிறைசூடியவன் சந்திரசூடன் பொருட்டு மகள் பேச வந்ததை அருந்தவச் சூதனாகிய மேலோன் கூறத் தொடங்கினான். - 741 -

சந்திர சூடன் வழிபடு சருக்க முற்றிற்று

*ஆகத்திருவித்தம் - 741 -*

## 15.மகட்பேசு சருக்கம்

1. *மாலு ம்அயனு மிருபாலும் வடி விற் கிளைத்த வுருத்திரன்போற்*
*சாலு மவன்கைச் சூலம்போற் றழைத்த விலையி னறுவில்வ*
*மூல மிருந்தார் கனவகத்து முன்னி முடிந்த முடிவதனைச்*
*சீல மிகுந்த மஞ்சுளன்றன் றேவிக் குரைக்கு ம்அக்காலை.*

திருமாலும் நான் முகனும் தனது இருபுறமும் இருக்க, தனது வடிவில் நிறைவு பெற்ற உருத்திரன் போலவும்; அவ்வுருத்திரன் கையில் இருக்கும் மூவிலைச் சூலம் போலவும் தழைத்த இனிய மணம் கமழும் இலையுடைய வில்வமரநிழலில் இருந்த பெருமான், தன் கனவில் தோன்றிக்கூறி முடித்த முடிவைச் சீலம் மிக்க மஞ்சுளன் தன் மனைவிக்குக் கூறும் போது, - 742 -

2 *பாங்க ரிருத்து கேட்ட றிந்த பரிசா லதனை யுறநினைத்துக்*
*கோக்கின் முகையைப் புறங்காணுங் கொங்கைக் குமுதை யழிஉ ரைத்*
*தாங்கி யிருந்தா ளவள்கருங்கட் சரங்கள் பாயப் பட்ட வனு*
*நீங்குமுணர்வு சிறிதெய்த நிமலர் பாதம் வழுத்துவான்.*

பக்கத்தில் இருந்து அதனைக் கேட்டறிந்த தன்மையால் அதனைப் பொருந்த நினைத்து, தென்னங் குரும்பையை வென்ற முலைகளையுடைய குமுதை அதுவரை அழிந்த தன் உயிரைத் தாங்கி இருந்தாள். அவளது மை தீட்டப்பெற்ற கண்பார்வைக்கு இலக்கண சந்திரசூடனும் அந்நிலைச சிறிது அகல, நல்லுணர்வு வர இறைவன் திருவடியை வணங்கினான். - 743 -

3. *விருத்த கிரியில் வீற்றிருக்கும் விமலா சமயப் பிணிதுரக்கும்*
*நிருத்த முதல்வா பெருங்கருணை நிதியே யிளவெண் மதிசூடி*
*கருத்து ளழிந்து செயலழிந்து கவலைக் கடலின் அறத்தாழ்ந்த*
*வருத்தந்து டையா னெவிரந்து வணங்கி யிணங்கப் பழிச்சினான்.*

பழமலையில் எழுந்தருளியுள்ள விமலனே அடைக்கலம்; கூத்துக்கு முதல்வனே, பெருங்கருணைச் செல்வமே, மூன்றாம் பிறை சூடியவனே; மனமழிந்து செயலொழிந்து கவலைக் கடலில் முழுதும் மூழ்கிக் கிடக்கும் என் வருத்தத்தைத் துடைத்தருள்க என்று வேண்டி வணங்கி அன்புடன் போற்றினான். - 744 -

4. *அடியார்க் (கு)அவரின் மிகவினிக்கு ம்அமுத னிரங்கிக் கல்லாடை*
*பொடியார் பூதி சாதனமும் பொற்பவிருத்த ரெனத்தோன்றி*
*நொடிவார் வணிகக் குலமணியே நுன்னைப் பிணித்த பெரும்பிணியைக்*
*கடிவாம் கவலைப் பெருங்கடலிற் கவிழ்ந்து கலங்கித் தளரேலே. - 741 -*

தன்அடியவர்க்கு அவரைக்காட்டிலும் இனிமை செய்யும் இறைவன் மனம் இரங்கி, காவியுடை, திருநீறு, உருத்திராக்கம் பொலியும் முதியவராய்த் தோன்றி; "புகழ் வாய்ந்த வணிகர்குல மணியே, உன்னைப் பிணித்த பெரும் பிணியைப் போக்குவோம்; கவலைப் பெருங்கடலில் நீ கவிழ்ந்து மனம் தளராதே" - 745 -

5. *முன்னு மடிமை நீயின்று மூளு மடிமை யூழிகள்போம்*
*பின்னு மடிமை யென்ஞான்றும் பெயரா வடிமை யாட்கொள்ளுந்*
*தன்மையுடையோம்யா ம்அதனாற் கவலைப் படுமோர் கருத்துடையாய்*
*முன்னும் விழைவை யின்னினியே முடித்துத் தருவா மெனக்கிளந்தார்.*

"நீ பிறக்கும் முன்பும் எனக்கு அடிமை, இன்றும் மிக்க அடிமை, ஊழிகள் பல கடந்த பின்னும் அடிமை; எக்காலத்தும் பெயராத அடிமை, எனவே உன்னை ஆட்கொள்ளும் தன்மை எனக்கு உளது. எனவே கவலைக் படுகின்றவனே நினைக்கும் உன் விருப்பத்தை இன்றே முடித்துத் தருகின்றோம்" என்றார். - 746 -

6. *பிறந்த காமப் பெரும்போகம் பேணு வார்க்கு மக்காமந்*
*துறந்த வேட தெரிசனத்தாற் சோரா(து) அணு(கு)ம் மன்பார்போற்*
*சிறந்த வேட வுருக்கொண்ட தேவர் நாதர் கழல்வணங்கி*
*யிறந்து படுமாறுயிர்தாங்கி யிருந்தான் வணிக ரேதனையான்.*

காமம் பிறந்ததால் பெரும் போகம் பேணுகின்றவர்களுக்கும், அக்காமம் முற்றும் துறந்த துறவிகளின் திருவேடம் காண்பதால் காமம் வந்து சேராமல் சிறுகி அழியும் என்கின்றவர் போல், சிறந்த துறவி உருக் கொண்ட இறைவனைக் கண்டுவணங்கியதால், காமத்தால் இறந்துபடுவது போல் இருந்த வணிகர்க்(கு)ஏறாகிய சந்திரசூடன் உயிர்தாங்கி இருந்தான். - 743 -

7. *விருத்த கிரியில் வரங்கொடுத்த விமலர் பூவாளூரிறைவர்*
*வருத்தந் தணிப்ப வொருசித்த வடிவு தாங்கித் தமக்கேற்பப்*
*பொருத்த வயிற்றுக் குறட்பூதம் பெயராச் சீட னெனப்போத*
*அருத்தி மிகுமோர் புன்னாகத் தலர்மென் னிழலில் வீற்றிருந்தார்.*

பழமலையில் வரம்கொடுத்த பூவாளூர் இறைவர், அவனது வருத்தம் தணிக்க ஒரு சித்தர் வடிவுதாங்கி தமக்கு ஏற்ப பெருவயிறுடைய குறட்பூதமாகிய பிரியாத சீடன் என்று ஒருவன் வர ஆசையை மிகுவிக்கும் ஒரு புன்னாக மர நிழலில் வீற்றிருந்தார். - 748 -

8. *வழிமிக் கியங்கும் பேரிளைப்பு மாறா நறுநீர் வேட்கையுடன்*
*அழிவன் பசியு முடையார்போ லாற்றக் காட்டிச் செழும்பைந்தேன்*
*பொழிதண் பொதும்பிற் புன்னாகப் பூமென் னிழலி னிருந்தாரைக்*
*கொழிவெண் டரங்க நதிதோயக் குறித்துப் புகுமஞ் சுளன் கண்டான்.*

நீண்ட வழி நடந்த பேரிளைப்பு மாறாத நீர் வேட்கையுடன் ஆற்றல் அழிக்கும் கொடிய பசி கொண்டார் போல் காட்டி, செழித்த வளமான தேன் பெருகிய புன்னாகமரச் சோலை நிழலில் இருந்தவரை, கொழிக்கும் அலைகளையுடைய நதியில் நீராடவந்த மஞ்சளன் கண்டான். - 749 -

9. *கையிற் பிரம்பும் வளர்தடியுங் கவினப் பிடித்து மிகுபசியால்*
*உய்யவறியா னெனச்சீட னொருபா லிருப்பச் சுழங்கிவிழுஞ்*
*செய்ய சடையர் முள்கரந்து செறிகச் சினர்தண் பிறைவாய்க்கோல்*
*டையவொருகை மூலத்திற் பதித்தங் கிருந்தார் தமைப் பணிந்தான்.*

கையில் பிரம்புடன் நீண்ட தடியும் ஏந்தி, மிகுந்த பசியிலிருந்து தப்ப அறியாத சீடன் ஒருபால் இருக்க, தளர்ந்துவிழும் செய்ய சடையவராய்த் தனது முள்ளைக் கோவணத்தால் மூடி தண்ணிய பிறைவாய் கொண்ட கோலில் ஒரு கரத்தை ஊன்றி அங்கு இருந்தவரைக் கண்டான். - 746 -

**வேறு**

10. *சிறந்தொளிருங் கல்வரத்தச் சேறூட்டும வத்திரமு ம்தீயிற் சேந்து*
*நிறத்தழையுஞ் சடைமுடியும் வெண்ணீறுங் கண்மணியு*
*நீங்காப் பாதத்(து)*
*தறந்தழையும் பாதுகையுஞ் சித்தர்திரு வேடமெல்லா ம்ஆர நோக்கிப்*
*பிறந்தபெரும் பத்தியினான் மருங்கடுத்து வாய்புதைத்துப் பேச லுற்றான்.*

சிறப்பாக ஒளிரும் செங்காவிக் கல்லின் காவிச்சோறு ஊட்டிய துவரடையும் தீப்போல் சிவந்த நிறம் தழைக்கின்ற சடைமுடியும், வெண்ணீறும், உருத்திராக்கமும் பாதம் நீங்காத அறம் தழைத்த பாதுகையும் ஆகிய சித்தர் திருவேடமெல்லாம் கண்ணாரக் கண்டு, அதனால் உண்டான பத்தியால் அருகில் சென்று வாய் புதைத்துப் பேசத் தொடங்கினான். - 751 -

*11. பொய்ப்படும்ஆ ணவவிருட்குச் செங்கிரணப் பருதியெனப் போந்த தேவே*
*யெய்ப்பினோடு மலர்ப் பொதும்பி னிருந்தருளல் வேண்டுவதே னீதோ வென்னின்*
*மெய்ப்படுசே வ டியாங்கே யுறுவித்துத் திருவமுது மிசைய லாகும்*
*இப்பொழுதே யெழுந்தருளல் வேண்டுமென மறுவலுந்தாழ்ந் திரந்து நின்றான்.*

"மிகக் கடுமையான ஆணவமாகிய இருட்டுக்(கு)ச் செம்மையான கதிர்களையுடைய ஞாயிறாக வந்த தேவனே களைப்புடன் மலர்ச்சோலையில் இருக்க வேண்டுவது ஏன்?இதோ அருகில் என் வீடு உள்ளது. மெய்ம்மை பொருந்திய தங்கள் சேவடியை அங்கு வரச் செய்து தாங்கள் எழுந்தருளித் திருவமுது உண்ணல் வேண்டும் இப்பொழுதே எழுந்தருள வேண்டும்" என்று மறுபடியும் பணிந்து வேண்டினான். - 752 -

*12. இருந்தஇடந் தனைவிட்டிங்(கு)எ ழுந்திருக்க வலியில்லை யில்ல நாடித்*
*திருந்தமுது செய்திடுமா றெவ்வாறு திருவமுது செய்விப் பாயேற்*
*பொருந்தமுது கொணர்ந்தளித்தி யெனச்சித்தர் றெனப்போந்த புராணர் கூற*
*அருந்தவனு ம்அதுபுரிவ லெனவுரைத்து விரைந்தோடி யகத்தைச் சார்ந்தான்.*

"என்னால் நான் இருக்கின்ற இடத்தை விட்டு எழுந்திருக்க சிறிதும் வலிமை இல்லை. உன் இல்லம் வந்து திருவமுது செய்வது எப்படி. திருவமுது செய்விக்க விரும்பினால் பொருந்திய அவ்வமுதை இங்குக் கொண்டு வந்து தருக" என்று சித்தர் என்றுவந்த இறைவன் கூற,அருந்தவனாகிய மஞ்சுளன் "அப்படியே செய்கிறேன்" என்று கூறி விரைந்து ஓடிப்போய்த் தன்வீட்டை அடைந்தான். - 753 -

### வேறு

13. *இன்றுநாம் பெரும்பய னெய்தி னாம்அலர்க்*
*கொன்றையா ரடியவர் குறுகி னாரவர்க்(கு)*
*ஒன்றிய திருவமு தூஉ தவக் கைக்கொடு*
*நன்றுவா வென்றுநா யகிக்குக் கூறினான்.*

தன் மனைவியைப் பார்த்து "இன்று நாம் பிறந்ததன் பெரும் பயனை அடைந்தோம். கொன்றை மலர் சூடியவரின் அடியவர் வந்துள்ளார். அவர்க்கு அன்பும் சுவையும் ஒரு சேரக் கொண்ட உணவளிக்க நன்முறையில் எடுத்துக் கொண்டு வா'' என்று கூறினான். - 754 -

14. *இல்லவள் முகமலர்ந் திலங்கு காஞ்சன*
*வில்லுமிழ் கலன்களின் மிதப்ப ஏற்றுபு*
*வல்விரைந் துடன்செல மஞ்சு ளப்பெயர்*
*நல்லவன் சித்தர்மு ன்நண்ணி னானரோ.*

அவன் முகம் மலர்ந்து பொன் ஒளிவீசும் பொற்கலன்களில் உணவுப்பொருளை மிதப்ப நிரப்பிக் கொண்டு மிக விரைந்து உடன் செல்ல மஞ்சுளன் ஆகிய நல்லவன் சித்தரை அடைந்தான். - 755 -

15. *இத்தனை யளவு ம்எய்ப் போடு வைகினீர்*
*ரத்தரே பிழைபொறுத் தமுது செய்கெனப்*
*பத்தியி ன்நயமொழி பகர்ந்து தன்மனை*
*உத்தமி தன்னையங் கூட் டென் றேவினான்.*

"இவ்வளவு நேரம் களைப்புடன் இருந்தீர்கள். தலைவரே எம்பிழை பொறுத்து அமுது செய்க'' என்று பத்திமையுடன் இன்மொழி கூறி, உத்தமியாகிய தன் மனைவியை "அவருக்கு உணவிடுக" என்று ஏவினான். - 756 -

16. *வாய்த்தது நமக்கென மாது கையமர்*
*பாத்திர மனைத்துமோர் பாங்கர் வைத்தனள்*
*தூத்தகு சித்தரைத் தொழுது தாழ்ந்தனள்*
*ஏத்திரள ணான்மயத் திடத்தை நீவினாள்.*

"நமக்கு நற்பேறு வாய்த்தது" என்று அவள் தான் எடுத்துவந்த பாத்திரங்கள் அனைத்தையும் ஒரு பக்கம் வைத்தாள். தூய சித்தரை தரையில் வீழ்ந்து வணங்கினாள்; ஏத்தினாள், பசுஞ்சாணத்தால் உரிய இடத்தை மெழுகினாள். - 757-

17. *நீற்றினாற் கீற்றுகள்நிலவு வித்தனள்*
*தேற்றுவா ழையின்விரி சுருளை யிட்ட னள்*
*வீற்றிவீற் றாகமென் கறியுஞ் சொன்றியும்*
*ஏற்றினாள் பருப்புமிட் (டு)இழுதும் வாக்கினாள்.*

கண்ணப்பொடியால் கோலமிட்டாள். வாழையின் சுருளை விரித்துத் தெளிவாக இட்டாள். வேறுவேறாக மென்மையான கறியும் சோறும் இட்டுப் பப்பிட்டு நெய்யும் ஊற்றினாள். - 758 -

18. *வறையலுந் துவையலு மற்று நெட்டிலை*
*நிறைவன நோக்கிய நிமலர் நீரினான்*
*முறையுளி புரிவன முற்று வித்தனர்*
*கறையறு ம்அடிசில்கை தொடுதன் மேயினார்.*

துவட்டல் களியும் துவையலும் மற்றும் பிறவும் நீண்ட இலை நிறைந்துள்ளன கண்ட நிமலன் நீரினால் முறைப்படி வளாவி, குற்றமற்ற உணவை எடுத்து உண்ணத் தொடங்கினார். - 759 -

19. *குளிர்மணி விசிறிகைக் கொண்டு கொண்கனார்*
*வளியெழிப் பணிசெய வனப்பின் மாதராள்*
*ளிவளர் பணிமொழி யறைந்து சித்தர்க்குக்*
*களிவர லூட் டினாள் கரிசை வீட்டினாள்.*

அழகிய விசிறியால் கணவன் குளிர்காற்று எழ விசிற, அழகியவள் கருணை வளர்க்கு ம் பணிமொழிகள் கூறி சித்தர்மன மகிழக் குற்றமற்றவளாய் உணவு உண்பித்தாள். - 760 -

20. *தேவர்க ளமுதுணத் தீய ஆலமும்*
*ஆவதென் றருந்தியு ம்அழிக லாப்பசி*
*போவது புரிந்துபுண் ணியர்க்குப் புண்ணியர்*
*பாவைதண் புனல்விடப் பாணி பூசினார்.*

தேவர்கள் பாற்கடல் அமுதம் உண்பதற்காகத் தான் நஞ்சும் தக்கதே என்று உண்டும் போகாத பசி போக விரும்பி உண்டு, புண்ணியர்க்குப் புண்ணியர் ஆகிய அவர், மஞ்சுளன் மனைவி நீர் விடக் கை கழுவினார். - 761 -

21. *பரிகல மெடுத்தொரு பாங்கர் வைத்தனள்*
*அரியொடு நான்முக னறிக வார்தமை*
*விரிமலர்த் தவிசிடை மேவ வுய்த்தனள்*
*உரியகும் போதரன் றனக்கு ம்ஊட்டினாள்.*

உணவு உண்ட இலையை எடுத்து ஒரு பக்கம் வைத்தாள். மாலும் நான்முறை அறியாதவாரை அகன்ற மலர்ப் படுக்கையில் படுக்கச் செய்தனர் பின்னர் அவருடன் வந்த சீடனாகிய கும்போதரனுக்கும் உணவு படைத்தாள். - 762 -

22. *சுவையுள தாயினுஞ் சுவையின் றாயினு*
*நவையற வடிசலை நயந்திங் கார்தலின்*
*தவமுடை யேம்எனத் தைய ல்தாழ்ந்தனள்*
*ளுவகைசெய் திருத்தன ரொருவர் நேரிலார்*

சுவையுடையதாயினும், சுவையில்லாத தாயினும், குற்றமற உணவை விரும்பி அவர் உண்டதால் தவம் உடையேம் நாங்கள் என்று அவள் வணங்க ஒருவரும் ஒப்பில்லாத சித்தர் உவகையுடன் இருந்தார். - 763 -

23. *எப்பொரு காலத்து மெய்து றாதவர்*
*எப்புயி ரனைத்திற்கு மிறுக்கு நாதர்ஓர்*
*எய்ப்பு யவரென விருத்தங் கன்பர்முடை*
*எய்ப்பொழிந் தயா உயிர்த் தினிது வைகினார்.*

எக்காலத்தும் களைப்படையாதவரும், எல்லா உயிர்கட்கும் களைப்பைப் போக்குகின்ற வரமாகிய சித்தராய் வந்த இறைவர், தாம் களைத்தவர் போல் அங்கு இருந்து களைப்புத் தீர்ந்து பெருமூச்சு விட்டு இனிது இருந்தார். - 763 -

24. *திருவுள மகிழ்பெறுஞ் செவ்வி நோக்கிவல்*
*இருளது திருவடி யிறைஞ்சி மஞ்சுளன்*
*பெருமநும் பதியெது பெயர்ந்து வந்திடுங்*
*கருமமென் அருளெனக் கனிவின் வெண்டினான்.*

அவரது திருவுளம் மகிழ்ந்த சமயம் நோக்கி, வலிய ஆணவ இருளையும் அறுக்கும் அவரது திருவடியை வணங்கிய மஞ்சுளன்; "பெருமானே நும் ஊர் எது? இங்கு வந்த காரணம் என்ன? அருள்க" என்று கனிவுடன் வேண்டினான். - 765 -

25. *விழுத்தகு மஞ்சுளன் வினவி நிற்றலும்*
*வழுத்தபச் சித்தராய் வந்து வைகிய*
*எழுத்தினு ளகரமே யென்ன வெங்கணு*
*முழுத்துணர் சிவபிரான் மொழிதன் மேயினார்.*

மேலான மஞ்சுளன் வினவ, குற்றமறச் சித்தராய் வந்தவராகிய எழுத்துகளுள் அகரம் போல் எங்கும் நின்று முழுதும் உணர்ந்த சிவபிரான் கூறத் தொடங்கினார். - 766 -

## வேறு

26. *திருத்தகுபல் பதிகளினுஞ் சென்றுபயின் றிருந்தருளும்*
*அருத்திமிகுஞ் சித்துடை யே மாயினுமிப் பதியேபோல்*
*விருத்தகிரி யெமக்கினிமை மிகவிளைக்கும் பதியாகும்*
*வருத்தமில்சந் திரகுத்த னப்பதியில் வகிகின்றான்.*

"திருத்தலங்கள் பலவற்றிலும் சென்று பழகி இருந்தருளும் ஆசை மிக்க சித்தம் உடையேம்; ஆயினும் இவ்வூர்ப் போலப் பழமலை எனக்கு இனிமை பல விளைவிக்கும் பது. அதில் வருத்தமின்றிச் சந்திரகுத்தன் என்பவன் வாழ்கின்றான்" - 767 -

27. *ஆக்கத்தின் மிகப்பெரிய ன்அதுநீயுங் கேட்டிருத்தி*
*போக்கற்ற வவன்செவியிற் புரையறுமந் திரமோதித்*
*தேக்குற்ற சுகக்கடலிற் செறிவிக்குங் குருநாமே*
*தூக்குற்ற புகழாற்குத் தோன்றினன் சந்திரசூடன்.*

"அவன் மிகப் பெருஞ் செல்வன் இதனை நீயும் கேட்டிருப்பாய். கேள்விச் செல்வம் நீங்காத அவன் செவியில் குற்றமற்ற மந்திரம் ஓதி - தீக்கையருளி அவனை இன்பக்கடலில் இருக்கச் செய்யும் குரு நான். அந்த உயர்ந்த புகழுடையவனுக்குச் சந்திரசூடன் மகனாவான்" - 768 -

28. *கல்வியினாற் பணிக்கோமான் கலக்க முறுங்காளையவன்,*
*செல்வமிக ஈட்டுதலாற் றெருமருமால் வடைதிசைக்கோன்*
*நல்வனப்பான் மதனழியு நற்கொடையாற் றிருப்பணிக்குஞ்*
*சொல்வரையாற் றுளக்கமுறுந் துகளில்அரிச் சந்திரனே.*

"இவன் கல்வியில் ஆதிசேடனும் கலங்கும் படியான காளை, செல்வம் மிக ஈட்டியவனாதலினால் குபேரனும் மனம் அழிவான்; பேரழகால் மன்மதனும் மனம் அழிவான் ; கொடையால் திருமகளும் வருந்தும்; சொல் அளவில் கலங்குதல் இல்லாத அரிச்சந்திரனே ஆவான்" - 769 -

29. அனையவன்பல் பொருளீட்ட வணிகிளர்இப் பூவாளூர்
முனையொருநாள்அடுத்தவனிம் மொய்ம்மலர்ச் சோலையினிருந்தான்
தனைநிகர்நின் மகள்குமுதை தன்னியல்பான்அடுத்தவளை
வினைவலியாற் காதலித்தான் விளங்கிழையுங் காதலித்தாள்.

"அத்தகையவன் பல்வகைப் பொருளும் ஈட்ட அழகு ஒளிரும் இந்தப் பூவாளூருக்கு முன் ஒரு நாள் வந்தவன், மலர்கள், மிக்க இச்சோலையில் தங்கினான். தனக்குத் தானே ஒத்த உன் மகள் குமுதை வழக்கப்படி சோலைக்கு வந்தவளை ஊழ்வினை யூட்டக் காதலித்தான்; அவளும் இவனைக் காதலித்தாள்."- -770-

30. காமவேளிருவோர்க்குங் கடிமலர்வாளிகள்தூர்த்தான்
ஓமதூமத்தொழுக்கால்உம்பர்நாட் டினையளக்குஞ்
சேமமார் விருத்தகிரி சேர்ந்தனன் சந்திரசூடன்
றாமமார் குழற்மார் குழற்குமுதை சார்ந்தனணின் மனையன்றோ.

மன்மதன் இருவர் பாலும் மணமலர் அம்புகளை எய்து மூடினான். பின்னர், ஓமப்புகை ஒழுங்கால் தேவலோகத்தை அளக்கும் பாதுகாவல் மிக்க பழமலை சேர்ந்தான் சந்திரசூடன். மாலையணிந்த குமுதை உன் மனை வந்து சேர்ந்தாள். -771-

31. அன்று முத லின்றளவும்ஆமயலறியாக் காமத்தாற் கன்றியுளந்
தளர்ந்தழிந்து கவலை நெடுங் கடற்குளித்தார்
நன்றவர் தம் மனக்கருத்தை நாமறிந்தா மாதலினால்
மன்றல்புரி விப்பதற்கே வழி நடந்துன் மருங்கடுத்தாம்.

"அன்று முதல் இன்று வரை பிறர் அறியாதவாறு மூடி மறைந்த காமத்தால் மனம் நொந்து தளர்ந்து அழிந்து கவலையாகிய பெருங்கடல் பட்டனர். அவர்களின் உள்ளக் கருத்தை நாம் நன்றாக அறிந்தோம் ஆதலால் இருவர்க்கும் மணம் செய்விக்க நெடுவழி நடந்து உன்னை அடைந்தோம்" -772-

32. சுற்றமொடு பொருளாதி துவன்றினர்க்கு மகட் கொடுப்பிற்
பொற்றதம னியப்பணியிற் புணர்த்துமணி போல் விளங்கும்
மற்றடுத்த வூழானு மஞ்சுள சந் திரசூடற்கு
உற்றவெழிற் குமுதையைநீ யுதவுவதே கடனென்றார்.

"சுற்றத்தாரும் செல்வமும் பொலிவு பெற்றவர்க்கே மகள் கொடுத்தால் பொலிவுடைய பொன் அணியில் மணி பதித்ததுபோல் விளங்கும். வந்து பொருந்திய ஊழ்வினையாலும் மஞ்சுளனே நீ உன் மகளைச் சந்திரசூடனுக்குத் தருவதே உன் கடமை" என்றார். -773-

33. *வள்ளலார் மணிவார்த்தை கேட் (டு)உ வந்து மகிழ்ந்தன்றோ*
*உள்ளவா றுரைசெய்தீ ருமதுதிரு வுளக்குறிப்பைத்*
*தள்ளுமா றெனக்கில்லை தையல்பிணியினளதுதீர்ந்து*
*எள்ளல்தீர்ந் தேயன்றோ வெழின் மணஞ்செய் குவதென்றான்.*

"சித்தராக வந்த இறைவனின் மணிவார்த்தை கேட்டு மகிழ்ந்த சந்திரசூடன்" உள்ளவாறே உரைத்தீர்கள்; உமது திருவுளக் கருத்தை ஒதுக்கும் வழி எனக்கு இல்லை ஆயினும் குமுதை நோயுற்று உள்ளாள். அது தீர்வதுடன் நோயாளி, என்ற பழியும் தீர்ந்த பிறகல்லவா அழகிய திருமணம் செய்ய வேண்டும் என்றான். - 774 -

34. *மற்றதற்கு நீவெருவேல் வம்மெனக் கொண் டுடனேகிப்*
*பொற்றமனை யகம்புகுந்து பூங்கொடியினுடல் முழுவதும்*
*பற்றலர்கள் புரம்பொடித்தார் பங்கயக்கை யால்வருடி*
*யுற்றபிணி யொழிவித்தாருலகு மெல்லா மதிசயிப்ப.*

"அதற்கு நீ அச்சப்படாதே வா" என்று அவனை அழைத்துக் கொண்டு சென்று பொலிவுடைய மனை புகுந்து, பூங்கொடி குமுதையின் உடல் முழுவதும் முப்புரம் பொடி செய்தவன் தனது தாமரைக் கையால் வருடி உலகம் அதிசயக்க நோய் தீர்த்தார். - 775 -

35. *பிணிமுழுவதும் கையகலப் பெண்ணரசி யுடல்குளிர்ந்து*
*தணிவில்பெரும் பிணிதுறந்து தவவேடத்திங்கிருந்தார்*
*துணிமதிவேய்ந் தருள் கொழிக்குஞ் சோதிஅல திலையென்னா*
*அணிமலர்ச்சே வடித்துணையி ன்அலர்மாலை போற்பணிந்தாள்.*

நோய் முழுவதும் நீங்க, குமுதை உடல் குளிர்ந்து, அதுவரை தணியாத பெரும் பிணி ஓட்டித் தவவேடத்துடன் அங்கு இருந்தவன் துண்டமதி சூடி அருள் வழங்கும் ஒளிவடிவானவரேயன்றிப் பிறர் இல்லை என்று அவரது அழகிய மலர் ஒத்த திருவடியில் மலர்மாலை போல் விழுந்து வணங்கினாள். - 776 -

36. *வணங்கிய மாதினை நோக்கி வருஞ்சித்தர் முறுவலித்து*
*மணங்கிளர் பூங்குழலாயுன் மனக்கருத்தையறிகின்றாம்*
*உணங்கலையென் மகள்நீயே யுன்கருத்தை முடிப்பாமென்(று)*
*இணங்கமொழிந் தனரேகியெழின் மலர்ப்புன் னையினிருந்தார்.*

வணங்கிய குமுதையைக் கண்ட சித்தர், புன்முறுவல் பூத்து மணம் கமழும் கூந்தலுடையவளே உன் மனக்கருத்தை அறிகின்றோம். வருந்தாதே; நீ என் மகள்; உன் கருத்தையே நிறைவேற்றுகிறோம் என்று பக்குவம் பொருந்தக் கூறி அழகிய புன்னைமலர்ச் சோலையடைந்தார் - 777 -

## வேறு

37. *இருந்த சித்த வெழிலுருச் செம்மலார்*
*திருந்து தம்மலர்ச் சேவடி யேத்திடும்*
*வருந்து றாத்தவ மஞ்சுளற் கோர்நலம்*
*பொருந்து மாறு புகலுதன் மேயினார்.*

புன்னைச் சோலைக்கன் இருந்த அழகு பொருந்திய ஈசனின் திருத்தம் வாய்ந்த மலர்ச்சேவடி ஏத்துதலில் வருந்தாத தவமுடைய மஞ்சுளனுக்கு, ஒரு நன்மை பொருந்த கூறத் தொடங்கினார். - 778 -

38. *விருத்த வோங்கலு மேதகு பல்பொருள்*
*பொருந்து மித்தகு புன்னைஞ் சூழலுந்*
*திருத்த முத்தா நதியுந் திருவெவாம்*
*அருத்தும் பற்குனி யாறுமொன றாமரோ.*

"விருத்தாசலமும் மேன்மை பொருந்திய பல்வகைப் பொருள்கள் பொருந்திய இத்தகைய புன்னை மலர்ச் சோலையும், திருத்தம் வாய்ந்த மணி முத்தாறும் தெய்வத் தன்மையூட்டும் பற்குனி ஆறும் தம்முள் ஒத்தனவாகும்." - 779 -

39. *பற்கு வென்றல் சிறுமை பகர்வது*
*பிற்க ணீயெனும் பேரடைவிப்பது*
*பற்கு பாவந் தனக்(கு) அடை வித்தலிற்*
*பற்கு னியெனப் பட்டதிப் பூநதி.*

"பற்கு என்ற சொல் சிறுமை என்று பொருள் தருவது அதன்பின் நீ என்ற பெயரைப் பெற்றது. பாவந் தனக்குச் சிறுமை அடைவிக்கும் தன்மையால் பற்குனீ எனப்பட்டது இவ்வழகிய ஆறு." - 780 -

40. *என்ன பாவ மியற்றினும் பற்குனி*
*தன்னி லாடில்தவிர்க்குமிம் மாநகர்*
*மன்னு நாதன் மலரடி தாழ்கலார்க்(கு)*
*இன்ன லேவளர் விக்குமெந் நாளுமே.*

"என்ன பாவம் செய்தவனாயினும் இப்பற்குனியில் நீராடினால் அதனை இது தவிர்க்கும். இப்பூவாளூர் மன்னிய இறைவன் மலரடி பணியாதவர்க்கு எந்நாளும் இன்னலே விளையும்." - 781 -

41. *கோயி லுக்குக் குறித்த பொருள்களை*
*வாயி னால்வழங் கேலென்று கூறினுந்*
*தீய தேபய னாய்வருஞ் செல்லுமித்*
*தோய ம்ஆடி னு மப்பயன் சோருமோ.*

"கோயிலுக்குத் தரக்குறித்த பொருள்களைத் தராதே என்று கூறினாலும் தீயபயனே வரும். ஓடும் இந்நதியில் மூழ்கினாலும் கூட அத்தீய பயன் நீங்காது" - 782 -

42. *மாரனைப் பொடித் தார்க்கு வழங்கிட*
*நேரு மொண்பொரு ள்நீட் டில ராயிடிற்*
*தார முந்தகு சுற்றமுஞ் செல்வமுந்*
*தீர ஐயந் தெருத்தொறு ம்ஏற்பரே.*

"மன்மதனை நீறாக்கியவர்க்கு வழங்க நேர்ந்த பொருளைக் கொடாராயின் அவரது மனைவியும், தக்க சுற்றமும், செல்வமும் அவரைவிட்டு நீங்க அவர் தெருத்தெருவாகப் பிச்சை எடுத்து வாழ்வர்" - 783 -

43. *கழுதொ டாடிய கண்ணுத லொண்பொருள்*
*விழுமி தென்று மிசைந்தன ராயிடின்*
*எழுபி றப்பு ம்இனத்தொடு கும்பியின்*
*முழுகு வார்சமன் தூதர்கள் மொத்தவே.*

"பேயுடன் சுடலையில் கூத்தாடிய நுதற்கண்ணணர்க்கு உரிய செல்வத்தை இனியது என்று யாரும் அனுபவித்தால், எழுபிறப்புகளிலும் தன் சுற்றத்தாருடன் எமன் தூதர் மோதி வருத்த நரகடைவர்" - 784 -

44. *அன்பி னாலரன் சேவடி போற்றியே*
*பைம்பொ னீர்வளர் பற்குனி தோய்ந்தவர்க்(கு)*
*இன்பெ லாமுறு எண்ணமெ லாமுறுந்*
*துன்பெ லாம்அறுந் தோமறு நாளுமே.*

"அன்புடன் அரனார் சேவடி வணங்கி, வளமான தூய நீர் பெருகும் பற்குனியில் நீராடியவர்க்கு இன்பமெல்லாம் வந்துசேரும்; எண்ணம் எலாம் ஈடேறும், துன்பம் அற குற்றங்களும் நாடோறும் அறும்" - 785 -

45. *கங்கை யாடினுங் காசி வதியினும்*
*பொங்கு காவிரிப் பூம்புன லாடினும்*
*எங்கு மாடினு மெங்கு மிருப்பினும்*
*மங்கு மோஅரன் மாட்டிழை வஞ்சமே.*

"கங்கையில் நீராடினாலும், காசியில் வாழ்ந்தாலும், பொங்கு காவிரியின் தெளிந்த நீரில் மூழ்கினாலும் வேறு எங்கும் நீராடினாலும் எங்கு தங்கியிருந்தாலும் சிவபெருமானுக்கு இழைத்த வஞ்சனைகள் அளவில் குறையாது." - 786 -

46. வேந்த னால்விழை யப்படி னல்ல (து)அங்
ஆய்ந்தி டாதய லோர்க்கிழை குற்றமுந்
தேய்ந்தி டா(து)அவற் கேபிழை செய்திடிற்
காய்ந்தி டாதுகண் ணோட்ட மளிக்குமோ.

"அயலவர்க்கு ஒருவர் ஆராயாது செய்த குற்றம், அரசனால் விரும்பப்பட்டாலல்லது தேயாது. அரசனுக்கே பிழை செய்தால் அரசன் அவரைச் சினந்து தண்டிக்காமல் கருணை காட்டமாட்டான்." - 787 -

47. அண்ண லால்விழை யப்படி னல்லது
பண்ணு மாருயிர்ப் பாவமும் பாறுறா
கண்ணு மூன்றுடை யான்கழற் கேபிழை
நண்ணி ன்உய்தலெந் நாட்டினு மில்லையே.

"இறைவனால் விரும்பப் பட்டாலல்லது பிற உயிர்க்குப் பண்ணும் பாவம் அடிப்பறியாது அழியாது. முக்கண்ணர்க்கேபிழை செய்தால் செய்தவர் கடைத் தேறுவது எந்நாட்டிலும் இல்லை." - 788 -

48. ஆத லாலற ம்ஆதிகள் வேண்டியுந்
தீதெலாஞ்சிதை விப்பது வேண்டியும்
நீதி யாலிந் நெடுநகர் வைகினும்
போது சேர்பற் குனிப்புன லாடினும்

"எனவே அறம் முதலியன வேண்டியும், பாவம் எல்லாம் அழிக்க வேண்டியும் முறைப்படி இந்நகரில் - பூவாளூரில் நெடுநாள் வாழ்ந்தாலும், போதுகள் சேர்ந்த பற்குனிநீரில் நீராடினாலும்;" - 789 -

49. சிறந்து வைகுந் திருமூல நாதர்பால்
மறந்ும் மோர்பிழை யும்மரு வாவகை
நிறைந்த பத்தியி ன்நெறிச் செல்லுவார்
பிறந்து வந்த பயன்பெறும் பெற்றியார்.

"சிறந்த முறையில் எழுந்தருளியுள்ள திருமூலநாதர்க்கு மறந்தும் கூட எந்த ஒரு பிழையும் பொருந்தாதவாறு நிறைந்த பேரன்புடன் நெறிப்படி வாழ்வார் தாம் பிறந்த பயனை அடையும் தன்மையர் ஆவார்." - 790 -

## வேறு

50. *மஞ்சுளா அத்தகைய மணிகண்டர் திருவடிக்கு*
*நெஞ்சமா தியிற்பிழையா நெறியுடையை யாய்ஈங்கே*
*எஞ்சுறா திருந்(து)எறிநீர்ப் பற்குனியா டியதிறத்தால்*
*விஞ்சவே வரும்பயன்கள் மேல்விளங்கக் காண்டியால்.*

"மஞ்சுளனே சிவபெருமான் திருவடிகளுக்கு ஆதி முதலே நெஞ்சாலும் பிழையாத நெறியுடையவன் நீ இங்கே குறைவின்றி ஓடி அலை எறியும் பற்குனியில் நீ, நீராடியதால் மிகுதியாக வரும் பயன்கள் இனிமேல் விளங்க நீ காண்பாய்." - 791 -

51. *பாணித்த ல்னியமையும் பற்குனியி னீராடி*
*ஆணிப்பொன் மனையகத்தே யடுத்தடிசி ல்அயிலென்றார்*
*சேணுற்ற பெரும்புகழான் றிருமுகத்தா மரை மலர்ந்து*
*புனல்நணுற்ற விதியாற்றாள் பொங்குவதி படிந்தான்.*

"காலம் தாழ்த்தல் இனியும் வெண்டா. பற்குனியில் நீராடி சிறந்த அழகிய வீட்டை அடைந்து உணவு உண்க" என்றார். நெடுந்தொலைவு பரவிய புகழுடைய மஞ்சுளன் தாமரை ஒத்த முகம் மலர்ந்து தான் பூண்ட விதிமுறைப்படி பற்குனி நீரில் நீராடினான். - 792 -

52. *சோராத கதியருளுஞ் சொமாக்கந் தரைப்பாங் கர்த்*
*தீராது சேவித்துச் சனகர்முத லோர்செறியக்*
*கூரார்ந்த படைப்பூதக் கழுநெருங்க மனத்தெண்ணி*
*ஆராத காதலினா ல்அகமருடம் படிந்திட்டான்.*

அனகாதி முனிவர் கூட, கூரிய படைக்கலன் ஏந்திய பூதகணம் சூழ உள்ள வீடுபேறு அருளும் அம்மையப்பரை மனத்தில் எண்ணக் குறையாத அன்புடன் புண்ணிய மந்திரத்துடன் மஞ்சுளன் நீரில் மூழ்கினான். - 793 -

53. *உள்ளமுறத் தியானித்த வுறுபொருளின் சொருபமாய்க்*
*கள்ளொழுகு மலர்ப்புன்னைக் கடிநிழலில் வீற்றிருந்த*
*வள்ளலவர் தமைக்காட்ட வளர்புன ல்மேல் தலைநிமிர்ந்தான்*
*எள்ளலற வருஞ்சித்த ரொருவரையே யெதிர்காண்டான்.*

தேன் பெருகும் மலர்களையுடைய புன்னை மரத்து மணமிக்க நிழலில் வீற்றிருந்த சித்தர் தமது உண்மை உருவாகிய சோமாக் கந்தர் திருவருளை, அவன் உள்ளத்தில் தியானித்த வண்ணம் காட்டக் கண்டவன், மூழ்கி எழுந்ததும் குற்றமற்ற அரிய சித்தரைக் கண்டான். - 794 -

*54. மீட்டும்இரும் புனன்முழுகி மிக்கதியா னைத்திருந்தான்*
*மீட்டும்மலர்ப் புன்னைநிழல் வீற்றிருந்தார் முன்போலக்*
*காட்டுதலு ம்இங்கிருந்தார் கண்ணுதலாரெனவவர்தந்*
*தாள்தலம்கைத் தலம்பற்றித் தக்க வலங் கொளச்சார்வான்.*

மிக்க தியானத்தில் இருந்து மீண்டும் நீரில் மூழ்கியவனுக்கு புன்னைமலர் மரத்தடியில் எழுந்தருளியிருந்தவர் முன்புபோல் சோமாக்கந்தர் உருவில் காட்சி தர "முன்பு இங்கு சித்தராக இருந்தவர் நுதற்கண்ணரே" என்று முடிவு செய்து அவர் திருவடிகளைத் தம் கையால் பற்றி வணங்கவும், தக்கபடி வலம் சூழவும் நெருங்கினான். - 791 -

*55. வல்விரைந்து புனல்நீங்கி வார்கரைஎக் கரினோடிக்*
*கல்வரைந்த திணிதோளான் கடிமலர்ப்புன்னையினிருந்தார்*
*சொல்வரைந்த மலர்பாதந் துணைக்கையிற் பற்றிடத்தாழ்ந்தான்*
*கொல்வரைந்த திரிசூலக் கூத்தர் மறைந் தருளினார்.*

மிகவிரைந்து தண்ணீரின் நீங்கி, நீண்ட கரை சார்ந்த ஏக்கர் மணல்வழி ஓடி, மலைபோன்ற வலிய தோள்களையுடைய மஞ்சுளன் மணமலர்க்கொண்ட புன்னை நிழலில் இருந்தவரது புகழ் நிலைத்த மலர்ப் பாதத்தைத்தன் இருகைகளாலும் பற்றக் குனிந்தான் அப்போது கொலைத்தொழில் நிலைத்த மூவிலைச் சூலத்தர் ஆகிய கூத்தர் மறைந்தார். - 796 -

*56. புன்னாகத்(து) அடியிமையார் போற்றிசைப்ப வீற்றிருந்த*
*கொன்னாகத் துரிபோர்த்தார் குறுமுறிவில் வத்தடியிற்*
*தொல்நாகத் தவர்போற்றத் துன்னினார் மஞ்சுளன்றான்*
*நல்நாகத் தவிர்மணிகை கழுவினர்போ லாயினான்.*

புன்னை மரநிழலில் தேவர்கள் போற்ற வீற்றிருந்த கொலைத் தொழில் மிக்க யானைத்தோல் போர்த்தவர், சிறிய தளிரான வில்வ மரத்தடியில் தொன்மையான நாகலோகத்தவர் போற்ற இருந்தார். மஞ்சுளன், நல்ல நாகத்து ஒளி பொருந்திய நாக ரெத்தினம் கிடைத்தும் கூட அதனைக் கை நழுவ விட்டவர் போல் ஆயினான். - 797 -

57. *அலமரும்எண் டிசையோடு ம்ஐயரே வருகவென*
*நிலமிசைப்பன் முறைவணங்கும் நெட்டுயிர்க்கும் பொழின் முழுதுஞ்*
*சுலவுறும்வான்அ முதடுப்பத் தூ நீரன் றேமதித்த*
*புலனுடை யே னாயினே ன்எனக்கரத்தான் முகம்புடைக்கும்.*

இதனால் அவன் அலமந்தான், எண் திசையும் தேடி ஓடினான்; "தலைவரே வாருங்கள்" என்று கூவி நிலத்தில் பல முறை விழுந்து வணங்குவான், பெருமூச்சு விடுவான் சோலை முழுவதும் சுற்றித்தேடுவாள் மேலான "அமுதம் கிடைத்தும் கூட அதனைத் தூய தண்ணீராக மதித்த அறிவுடைய அற்பனானேன்" என்று தன் கைளால் முகத்தில் புடைத்துக் கொள்வான். - 798 -

58. *அடியற்ற மரம்போல அவனிவிழும் மிகப்புரளுங்*
*கடிதுற்ற மலர்ப்புன்னைக் காமர்மரத் தினைச்சூழும்*
*வடிவுற்ற வருட்சித்தர் வார்மலர்ச்சே வடிச்சுவட்டின்*
*பொடியொற்றித் (து)உடன்முழுதும் பாழிவிழிமாரியின்டுனைப்பான்.*

அடியற்ற மரம் போல நிலத்தில் விழுவான்; மிகப்புரள்வான், மணம்மிக்க மலர்களுடைய அழகிய புன்னை மரத்தைச் சுற்றுவான். அருள் வழங்கும் அழகிய சித்தரின் நீண்ட மலர் ஒத்த சேவடிச் சுவடுபட்ட துகளை ஒற்றி எடுத்து உடல் முழுவதும் பூசிக் கொண்டு, கண்கள் பொழியும் மழை போன்ற கண்ணீரால் நனைப்பான். - 799 -

*இவ்வாறு மஞ்சுளஅங் குஇனைந்தழியுஞ் செயல்கேட்டுச்*
*செவ்வாய்மைப் பெருஞ்சுற்றத் திரளினரெல்லாம்ஏ*
*ஒவ்வாத புகழாய்க்கிங் குற்றதெவனுரையென்றார்*
*அவ்வாயின் மொழிபெறா ர்அவனையுடன் கொடுபோந்தார்.*

இவ்வாறு மஞ்சுளன் அங்கே வருந்தி மனம் அழியும் செயலைக் கேள்விப்பட்டு, சிறந்த வாய்மையுடைய சுற்றத்தார் எல்லாரும் திரண்டுவந்து "பிறர்யாரும் ஒப்பில்லாத புகழ் வாய்ந்த உனக்கு இங்கு நேர்ந்தது என்ன கூறுக" என்றனர். அதற்கு மறுமொழி பெறாமையால் அவனைக் கூட அழைத்துச் சென்றனர். - 800 -

59. *பொன்மனையி னகத்திருத்திப் புரோகிதனை வரவழைத்து*
*நன்மதியைக் கூர்த்தறியும் நான்மறையோய் மஞ்சுளன்தான*
*தன்மதியின் வேறாகித் தளர்ந்து தெருமருகின்றான்*
*என்மதிநீ யெனவுரைத்தா ரெல்லாருங் கைதொழுதே.*

அழகிய மனையில் இருக்கச் செய்து, புரோகிதனை வரவழைத்து "நல்லறிவைக் கூர்மையாக அறியும் நான்மறை கற்றவனே; மஞ்சுளன் தனது அறிவின் வேறாகித் தளர்ந்து மனம் சுழல்கின்றான்; என்னஎன்று நீ மதித்துக் கூறு" என்று எல்லாரும் கைகூப்பிக் கூறினார்; - 801 -

*60.* *அறிவுறுக்கும் புரோகிதன்மெய் யன்பன்முகமலர்நோக்கி*
*நெறியுளியுச் சியினின்ஆற்றும் நித்தியகன் மமும்க ணோம்*
*செறிபிணியு நின்மகட்குத் தீர்ந்த தென வேகேட்டாம்*
*அறிவதெவ எவற்றிற்கும் வாய்மையே யுரையென்றான்.*

அறிவூட்டும் புரோகிதன்,மஞ்சுளனின் முகமலர் நோக்கி, முறைப்படி உச்சி நேரத்தில் செய்யும் நாட்கடனும் இவன் செய்யவில்லை; "உன் மகளுக்கு இருந்த கடும் பிணியும் நீங்கிவிட்டது என்று கேட்டேன்; என்ன நினைக்கின்றாய்? எதற்கும் உண்மையே கூறுக" என்றான். - 802 -

*61.* *உரையென்ற புரோகிதன்முன்ஊற்றிருந்து விழிப்புனல்கள்*
*கரைவென்ற நதிபோலக் கடிமார்பத்திடை யொழுக*
*வரைவென்ற எண்டோளார் வந்தபடி யுரைத்தபடி*
*தரையொன்றி யிருந்தபடி மறைந்தபடி சாற்றினான்.*

"கூறுக" என்ற புரோகிதன் முன்னே ஊற்றிலிருந்து நீர் சுரந்து கரையை உடைப்பது போல் கண்ணீர் விளக்கமுற்ற மார்பில் ஒழுக:; மஞ்சுளன், மலை வென்ற எண்தோள் ஈசன் வந்தவகை, உரைத்தவகை, கரையை ஒற்றி இருந்தது பின் மறைந்தது ஆகியன கூறினான். - 803 -

*62.* *கேட்டுளத்தி லதிசயித்துக் கிளைஞரெலா ம்அச்சமுடன்*
*கோட்டமிலா மஞ்சுளனைக் கும்பிட்டுப் பணிந்தெழுந்தார்*
*தீட்டரிய புகழானைத் தெண்ணீரென் (று)அமிழ் (து)உண்ணினும்*
*வேட்டபய னின்றாமோவெனத் தெளித்தான் விப்பிரர்கோன்.*

சுற்றத்தார் அனைவரும் அதுகேட்டு உளத்தில் அதிசயம் கொண்டு, மனக் கோட்டம் இல்லாத மஞ்சுளனைக் கும்பிட்டும் பணிந்தும் எழுந்தனர். பார்ப்பனப் புரோகிதன் "எழுத ஒன்னாப் புகழுடைய இறைவனை - அமுதைத் தண்ணீர் என்று பருகினாலும் உரியபயன் இல்லா மலர போகும்" என்று கூறித் தெளிவு ஊட்டினான். - 804 -

63. *செய்யசடை யரற்(கு)அன்பு செயஅமுது பணிமாற*
*வெய்யவுருப் பிணிஜயர் மென்கையிற்றை வந் தொழிப்ப*
*மையறுமஞ் சுளன்காந்தி மதிகுமுதை மூவரும்முன்*
*பொய்யில்தவ என்புரிந்தா ரெனவெவரும் புகழ்ந்தனரால்.*

செஞ்சடைப்பர்க்கு அன்பு செய்யவும், அமுது ஊட்டும் பணி செய்யவும், கொடிய பிணியைத் தனது மென்மையான கையால் உடம்பைத் தடவி ஒழிக்கவும் ஆன பொய்யற்ற பெரியதவத்தை, மஞ்சுளனும், காந்திமதியும் குமுதையும் ஆகிய மூவரும் செய்தனர் என்று எல்லாரும் புகழ்ந்தனர். - 805 -

64. *கல்யாண சிகரத்திற் கலந்திருந்தார் மகள்பேசுங்*
*கல்யாணம் வளர்காதை கட்டுரைத்துச் சூதமுனி*
*பல்யாணர்க் கதைகேட்கும் பரிசினர் முன் மஞ்சுளன்பின்*
*நல்யாணர்ச் சிவபூசை நயந்தபடி வியந்துரைப்பான்.*

பூவாளூர்த் திருக்கோயில் கல்யாண சிகரத்தில் கலந்திருந்த திருமூலநாதர், மகள் பேசி வந்து கல்யாணம் வளர்த்த கதையை ஏற்றவாறு கூறிய சூத முனிவர், பலவகைப்பட்ட புதுப்புதுக்கதை கேட்கும் தன்மையுடையவர் முன்னே மஞ்சுளன் நலம்தரும் நன்மையுடைய சிவபூசனையை விரும்பி மேற்கொண்ட வகையைச் கூறினான். - 806 -

மகட்பேறு சருக்க முற்றிற்று

*ஆகத்திருவிருத்தம் - 806 -*

## 16. சிவபூசைச்சருக்கம்

1. *தேசிகன் தெருட்டலுந் தெளிந்து மஞ்சுளன்*
*கூசிநின் (று)அவனெதிர் கூறன் மேயின*
*ஈசனென் றவத்தினுக் (கு)இரங்கு மேயெனிற்*
*பேசுவ தென்னைவே றுருவம் பேணுமோ.*

தேசிகன் ஆகிய புரோகிதன் அறிவுறுத்தியதால் ஓரளவு தெளிந்த மஞ்சுளன் வெட்கி "ஈசன் என் தவத்துக்கு இரங்கினான் என்றால் தன் சுய உருவிலேயே எனக்குக் காட்சிதராமல், சித்தராகிய வேற்று உருவம் கொண்டு வருவானேன் கூறு. இதுபற்றி வேறு என்ன சொல்ல உள்ளது" என்றான். - 807 -

2. *தன்னிய உல்உருவினைத் தகுந்தி யானத்தின்*
*மன்னிடக் காட்டிய வரதன் கைகளாற்*
*பொன்னடித் தாமரை பொதியப் புக்குழி*
*அன்னிய மாக்கிஅங் ககன்று போஅமோ.*

"தனது இயல்பான உருவை எனது தியானத்தின் போது நிலைநிறுத்திக் காட்டிய அவனது பொன்போலும் தாமரைத் திருவடிகளை நான் என் கைகளால் பற்றித் தொழ முயன்ற போது என்னை அந்நியன் ஆக்கி மறைந்ததேன்?" - 808 -

3. *தவத்துறை முற்றிடாத் தமிய னிங்கிருந்(து)*
*அவத்துறை முற்றுவ தன்றி ஆழ்கடற்*
*பவத்துறை பாழ்படப் பரம ஞானத்தாற்*
*சிவத்துறை முற்றலுஞ் சிவனு மேகொலாம்*

தவத்துறை முற்றினாலும், தமியனாகநான், பாவவழியே விளைய வாழ்வதன்றி, ஆழ்கடல் போன்ற பிறவியைப் பாழ்படுத்தும் மேலான ஞானத்தால் நான் சிவனாம் தன்மை அடைதல் எனக்குப் பொருந்துமோ? - 809 -

4. *கன்னலின் களிதெரி களிறு போலவே*
*முன்னுற அருள்தர முன்னும் வேடமே*
*நன்னலப் பொருளென நாடி டாதுவே(று)*
*இன்னுமுண் டெனஇகந் தேனு ம்உய்வலோ.*

"கரும்பில் சுவை கண்ட களிறுபோல என் முன் பொருந்திய அருள் புரிய அவன் கொண்ட திருமேனியே நன்கு நல்ல நன்மைகள் அருளும் பொருள் என்று நான் அதனையே நாடிடாது வேறுவடிவு ஒன்றும் உண்டு என்று முன்னைத் திருவுருவைக் கைவிட்ட நான் ஈடேறுவோனோ." - 810 -

5. *அடியவ ருள்ளமே யால யங்களும்*
*வடிதரா மேனியும் மற்றுங் காண்கெனத்*
*துடியணி கரத்தவர் தோன்றுந் தொண்டர்தம்*
*படிவமுற் றிடுதவப் பரிசு தேர்கிலேன்.*

"அடியவர் உள்ளம் தான் அவன் எழுந்தருளும் திருக்கோயில்களும் குறித்ததொரு வடிவுகொள்ளாத் திருமேனியும் ஆகும்; அவ்வகையிலேயே அவனைக் காண்க என்று துடி ஏந்திய கரத்தவர், அடியவர் திருவேடம் கொண்டு தோன்றிய சிறந்த தன்மையை அறியாதவனானேன்" - 811 -

6. *மன்றல்செய் கூவிள மரத்து நீழலில்*
*ஒன்றிய நாதரே யொருமைச் சித்தராய்*
*இன்றெழுந் தருளியு ம்எண்ண முண்டெனி*
*நன்(று) நன்(று) இருத்தலி ன்அசித்த ன்அன்றென்றான்*

"வில்வ மரநிழலில் பொருந்திய இறைவனே திருமணம் செய்து வைக்க மனம் ஒன்றிய சித்தராய் இன்று எழுந்தருளியும் அருள்புரியத் திருவுளம் பற்றுவாரேல் அதனை அறியாத அறிவற்றவனாய் நான்இருந்தது நன்று நன்று என்றான்" - 812 -

7. *குறைநிறை யுளத்தொடு குழைந்து கூறிய*
*நிறைந்தவ மஞ்சுள நிலைமை நோக்குபு*
*மறையவர் திலகனாய் வந்த தேசிகன்*
*கறையறு முறுதிகட் டுரைத்தல் மேயினான்.*

தவம் நிறைந்த மஞ்சுளன், குறையேநிறைந்த உள்ளத்துடன் தொழுதுகூறிய நிலைமையை நோக்கி வேதியர் தலைவனான புரோகிதன் குற்றமற்ற உறுதியான தக்க சொற்களால் மஞ்சுளனைத் தேற்றத் தொடங்கினான். - 813 -

**வேறு**

8. *மஞ்சுளஇில் வுடல்வாழ்க்கை மாற்றுவதே பயன்போல*
*மதித்துச் சொன்னாய்*
*நஞ்சுமிழ்உ ள்துளை யெயிற்று நா ம்உரிபல்காலு நழுவச் செய்தும்*
*விஞ்சவுரி மேன்மேலு ம்உறுவதுகண் டிலைபோலும் வினைநேராக*
*எஞ்சலிலாச் சிவஞானத் தேசினில்ஒன்றாமளவு ம்எய்துங் காயம்.*

"மஞ்சுளா, பிறவிப்பயன், வாழ்ந்து இறப்பது தான் என்பதுபோல் நினைத்துக் கூறினாய். நஞ்சுஉமிழும் துளையுடைய பற்களைக் கொண்ட நாகம் தன்மேல்தோலை - சட்டையை உரித்தும் கூட, அதுமேன் மேலும் வளர்ந்துவருவதை நீ பார்த்ததில்லை போலும், நம் வினை நேரானநிலையில் குறைவற்ற சிவஞானப் பேரொளியில் நம் உயிர் ஒன்றும் அளவும் உயிர் பிறக்கும்" - 814 -

9. *இந்தஉட லழிந்ததற்பி ன்இதற்குமே லாம்உடல மெய்து மேயோ*
*பந்தமுறும் பிணிவறுமை பாவமிகு ம்இழிவுடலம் பற்றுமேயோ*
*முந்தவினை யாதாக முடித்திரு மோ யாரறிவார் முதல்வர்ப் போற்ற*
*வந்தவுட லேநமக்குப் பயப்படு வ(து)இதிலியற்று மரபொன் றுண்டால்.*

"இந்த உடல் அழிந்த பிறகு உயிர் இதனை வி'_ மேலான உடல் பெறுமோ, மலக்கட்டுள்அகப்பட்டுப் பிணி, வறுமை, பாவம் மிகுந்த இழிந்த நரகன் உடல் பற்றுமோ முன்னைய ஊழ்வினையால் யாதுநேருமோ யாரறிவார்? இறைவனைப்போற்றக் கிடைத்த இவ்வுடலே நமக்குப் பயன்படுவது. இதனைப் பயனுறச் செய்யும் மரபு ஒன்றும் உண்டு" - 815 -

10. அம்மரபீ யாதெனிற்கே ள்அகண்டசச்சி தானந்த அகள மான
செம்மல்இனி திருந்தருளுஞ் சிவலிங்கத் தருச்சனையே செய்த லாகும்
விம்முறுநோய் பழிபாவ முதலான வாட்ட மெலாம் விரைவி னீங்கும்
எம்மையில்வேண் டியஇட்ட மெனைத்தினையும் வான்க
தியோ டீயா நிற்கும் .

"எதனாலும் பின்னப்படாததும், உண்மை அறிவு இன்பவடிவானதும், களங்கம் இல்லாததும் ஆகிய திருவுருக் கொண்ட செம்மல் - சிவபெருமான் இனிது எழுந்தருளும் சிவலிங்கத்து அருச்சனை புரிதலே அம்மரபு ஆகும். அதனால் மேன்மேலும்துன்பம் உண்டாக்கும் பழிபாவம் முதலிய துன்பங்கள் எல்லாம் விரைவில் நீங்கும். எப்பிறப்பிலும் நாம் வேண்டிய விருப்பம் எதனையும் வீடுபேற்றுடன் ஒருசேர அதுதரும்" - 816 -

11. வாய்மைஅறி (வு) ஆசார ம்உபசாரம் வந்தித்தல வணங்கல் சீலந்
தூய்மையரு ள்அன்(பு) அடக்க மொழுக்கம்முக் காறாமை துறவு நன்றி
ஆய்மனத்திற் பொறுமைதவந் தானமுதல றங்களெலா ம்ஆற்று வோருந்
தேய்மதிய முடிக்கணிந்த சிவபெருமான் பூசனையே செய்தல் வேண்டும்.

"வாய்மை அறிவு ஆசாரம், உபசாரம், புகழ்தல், வணங்கல், சீலம், தூய்மை, அருள், அன்பு, அடக்கம், ஒழுக்கம், பொறாமையின்மை, துறவு, நன்றிபாராட்டல் ஆராயும் மனத்தில் பொறுமை, தவம், தானம் முதலிய அறங்கள் அனைத்தும்ஆற்றுவோரும் கூட, பிறை மதியணிந்த பெருமானைப் பூசனை புரிதல் வேண்டும்" - 817 -

12. அந்தரத்தி னிமையோர்க ளரம்பையர்பூ ண்ணிமுலைக ளாகந் தோயச்
சிந்தைமகிழ்ந் திடும்வாழ்வுந் தினகரன்வல் லிருளொதுக்குந் திறமுஞ்சீதச்
சந்திரன்பைங் கூழ்வளர்க்குந் தருமமும்இந் திரனமலரோன் சங்க மேந்தி
பந்தமுறு ம்அதிகாரம் பலவுமிறை பூசனைசெய் பயனே யன்றோ.

"தேவருலகத் தேவர்களாகி அரம்பையரின் அணிகலன் அணிந்த முலைகளையுடைய உடம்பினைத் தோய்ந்து மனம் மகிழ்ந்திடும் வாழ்வும், ஞாயிறு வலிய ,இருட்டை ஒதுக்குகின்ற ஆற்றலும், குளிர்ந்த நிலவு பசும்பயிர்களை வளர்க்கும் அறமும், இந்திரன், நான்முகன், திருமால் ஆகியோர் தம்முடன் தொடர்புடைய அதிகாரம் பலவும் பெற்றதும் இறைவனைப் பூசித்த பயனேயல்லவா?" - 818 -

13. *தீர்த்தமா டுதல் சாந்தி விரமுதற் றானங்கள் செய்தல்அங்கி*
*ஆர்த(து)மா தவம்புரித லாச்சிரமத் தெய்த ல்இலை யாற்றி னோரும்*
*வேர்த்திடா வுடலமர ர்உலக்கிடைச்சென் றிமைப்பளவின் மீள்வர் நூலின்*
*ஓர்த்தநீள் சரியைமுத ல்உ ஞற்றினோர்சாலோ காதி யுற்று மீளார்.*

புனித நீராடல், சாந்தி எய்தல், விரதம் மேற்கொள்ளுதல் முதல் தானங்கள் செய்தல், தீ வளர்த்து மாதவம் செய்தல், ஆசிரமம் அடைதல் இவை புரிந்தவரும் கூட வியர்வை இல்லாத் தேவருலகடைந்து வாழ்ந்து இமைப்பளவில் பூமியில் வந்து பிறப்பர்; நூல்கள் ஆராய்ந்து கூறிய சரியை கிரியை யோகம் ஞானம் ஆற்றியவர்கள் சாலோகம் முதலியன பெற்று மீண்டும் பிறவா நிலையடைவர். - 819 -

14. *ஆதலாற் குறைதீர வருள்பெறுதல் வேண்டுமெனி வன்பா வில்வச்ன*
*சீதநீ ழல்இருக்குந் திருமூலநாதரொரு: சித்த ராகிக்*
*காதலா லமர்ந்துழியே சிவலிங்க பூசனைக்கொள்க வென்றான்*
*போதுவாம் மெனவடுத்தோ ருடன்கொண்டு போந்தனர்அப் புன்னை வாயில்.*

எனவே நம் குறைகள் தீர இறையருள் பெறவேண்டுமானால் அன்புடன் குளிர்ந்த வில்வ மர நிழலில் இருக்கும் திருமூலநாதர் ஒரு சித்தராக வந்து விருப்புடன் சென்று அமர்ந்த இடத்தில் சிவலிங்க பூசனை மேற்கொள்ள வேண்டும் என்றான். வந்திருந்த அனைவரும் அங்குச் செல்வோம் என்று மஞ்சுளனை அழைத்துக்கொண்டு புன்னை வாயிலடைந்தனர். - 820 -

## வேறு

15. *நித்திய நான நான்கு நிகழ்த்திமென் மலர்கள் கொய்து*
*கொத்தலர் புன்னை நீழற் குழகனா ர்உருத்தா பித்துச்*
*சுத்திசெய் யிடத்தி னெல்லாப் பொருள்களும் தொகுத்து வைத்துப்*
*பத்திசெய் மஞ்சுளன்றான் பண்பொடும் பூசை செய்வான்.*

நாடோறும் இறைவனுக்குச் செய்யும் ஞானபூசைகள் ஆகிய அவனுக்குத் திருமுழுக்கட்டுதல், திருப்பரிவட்டம் சாத்துதல், திருவாபரணம் நறுமலர் சாத்துதல், நறும்புகை ஒளி காட்டுதல் ஆகிய நால்வகை ஞான நெறிகளையும் நிகழ்த்த மென்மலர்கள் கொய்து, கொத்தாக மலர்ந்த புன்னை மரநிழலில் அழகனையும் உரிய பொருள்களையும் சுத்தி எய்த இடத்தில் தொகுத்து அமைத்து கொண்டு அன்பு காட்டும் மஞ்சுளன் பண்பு பொருந்தப் பூசனை செய்தான். - 821 -

16. *பூதமா திகளோ ரைந்தும் பொற்புறச் சுத்தி செய்து*
*ஆதன மூர்த்தி மூர்த்தி மானையு ம்அமரவெண்ணிப்*
*போலிழ் மலர்கள் சாத்திப் பூம்புகை யொளிமுன் காட்டிச்*
*சீதள எண்ணெயாதி திருவுளக் குளிர ஆட்டி*

ஐம்பூதங்களையும் பொலிவு பெறத் தூய்மை செய்து மூர்த்திமானில் ஆதன மூர்த்தியை எழுந்தருளச் செய்து மலர்ந்த மலர்கள் சாத்தி, மென்மையான புகை ஒளி ஆகியன காட்டி வழிபட்டு, குளிர்ந்த எண்ணெய் முதலியவற்றால் ஆதனமூர்த்தி குளிரத் திருமுழுக் காட்டி. - 822 -

17. *விழைதகு மணிப்பொன் மேனி விரவிய ஈர மாற்றித்*
*தழையொளிப் பட்டுச் சாத்தித் தமனியம்தகர்த்த சுண்ணங்*
*குழைவிரை கலவைச் செச்சை கொட்டி மே லட்டிச் செந்தேன்*
*மழையெனத் துளிக்கு மாலை வயங்கணி பலவுஞ் சாத்தி*

விரும்பத்தக்க அழகிய பொன்னுடம் பின் ஈரம் மாற்றி, தழைத்த ஒளியுடைய பட்டாடை சாத்தி, பொற் சுண்ணம் குழைத்த மணம் மிக்க செஞ்சந்தனக் கவலையை மிகுதியாகச் சாத்தி, மழை போல் செந்தேன் துளிக்கும் மலர் மாலையுடன் ஒளி விளங்கும் அணிகலன் பல சாத்தி. - 823 -

18. *அறுசுவை யமுதம் நான்கு ம்ஆடகக் கலத்தி னூட்டி*
*நறுவிரைப் புகையி னோடு நகையொளி பலவுஞ் சுற்றி*
*மறுவில்கண் ணாடி காட்டி மதிக்குடை கவித்து மற்றும்*
*உறுமுறை பூசை முற்றும் உஞற்றினன் மனையைச் சார்ந்தான்.*

ஆறு சுவையுடைய நால்வகை உணவையும் பொற்கலத்தில் ஏந்தி ஊட்டி, மணம் கமழும் புகையுடன் மலர்ச்சியுடைய ஒளி பல சுற்றி, குற்றமற்ற கண்ணாடி காட்டி மதிக்குடை கவித்து, மற்றும் உரிய முறைப்படிப் பூசனையை முடித்து மஞ்சுளன் தன் வீடு சென்றான். - 824 -

19. *சுற்றமுந் தானு மொன்றாய் துவன்றிஇல் லகத்துள் வைகிப்*
*பற்றற வந்த சித்தர் பரிகலச் சேட ம்முன்னுண்டு*
*அற்றமில் சுவையினுண்டி அயின்றள வளாவி யன்பன்*
*மற்றைய நாளும் பூசை வயக்குவான் மதித்து நின்றான்.*

சுற்றத்துடன் தானும் சேர்ந்து ஒன்றாக இல்லத்தில் தன்பற்று அறவந்த சித்தர் உண்டு எஞ்சிய பரிகலம் முதலில் உண்டு, பின் குறையாத சுவையுடைய பிற உளவும் உண்டு சுற்றத்துடன் அளவளாவி, பிறநாட்களிலும் இவ்வாறு பூசனை விளங்க மதித்துச் செய்து வாழ்ந்தான். - 821 -

20. *மாதவத் தலைமை சான்றீர் மஞ்சுளன் பூசை யாற்று*
*நீதியை யெடுத்துச் சொற்றும் நேரிழைக் குமுதை மன்றல்*
*ஆதர வோடுஞ் சோறு ம்அறிகவென்றறிஞர் கேட்பம்அ*
*சூதநன் முனிவன் கூறத் தொடங்கினான் மடங்க ளோட.*

மாதவத்தலை மை பொருந்திய முனிவர்களே மஞ்சுளன் பூசனை செய்த முறைமையை எடுத்துக் கூறினோம். சிறந்த அணிகலன்கள் அணிந்த குமுதையின் திருமணம் பற்றியும் அன்புடன் கூறுகிறோம் அறிக. என்று முனிவர்கள் கேட்பச் சூதநன் முனிவன் அவர்களது அதுபற்றிய அறியாமை ஓடக் கூறத் தொடங்கினான். - 826 -

சிவபூசைச் சருக்கம் முற்றிற்று
*ஆகத்திருவிருத்தம் - 826 -*

## கல்யாணச் சருக்கம்

1. *அன்னை யாய்உல கனைத்திற்கு ம்அப்பனா யிருந்தே*
*யென்னை யாண்டுகொண் டருளிய விறைவனா ர்உருவம்*
*புன்னை நீழலிற் பூசித்துப் போனக ம்அயின்ற*
*தன்னை நேர்வரு மஞ்சுளன் தமரொடு மெழுந்தான்.*

உலகம் அனைத்திற்கும் தாயாகவும் தந்தையாகவும் இருந்து தன்னை ஆட்கொண்டு கூறிய இறைவன் திருவுருவை புன்னைமர நிழலில் பூசனை புரிந்து உணவு உண்ட தனக்குத் தானே ஒத்த மஞ்சுளன் தமரொடும் புறப்பட்டான். - 827 -

2. *சுத்த கூவிள நீழலிற் சுரரெலாம் போற்றும்*
*அத்த ணார்தமை அடுத்தனன்இறைஞ்சின னறைவான்*
*பத்தி யேதுமி லேனையும் பணித்திட இரங்கிச்*
*சித்த ராயெழுந்தருளினன் சிவபெரு மானே.*

தூய வில்வமரத்து நிழலில் தேவர்கள் எல்லோரும் போற்றும் சிவபெருமானை அடைந்து வணங்கிப் பின்வருமாறு கூறினான். "பத்திமை சிறிதும் இல்லாத என்னையும் ஆட் கொள்ளத் திருவுளம் கொண்டு சித்தராகச் சிவபெருமானே எழுந்தருளினான்." - 828 -

*3. ஆய்ந்த சுந்திர குத்தனா ர்அருந்தவத் துயிர்த்த*
*வாய்ந்த சந்திர சூடற்கு மஞ்சுள ன்அடி யேன்*
*சாய்ந்த மெல்லிடைக் குமுதையைத் தழன்முனர்க் கொடுப்ப*
*நேர்ந்து ளேனென வுரைத்தன ன்றின் றெலாங் கேட்ப.*

மஞ்சுளனாகிய அடியேன் சந்திரகுத்தனின் அருந்தவப்புதல்வன் சந்திரசூடனுக்கு ஒசிந்த இடையுடைய என் மகள் குமுதையைத் தீ முன்னர் மணம் செய்து தர முடிவு செய்துள்ளேன்" என்று எல்லாரும் கேட்பக் கூறினான். - 829 -

*4. முடங்க ல்தீட் டினன் முன்னுக வெனப்புரோகிதனார்*
*தடங்கை நீட் டினன் விடுத்தனன் சார்ந்தனன் மனையின்*
*மடங்கு றாவெழின் மன்றல்மண்ட பமொன்று வகுத்தான்*
*அடங்க வான் பொருளனைத்தையு மீட்டுவ னானான்.*

திருமணமடல் எழுதி புரோகிதனை வருக என்று அழைத்து அவனது நீண்ட கையில் மடல் தந்து அனுப்பினான். பின்னர் மனை சென்று குறைவில்லாத அழகுடைய திருமணமண்டபம் ஒன்று அமைத்தான். உரிய எல்லாப் பொருள்களையும் சேகரிக்கத் தொடங்கினான். - 830 -

*5. மன்றல் செய்வினைக் (கு)ஆம்பொருள் மஞ்சுளன் ஈட்டி*
*நன்று வைகின னாகநற் சந்திர குத்தற்கு*
*ஒன்றி ருங்கன வத்திடை உமிழ்மலர்த் தேறற்*
*கொன்றை யந்தொடைக் குழகனார் குறுகின ருரைப்பார்.*

திருமணத்துக்குரிய பொருள்களை மஞ்சுளன் சேகரித்து நன்மையுற வாழும் போது, சந்திரகுத்தருக்குப் பொருந்திய கனவில், தேன் உமிழும் மலர் ஆகிய கொன்றையாலான மாலையணிந்தவர் சென்று பின்வருமாறு கூறினார். - 831 -

*6. கேழில் சந்திர சூடற்குக் கெழுமுபூ வாளூர்*
*வாழு மஞ்சுளன் மகட் கொடை நேர்ந்திடும் வண்ணம்*
*பாழி வையகத் தவரெலாங் காணவே படர்ந்து*
*சூழி ருந்தொழில்தூதுரைத் தடுத்தனந் துணைத்தே.*

"ஒப்புமையற்ற சந்திரகுத்தன் மகனுக்குப் புகழ் நிறைந்த பூவாளூர் வாழும் மஞ்சுளன் தன் மகளைத்தரும் வண்ணம் பெருமை பொருந்திய உலகவர் அனைவரும் காணச் சென்று ஆராய்ந்து சிறந்த தூதுத் தொழில் கூறி விரைந்து வந்தோம்" - 832 -

7. *மங்க லச்செழு முடங்கலும் வைகுறு காலை*
*இங்கணேசிலர் கொண்டுவந் (து)ஈகுவர் காணென்*
*அங்கண் அங்கண ரருளினர் கரத்தலு மாங்கே*
*தங்கு சந்திர குத்தனுந் தடங்கண்விண் டெழுந்தான்.*

"மங்கலச் செய்தித் தாங்கிய செழுமடல் விடியற்காலையில் இங்குச் சிலர் கொண்டு வந்து தருவர் காண்க" என்று அங்குக் கருணைக் கண்ணர் ஆகிய சிவபெருமான் கூறி மறைய அப்போது உடனே சந்திரகுத்தன் கண்விழித்து எழுந்தான். - 833 -

8. *கண்ட தோர்கன வத்தினை நனவெனக் கருதி*
*அண்டர் நாயகன் கருணையை அன்பினாற் போற்றி*
*மண்டு தீம்புனல் காலையி ன்ஆடிமா சனைத்தும்*
*விண்டு பொதரு நாட் கடன் விதியுளி யிற்றி.*

தான் கண்ட கனவை நனவாகவே கருதி, அண்டத் தலைவன் கருணையை அன்போடு எண்ணிப் போற்றி, காலையில் அனைத்து மாசுகளும் விடுதற்குரிய அன்றாடக் கடமைகளை இயற்றி நிறைந்த நன்நீரில் நீராடி. - 834 -

9. *உரிய ராகிய கிளைஞரை அழைத்துமை யொருபாற்*
*பிரிவி லாதவர் பேணுவே டத்தொடு ம்அடுத்து*
*விரிய ஓதிய பெரும் பொரு ளிதுவென வியந்து*
*தெரிய வோதின்இருந்தனன் செவ்விமற் றதனில்.*

தன் உறவினர்களை அழைத்து, "உமையம்மை இடம்பாகம் பிரியாதவர் திருவேடத்துடன் வந்து விரிவாகக் கூறிய பொருள் இது" என்று திருமணம் பற்றிய செய்தியை வியந்து கூறியிருந்தான் அப்போது, - 835 -

## வேறு

10. *மங்கல முடங்கல் கொண்டு மருங்கெலா முழையர் சூழப்*
*பொங்கிய வியாழச் சூழ்ச்சிப் புரோகிதன் அடுத்து வைகித்*
*தங்கிய நாய்கன் செய்ய தடங்கர நீட்ட வாங்கி*
*அங்கவன் சுருளி ன்நீக்கி யரும்பொரு ளினிது தேர்ந்தான்.*

*மங்கலம் கூறும் கொண்டு, தன்னை ஏவலர் சூழ அறிவுமிக்க வியாழ* பகவானை ஒத்த புரோகிதன் வந்து மடல் தர, அங்குத் தங்கியிருந்த *சந்திரகுத்தன் தன் செங்கரம் நீட்டி வாங்கி, அதன் சுருள் நீக்கி அதில் கண்ட அரிய செய்தியை அறிந்தான். - 836 -*

*11. உழையிருந் தவர்க்குங் கூறி யொளிர்மணிக் கலனும்தூசும்*
*விழைதக முடங்க லுய்த்த வேதியன் முதலா னோர்க்கு*
*மழையெனச் சொரிந்து நாளைவருதும்முன் செல்க வென்று*
*தழைதரு விருப்பிற் போக்கிச் சந்திர குத்தன் பின்னர்.*

சந்திரகுத்தன் தன்றுடன் இருந்தவர்க்கும் செய்திக்கூறி, ஒளிவிடும் மணிகள் பதித்த அணிகலன்களும், பட்டாடைகளும் விரும்பத்தக்க மடல் கொண்டுவந்து கொடுத்த அனைவர்க்கும் மிக வழங்கி, "நாளை வருவோம்; முன் செல்க" என்று தழைத்த விருப்புடன் அனுப்பிய பின்னர், *- 837 -*

*12. வரைவுசெய் தொழின்மைக் (கு)ஏற்ற வண்பொருள் பலவுந் தாங்கி*
*விரைசெலற் கலினப் பாய்மாவேழமுந் தேரும் பண்ணி*
*யரையர்க ளாதியானஅனைவரும் உடங்கு சாரத்*
*தரைபுகழ் மகனைக் கொண்டு தகுதியின் வெளிக்கொண்டானால்.*

திருமணம் செய்தற்கு ஏற்ற வளமான பொருள்களை எல்லாம் ஏந்தி, விரைந்து செல்லும் கடிவாளமுடன் கூடிய குதிரை, யானை, தேர் ஆகியன ஏற்பாடு செய்து அரசர்கள் முதலிய அனைவரும் உடன்வர உலகுபுகழ் தன் மகனை அழைத்துக்கொண்டு புறப்பட்டான். *- 838 -*

*13. பல்வகை நெறியி னீங்கிப் பண்ணவர் தொழுது போற்றும்*
*வில்வநற் கானஞ் சூழ்ந்து மேதகும் பூ வா ளூரின்*
*எல்லையை யடுத்தான் முன்ன ரெய்திய தூதர் சொல்ல*
*வல்விரைந் ததிரே சென்றான் மஞ்சுளன் வரிசை யோடும்.*

பலவகை வழிகளைக் கடந்து, தேவர் போற்றும் வில்வவனம் அடைந்து மேன்மை பொருந்திய பூவாளூரின் எல்லையைச் சென்றடைந்த செய்தியை முன்னே சென்ற தூதுவர் கூற, மஞ்சுளன் மிக விரைந்து சீர்வரிசைப் பொருள்களுடன் எதிர்கொண்டான். *- 839 -*

*34. உரிமையின் அளவளாவி யுற்றவர் தம்மை யெல்லாம்*
*பரிசனத் தோடுங் கொண்டு பதிவயிற் புகுந்து பொன்னால்*
*விரியொளி மணியாற் செய்த விசித்திர மனைக ள்நல்கிப்*
*புரிவுறு மகிழ்ச்சி தோன்றப் பொற்புடன் விருந்து செய்தான்.*

எதிர் கொண்டவன், அவர்களுடன் உ ிமையோடு கலந்து பேசி, வந்த அனைவரையும் உறவினர்களுடன் அழைத்துக் கொண்டு ஊருக்குள் புகுந்து, பொன்னால் விரிந்து செல்லும் ஒளியுடைய மணியால் கட்டிய பேரழகுடைய இருப்பிடங்கள் தந்து அன்புடன் கூடிய மகிழ்ச்சி வெளிப்படப் பொலிவு மிக்க விருந்தளித்தான். - 840 -

15. *திருந்(து)இரு சுற்றத் தோடுந் திருமூலநாதர் முன்போய்*
*அருந்துதி யெடுத்துப் போற்றி யருச்சனை யாற்று வித்து*
*முருந்(து)உறழ் முறுவ லாட்கும் முழவுறழ் தோளி னாற்கும்*
*பொருந்துற முகூர்த்தாழ் துப் பொந்தனன் மனையின் மீண்டு.*

பண்பார்ந்த பெருஞ்சுற்றத்தோடு திருமூலநாதர் திருமுன்பு சென்று அரிய துதிப்பாடல்கள் கூறிப்போற்றி, அர்ச்சனையும் செய்வித்து, முருந்து ஒத்த பற்களையுடைய குமுதைக்கும் முரசு ஒத்த தோள்களையுடைய சந்திரசூடனுக்கும் பொருத்தமான முகூர்த்தம் வைத்துக்கொண்டு விடுவித்தனர். - 841 -

16. *சந்திர சூடற் காகச் சந்திர சூடர்தாமே*
*வந்தொரு சித்த ராகி மகட் கொடை நேர்வித் தாரென்(று)*
*அந்தநன் மன்றல் காண வகிலத்தி லுள்ளோ ர்யாருஞ்*
*சிந்தையின் மகிழ்ச்சி பொங்கச் சேர்ந்தனர் பூவாளூரின்.*

சந்திரசூடனுக்காகச் சந்திரசூடர் தாமே ஒரு சித்தர் உருவில் திருமணம் நடத்த வந்தார் என்பதால் அந்த நன்மணம் காண உலகவர் அனைவரும் மனமகிழ்ச்சி பொங்கப் பூவாளூர் வந்து சேர்ந்தனர். - 842 -

37. *சித்தராய் வந்து நங்க ள்திருமூலன நாதர்தாமே*
*கைத்தல மலரான் மெய்யிற் கதுவிய வருத்தந் தீர்த்த*
*உத்தமி குமுதை மன்ற ல்உ றுந்தின ம்அடுத்த தென்று*
*கெய்தி னாற்போற்சகலரும் வினையின் மூண்டார்.*

சித்தராய் வந்து நம் திருமூலநாதரே தமது கைத்தலமாகிய மலர்கொண்டு குமுதையின் உடற்பிணித் துன்பம் தீர்க்க அவன் மனம் நிகழ் நாள் வந்தது என்று தத்தமக்குத் திருமணம் வந்தாற்போல் அனைவரும் செயற்பட்டனர். - 843 -

18. வீதிக ள்திருத்து வாரும் வீதியின் புழுதிமாயத்
சீதளப் பனிநீர் வாங்கிச் சிவிறியின்தூவு வாருந்
தாதவிழ் மலருஞ் செய்ய தமனியப் பொடியுஞ் சிந்திப்
பூதல மன்(று)இ தென்னப் புத்தெழி ல்உ றுத்து வாரும்.

வீதிகள் அழகூட்டுவார்; வீதிப்புழுதிகெட குளிர்ந்த பன்னீர் சிதற வீசும் பொறியில் நிரப்பித் தூவுவார்; மகரந்தம் சொரியும் மலரும் செம்மையான தங்கத்துகளும் சிந்தி இது தரையன்று என்று கூறுமாறு புதிய அழகூட்டுவார், - 844 -

19. காவணம் வீதி தோறுங் கவினுற இழைக்கின் றாரும்
மேவரு துகிலாற் பட்டால் விதானங்கள் புரிகின்றாரும்
ஓவியந் தீட்டு வாரு ம்ஒளிமணிப் பாவை யோடும்
பூவமை நிறைநீர்க் கும்பம் பொற்புற இருந்து வாரும்.

பந்தலிட்ட வீதிகள் தோறும் மிக்க அழகினை இழைப்பவரும், சிறந்த பருத்தியாடையால், பட்டினால் மேற்கட்டிகள் கட்டுவாரும், ஓவியம் தீட்டுகின்றவர்களும், ஒளி பொருந்திய அழகிய பதுமைகளுடன் பூக்கள் அமைத்த நீர் நிறை கும்பம் பொலிவுற வைப்பாரும், - 845 -

20. அந்தரத் (து)அகடு தூர்த்த அவிர் மணி மாட மேடை
சுந்தரம் விளங்கித் தோன்றச் சுதைமிகத் திற்று வாருங்
கொந்தொளி மணியிற் செய்த கோவைகள்தூக்கு வாருஞ்
சந்தமென் மலரிற் செய்த தார்பல நாள்று வாரும்.

வானலகத்து நடுவிடம் தூர்த்த மாளிகை மேடை தோறும் அழகு விளக்கமுறச் சுதைச்சிற்பங்கள் அமைப்பாரும், கொத்தான ஒளியுடைய மணிகளால் செய்த மணிமாலைகள் தொங்கவிடுவாரும்; அழகிய மென்மையான மலர்களால் ஆன மாலைகள் பலவற்றைத் தொங்கவிடுவாரும், - 846 -

21. வாயில்க டோறு மிட்ட வாண்மணிப் பந்த ல்தோறுங்
காயிலை நெடிய வாழை கமுகொடு யாக்கின் றாருங்
கோயில்கள்தோறுஞ் செம்பொற்கோபுரந் தோறுஞ் சூழ்ந்த
ஞாயில்கள்தோறுஞ் சால நன்கொடி யெடுக்கின்றாரும்.

வீட்டுவாயில்களில் அமைத்த மேலான பந்தல்களில் காய், இலைகளுடன் கூடிய உயரமான வாழை, கமுகு மரங்களைக் கட்டுவாரும், கோயில்கள் தோறும், அவற்றின் சிறந்த அழகிய கோபுரம் தோறும் அவற்றைச் சூழ்ந்த ஏவறைகள் தோறும் அழகிய கொடிகளை மிகக் கட்டுவாறும். - 847 -

22. *ஓதனத்தொடுசிற்றுண்டி வறிஞருக் குதவு வாருஞ்*
*சீதளப் புதுப்பூம் பந்தர்த் தீம்புனல் வார்க்குவாரும்*
*போதவிழ் தொடையுஞ் சந்தும் பொலங் கலத்திரளும் பொன்னுங்*
*கோதறு மணியு மற்றுங் கொண்மூவின் வழங்கு வாரும்.*

சோற்றுடன், சிற்றுண்டியும் வறியவர்க்கு வழங்குகின்றவரும், குளிர்ந்த புதிய தண்ணீர் பந்தலில் சுவையுடைய நீர் ஊற்றுகின்றவரும் மலர்ந்த மலர்மாலையுடன் சந்தனமும் பொன்னணிகலத்திரளும் குற்றமற்ற மணிகளும் பிறளும் மழைமேகம் போல் வழங்குவாரும், - 848 -

23. *அடியவர் பூசையாற்றியமுது நன் கருத்து வாரும்*
*படியறு குரவன் பாதம் பத்தியின் வணங்கு வாருங்*
*கடியவிழ் கொன்றை மாலைக் கண்ணுதல் பூசையாற்றி*
*நடலைக ள்அறுக்கின் றாரு ம்ஆயினர் நகரின் மாந்தர்.*

அடியவரைப் பூசித்து நன்கு அமுதூட்டுவோரும், குறறமற்ற தத்தம் குரவர்களின் திருவடிகளைப் பத்திமையுடன் வணங்குவோரும்; மணக்கும் கொன்றைமாலைக் கண்நுதற்கும் பூசனை செய்து தமது துன்பங்களை அறுப்பவர்களும் என்று நகரமாந்தர் இயங்கினர். - 849 -

24. *வருபுனடிச் சேர்ந்தும் வார்பொழி ல்நுகர்ந்துஞ் செம்பொல்ஆ*
*திருவியல் சிவிகை யூர்ந்துந் தேரொடும் பரிமா வூர்ந்தும்*
*பருமவல் விலங்கை யூர்ந்தும் பகர்சது ரங்கஞ் சூது*
*பொருதும்வன் றகர்கள்சே வல்போரிடைப் பொருத்தி வென்றும்.*

ஆற்றுநீரில் சேர்ந்து நீராடித் திளைத்தும், நீண்ட சோலையில் ஐம்புல அன்பம் நுகர்ந்தும், செம்பொன்னால் ஆன அழகிய சிவிகையில் ஊர்ந்தும், தேர், கதிரை, யானை ஊர்ந்தும், சிறப்புடன் பேசப்பெறும் சதுரங்கம் சூது ஆடியும் தம் முன் ஒத்த வலிய ஆடு, சேவல் ஆகியவற்றைப் போரில் ஈடுபடுத்தி வென்றும். - 850 -

25. *மாடகத் திவவு நல்யாழ் வார்நரப் பிசைகள் கேட்டுஞ்*
*சூடகத் தளிர்க்கை மாதர் சுவைஉறும் பாடல் கேட்டும்*
*ஆடகப் பாடகக்கா ல்அணங்கான ர்அரங்கிலாடு*
*நாடகத் தினிமை பார்த்து நண்ணினார மகிழ:ச்சி பூத்தார்.*

மாடகத்துடன் வார்கட்டும் உடைய யாழ் முதலிய நரம்பு இசை கேட்டும், முன்கை வளையல் அணிந்த தளிர் போலும் கையுடைய பதுமை ஒத்த மகளிரின் பாடல் கேட்டும் பொன்னால் ஆன பாடகம் அணிந்த கால்களுடைய அணங்குஒத்த பெண்கள் அரங்கேறி ஆடும் நாடகத்தின் இனிமையைப் பார்த்தும் வந்த அனைவரும் மகிழ்ச்சி பூத்தனர். - 851 -

*26.* *இன்னணந் திருநக ரெழிலு மின்பமும்*
*மன்னிட மணஞ்செயும் வைக லும் வரத்*
*தன்னிகர் சந்திர சூடன் தா(து)ன் மகிழ்ந்*
*உன்னினன் சிவபிரா ன்ஒளிர்பொற் சேவடி*

இவ்வாறு திருநகரில் எழிலும் இன்பமும் நிலைக்க, திருமணம் செய்யும் நாள்வர, கன்னைத் தானே ஒத்த சந்திரசூடன் மிகமகிழ்ந்து சிவபிரானின் ஒளி வீசும் அழகிய திருவடி எண்ண வணங்கினான். - 852 -

*27.* *ஆடினன் புதுப்புன ல்அணிய ணிந்தனன்*
*பாடினார் மங்கலம் பாவை யன்னவர்*
*கூடிநின் றியம்பின கோல இன்னியம்*
*ஓடைமின் னியநுத ல்உவாவி னேறினான்.*

புதுப்புனலாடி, அணிபல அணிந்து, பாவையைஒத்தவர் மங்கலம் பாட அழகிய பலவகை இசைக்கருவிகள் கூடி நின்று ஒலிக்க, முகபடாம் அணிந்து மின்னும் நெற்றியுடைய யானை இவர்ந்தான். - 853 -

*28.* *மதிக்குடை நிழல்செய மருங்கு சாமரை*
*விதுக்குறை நுதலினர் வீச விண்ணவர்*
*பதிகொரு நாயகன் படர்ந்திட் டாலென*
*முதுக்குறை யுடையவன் வீதி முன்னினான்*

நிலவு ஒத்த குடை நிழல் செய்ய, இருமருங்கிலும் பிறைநுதல் பெண்டிர் வெண் சாமரை வீச , தேவலோகத்து ஒப்பற்ற இந்திரன் வந்தாற் போல பேரறிவு உடைய சந்திரசூடன் வீதியடைந்தான். - 854 -

*29.* *இந்திர னாகவீற் றிருக்கும் வான்சபை*
*வந்திருத் தனையகல் யாண மண்டபம்*
*முந்துற் அடுத்தனன் முரச மார்த்திடத்*
*தந்தியி னிறங்கிமண் டபத்துட் சார்த்தனன்*

இந்திரன் கொலுவிருக்கும் சபையே வந்தது போன்ற கல்யாண மண்பத்தை முந்துற அடைய முரசம் முழங்க யானை மீதிருந்து இறங்கி மண்டபத்துள் சேர்ந்தான். *- 855 -*

*30. இருந்தனன் றவிசிடை யெவரு மீண்டினார்*
*திருந்(து)எழிற் பேரணிச் செல்வக் கன்னியை*
*வருந்தலின் மஞ்சுளன் வாச நீரொடு*
*பொருந்துறவளித்தனன் புலவர் போற்றவே*

தவிசில் அமர்ந்தான்; அனைவரும் நெருங்கினர், திருத்தம் வாய்ந்த பேரழகுடைய சீர்மையுடைய குமுதையை அறிஞர் போற்ற மகிழ்வுடன் மஞ்சுளன் மணக்கும் நீருற்றிப் பொருந்த அளித்தான். *- 856 -*

*31. சந்திர சூடன்(து) றையல் கைப்பிடித்*
*அந்தணர் விதிப்படி வளர்த்த வங்கிமுன்*
*மந்திரம் புகன்றுமாங் கலிய மாதராள்*
*கந்தரத் தனைவருங் காண யாத்தனன்.*

சந்திர சூடன் குமுதையின் கைப்பிடித்து அந்தனர் விதிப்படி வணர்த்த தீ முன் மந்திரம் கூற, குமுதையின் கழுத்தில் அனைவரும் காணத் திருப்பூட்டினான். *- 857 -*

## வேறு

*32. பஞ்ச துந்துமி முழக்(கு)எழப் பண்ணவர் சூழக்*
*கொஞ்சு பைங்கிளிக் குங்கும தனவசவுந் தரியோடு*
*அஞ்செ ழுத்துரு வாகிய அண்ணலார் விசும்பி*
*எஞ்சு றாமகிழ் வாலினி தெழுந்தரு ளினரால்*

ஐந்தலை இசைக்கருவி முழங்க, தேவர்கள் சூழ, கொஞ்சு பைங்கிளியுடன் அருள்தரு குங்கும சுந்திரியம்மை உடனாய்த் திருவைந்தெழுத்து வடிவாய இறைவன் குறையாத மகிழ்வுடன் வானில் எழுந்தருளினான். *- 858 -*

*33. கருணை நாயகன் முந்துறக் கயிலையில் வளர்த்த*
*பொருவி லாஎழிற் குமுதையைப் புணர்த்துறுமன்றல்*
*திருவெலாமுற நோக்கினர் திருவுள மகிழ்ந்தார்*
*அருளி னாயகன் வரவினை அனைவருங் கண்டார்.*

கருணைத் தலைவனாகிய சிவன், முன்பு கயிலையில் வளர்த்த ஒப்பற்ற அழகிய குமுதையை இல்லறத்தில் கூட்டுவிக்கும் திருமண அழகெலாம் பொருந்த நோக்கித் திருவுளம் மகிழ்ந்தார். அருள் தலைவனின் வரவை அனைவரும் கண்டனர். - 859 -

34. மறையின் வல்லவர் மஞ்சுளன் தானமா வழங்கு
நிறைபொன் னால்துகி லாதியான் மலர்ந்த நெஞ்சகத்தைப்
பிறையி லங்கிய முடியினா பிறங்கெழி லுருவிற்
உறையு ளாக்கினா ரெழுந் தெழுக் தாடினர் பணிந்தார்.

மஞ்சுளன் தானமாக வழங்கிய நிறைந்த பொன்னாலும் ஆடையாலும் மறைவல்லவர் மலர்ந்த தமது நெஞ்சகத்தைப் பிறை விளங்கும் சடையுடையவனின் விளங்கும் எழில் உருவிற்கு இருப்பிடம் ஆக்கினார்; மகிழ்ந்து எழுந்து, ஆடி அடி வணங்கினர். - 860 -

35. வேந்த ராதியோ ரனைவரும் விண்ணிடைத் தோன்றுங்
காந்தி வான்மதி மிலைத்தவர் கழலினை வணங்கிப்
பூந்தண் கோதையின் வதுவைகா ணியபுகுந் தேமுக்கு
ஏந்த லார்திருக் காட்சிதந்த னரெனத் துதித்தார்.

அரசர் முதலியோர் வானில் தோன்றும் ஒளி பொருந்திய பிறை சூடியவர் திருவடி வணங்கி, அழகிய தண்ணிய மலர் மாலை சூடிய குமுதையின் திருமணம் காணவந்த எமக்கு, இறைவன் திருக்காட்சியளித்தார் என்று துதித்தனர். - 861 -

36. கஞ்ச னாரணன் கண்ணுறாக் கருணைநா யகனும்
அஞ்சி லோதியுங் காட்சிதந் தருளிய வாற்றால்
துஞ்சு மாமலந் துடைத்தன மெனப்பல துதித்து
நெஞ்சி னுவகையி னின்றனர் மஞ்சுளன் முதலோர்.

நான்முகன், திருமால் ஆகியோரும் காண மாட்டாத கருணைத் தலைவரும் அழகிய தலையணி அணிந்த அம்மையும் காட்சிதந்து அருளியதால் நம்மிடைச் செறிந்து கிடந்த மலம் முழுதும் துடைத்தோம் என்று பலவாறு துதித்து மஞ்சுளன் முதலியோர் மனமகிழ்வுடன் நின்றனர். - 862 -

37. எந்த ஆவிக்கு மிருமுது குரவார யிருக்கும்
அந்த நாதனை யம்மையைக் கயிலையிற் பண்டே
தந்தை தாயென அடுத்திடுங் குமுதைதன் னுயிராய்
வந்த நாயகன் தன்னொடு வணங்கினள் மகிழ்ந்தாள்

எந்த உயிர்க்கும் பெற்றோராய் விளங்கும் அந்தந் தலைவனையும் அம்மையையும் பண்டைக் காலத்திலேயே தந்தையும் தாயுமாக பெற்ற குழுதை தன் உயிராக வந்த கணவனோடு இருவரையும் வணங்கினாள். - 863 -

38. *ஆதி நாயகர் திருமூல நாயக ர் அடுக்கல்*
*மாது நாயகர் மன்றலிற் போந்தவர்க்கெல்லாம்*
*போதம் வாரருள் புரிந்தனர் மறைந்துபூ வாளூர்க்*
*கோதி லாதகூ விளநிழல் குலாவிவீற் றிருந்தார்.*

ஆதி நாயகரும், திருவுக்கெல்லாம் மூலமான தலைவரும், ஆகிய இமவான் மகளுக்குத் தலைவன் திருமணம் காணவந்த அனைவருக்கும் ஞானமாகிய பேரருள் புரிந்து மறைந்து, பூவாளூரில் உள்ள குற்றமற்ற வில்வமர நிழலில் மகிழ்ந்து எழுந்தருளினார். - 864-

39. *சிறந்த மன்றலிற் செய்வினை முற்றுறப் புரிதிட் (டு)*
*அறந்த வாதசீர்ச் சந்திர சூட னா ர் அணங்கோ(டு)*
*உறைந்து ளார்தமை வணங்கின ண்உ வந்துமஞ் சுளன்றா*
*நிறந்த வாக்கனி பாகடை நிரப்பின னெவர்க்கும்.*

சிறந்த திருமணத்தில் செய்ய வேண்டியன அனைத்தும் முழுமையாகச் செய்து, அறம் குன்றாத சிறப்புடைய சந்திரசூடனாய் உமையம்மையுடன் உறைகின்றவரை உவந்து வணங்கினார். மஞ்சுளன் உவந்து பொலிவு குன்றாத பழம், பாக்கு, வெற்றிலை ஆகியன அனைவர்க்கும் மிக வழங்கினான். - 865 -

40. *பிணிய விழ்ந்தபூந் தொங்கலும் பெருமணச் சாந்தும்*
*அணியு ம் ஆடை யு ம் அளவில கொண்டுமஞ் சுளனுந்*
*தணிவில் சந்திர குத்தனுஞ் சார்ந்தவ ரெவர்க்கும்*
*பணிவி னோடுற வீசினர் பரிவுதீர்ந் தனரால்*

மொட்டு மலர்ந்த மலர் மாலையும் மிக்க மணமுடைய சந்தனமும் அணியும் ஆடையும் முதலியனவற்றை அளவின்றி எடுத்து மஞ்சுளனும் சந்திரகுத்தனும் வந்தவர்க்கு எல்லாம் குறையாத பணிவுடன் கொடுத்து மணவிழாக்களைப்புத் தீர்ந்தனர். - 866 -

41. *முரசுபேரிகை தண்ணுமை மொந்தையே காளம்*
*விரசு தாரையின் சின்னமும் வேறுவே றியம்பத்*
*தரைசெய் மாதவ ம் அனையவன் சந்திர சூட ன்*
*புரசை மால்களி றிவர்ந்தனன் பூவைதன் னோடும்.*

முரசு, பேரிகை, தண்றமை, மொந்தை எக்காளம், கேட்டாரை வெருட்டும் தாரை, இனிய திருச்சின்னம் ஆகியன வேறுவேறு வகையில் ஒத்துஒலிக்க, உலகு செய்த தவம் போன்ற சந்திரசூடன் கழுத்துக்கயிறுடைய யானைமேல் குமுதையுடன் ஏறி அமர்ந்தான். - 867 -

42. *நெடிய வீதியிற் பரத்தையர் நிரந்தரித் தாடத்*
*தொடிவி ராவிய கரத்தின ர்அரக்குநீர் சுழற்றப்*
*படிவிராவிய வனைவரும் பாங்குறச் சூழக்*
*கொடிவி ராவிய திருநகர் குலாய்வலம் வருவான்.*

நீண்ட வீதியில் பரத்தையர் நெருக்கமாகக் கூடிநின்று ஆட, வலையல் அணிந்த மங்கல மகளிர் ஆரத்தி சுற்ற உலகில் பொருந்திய அனைவரும் பக்குவமாய்ச்சூழ, கொடிகள் கட்டப்பெற்ற திருநகரில் இன்புடன் வலம் வந்தான். - 868 -

43. *கரத்து முற்றுறச் சித்தராய்க் கடிமணம் பேசி*
*வருத்த முற்றற வருளிவார் வில்வமென் னிழலி*
*னிருத்தன் முற்றிய விறைவராலையத்தை முன் னெய்தி*
*யருத்தி முற்றவா டைகளிழை யணிந்தடி பணிந்தான்.*

தான் கொண்ட கருத்து நிறைவேற, சித்தராக வந்து திருமணம்பேசி வருத்தம் முற்றும் அற அருளி, உயரமான வில்வமரத்து மென்நிழலில் எழுந்தருளிய நிருத்தனாகிய முழுமுதலின் ஆலயம் அடைந்து தன் ஆசை நிறைவேற ஆடைகள் அணிகலன்கள் அணிவித்து அடி பணிந்தான். - 868 -

திரண்ட வளையல் அணிந்த கையால் குமுதையும் கணவனைத் தழுவி மார்புக்கச்சுடைய அரும்பு போன்ற இளமுலைத் திரட்சியால் அழுத்தி, தேன் ஊற்று மலர் மாலையும் மணிகலனும் பிணைப்பு அறத் தோன்றிய காமலவெள்ளத்தில் அனுபவித்து அழுத்தினாள். - 869 -

44. *அமரர் நாயக ன்ஆலைய மகன்றுதன் மனைபோய்த்*
*திமில மாமறை நீதியான முத்தினஞ் செல்வக்*
*குமரி நீங்கிய குமுதையே மென்மல ராகப்*
*பரம மாய்நல னுகர்ந்தனன் பருவர வொழிந்தான்.*

தேவர் தலைவனது ஆலயம் அகன்று, நான்மறை முழங்கும் மூன்றுநாட்கள் முறைப்படி செல்ல, மணம் முடித்தலால் குமரிப் பருவம் நீங்கிய குமரியாகிய குமுதைதையை மென்மையான மலராகக்கொண்டு, சந்திரசூடன் தான் வண்டாக இருந்து அவள் நலம் நுகர்ந்து அதுவரை இணைவிழைச்சு இல்லாத துன்பம் தீர்ந்தான். - 870 -

*45. கோற்றொடிக் கையாற் குமுதையுங் கொங்கனைத் தழுவி*
*யாத்தன் மாா்பகத் தருப்(பு)இள முலைக்குவட முத்தி*
*ஊற்று தேமலர்த் தொங்கலு ம்அணியும்விட் டொழியத்*
*தோற்று காமவெள் ளத்திடைத் துளைந்தழுந் தினளால்.*

திரண்ட வளையல் அணிந்த கையால் குமுதையின் கணவனைத் தழுவி மார்புக்கச்சுடைய அரும்பு போன்ற இளமுலைத் திரட்சியால் அழுத்தி, தேன் ஊற்று மலர் மாலையும் மணிகலனும் பிணைப்பு அறத் தோன்றிய காமல வெள்ளத்தில் அனுபவித்து அழுத்தினாள். - 871 -

*46. தேங்கு ம்ஆனந்தக் கடலிடைத் தினந்தினந்திளைத்து*
*நீங்கி னால்உ யிர் நீங்குவ தாகிய நிலைமை,*
*யோங்கி னார்அவ ருழவலன் (பு)என்னென வுரைக்கேன்*
*பாங்கி னாற்சில பகலவ ண்இருந்தனர் களித்தார்.*

அலையின்றித் தேங்கிய இன்பக் கடலில் நாடேறும் திளைத்து ஊக்கிய கை தளர்ந்து புடைபெயர்ந்தால்,உயிர் நீங்குவது போன்ற நிலைமையில் மேம்பட்டுவிளங்கினார். அவர்களின் விடாது தொடர்வதாகிய அன்பு எப்படிப்பட்டது. என்று உரைக்க இயலாது. இப்பாங்குடன் சிலநாள் அங்குக் களித்து இருந்தனர். - 872 -

*47. ஆய்ந்த சந்திர குத்தனங் (கு)அளவளாய் பொழில்கள்*
*வாய்ந்த தன்னகர்க் கேகுவா னுரைப்பமஞ் சுளனுஞ்*
*சாய்ந்த மெல்லிடைக் குமுதைக்குந் தகும்பொருள் பலவும்*
*ஈந்தியாவர்க்கும் வரிசைசெய் தேகுமா விடுத்தான்.*

அழகிய சந்திரகுத்தன் அங்கு அனைவருடனும் அளவளாவிய பின், பல்வகை அழகும் பொருந்திய தனது நகருக்கு செல்வதாகக் கூற, மஞ்சுளன் ஒசிந்த மெல்லிடையுடைய குமுதைக்கும் தக்கபொருள் பலவும் தந்து, யாவர்க்கும் சீர் வரிசையும் செய்து செல்ல விடுத்தான். - 873 -

*48. தந்தை தாய்தமர் தம்மொடும் தன்பதிக்கேகி*
*அந்தில் வீற்றிருந் தருளிய நாதனை யணங்கோா(டு)*
*எந்த நாளுநன் றேத்தியின் புற்றுவாழ்ந் திருந்தான்*
*சிந்தை போகையில்திளைத்திடுஞ்சந்திர சூடன்.*

தந்தை, தாய், தம் உறவினர் அனைவருடனும் தமதூர் சென்று அவ்விடத்தில் வீற்றிருந்து அருளிய சிவபிரானை அம்மையுடன் எந்நாளும் நன்முறையில் வணங்கி மனமகிழ்ச்சியில் திளைத்திடும் சந்திரசூடன் குமுதையுடன் இன்புற்றிருந்தான். - 874 -

49. *வதுவை யாற்றிய திறத்தினை வகுத்தன மறையீர்*
*மதுவி ராவிய மலர்நிறை கூவிள மருங்கு*
*பொதுவ தாய்அருடி னந்தினம் பூம்பவர் சீர்த்தி*
*கதுவு மாண்மியங் கற்றவர் புறமதங் கல்லார்.*

"திருமூலநாதர் திருமணம் முடித்து வைத்ததைக் கூறினோம். மறையவர்களே தேன் மிக்க மலர் நிறைந்த வில்வ மர நிழலில் யாவர்க்கும் பொதுவாய்த் தனது அருளை நாடோறும் வழங்குகின்றவரின் சிறப்புடைய புகழ்கொண்ட பெருமையைக் கற்றறிந்தவர் வேற்றுமதம் பழகார்." - 875 -

50. *வில்வ முலத்தில் வீற்றிருந் தருளிய விமலர்*
*சொல்வி ராவிய மாண்மியந் துகளறத் தெரிப்போர்*
*கல்வி கேள்விகள் மிகுந்து நாவலருங்கை கூப்பச்*
*செல்வ மோடிருந் தியாவையு மியாவர்க்குந் தெரிப்பார்.*

வில்வ மூலத்தில் வீற்றிருந்து அருள் புரியும் விமலரின் புகழ் விரவிய பெருமை கூறியவர் கல்வி கேள்விகளில் மேம்பாட்டு நாவலரும் வணங்க. செல்வ மோடு இருந்து யாவற்றையும் யாவர்க்கும் கூறுவர். - 876 -

51. *வானம் வேண்டினும் வைகுந்தம் வேண்டினும் சிவனார்*
*தானம் வேண்டினும் தத்துவங்கடந்தருள்கூடு*
*ஞானம் வேண்டினு நல்குநற் கூவிள நிழலின்*
*ஊன நீங்கவீற் றிருந்தவர் புராணமோர்ந் தவர்க்கே.*

"தேவருலகம் வேண்டினாலும், வைகுந்தம் வேண்டிலும், சாலோகபதவி வேண்டினாலும், தத்துவங்களை எல்லாம் கடந்து அருள்கூட்டுவிக்கும் ஞானம் வேண்டினாலும் நல்ல வில்வ மர நிழலில் நம் குறையாகிய மலம் நீங்க வீற்றிருந்தவராகிய பெருமானின் புராணம் தெளிந்தவர்க்கு அப்புராணம் நல்கும்." - 877 -

52. *பழுது தீர்திரு மூலநா தரைப்பகர் புராணம்*
*முழுது மோர்தல்கூ டாதெனின் மொழிந்தவோர் சருக்கம்*
*விழும மோடுதே ருகஅது மேவரி தேனும்*
*எழுது மோர்கவி யாயினுந் தெரிகவின் புறுவோர்.*

"பழுது முற்றிலும் தீர்ந்த திருமூலநாதர் பெருமை கூறும் புராணம் முழுவதையும் ஆராய்ந்தறிதல் இயலாதாயின், அதில் கூறப்பெற்ற ஒரு சருக்க மாவது சிறப்புடன் தேர்க. அதுவும் இயலாதாயின் அதில் உள்ள ஒரு கவிதையையாயினும் இன்புறுவார் தெரிவாக." - 878 -

53. *பொருள்க ள்ஆய்வதற் (கு) அறிவில ராயினும் பொருளகள்*
*ஒருவு றாதசொன் மாத்திர முரைக்களதுவும்மற்*
*மருவு றாதெனில் வரைந்தபுத் தகம்தவி சிருந்திப்*
*பெருகு ம்ஓகையி னருச்சனை புரிகபீ டுறுவோர்.*

"பெருமையுறவேண்டுவோர், கவிதைப்பொருளை ஆய்ந்தறியும்அறிவற்றவராயின் பொருள் பொருந்திய ஒரு சொல் மாத்திரமாவது கூறுக. அதுவும் தனக்குப் பொருந்தாது எனில் இப்புராணம் எழுதிய நூலை ஓர் இருக்கையில் வைத்து மிக்க மகிழ்வுடன் அர்ச்சனை புரிக." - 879 -

54. *படிக்க வல்லால் வார்களும் படிப்பவர் மாட்டுத்*
*தொடுக்கு ம்அன்பினர் கேட்கசூழ் தவர் தமக்கிரும் பொன்*
*கொடுக்க ஈயவல் வார்கொடுப் பிக்ககூ விளத்தின்*
*அடுக்கு நாயக ரருளினை வேண்டுமார் வலரே.*

" வில்வ மர நிழலில் எழுந்தருளியுள்ள இறையவனருள் பெற ஆர்வமுடன் வேண்டுவோர், இதனைப் படிக்கும் வல்லமை இல்லாவிடில், இனைப்படிப்பவரிடம் தொடுக்கும் அன்பினால் கேட்க; அங்ஙனம் சூழ்ந்தவர்களுக்குப் பெருஞ்செல்வம் கொடுக்க இயலாதவர் பிறரைக் கொடுக்குமாறு கூறிக் கொடுப்பிக்க." - 880 -

55. *கன்னர் மாலூர நீழலி ன்நண்ணினார் புராணந்*
*தன்னை ஓதுந ர்ஓது விக்குநர் தமக் கெல்லாம்*
*பொன்னை வீசுநர் பொன்னுல கரசனாய்ப் புரிவார்*
*அன்னம் வீசுந ரன்னம்ஊர் பவனுல கமர்வார்.*

"பெருமை பொருந்திய வில்வன நிழலில் எழுந்தருளியவனின் இப்புராணம் ஓதுவார், ஓதுவிப்பார் அனைவர்க்கும் பொன் வழங்குகின்றவர் தேவருலக அரசனாய் ஆட்சிபுரிவர், அன்னமிடுவோர் நான்முகன் உலகில் இன்புறுவர்." - 881 -

56. *பரிகள் வீசுநகர் பருமவான் களிறுவீ சுநர்கள்*
*இரதம் வீசுந ர்இனமணிச் சிவிகை வீ சுநர்கள்*
*உரிய வாழ்க்கைநா ளுலந்துழி உதவுமூர் திகள்மேற்*
*பரவவானவ ர்இவர்ந்து போய்பரகதி சேர்வார்.*

இப்புராணத்தை ஓதுகின்றவர்களுக்கும் ஓதுவிக்கின்றவர்களுக்கும் பரிகள், பருத்த உயரமான களிறு, இரதம் இனம் ஒத்த நவமணி பதித்த சிவிகை ஆகியன வழங்குவோர் தம் வாழ்நாள் முடியும் நிலையில் தாம் கொடுத்த அந்தந்த ஊர்திகளில் ஏறிச்செல்ல தேவர்கள் போற்ற மேலான கதிகளை அடைவார் - 882 -

*57. வரிந்து வைப்பார் வரிந்தொரு வருக்களிப் பவரும்*
*வரிந்த வண்ணமொவ் வொன் றுக்கு வளர்சிவ புரத்தில்*
*விரிந்த ஓவ்வொரு கற்பங்கள் மேவுவரென்றால்*
*தெரிந்த விக்கதைப் பெருமையா ருள்ள வா தெரிப்பார்.*

இதனை எழுதிவைப்பவர், எழுதி ஒருவருக்கு வழங்குகின்றவர் ஆகியோர் எழுதிய ஓவ்வொரு எழுத்துக்கும் நியமித்தவாறு அருள்வர் சிவபுரத்தில் ஓவ்வொரு கற்பகாலம் வாழ்வு என்றால் இக்கதையின் பெருமையை உள்ளவாறு தெரிவிப்பவர் - 883 -

*58. என்று சூதமா தவமுனி யிருடியர் கேட்ப*
*அன்று கூறிய திருமூல நாதனா ரருளை*
*இன்று கூறினர் கேட்கு நர் யாரும்வான் கதியின்*
*ஒன்றி யானந்த வெள்ளத் துள் முழுகியொன் றாவார்.*

என்று சூதமாதவர் பிற முனிவர்கள் கேட்ப அன்று கூறிய அருள்தரு திருமூலநாதப் பெருமான் அருட்பெருக்கை, இன்று கூறினார், கேட்டார்யாராயினும் மேலான வீடு பேற்றில் ஒன்றி இன்ப வெள்ளத்தில் மூழ்கி இன்பமயமாய் ஆவர். - 884 -

*59. வாழ்க வில்வமூ லத்(து)இனி தமர்ந்தருள் வள்ளல்*
*வாழ்க குங்கும சவுந்தரி வாழ்க பூவாளூர்*
*வாழ்க அந்நகர் மாண்மயங் காவிரி நாடு*
*வாழ்க வையக மூன்றினு மறைநெறி வாழ்க.*

வில்வமர நிழலில் எழுந்தருளியுள்ள வள்ளல் வாழ்க. அருள்தரு குங்குமச் சுந்தரி அம்மை வாழ்க. பூவாளூர் வாழ்க அந்நகர் பெருமையும் காவிரி நாடும் -(சோழநாடும்) வாழ்க. உலகம் மூன்றினும் மறைநெறி வாழ்க. - 885 -

**கல்யாணச் சருக்க முற்றிற்று.**

**ஆகத்திருவிருத்தம் - 885 -**

*பூவாளூர்ப்புராணம் முற்றிற்று.*

திருச்சிற்றம்பலம்

# நூல் வெளியீடும்
# விருது வழங்கியருளலும்

*08.05.2011 மாலை திருவாவடுதுறை ஆதீனம் அருள்திரு கவிராட்சச கச்சியப்ப முனிவரின் (சித்திரைப் புனர்பூசம்) திருநட்சத்திரத் திருநாள் விழாவில் கச்சியப்ப முனிவர் அருளிய பூவாளூர் புராணம் குறித்து குன்றக்குடி ஆதீனப் புலவர் சிவத்திரு கதிரேசன் அவர்களும் கச்சியப்ப முனிவரின் சைவத் தமிழ்ப் பணிகள் எனும் பொருளில் சிரவை ஆதீனப் புலவர் சின்ன வேடம்பட்டி ப.வெ.நாகராசன் அவர்களும் சிறப்புச் சொற்பொழிவு ஆற்றினார்கள். சீர்வளர்சீர் குரு மகா சன்னிதானம் அவர்கள் விழா மலராகிய முனிவரின் பூவாளூர்ப் புராணம் (வெளியீடு எண் : 625) வெளியிட அதன் முதல் பிரதியைக் கடலூர் புலவர் வ. ஞானப்பிரகாசம் அவர்களும், நூல் தொகுப்பாசிரியர் சிவத்திரு கதிரேசன் அவர்களும் பெற்று மகிழ்ந்தார்கள். அதனைத் தொடர்ந்து சிறப்புச் சொற்பொழிவாளர் ப.வெ. நாகராஜன் அவர்களின் சைவத் தமிழ்ப் பணியைப் பாராட்டி அவர்களுக்குப் பொன்னாடைப் போர்த்தி உருத்திராக்க மாலை அணிவித்து பொற்கிழி ரூ.5000/-மும் சைவத் தமிழ்ச் செல்வர் என்னும் சிறப்பு விருதும் வழங்கி வாழ்த்தி அருளினார்கள்.*



உ

சிவமயம்

திருச் சிற்றம்பலம்

## திருக் கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம்
## திருவாவடுதுறை ஆதீனம், திருவாவடுதுறை, நாகை மாவட்டம், தமிழ்நாடு.
## - தோற்றம் 14 ஆம் நூற்றாண்டு -

## அருள்திரு கவிராட்சச கச்சியப்ப முனிவர்
## சித்திரைப் புனர்பூசம் திருநட்சத்திரத் திருநாள் சிறப்பு விருது

சைவ சித்தாந்தச் செந்நெறியும், திருமுறைச் செல்வமும், செந்தமிழ் மொழியும், அரன் திருக் கோயில்கள், அறநிலையங்கள், அருங்கலை பலவும் புரந்தருளிவரும்

**திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்**
**இருபத்து மூன்றாவது குரு மகா சன்னிதானம்**
**சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்** அவர்கள்

கொங்கு நாடாகிய கோவை மாநகரில் 1937ஆம் ஆண்டு பிறந்தவரும், 30 ஆண்டுகளுக்கும் மேலாக சின்ன வேடன்பட்டியை இருப்பிடமாகக் கொண்டு வாழ்ந்து வருபவரும், தாய் மொழியாகிய தமிழிலும், வட மொழியிலும் புலமை பெற்று விளங்குவதோடு, ஆங்கிலம், இந்தி, தெலுங்கு கன்னடம் முதலான மொழிகளை நன்கறிந்தவரும், தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழகம் ஓலைச் சுவடித் துறையில் முதுநிலைத் தொழில் நுட்ப உதவியாளராக 13 ஆண்டுகள் பணியாற்றியவரும், திருவனந்தபுரம் பன்னாட்டுத் திராவிட மொழியியல் நிறுவனத்தின் முதுநிலை ஆய்வாளராகவும் சென்னைப் பல்கலைக் கழகம் தமிழ் மொழித்துறைத் தமிழ்ப் பேரகராதி விரிவாக்கத் திட்டத்தின் பதிப்பாசிரியராகவும் பணியாற்றிய பெருமையினரும், தமது 32ஆம் வயது தொடங்கி சைவத் தமிழுக்கு அணிசேர்க்கும் வகையில் சிலேடை, திரிபு, யமகம், அந்தாதி, கலம்பகம் முதலான முப்பதிற்கும் மேற்பட்ட நூல்களுக்கு உரைகள் எழுதியும், பத்திற்கும் மேற்பட்ட மூல நூல்களைப் பதிப்பித்தும் தமிழ் ஓலைச் சுவடி விளக்க அட்டவணைகளாகப் பல தொகுதிகள் தந்தும், அருளாளர்களின் வாழ்வியல் நூல்கள், திருக்கோயில் வரலாற்று நூல்கள், தொல்காப்பிய மூலம், பாட வேறுபாடு ஆழ்நோக்காய்வு, தொல்காப்பியச் சிறப்பகராதி முதலான இலக்கண நூல்கள், கவிதை நூல்கள் ஆங்கில நூல்கள் என 65க்கும் மேற்பட்ட நூல்களை வெளியிட்ட நூலாசிரியரும், திரிபு மடக்கு தெளிவுரை வல்லார், சுவடியியற் கலைமணி, தேவார மணி முதலான பட்டங்களைப் பெற்றவரும் மாநில முருகபத்தர் பேரவையின் சிறப்பு ஆலோசகரும், கௌமார மடாலய தவத்திரு கஜபூசைச் சுந்தரசுவாமிகள் தமிழாய்வு மையச் செயலரும், சிரவை ஆதீனக் கவிஞரும், கௌமார அமுதம் இதழாசிரியருமாகிய பெரும்புலவர். திருமிகு.ப.வெ.நாகராசன் அவர்களின் சைவத்தமிழ்ப் பணிகளைப் பாராட்டி அன்னார்க்குப் பொன்னாடை போர்த்தி, உருத்திராக்க மாலை அணிவித்துப் பொற்கிழி ரூபாய் 5000/- மும் **சைவத் தமிழ்ச் செல்வர்** எனும் சிறப்பு விருதும் வழங்கி வாழ்த்தியருளுகின்றார்கள்.

| | |
|---|---|
| திருவள்ளுவர் ஆண்டு 2042 | கர ஆண்டு, சித்திரை 25 |
| மெய்கண்டார் ஆண்டு 788 | 08-05-2011 ஞாயிற்றுக்கிழமை |

# பாடல் முதற்குறிப்பகராதி


| | பாடல் எண் |
|---|---|
| அ | |
| அகத்திடை | 149 |
| அகில | 499 |
| அங்கண் | 24 |
| அங்கையு | 601 |
| அசைவுற்று | 347 |
| அச்சமும் | 166 |
| அஞ்சமும் | 670 |
| அடர்சிறை | 186 |
| அடர்மல | 383 |
| அடிகளார் | 490 |
| அடியவ | 454 |
| அடியவர் | 851 |
| அடியற்ற | 795 |
| அடியனே | 604 |
| அடியார்க் | 745 |
| அடுத்தனன் | 413 |
| அடுத்திடும் | 328 |
| அடுத்து | 663 |
| அண்ட | 261 |
| அண்ட | 563 |
| அண்டகோ | 380 |
| அண்டம் | 193 |
| அண்டர்நா | 123 |
| அண்ண | 788 |
| அண்ணலார் | 330 |
| அதிச | 682 |
| அதிபா | 426 |
| அத்தலத்தில் | 148 |
| அநாதிமு | 200 |
| அந்தணர் | 75 |
| அந்த | 310 |
| அந்தரத் | 848 |

| | பாடல் எண் |
|---|---|
| அந்தரத்தி | 818 |
| அந்தரர் | 359 |
| அந்தரர் | 430 |
| அந்திமதி | 8 |
| அந்திவந்து | 173 |
| அந்தோ | 295 |
| அந்தோஎன் | 233 |
| அப்பதியின் | 403 |
| அமரர் | 872 |
| அமலன் | 161 |
| அமுத | 705 |
| அம்மரபி | 816 |
| அம்மொழி | 276 |
| அயனம் | 91 |
| அயிரா | 346 |
| அரவு | 528 |
| அரிதான | 525 |
| அரிய | 257 |
| அரிய | 301 |
| அரிய | 532 |
| அரிய | 568 |
| அருந்தவப் | 214 |
| அருந்தவன் | 44 |
| அரும்பத | 19 |
| அருளச் | 513 |
| அருளிய | 543 |
| அருளில் | 327 |
| அருள்வளர் | 39 |
| அலகில்புகழ் | 137 |
| அலமரும்எண் | 198 |
| அல்லதூஉம் | 273 |
| அவத்துறையின் | 249 |
| அவபிருதநானம் | 210 |

| | |
|---|---|
| அவம | 519 |
| அவமதித் | 494 |
| அவித்த | 264 |
| அவ்வாறு | 86 |
| அவ்விய | 279 |
| அழித்தனன் | 483 |
| அழிந்தவுளம் | 697 |
| அளவில் | 685 |
| அள்இலைய | 5 |
| அறம் | 209 |
| அறியாமை | 232 |
| அறிவுறுக்கு | 802 |
| அறுசுவை | 824 |
| அறுவ | 623 |
| அற்றன | 590 |
| அனகை | 352 |
| அனைய | 37 |
| அனைய | 286 |
| அனைய | 317 |
| அனையந | 93 |
| அனையபுரம் | 147 |
| அனையவன்பால் | 770 |
| அன்பர் | 101 |
| அன்பி | 785 |
| அன்ப | 530 |
| அன்று | 772 |
| அன்னவன் | 270 |
| அன்ன | 412 |
| அன்னைம் | 42 |
| அன்னணம் | 216 |
| அன்னமிக்கு | 175 |
| அன்னம் | 92 |
| அன்னாய் | 619 |
| அன்னை | 829 |
| அன்னையை | 493 |

ஆ

| | |
|---|---|
| ஆக்கத்தின் | 768 |
| ஆங்கருள் | 332 |
| ஆங்கவன்தன் | 404 |
| ஆங்கு | 239 |
| ஆட | 684 |
| ஆடினன் | 854 |
| ஆத | 315 |
| ஆத | 789 |
| ஆதலா | 608 |
| ஆதலால் | 265 |
| ஆதலாற் | 820 |
| ஆதனத் | 479 |
| ஆதிநாயகர் | 865 |
| ஆய | 558 |
| ஆய்ந்து | 268 |
| ஆய்ந்த | 830 |
| ஆய்ந்த | 874 |
| ஆயினும் | 272 |
| ஆருயிர்க் | 739 |
| ஆர்த்து | 368 |
| ஆவயி | 600 |
| ஆற்றல் | 365 |
| ஆனஅப் | 355 |

இ

| | |
|---|---|
| இகலில் | 497 |
| இட்டி | 157 |
| இட்டிகை | 155 |
| இணைஇ | 410 |
| இதங்க | 299 |
| இதமுறுங் | 638 |
| இத்தகு | 329 |
| இத்தகு | 672 |
| இத்தலப்பெ | 172 |
| இத்தனை | 756 |
| இந்தஉட | 815 |

இந்தக்கு 627
இந்திடத் 731
இந்திர 856
இந்திரன் 68
இந்திரன் 275
இந்திரன் 337
இப்புற 603
இமைய 576
இமையவ 611
இயக்கும்க 89
இயல்பினால் 28
இயல்பினான் 721
இருடியர் 185
இருண்ட 196
இருதலைசேர் 405
இரதிஅங்கு 385
இரதியும் 435
இரந்த 621
இரந்தபல் 342
இரயிக் 71
இரயிக் 79
இரவி 283
இரிந்தவர் 358
இருந்தஇடந் 753
இருந்த 778
இருந்து 156
இருவர் 258
இருள்கால் 94
இல்லவன் 755
இல்லினை 727
இவ்வகைவ 169
இவ்வகை 478
இவ்வாறான 447
இவ்வாறு 238
இவ்வாறு 474
இவ்வாறு 800
இறையவன் 480
இறைவ( ளு 665
இறைவர் 452
இனிதுற 170
இன்றுநாம் 754
இன்னனாந் 853
இன்ன 54
இன்னணம் 162
இன்னவா 524

ஈ

ஈங்குவந் 151
ஈண்டின 491
ஈண்டு 552
ஈதுக 615

உ

உடலிற் 111
உடன்கொண் 628
உதங்கன் 319
உமையவள் 633
உமையொடு 691
உம்பாரார்க் 596
உயர்ந்தவரும் 6
உயிர்கள் 201
உய்ந்திடும் 129
உய்யாத 242
உரிமையி 841
உரிய 508
உரிய 836
உருத்திர 130
உருத்திரப் 511
உருந்து 311
உருவத் 205
உரைசேர் 344
உரைத்த 102
உரைத்திடற்கு 41
உரையென்ற 803
உலக 510
உழிதரு ஆ 206

உழுவல் 333
உள்ளக் 392
உள்ளமுறத் 794
உறுமுறை 540
உற்றதென் 734

ஊ

ஊடற் 391

எ

எச்சமு 496
எடுத்தஉடற் 245
எட்டுத் 514
எண்மராம் 589
எம்பிரான் 372
எம்பிரான் 485
எம்பெருமான் 526
எம்முடைய 119
எம்மை 653
எய்ப்பொரு 764
எருமைவல் 641
எல்லாம் 495
எல்லார் 363
எழுதிச் 738
எழுந்த 660
எறிந்தனன் 386
எற்றினள் 387
என்று 235
என்று 303
என்று 556
என்ன 781

ஏ

ஏகமாக 322
ஏதமில்லாத 400
ஏற்று 571

ஐ

ஐந்தொழில் 13
ஐயர் 57

ஒ

ஒருதின 693
ஒல்லைபோய் 248
ஒழுகிய 418
ஒழுகு 714
ஒழுக்கம் 62
ஒறுக்கும் 325
ஒளிறு 259

ஓ

ஓகை 658
ஓதனத்தொடு 849
ஓதிரு 189
ஓராயிரங்கண் 389

க

கங்குலை 439
கங்கை 786
கங்கையிற் 629
கங்கையும் 15
கங்கையை 339
கசிந்துளம் 438
கஞ்ச 863
கடல்வரும் 74
கடவு 574
கடன் 107
கடுவளி 29
கணவனைத் 461
கண்அகல் 63
கண்ட 538
கண்ட 835
கண்டவன் 343
கண்டு 291
கண்டு 408
கண்டு 666

| | |
|---|---|
| கண்டு | 715 |
| கதிர்மணி | 460 |
| கந்தம் | 350 |
| கந்தம் | 444 |
| கபோத | 586 |
| கயிலை | 425 |
| கயிலை | 567 |
| கயையென் | 655 |
| கரத்து | 870 |
| கருங்கடலின் | 10 |
| கருணை | 562 |
| கருணை | 860 |
| கருணையங் | 455 |
| கருத்த | 505 |
| கருத்த | 614 |
| கருப்ப | 616 |
| கருமம் | 204 |
| கருமம் | 448 |
| கலவித் | 393 |
| கலியாண | 470 |
| கலையெடுத் | 602 |
| கலைவி | 409 |
| கல்யாண | 806 |
| கல்வியினாற் | 769 |
| கவலை | 617 |
| கவற்றுவன் | 131 |
| கவனவாம் | 229 |
| கவுரியைக் | 477 |
| கழுதோ | 784 |
| களங்முழு | 472 |
| கள்ளன் | 569 |
| கற்பகத்தண் | 689 |
| கற்றை | 550 |
| கனலிவ | 620 |
| கன்னர் | 882 |
| கன்னலின் | 810 |
| காக்க | 649 |
| காசில் | 158 |
| காண்டலும் | 722 |
| காமம் | 32 |
| காமம் | 289 |
| காமர் | 683 |
| காமவே | 471 |
| காமவே | 771 |
| காய்ந்தவேள் | 588 |
| காரண் | 726 |
| காரணிந்த | 457 |
| காரி | 531 |
| கார்பூத்த | 688 |
| காலஎல் | 152 |
| காலம் | 597 |
| காலன்ந | 578 |
| காவி | 507 |
| காவணம் | 846 |
| காவியங் | 637 |
| காவிரியின் | 406 |
| காள | 284 |
| காற்றெறி | 25 |
| காளி | 557 |
| கான்நிறைந்த | 23 |
| கீரிய | 26 |
| கீழுறு | 580 |
| குங்கும | 632 |
| குமரக்க | 366 |
| குமுதமல | 703 |
| குமுறும் | 516 |
| குரவனை | 274 |
| குரவனைக் | 127 |
| குழகனை | 128 |
| குளிரும் | 56 |
| குளிர்மணி | 760 |
| குறுமுனி | 278 |
| குறைநிறை | 813 |
| கூவிள | 52 |

| | |
|---|---|
| கூறும்அனைய | 88 |
| கேட்டுளத்தி | 804 |
| கேவலமே | 207 |
| கேழில் | 833 |
| கையாறு | 228 |
| கையிற் | 750 |
| கொடிமரம் | 468 |
| கொடுக்குந் | 60 |
| கொண்டல் | 451 |
| கொத்த | 618 |
| கொழுந்தின | 481 |
| கொளற்குரி | 542 |
| கொன்றை | 424 |
| கோடிசெங் | 335 |
| கோயில் | 112 |
| கோயிலுக்கு | 782 |
| கோல்தொடிக் | 230 |
| கோற்றொடி | 872 |
| ச | |
| சகலத் | 465 |
| சங்கக் | 183 |
| சங்கணி | 401 |
| சந்த | 559 |
| சந்திர | 49 |
| சந்திர | 692 |
| சந்திர | 843 |
| சந்திர | 858 |
| சந்திரன் | 361 |
| சயசயஎன் | 179 |
| சலம்படு | 30 |
| சரணமென் | 610 |
| சனகன்முத | 178 |
| சார்ந்தனன் | 50 |
| சாலையை | 174 |
| சிட்டர் | 498 |
| சித்தநகரின் | 40 |
| சித்தசன் | 384 |
| சித்தராய் | 844 |
| சிரங்க | 520 |
| சிரந்து | 504 |
| சிலநாள் | 212 |
| சிலர்கள்ஆ | 168 |
| சிவன் உருத்திரன் | 192 |
| சிறகர் | 36 |
| சிறந்த | 866 |
| சிறந்து | 790 |
| சிறந்தொளி | 751 |
| சிறுமையன் | 486 |
| சிறைஅழி | 221 |
| சுத்த | 500 |
| சுத்த | 829 |
| சுந்தர | 690 |
| சுந்தரன் | 45 |
| சுரந்து | 80 |
| சுவையுள | 763 |
| சுற்ற | 560 |
| சுற்றமுள் | 826 |
| சுற்றமொடு | 773 |
| சூத்திரர் | 431 |
| செஞ்சொலால் | 177 |
| செஞ்சொல் | 308 |
| செம்பொன்னை | 1 |
| செய்த | 237 |
| செய்ந்நன்றி | 125 |
| செய்யசடை | 805 |
| செய்யதீக் | 99 |
| செய்யவாய் | 729 |
| செய்வினை | 398 |
| செல்வம் | 110 |
| செல்வம் மலி | 142 |
| சேணிடை | 631 |
| சேர்ந்தார்க் | 626 |

ஞா

ஞாலம் 17

த

தகர்ந்து 348
தக்க 105
தக்கபனச 323
தக்கன் 554
தக்கன் பகனி 517
தடவான் 84
தண் ஆர் 182
துணந்(து) இடர் 489
தத்தமக்கு 7
தத்துவ 336
தத்துவ 607
தத்துவஉபதே 636
தத்துவத் 613
தந்திடகபில் 453
தந்தை 875
தந்தைகண்டிது 728
தமக்கு 55
தமனி 680
தம்பிரான் 694
தயங்கிய 640
தருஎலாம் 373
தருக்கி 280
தருக்களுள் 69
தருநிரை 126
தரும 659
தருமம் 285
தருமனைக் 579
தலத்துறு 78
தலையாய 253
தவத்துறை 809
தவழும் 622
தவ(று)இல் 312
தள(வு)உறழ் 399
தன்னிய 808
தாரணிந் 735
திங்கள் 133
திங்களைவி 587
திங்கள்விழா 140
திப்பியம்ஆ 252
திமில 260
திருத்தகுபல் 767
திரவியம் 334
திருஅருள் 190
திருக்கோயில் 458
திருத்தன் 16
திருமகள் 416
திருமங் 324
திருமங் 423
திருமனு 467
திருமலியும் 143
திருமகட்குத் 53
திருமூல 139
திருமாலும் (காப்பு)
திருவானைக் 72
திருவுள 765
திருவும் 294
திருவுளக் 442
திறம்கொள் 61
தினைத்தனைத் 76
தீஞ்சுவை 733
தீதறு 222
தீயில் 534
தீர்த்த 35
தீர்த்தமா 819
துஞ்சல் 316
துதிப்பரும் 436
துயிலு 709
துலங்கிய 225
துன்ப 572
தூய பெருங்க 251
தூரம் 306

| | |
|---|---|
| தெண்ணீர் | 345 |
| தெருட்டிய | 433 |
| தென்பால் | 82 |
| தேக்கிய | 595 |
| தேங்கு | 873 |
| தேசிகன் | 807 |
| தேமொழி | 456 |
| தேவ | 573 |
| தேவரைத் | 679 |
| தேவர் | 81 |
| தேவர் | 255 |
| தேவர் | 287 |
| தேவர் | 367 |
| தேவர் | 565 |
| தேவர்க | 761 |
| தொன்று | 740 |

ந

| | |
|---|---|
| நகைமுகத் | 544 |
| நங்கழல் | 4 |
| நடுங்கிய | 226 |
| நடுநி | 506 |
| நந்தன | 48 |
| நம்ம | 194 |
| நரகம் | 648 |
| நரைஎழுத்து | 244 |
| நல்லைமன் | 584 |
| நல்ல | 651 |
| நவமணித் | 64 |
| நன்னாக | 473 |
| நாங்களும் | 176 |
| நாண் | 254 |
| நாத்திகன் | 121 |
| நாயகன்இ | 267 |
| நாவறந்(து) | 362 |
| நானா | 159 |
| நான்முக | 523 |
| நித்தலும் | 440 |
| நிலத்தி | 821 |
| நிலத்தி | 521 |
| நீடியதண் | 11 |
| நீயிர் | 650 |
| நீயிர்மத | 698 |
| நீரினால்மிக | 318 |
| நீலக்க | 449 |
| நீவிர் | 263 |
| நீறுதுன்றிய | 575 |
| நீற்றினாற் | 758 |
| நுங்கள் | 699 |
| நுமக்கு | 502 |
| நெடிது | 716 |
| நெடிதுபோ | 463 |
| நெடிய | 869 |
| நெடுங்காலம் | 145 |
| நெட்டுயிர்ப் | 725 |
| நெட்டுயிர்ப் | 737 |
| நெட்டுயிர்ப்பு | 396 |
| நோக்கிய | 219 |

ப

| | |
|---|---|
| பகனி | 518 |
| பகைக்குடை | 546 |
| பகைநகை | 27 |
| பகையுறவு | 702 |
| பங்கயன் | 417 |
| பஞ்ச | 681 |
| பஞ்ச | 859 |
| பஞ்சார் | 390 |
| படிக்க | 881 |
| படைஎலாம் | 188 |
| படைஎனப் | 376 |
| பணைத்துத் | 369 |
| பண்டுவரு | 402 |
| பண்டெலாம் | 340 |

| | |
|---|---|
| பண்டை | 644 |
| பண்டைய | 630 |
| பண்டைவிதி | 695 |
| பண்ணப் | 370 |
| பத்திசெய் | 415 |
| பத்தித | 643 |
| பரந்த | 300 |
| பரிகல | 762 |
| பரிகள் | 883 |
| பருதிதன் | 73 |
| பருதியை | 585 |
| பருதி | 654 |
| பலஎடுத்து | 77 |
| பல்வகை | 840 |
| பல்வேறான | 446 |
| பவளச் | 443 |
| பழுது | 879 |
| பற்கு | 780 |
| பனிவான் | 349 |
| பாங்க | 743 |
| பாங்கியர் | 217 |
| பாங்கியர் | 720 |
| பாணித்த | 792 |
| பாத | 564 |
| பாத்திய | 549 |
| பார்த்த | 647 |
| பார்த்தளவில் | 165 |
| பாவம் | 96 |
| பாவம் | 428 |
| பாவம் | 664 |
| பாழிநற்றவ | 290 |
| பிணத்தை | 522 |
| பிணிமுழுதும் | 776 |
| பிணிய | 867 |
| பிதிரர் | 657 |
| பித்தனிற் | 736 |
| பிள்ளை | 411 |
| பிறந்த | 747 |
| பிறர் உறக் | 122 |
| பிறவிப் | 114 |
| பிறைதொட | 437 |
| புகழ்செய் | 281 |
| புகுமுகம் | 724 |
| புக்க சூதனை | 34 |
| புண்ணிய | 215 |
| புண்ணியம் | 432 |
| புதிது | 117 |
| புதிது | 570 |
| புவனம் | 292 |
| புள்ஆ | 181 |
| புற்புதம் | 277 |
| புன்னாக | 797 |
| பூசனைக் | 635 |
| பூதமா | 822 |
| பூவாளுரை | 661 |
| பூவாளூர்எ | 85 |
| பெண்மையி | 488 |
| பெய்வளைத் | 492 |
| பெரிய | 717 |
| பெருகிய | 395 |
| பெருங்கடல் | 14 |
| பெருமறை | 167 |
| பெருமை | 686 |
| பொய்ப்படும் | 752 |
| பொருவறு | 271 |
| பொருளெலா | 599 |
| பொருள் | 115 |
| பொருள்க | 880 |

| | |
|---|---|
| பொருள்கள் | 713 |
| பொன்அ | 54 |
| பொன்பூத்த | 3 |
| பொன்ம | 677 |
| பொன்மனை | 801 |
| பொன்னஞ் | 687 |
| பொன்னம் | 624 |
| பொன்னினன் | 719 |
| பொன்னும் | 87 |
| போதிம | 646 |
| போந்த | 305 |

ம

| | |
|---|---|
| மகவான் | 353 |
| மக்கட்பே | 673 |
| மக்கள் | 103 |
| மங்க | 551 |
| மங்க | 834 |
| மங்கல | 66 |
| மங்கல | 837 |
| மங்கலலேச் | 321 |
| மஞ்சு | 708 |
| மஞ்சுளா | 791 |
| மடமையால் | 414 |
| மடவர்க | 464 |
| மட்டுவிரி | 9 |
| மணங்கொள் | 509 |
| மணஞ்செய் | 706 |
| மாணமாருந | 469 |
| மணம் ஆர் | 184 |
| மணி ஒளியும் | 2 |
| மணிகள் | 678 |
| மணிகிடந்து | 97 |
| மணிமுறுவல் | 241 |
| மணியி | 58 |
| மதிக்குடை | 855 |
| மதுஉமிழ் | 378 |
| மத்த | 501 |
| மந்தமா | 374 |
| மருக்க | 22 |
| மலங்கச் | 314 |
| மலர்க்கணை | 377 |
| மலர்தொறும் | 375 |
| மல்லல் புனல் | 138 |
| மலர்ந்தகம | 320 |
| மலைக்கு | 527 |
| மலைக்கெ | 555 |
| மறம்தலை | 356 |
| மறைகள் | 104 |
| மறைக்கும் | 202 |
| மறைமுடி | 466 |
| மறையின் | 429 |
| மறையின் | 861 |
| மறைவல் | 313 |
| மற்றதற்கு | 775 |
| மன்றல் | 832 |
| மன்றல் செய் | 812 |
| மன்னர் | 234 |
| மாகர் | 293 |
| மாடகத் | 852 |
| மாத | 304 |
| மாதரார் | 541 |
| மாதர்நல் | 420 |
| மாதவத்தால் | 704 |
| மாதவத் | 825 |
| மாதவத் | 827 |
| மாதவர் | 144 |
| மாதவர் | 171 |
| மாதவர் | 187 |

| | |
|---|---|
| மாதவன் | 47 |
| மாதவன் | 419 |
| மாதவன் அம் | 247 |
| மாதி | 712 |
| மாதொரு | 671 |
| மாயன் | 198 |
| மாயனா | 484 |
| மாயை | 197 |
| மாந்தளிரின் | 240 |
| மாரவே | 696 |
| மாரவேள் | 46 |
| மாரவேள்ச | 224 |
| மாரனுக்கு | 70 |
| மாரனுடனே | 364 |
| மாரனைப் | 783 |
| மார்பிடை | 227 |
| மாலு | 742 |
| மாலுமற் | 482 |
| மாறா | 326 |
| மாறாய் | 450 |
| மாறுபட்ட | 487 |
| மிருகம் | 95 |
| மீட்டும் | 351 |
| மீட்டும் இரும் | 795 |
| முக்கண்நா | 354 |
| முஞ்சி | 529 |
| முடங்க | 83 |
| முதிர்தவ | 475 |
| முரச | 566 |
| முரசுபேரிகை | 868 |
| முருகுயிர்ந் | 675 |
| முல்லையும் | 218 |
| முழுவதும் | 539 |
| முனிவ | 236 |
| முனிவர் ஏழு | 213 |
| முன்பின்இரு | 164 |
| முன்னு | 746 |
| மூண்ட | 298 |
| மெய்த்தவ | 331 |
| மெய்யன் | 108 |
| மெலிந்து | 394 |
| மேதகு | 154 |
| மேக்குற | 441 |
| மேதகுவ | 545 |
| **ய** | |
| யாகம் | 33 |
| யாவ | 535 |
| யாவன் | 90 |
| யாவன் ஒரு | 120 |
| **வ** | |
| வடதிசைத் | 583 |
| வடநிழலின் | 12 |
| வடவையா | 593 |
| வணங்கி | 18 |
| வணங்கி | 512 |
| வணங்கிய | 434 |
| வணங்கிய | 777 |
| வதுவை | 876 |
| வரம்கெழு | 341 |
| வரம்மல் | 422 |
| வரிச்சிறை | 98 |
| வரிந்து | 884 |
| வருசமு | 639 |
| வருணனைக் | 579 |
| வருபுனடிச் | 851 |
| வரும்திர | 116 |
| வரைக்கெ | 553 |
| வரைவுசெய் | 839 |

| | |
|---|---|
| வல்விரைந்து | 796 |
| வழிமிக் | 749 |
| வளங்கூர் | 106 |
| வளிமுகம் | 581 |
| வள்ளலார் | 774 |
| வழுக்கறு | 43 |
| வறியர் | 109 |
| வறையலுந் | 759 |
| வற்றிய | 223 |
| வன்னியந் | 360 |
| வாடின | 723 |
| வாம்புரவி | 269 |
| வாயில்க | 848 |
| வாய்த்தது | 757 |
| வாய்மை அறி | 817 |
| வாரண | 65 |
| வார்ந்தபற் | 150 |
| வாலகில் | 634 |
| வாழி | 667 |
| வாழ்க | 885 |
| வானமர் | 741 |
| வானம் | 878 |
| விகாரம் | 379 |
| விடுத்த | 21 |
| விண்ணுளார் | 591 |
| விண்ணோர்க்கு | 445 |
| வித்தகயோகம் | 153 |
| விமல | 195 |
| விருத்த | 744 |
| விருத்த | 748 |
| விருத்த | 779 |
| விரைந்து | 407 |
| விரைய | 371 |
| விலங்கிய | 582 |
| வில்வ | 100 |
| வில்வ | 710 |
| வில்வ | 877 |
| வில்வளரும் | 163 |
| விழியினை | 220 |
| விழுத்தகு | 766 |
| விழுமம் | 20 |
| விழுமிய | 462 |
| விழைதகு | 823 |
| விளங்குங் | 625 |
| விளங்கிழை | 700 |
| விளைந்த | 297 |
| வீடாச்ச | 296 |
| வீட்டருஞ் | 612 |
| வீர | 515 |
| வீரனாற் | 605 |
| வீரனைக் | 124 |
| வீரம்மே | 136 |
| வீதிக | 845 |
| வெள்ளிம | 561 |
| வெள்ளிவரை | 676 |
| வெள்ளை | 307 |
| வெள்ளை | 718 |
| வெள்ளைவா | 606 |
| வெற்ற | 83 |
| வேண்டிய | 609 |
| வேட்டமனு | 211 |
| வேதமந்திர | 67 |
| வேதம் | 309 |
| வேதம் | 427 |
| வேந்த | 787 |
| வேந்த | 862 |
| வேலனிங் | 730 |
| வேள்விச் | 160 |
| வேற்றோ | 536 |

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம்

திருவாவடுதுறை ஆதீனம்



# அருள்திரு கவிராட்சச கச்சியப்ப முனிவர்

# சித்திரைப் புனர்பூசம்

# திருநட்சத்திரத் திருநாள் அழைப்பிதழ்





அருள்திரு கவிராட்சச கச்சியப்ப முனிவர்

**நாள் : 08.05.2011, ஞாயிற்றுக்கிழமை**

**இடம் : காஞ்சிபுரம், திருவாவடுதுறை**

## அருள்திரு கவிராட்சச கச்சியப்ப முனிவர் வரலாற்றுச் சுருக்கம்



அருள்திரு கச்சியப்ப முனிவர் தொண்டை மண்டலத்திலே, தணிகைத் திருப்பதியில் பரம்பரைச் சைவவேளாளர் அபிஷிக்தர் மரபில் அவதரித்தவர்கள். இவர்கள் சிவத் தலயாத்திரையாகத் திருவாவடுதுறையை அடைந்தபோது திருக்கயிலாய பரம்பரைச் சித்தாந்த ஞானபாநுவாகிய ஸ்ரீ நமசிவாய மூர்த்திகளைத் தரிசித்து, திருவருள் நோக்கம் சிந்திக்கப்பெற்று, அத்திரு மரபில் 12ஆவது குருமூர்த்திகளாக வீற்றிருந்த அருள்திரு திருச்சிற்றம்பல தேசிகரின் அருளாட்சியின் போது சின்னப்பட்டத்தில் எழுந்தருளியிருந்த ஞானாசிரியராகிய அம்பலவாண தேசிகரைப் பேரன்போடு வணங்க அவர்களிடத்தே சமயதீக்கையும், விசேட தீக்கையும் பெற்று, சிவாசிரமத்திற்குரிய துறவறத்தை அடைந்து, நிருவாண தீக்கையும் பெற்றுக் கொண்டார்கள். சித்தாந்த சைவ சிவஞானபோத திராவிட மகாபாஷ்யகர்த்தராகிய அருள்திரு மாதவச் சிவஞான யோகிகளை வித்யாகுருவாகக் கொண்டு பல இலக்கணங்களும், இலக்கியங் களும், தர்க்கமும், சிவஞான நூல்களாகிய மெய்கண்ட சாத்திரம் பதினான்கும், பண்டாரசாத்திரம் பதினான்கும் மற்றும் பல நூல்களும் ஐயந்திரிபற ஓதி உணர்ந்து மகாவித்துவான் எனப் பெயர் பெற்று, அச்சிவஞான யோகிகளின் மாணாக்கர் பலருள் முதன்மை மாணாக்கராகத் திகழ்ந்தவர்கள். இவர்கள் மிகுந்த ஈடுபாட்டுடன் கவி இயற்றும் பெரும்வல்லமையுடன் அவற்றில் விரைவும் கொண்டதால் கவிராட்சசர் எனவும் அழைக்கப்பெறலாயினர். தமது புலமைத் திறத்தால் எண்ணி வியக்கும் ஏற்றமிகு புராண நூல்களும், பிரபந்தங்களும் இயற்றியுள்ளனர். இவர்கள் அருளிய பஞ்சாக்கர தேசிகர் அந்தாதி என்னும் பிரபந்தம் ஸ்ரீ நமசிவாய மூர்த்திகள் இரவுப் பூசையின் போது இவ்வந்தாதிப் பாடலில் ஒன்றை ஓதுவார் மூர்த்திகள் பாடுவது மரபாக உள்ளது. ஸ்ரீ கச்சியப்ப முனிவரின் குருமூர்த்தத் திருக்கோயில் காஞ்சிபுரத்தில் உள்ள ஆதீனக் கிளை மடத்தில் அமைந்துள்ளது. இக்குருமூர்த்தத் திருக்கோயில் வந்து வழிபாடு செய்தால் கல்வியறிவு பெருகும். இப்பேற்றை இன்றளவும் பலர் பெற்றுப் பயனுறுகின்றனர்.

ஆண்டுதோறும் அருள்திரு கச்சியப்ப முனிவரின் சித்திரைப் புனர்பூசத் திருநட்சத்திர நன்னாளில் காஞ்சிபுரத்தில் சிறப்பு வழிபாடும், துறைசைத் திருமடத்தில் சிறப்புக் கருத்தரங்கமும் சைவத் தமிழ் அறிஞர் ஒருவர்க்குப் பொற்கிழியுடன் விருதும் வழங்கியருளப் பெறுகிறது.

**அருள்திரு கச்சியப்ப முனிவர் அருளியுள்ள நூல்கள்**

1. திருவானைக்காப் புராணம், 2. பூவாளூர்ப் புராணம், 3. பேரூர்ப் புராணம், 4. தணிகைப் புராணம், 5. விநாயகர் புராணம், 6. காஞ்சிப் புராணம் ( இரண்டாம் காண்டம் ), 7. அரசம்பலவாணர் மீது பிரபந்தம், 8. பட்டீசர் மீது பிரபந்தங்கள், 9. விநாயகர் பிள்ளைத் தமிழ், 10.திருத்தணிகை ஆற்றுப்படை, 11. பிரமீசர் பதிற்றுப் பத்தந்தாதி, 12.அருள்திரு கச்சி ஆனந்த ருத்திரேசர் கழிநெடில், 13. அருள்திரு கச்சி ஆனந்த ருத்திரேசர் பதிற்றுப் பத்தந்தாதி, 14. அருள்திரு கச்சி ஆனந்த ருத்திரேசர் வண்டு விடுதூது, 15. அருள்திரு பஞ்சாக்கர தேசிகர் அந்தாதி, 16. திருத்தணிகைப் பதிற்றுப் பத்தந்தாதி.

## முந்தைய ஆண்டுகளில் சிறப்பினைப் பெற்றார்

1. திரு. ந.ரா. சென்னியப்பன், கோவை – 2005
   (பாராட்டிதழ், பொற்கிழி ரூ.3000/–)
2. திரு. சரவண சதாசிவம், காஞ்சிபுரம் – 2006
   (சைவத்தமிழ்ச் செம்மல் விருது, பொற்கிழி ரூ.3000 /–)
3. தெய்வத்திரு. ச. நமசிவாயபிள்ளை, சங்கரன்கோயில் – 2007
   (கச்சியப்பர் சீர் பரவும் செல்வர் விருது, பொற்கிழி ரூ. 3000 /–)
4. சிவத்திரு. மா. பட்டியப்பன் (எ) கோட்டீசுவரன் – 2008
   (கச்சியப்பர் சீர் பரவும் செல்வர் விருது, பொற்கிழி ரூ. 3000 /–)
5. புலவர். திரு. க. சண்முகம், மதுரை – 2009
   (சைவப் புராண உரையாளர் விருது, பொற்கிழி ரூ. 3000 / –)
6. முனைவர். திரு. கா. திருநாவுக்கரசு, திருப்பேரூர் – 2010
   (சைவப் புராண உரையாளர், பொற்கிழி ரூ. 3000 /–)

உ

சிவமயம்

## திருவாவடுதுறை ஆதீனம்

இருபத்து மூன்றாவது குரு மகா சன்னிதானம்

**சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்**

*திருவுளப்பாங்கின் வண்ணம் நடைபெறும்*

## திருநாள் நிகழ்ச்சிகள்

### காஞ்சிபுரம்

காலை மணி **10.00** **முனிவரின் ஞான சமாதித் திருக்கோயிலில் திருநீராட்டும் வழிபாடும்.**

10.30 சிறப்புச் சொற்பொழிவு

சித்தாந்த வித்யாநிதி, தமிழாகமச் சால்பறிவார்.

சிவத்திரு. **மு. செல்வநாதன்** எம்.ஏ.,எம்.எட்., எம்.பில்., அவர்கள்,

சோளிங்கர். - **கச்சியப்பமுனிவரின் சைவத் தமிழ்ப் பணிகள்.**

11.30 மாகேசுவர பூசை

மாலை மணி

7.00 சிறப்பு வழிபாடு

## திருவாவடுதுறை

மாலை மணி

6.30 திருமுறை விண்ணப்பம்

7.00 வரவேற்புரை

**சீர்மன்னு. மீனாட்சி சுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்,**

திருவாவடுதுறை.

7.15 சிறப்புச் சொற்பொழிவு

பெரும்புலவர். திருமிகு. **ப. வெ. நாகராஜன்** அவர்கள்,

சிரவை ஆதீனக் கவிஞர், கௌமார மாடாலயம்,

சின்னவேடன்பட்டி, கோயமுத்தூர்.

- **கச்சியப்பமுனிவரின் சைவத் தமிழ்ப் பணிகள்.**

8.15 மகிழ்வுரை

ஆதீனப்புலவர். சிவஞான சுவாமிகள் அடிப்பொடி.

திரு. **சு. குஞ்சிதபாதம்** அவர்கள், திருவாவடுதுறை.

8.30 குருமரபு வாழ்த்து

**சீர்வளர்சீர் குரு மகா சன்னிதானம் அவர்கள்**

பெரும்புலவர். திருமிகு. **ப. வெ. நாகராஜன்** அவர்களைப் பாராட்டி,
அருள்திரு கவிராட்சச கச்சியப்ப முனிவர் சித்திரைப் புனர்பூசம்
திருநட்சத்திரத் திருநாளில் அன்னாருக்குப் பொன்னாடை போர்த்தி,
உருத்திராக்க மாலை அணிவித்துப் பொற்கிழி
ரூ. 5000/-மும் **சைவத் தமிழ்ச் செல்வர்** என்னும் சிறப்பு விருதும்,
வழங்கி வாழ்த்தியருளுகின்றார்கள்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்



அருள்திரு கச்சியப்ப முனிவர், காஞ்சிபுரம்



அருள்திரு கச்சியப்ப முனிவர் ஞான சமாதி திருக்கோயில்
காஞ்சிபுரம்